# ஓஷோ

முதலில் உன்னை நேசி,
பின் நேசத்தை அதிர்வலையாக
உன்னிடமிருந்து பரப்பு.
இந்த பிரபஞ்சம் முழுமையும்
சென்றடையும் வண்ணம் அதை பரப்பு.

# தம்மபதம்

## புத்தரின் வழி

◆

முடிவற்ற உண்மை

◆

பாகம்: 1

◆

ஓஷோ

தமிழில்

பேராசிரியர் டாக்டர்.என்.ரமணி

கண்ணதாசன் பதிப்பகம்

23, கண்ணதாசன் சாலை,
தியாகராய நகர், சென்னை – 600 017.
போன் : 24332682

முதற் பதிப்பு : டிசம்பர், 2000
ஏழாம் பதிப்பு : ஜூன், 2013
எட்டாம் பதிப்பு : ஆகஸ்ட், 2016

E-mail: sales@kannadasan.co.in
Our Web Site: www.kannadasan.co.in

பதிப்பாசிரியர்: காந்தி கண்ணதாசன்

**DHAMMAPADHAM** - in Tamil - Part - I
Originally Published in English as **Dhammapada: The Way of Buddha Volume I** by Osho.



Price Rs:230/-

- Translated By : **Dr.N.Ramani**
- Eighth Edition : August, 2016
- Publishing Editor : **Gandhi Kannadhasan**
- Published By : **Kannadhasan Pathippagam**
  23, Kannadhasan Salai,
  Thiyagaraya Nagar, Chennai - 600 017.
  Ph: 044-24332682 / 24338712

**ISBN: 978-81-8402-094-6**

- Our Branches :
  - No: 1212, Range Gow3der Street, **Coimbatore** - 641001 ☎: 0422 - 2479774
  - No.1, Annai Complex, III Street, Vasantha Nagar, **Madurai**-625 003. ☎: 0452 - 2373793, 2373180.
  - 37, Bharathy Street, **Puducherry** - 605 001. ☎: 0413 - 2221241
- Our Bankers : State Bank of India, T.Nagar, Chennai-17.

*Printed at :* **NOVENA OFFSET PRINTING CO.,** Chennai - 5 ✆ 28446166, 28446891



# ஓஷோ

பகவான் ரஜ்னீஷ், தற்போது
'ஓஷோ' என்ற பெயரால் மட்டுமே
குறிப்பிடப்படுகிறார்.
வில்லியம் ஜேம்ஸ் குறிப்பிட்ட
'ஓஷியானிக்' என்ற சொல்லிலிருந்து
தம்முடைய பெயர் உருவானதாக
ஓஷோ குறிப்பிட்டுள்ளார்.
'ஓஷியானிக்' என்றால்
கடலில் கரைந்து போவது
என்று பொருள்.
'ஓஷியானிக்' என்ற சொல்
அனுபவத்தை மட்டுமே குறிக்கின்றது.
ஆனால், அனுபவிப்பவரைக்
குறிப்பிடவில்லை. அதனால்,
'ஓஷோ' என்ற சொல்லை
உருவாக்கினேன் என்கிறார், ஓஷோ.
ஆனால், இந்தச் சொல்
கீழை நாடுகளில், நீண்ட காலமாக,
வேறு ஒரு பொருளிலும்
பயன்படுத்தப்பட்டு வருவதை
ஓஷோ பின்னால் கண்டு கொண்டார்
இதன் பொருள்:
'வானம் பூச்சொரிந்து
ஆசிர்வதிக்கப்பட்ட மனிதன்.'



**புத்தருடைய** விரோதிகள் மட்டுமன்றி அவருடைய அபிமானிகள் கூடத்தான் அவரைப் பெரிதும் தவறாகப் புரிந்து கொண்டிருந்திருக்கிறார்கள். பார்க்கப் போனால் அவரைத் தவறாகப் புரிந்து கொண்ட அபிமானிகள்தான் அதிகம்.

வேறு எவரையும் விடப் புத்தரைத்தான் அதிகம் தவறாகப் புரிந்து கொண்டிருக்கிறார்கள். காரணம் அவர் மிக ஆழமான ஞானிகளில் ஒருவராக இருந்துவிட்டதுதான்.

அவருடைய எண்ணங்கள் மிக ஆழ்ந்தவை. எனவே தவறாகத்தான் புரிந்து கொள்ளப்படும்.

நான் ஒரு பௌத்தனல்ல. எனவே புத்தருடைய வார்த்தைகளுக்கு வியாக்கியானம் சொல்ல வரவில்லை. கௌதம புத்தர் எதை அனுபவித்திருந்தாரோ அதையே நானும் அனுபவிக்கிறவன் என்பதால், அவரைப் பற்றி நான் பேசுவது என்னைப் பற்றி நானே பேசிக் கொள்வதைப் போலத்தான்.

இது ஒரு வியாக்கியானமல்ல. விளக்கம் அல்ல. புத்தரை ஒரு முகாந்திரமாகக் கொண்டு பேசப் போகிறேன். என்னுடைய ஞானத்தைப் பற்றி உங்களிடம் பேச ஒரு பிரமாதமான முகாந்திரம்.

என்னுடைய அனுபவத்தை மட்டுமே நான் பேசுகிறேன் என்பதை நினைவில் வைத்துக் கொள்ள வேண்டும். நான் புரிந்து கொண்டதையும் என் அனுபவத்தையும் மாட்டி வைக்க ஒரு முளைக்குச்சிதான் புத்தர்.

அந்த மனிதர் மீது எனக்கு அலாதிப் பிரியம். ஏனென்றால் அவரளவுக்கு ஞானத்தில் ஆழ்ந்தவரோ உயர்ந்து நின்றவரோ வேறு யாரும் இல்லை. மானுடப் பிரக்ஞை இதுவரைக்கும் போய்ச் சேர்ந்த மிகப் பெரிய உயரத்தில், எவரெஸ்டில் அவர் இருந்து கொண்டிருக்கிறார்.

**ஓஷோ**

# முன்னுரை

**கௌ**தம புத்தரின் முக்கியமான சூத்திரங்களின் மிகப் பெரிய தொகுப்பு 'தம்மபதம்' என்று சொல்லக் கேட்டிருக்கிறேன். நீண்ட காலமாகவே பௌத்த அறிஞர்கள் எண்ணிறந்த வியாக்கியானம் தந்திருக்கிறார்கள்.

எனவே இன்னுமொரு வியாக்கியானம் தேவைதானா? 'முற்ற முடிந்ததை நோக்கிய படிகள்' என்ற தலைப்பில் பன்னிரண்டு பாகங்களில் நீண்ட நாட்களுக்கு முன் தந்த நீண்ட வியாக்கியானம், அழிவு சர்வ நிச்சயம் என்பதைத் தெரிந்து கொண்டு அடுத்த நூற்றாண்டை நோக்கி நகர்ந்து கொண்டிருப்பவனுக்கு, எந்த வகையில் பயனளிக்கப் போகிறது?

இந்த உரைகளின் சிறப்பே ஞானம் சித்திக்கப் பெற்ற ஓஷோ இன்னொரு ஞானியின் மொழிகளுக்கு விளக்கம் தந்திருப்பதுதான்.

இதுவரையிலும் அறிவு ஜீவிகளே புத்தர் என்ன சொல்லியிருக்கிறார் என்பதைத் தெளிவுபடுத்திக் கொண்டிருந்திருக்கிறார்கள். புத்தரின் போதனைகள் அறிவு வயப்பட்டவையே அல்ல என்பது வேறு விஷயம்.

எனவே என்னதான் சிரத்தையாக முயன்றாலும் அறிவின் வழி புத்தரை அறிந்து கொள்ளச் செய்யும் முயற்சிகளிலிருந்து எள்ளளவும், எவரும், எதுவும் தெரிந்து கொள்ள முடியாது.

புத்தருடைய வார்த்தைகளுக்கு மூலம் எதுவோ அதைத் தானும் அனுபவித்த ஒருவரே அந்த ஒளிர்ஞானத்தை வெளிப்படுத்தத் தகுதியுள்ளவர்.

ஓஷோ சரியாகப் பொருந்தி வருகிறார். புத்தர் அளந்த பிரக்ஞையின் சிகரத்தைத் தாமும் அளந்துவிட்டவர் என்பதால் மட்டுமல்ல.

பார்க்கப் போனால் இருபத்தைந்து நூற்றாண்டுகளாக மானுடப் பிரக்ஞை வளர்ந்து கொண்டே இருந்திருக்கிறது. புத்தரே கூட ஞானத்துக்கு அப்பால் ஒரு நிலை உண்டு என்று சொல்லிப் போயிருக்கிறார்.

ஓஷோ அவர்களிடத்தில் மானுடப் பிரக்ஞையின் முதிர் வடிவைக் காண்கிறோம்.

ஓஷோவின் வியாக்கியானங்கள் எதையும் பற்றியதல்ல. எதையும் சார்ந்ததல்ல. ஏதோ ஒரு வகையில் புத்தருடைய நடுமத்துக்குப் போய்ச் சேர்ந்திருந்து பேசியது. அல்லது புத்தர் இவருக்குள் நுழைந்துவிட்டரோ! அல்லது இருவரும் ஒருவராக ஐக்கியமாகிப் போனார்களோ? விளக்கம் எதுவானால் என்ன? புத்தருடைய வார்த்தைகளில் ஓஷோ பேசும்போது ஒரு தாக்கம் இருக்கிறது. ஓர் அணுக்கம் இருக்கிறது. செழுமை இருக்கிறது. எனவே அறிஞர்களின் வியாக்கியானங்கள் சோகை பிடித்துப் போய்த் தெரிகின்றன.

ஓஷோ பல ஞானியரைப் பற்றியும்தான் பேசி யிருக்கிறார். பிதகோரஸ், பிளோடினஸ், ஹெராக்ளிடிஸ் ஆகிய கிரேக்க ஞானியர்; மகாவீரர், கிருஷ்ணர், கபீர், மன்சூர், நானக் கோரா, கோரக் சர்மத் போன்ற இந்திய ஞானியர்; லாவோட்சூ, ஜோஷு, ஸோஸான் போன்ற சீன ஜப்பானிய ஞானியர்; இயேசு, ரூமி, ரபியா என்று தொடங்கிச் சககாலத்திய ராமகிருஷ்ணர், ராமன் மகரிஷி, குர்ட்ஜீஃப், கிருஷ்ணமூர்த்தி என்று அனைவரைப் பற்றியும்தான் பேசியிருக்கிறார்.

யாரைப் பற்றி அவர் பேசினாலும் நடப்பது ஒன்றுதான் என்பது அவர் உரைகளைக் கேட்டவர்களுக்குத்தான் தெரியும்.

ஓஷோ இயேசுவைப் பற்றியோ ஜோஷுவைப் பற்றியோ பேசுவதில்லை. அவர்களாகவே ஆகிப் போகிறார்.

எனவே புத்தர் மீது அவர் கொண்டிருந்த அன்பு தனிச் சிறப்புடையது என்பதையும் அவர்களுக்கிடையேயான இசைவு நின்று நிலவ வந்துவிட்டது என்பதையும் சொல்லித்தானாக வேண்டும்.

முப்பத்தைந்து வருடங்களாக தன் உரைகள் அனைத்திலும் அவ்வப்போது புத்தரைப் பற்றிக் குறிப்பிடாமல் இருந்ததேயில்லை. புத்தருடைய வாழ்வில் நடந்த நிகழ்ச்சிகள் பற்றியும் சீடர்களுக்கு அவர் சொன்ன வார்த்தைகள் பற்றியும் அடிக்கடி குறிப்பிடுகிறார்.

ஓஷோவின் போதனைகளின் திரண்ட கருத்தின் அடிப்படைக்கு வெகு அருகில் புத்தருடைய போதனைகள் வந்து சேர்கின்றன.

ஓஷோ தன் சீடர்களிடம் கடைசியாக 1989 ஏப்ரல் 10ஆம் நாளன்று பேசிய வார்த்தைகள் இவையாகும்:

'அதுவே உன் நித்தியமும் சிரஞ்சீவிதமும் என்பதால்
நீ ஒரு புத்தர் என்பதை நினைவில் நிறுத்துவதே
மிக உயர்ந்த அனுபவம்.
அது நீயல்ல. உன்னுடைய ஜீவிதம்.
நட்சத்திரங்களோடும் மரங்களோடும்
வானோடும் கடலோடும் ஒன்றாகிப் போனவன் நீ.
இனி மேலும் நீ தனித்தவனல்ல.
புத்தரின் கடைசி வார்த்தை ஸம்மஸதி
- நீ ஒரு புத்தன் என்பதை நினைவில் நிறுத்து -
ஸம்மஸதி'

ஒவ்வொரு விடியலிலும் இருண்டு கொண்டிருக்கும் நாளுக்காகக் கண்திறக்கும் நமக்கு, இந்தச் சூத்திரங்களின் பயனென்ன என்கிறீர்களா? எல்லோரையும் கூண்டோடு

ஒழித்துக் கட்டிவிட அல்லவோ நாம் அனைவரும் பரபரத்துக் கொண்டிருக்கிறோம்?

தம்மபதத்தின் முதல் சூத்திரம்:

**'நம் எண்ணம் எப்படியோ**
**அப்படியே நாம்.**
**நாம் எழுவதெல்லாம்**
**நம் எண்ணங்களால்தான்.**
**உலகை உருவாக்குவதும்**
**நம் எண்ணங்களால் தான்.'**

நாமேதான் நம்மையும் அப்படியே நமது உலகையும் படைத்துக் கொள்கிறோம் என்பது, அவருடைய காலத்தில் புரட்சிகரமான கருத்து. இன்றோ அனைவரும் ஏற்றுக் கொண்டதாகிப் போய்விட்டது.

பிரிவினைவாத, அடக்கி வைக்கப்பட்டிருக்கிற, சமநிலை தவறிய, மகிழ்ச்சியில்லாத மானுடத்தின் ஆக்கமே இன்றைய உலகம் என்பதை, நம்மில் பலரும் உணர்ந்து கொள்ள ஆரம்பித்துவிட்டோம்.

சககாலத்திய மனிதன் என்ற இந்த மீள முடியாத குழப்பமாகிப் போனவனிடமிருந்து, முழுக்க மாறுபட்ட சுருதி கலையாத ஆக்க பூர்வமான மெய்ம்மையை எப்படிக் கொண்டு வருவது என்பதை நம்மில் பலரும் தெரிந்து கொண்டோமில்லை.

கௌதமருக்கு அந்தப் பதில் தெரிந்திருந்தது. ஞானியர் அனைவருக்கும் தெரிந்திருந்த பதில். தியானம், சரியான சிந்தனை, விழிப்பு, ஸம்மஸதி மூலம் பிரக்ஞையை உயர்நிலைக்குக் கொண்டு வருவது எப்படி என்று அவருக்குத் தெரிந்திருந்தது.

எப்போதையும் விட இப்போதைக்கு கௌதம புத்தருடைய சூத்திரங்களுக்குத் தேவை அதிகமாகிவிட்டது.

என்றாலும் இந்தியாவின் ஒரு பகுதியான பிகாரில் இருந்த வெகு சிலருக்குப் புரியும்படி கௌதமர் பேசிச் சென்றிருக்கிறார் என்பதால், இருபத்தைந்து நூற்றாண்டுகள் கழித்து வந்திருக்கும் மானுடத்துக்கு புத்தரின் ஞானம் சென்று சேர்வதில் சில குறைகள் இருக்கின்றன.

ஓஷோ வந்து விட்டார். பதினைந்து வருடங்களாக அமெரிக்கர்கள், ஆஸ்திரேலியர்கள், ஆஸ்திரியர்கள், பெல்ஜியர்கள், பிரிட்டானியர்கள், கனடியர்கள், சீனர், டச்சு நாட்டவர், பிரெஞ்சு மக்கள், பின்லாந்து நாட்டவர், ஜெர்மானியர்கள், இந்தியர்கள், இத்தாலியர்கள், ஐரிஷ் மக்கள், ஜப்பானியர்கள், லத்தீன் அமெரிக்க நாட்டினர், நியூஸிலாந்து நாட்டினர், நார்வேஜியர்கள், ருஷ்யர்கள், ஸ்பெயின் நாட்டினர், ஸ்வீட்சர்லாந்து மக்கள், ஸ்வீடன் நாட்டினர் என்று எல்லோருமே கேட்டு உணரப் பேச, ஓஷோ வந்து விட்டார்.

எந்த நாட்டினராக எந்த மொழியினராக எந்த இனத்தவராக இருந்தாலும் சககால மனிதர் யாவரும் புரிந்து கொள்ளப் பேச, ஓஷோ வந்து விட்டார்.

கூடவே அவரிடம் இருக்கிறதே அந்த நகைச்சுவை உணர்வு - புனிதம் என்பதே கடுகடுப்போடு கூடியிருப்பது என நினைத்திருப்போருக்கு அது அநாசாரமாகப் படுகிறது. சரியான சமயத்துக்குச் சரியான விகடம் ஒன்றைச் சொல்லிவிடுவார்.

புத்தரின் 'தத்ததா' என்ற வார்த்தையை விவரிக்கிறார்:

**ஒருவன் தலையில் மூன்றே மூன்று முடிகள். ஒரு சலூனுக்குப் போகிறான். ஷாம்பு போட்டு கழுவிவிட வேண்டுமாம். சீவி முடிய வேண்டுமாம். சரிதான் என்று சலூன்காரர் தமது வேலையைத் தொடங்கினார். அய்யோ, ஒரு முடி கையோடு வந்து விட்டது. ''பரவாயில்லை. நடு வகிடு எடுத்துவிடு. போதும்,'' என்றானாம் அவன்.**

ஒரு முடியைக் கவனமாக வலப்பக்கம் ஒதுக்கி வைத்து அடுத்த முடியைத் தொடவும் அதுவும் கையோடு வந்துவிட்டது. சலூன்காரருக்கு என்ன செய்வது சொல்வது என்று தெரியவில்லை.

''பரவாயில்லை. இருக்கும் ஒரு முடியைக் கலைத்துப் போடு,'' என்றானாம். மூன்று பக்கத்தில் தத்ததா என்ற வார்த்தைக்கு விளக்கம் அல்லது ஒரு ஜோக் என்றால் எதைத் தேர்ந்தெடுப்பது என்று எனக்குத் தெரியும்.

புத்தரின் வார்த்தைகளைச் சககாலத்துக்கு ஏற்ப வெளியிடும்போது மூலத்தின் அடிப்படை அழகும், ஞானத்தின் லட்சணமும், எந்த வகையிலும் பாதிக்கப்படவில்லை. அதிசயிக்கத்தக்க வகையில் அதிகமாகித்தான் போகிறது. ஓஷோவின் வார்த்தைகளில் அப்படி ஒரு தெளிவு. பரவசத்தின் முதிர்நிலையில் வெறும் அனுபவம். அவருடைய வார்த்தைகள் அல்லது புத்தருடைய வார்த்தைகள் அவருடைய வார்த்தைகளாக வெளிப்படும் போது அதில் எந்த அசுவாரசியமும் இல்லை. உள்ளத்தைக் கொள்ளை கொள்ளும் கவித்துவமே மேலோங்கி நிற்கிறது.

உதாரணமாக அன்பைப் பற்றிப் பேசும்போது, ''அன்பும் உலகும் சேர்ந்து மீண்ட சொர்க்கமாகிப் போகின்றன. அழகின் பிரமாதமான அழகே அது எதையும் சேராதிருப்பதுதான். எந்தக் காரணமும் இன்றிப் பொங்கி வருவது. அது ஆனந்தத்தின் பொழிவு. இதயத்தின் பங்கீடு. ஜீவிதத்தின் கானத்தைப் பங்கிட்டுக் கொள்வது. விடியலில் பாடும் பறவைகள், தூரத்தே கேட்கும் குயிலின் அழைப்பு - இதற்கெல்லாம் காரணம் இருக்கிறதா என்ன? உள்ளத்தில் மகிழ்ச்சி நிறையும் போது தானாகப் பிறப்பது ஒரு கானம்,'' என்கிறார்.

இந்தப் புத்தகத்தைப் போன்றவற்றை ஒரு குறிப்பிட்ட வகையில் அணுக வேண்டும் என்கிறார் ஓஷோ. ''மௌனமாக

எதிர்கொள். வியாக்கியானம் எதுவும் செய்யாமல் கண்ணாடி வெறுமனே பிரதிபலிப்பது போல. பிறகு அதன் உண்மையான பொருள் புரியும். அதனுடைய பொருள் உன் புரிதலை அதன் பொருள் மேலேற்றிப் பொருள் கொண்ட பொருள் அல்ல.''

இந்தப் பக்கங்களைப் படிக்கும்போது இதை நினைவில் கொள்வது நலம். அதைவிடச் சிந்தனைகளைக் கழித்து விட்டுப் படிப்பது சிறந்தது. தம்மபதம் பற்றிய இந்த உரைகளில் வெறும் வார்த்தைகளில்லை. என்னதான் ஓஷோவின் வார்த்தைகள் மிக அழகியவையென்றாலும் அவரைப் பொறுத்தவரையில் அவை அவர் சொல்ல வருவதன் நுணுக்கமான பொருளைச் சுமந்து வரும் அழகிய இறக்கைகள்தான். வார்த்தைகளால் சொல்ல முடியாதது. வார்த்தைகளுக்கும் ஒலிகளுக்குமிடையே இருப்பது - மௌனம்.

கலப்படமற்ற அந்த மௌனத்தைப் புரிந்து கொள்ளாத வரை, இதைப் போன்ற நூல்கள் வார்த்தைகளுக்கும் வார்த்தைகள் தேவையற்ற நிலைக்குமிடையேயான அழகிய பாலங்கள்.

**மா பிரேம் மனீஷா**

புனே, இந்தியா.

## முன்றில்



தம்மபதம் – ஓஷோவின் சொற்பொழிவுகள்

# நாம் நினைப்பது போலவே நாம்

# 1





# தம்மபதம்

நம் எண்ணம் எப்படியோ
அப்படியே நாம்.
நாம் எழுவதெல்லாம்
நம் எண்ணங்களால்தான்.
உலகை உருவாக்குவதும்
நம் எண்ணங்களால் தான்.
தூய்மையிலா மனதுடன்
பேசினாலும் செயல்பட்டாலும்
உன்னைத் துன்பங்கள்
பின் தொடரும்,
வண்டிச் சக்கரம் போல.

நம் எண்ணம் எப்படியோ
அப்படியே நாம்.
நாம் எழுவதெல்லாம்
நம் எண்ணங்களால்தான்.



உலகை உருவாக்குவதும்
நம் எண்ணங்களால்தான்.
தூய மனதுடன் செயல்பட்டால்
மகிழ்ச்சி உன்னைப் பின்தொடரும்,
உதறிவிட முடியாத நிழல் போல.

''பார், என்னை எவ்வளவு
அவமதித்துவிட்டான், அடித்துவிட்டான்
என்னைக் கீழே தள்ளி
எவ்வாறு கொள்ளையடித்து விட்டான்,''
என்ற எண்ணங்களால் வாழ்வது
வெறுப்பில் வாழ்வதாகும்.

இவ்வுலகில்
வெறுப்பு வெறுப்பை விரட்டாது.
இதுதான் விதி.
தொன்மையான, தீர்ந்து போகாத விதி.

நீயும் போய்விடுவாய்;
இதை அறிந்தபின்
எவ்வாறு உன்னால் சச்சரவிட முடியும்?

வலிமையற்ற மரத்தை காற்று
எளிதில் சாய்த்துவிடுகிறது.
புலன்களில் மகிழ்ச்சி தேடுதலும்
ஊணிலும் உறக்கத்திலும்
நிறைவு கொள்ளலும்
உன்னைச் சாய்த்துவிடும்.

காற்றினால் மலையைப் புரட்ட முடியாது.
விழிப்புணர்வும் வலிமையும்
அடக்கமும் கொண்டு, விதியை மதித்துத்
தன்னை ஆள்பவனை ஆசை தொடாது.



சேறு படிந்த சிந்தனைகளும்
நிறைந்த ஏமாற்றும் துணிவும் கொண்டவன்
மஞ்சளாடை அணிவது பொருந்துமா?

தன்னியல்பை ஆள்பவன் எவனோ,
ஒளியும் தெரிவும் உண்மையுமானவன்
எவனோ, அவனே
மஞ்சளாடை அணியலாம்.

**என்னருமை** *போதிசத்துவர்களே...*

*ஆம் அப்படித்தான் நான் உங்களைப் பார்க்கிறேன். நீங்களும் உங்களை அப்படித்தான் பார்க்க ஆரம்பித்திருக் கிறீர்கள். போதிசத்துவர் என்றால் புத்தர், வித்தாய் உள்ள புத்தர், உறங்கும் புத்தர், விழித்துக் கொள்வதற்கான சகல அம்சங்களையும் உள்ளடக்கிய புத்தர் என்று பொருள்.*

*ஒரு வகையில் எல்லோரும் போதிசத்துவர்களே. ஆனால் அனைவரும் அவ்வாறு அழைக்கப்படுவதில்லை. ஒளி தேடித் தவிக்கிறவர்களும், விடியலுக்காக ஏங்குபவர் களும், இதயத்தில் வித்தாக இருந்தது முளைவிட்டு வளரத் தொடங்கிய தகுதி படைத்தவர்களுமே போதி சத்துவர்கள்.*

*உங்களது ஆவல், பிரக்ஞை பூர்வமாக இருப்பதாலும், நீங்கள் தயார் நிலையில் இருப்பதாலும், உண்மைக்கான தாகம் கொண்டிருப்பதாலும் நீங்கள் போதிசத்துவர்கள் ஆகிவிட்டீர்கள்.*

*உண்மை வெகு தூரத்தில் இல்லை. இவ்வுலகில் உண்மைக்கான தாகம் கொண்டவர்கள் கொடுத்து வைத் தவர்கள். அது தொலைவில் இல்லையென்றாலும் கூட அதை அடைவது கடினம், சிரமம்.*



சிரமத்துக்குக் காரணம் அதன் இயல்பன்று. நமது மூலதனம் அனைத்தையும் பொய்களில் முதலீடு செய்து வைத்திருப்பதுதான்.

பிறவிகள்தோறும் நமது மூலதனம் பொய்மைகளில் தான் கிடக்கிறது. நமது மூலதனம் மிக அதிகமாக இருப்பதால் உண்மை என்றாலே நமக்குப் பயமாக இருக்கிறது. எப்படியும் அதைத் தவிர்க்கவே முயல்கிறோம். அதிலிருந்து தப்பிவிடவே முயல்கிறோம்.

பொய்கள் தப்பித்துக் கொள்ள உதவும் அழகான வழிகள். பொய்கள் சௌகரியமான பாதுகாப்பான கனவுகள். ஆனால் கனவுகள், வெறும் கனவுகளே. ஒரு கணம் அவை ஆனந்தமாக இருக்கும். அடிமைப்படுத்தும். ஆம், ஒரு கண நேரம் மட்டுமே!

ஆனால் ஒவ்வொரு கனவுக்குப் பின்னாலும் வருவது மாபெரும் சலிப்புணர்வுதான். ஒவ்வொரு ஆசைக்குப் பின்னாலும் வருவது ஆழ்ந்த தோல்விதான்.

என்றாலும் நாம் புதிய புதிய பொய்களைத் தேடி விரைகிறோம். பழைய பொய்கள் தெரிந்து போய் விடுவதால் புதிய பொய்களை உடனுக்குடன் கண்டு பிடித்து விடுகிறோம்.

இதை மறந்து விடாதீர்கள். பொய்களைத்தான் கண்டு பிடிக்க முடியும். உண்மையைக் கண்டுபிடிக்க முடியாது. உண்மை ஏற்கெனவே இருப்பது. உண்மையைக் கண்டு கொள்ளலாமே தவிரப் புதிதாய்க் கண்டுபிடிக்க முடியாது.

பொய்களைக் கண்டு கொள்ள முடியாது. அது இல்லாத ஒன்றாகையால் கண்டுபிடிக்கத்தான் வேண்டும்.

மனம் கண்டுபிடிக்கும் இயல்பு கொண்டதாகவும் செயல்படுவதாகவும் இருப்பதால், மனதிற்குப் பொய்கள்



மிகவும் இணக்கமாக இருக்கின்றன. மனம் செயல்புரிவதாக மாறும்போது ஆணவம் படைக்கப்படுகிறது.

உண்மையுடன் இருக்கும்போது நீங்கள் எதுவும் செய்ய வேண்டியதே இல்லை. எதுவும் செய்ய வேண்டி இராத தால் மனம் இல்லாம் போய்விடுகிறது. மனம் காணாமல் போய்விடும்போது அதனுடன் சேர்ந்து ஆணவமும் கரைந்து காணாமல், ஆவியாய்ப் போய்விடும். ஆபத்தான நிலைதான். மிக மிக ஆபத்தான நிலைமைதான் அது.

நீங்களாகத் தேடிப்போன ஆபத்து அது. நீங்களாக அதை நோக்கிக் காலடி எடுத்து வைத்தீர்கள். தட்டுத் தடுமாறி, தள்ளாடி, துழாவி, சந்தேகங்களுடன் காலடி வைத்தாலும் அது உண்மையில் முன்னே வைத்த காலடி வைப்புத்தான். அதனால்தான் உங்களை போதிசத்துவர்கள் என்று குறிப்பிடுகிறேன்.

கௌதம புத்தரின் போதனைகளான தம்மபதத்தை போதிசத்துவர்களுக்குத்தான் கற்றுத் தர முடியும். சாதாரண மக்களுக்கு, சமுதாயத்துக்குக் கற்றுக் கொடுக்க முடியாது. அவர்களால் இதைப் புரிந்து கொள்ள முடியாது.

புத்தரின் மொழிகள், எல்லையற்ற நிரந்தர மௌனத்தி லிருந்து வருபவை. மௌனம் கொண்டுதான் அதை நீங்கள் பெற முடியும். புத்தரின் இந்த மொழிகள் நிறைந்த தூய்மையிலிருந்து வருபவை. நீங்கள் பெறும் இயல்பும் அடக்கமும் அகந்தையின்மையும் தயார் நிலையும் பெற்று ஒரு வாகனமாக மாறாத வரை, உங்களால் அவற்றை விளங்கிக் கொள்ள முடியாது. ஆனால் அவற்றை அறிவுபூர்வமாக அறிந்து கொள்ள முடியும். இயன்றவரை அவை எளிதாகவே அமைந்துள்ளன. ஆனால் அந்த எளிமை தான் விவகாரமே. காரணம் நீங்கள் எளிமையாக இல்லை.



எளிமையை உணர்ந்து கொள்ள இதயத்தில் எளிமை வேண்டும். ஏனென்றால் எளிய இதயம்தான் எளிய உண்மையைப் புரிந்து கொள்ளும். தூய்மையிலிருந்து வருபனவற்றைத் தூய்மையால்தான் உணர்ந்து கொள்ள முடியும்.

நீண்ட காலம் காத்திருந்துவிட்டேன். இப்போது காலம் கனிந்துவிட்டது. நீங்கள் தயாராக இருக்கிறீர்கள். இனி விதை விதைக்கலாம். மிக முக்கியத்துவம் வாய்ந்த அந்த அற்புத மொழிகள் மீண்டும் ஒலிக்கப் போகின்றன.

இருபத்தைந்து நூற்றாண்டுகளாக இப்படியொரு கூட்டம் திரண்டதில்லை. அங்குமிங்குமாக ஒரு சில குருமார்களும் சீடர்களும் இருந்தார்கள் என்பது உண்மை தான். அரை டஜன் அல்லது ஒரு டஜன் சீடர்கள்தாம் இருந்து கேட்டிருக்க முடியும்.

தம்மபதம் கற்ற அந்தச் சிறு கூட்டத்தினால் மாபெரும் சமுதாயத்தை மாற்ற முடியாது. அது கடலில் ஒரு கரண்டி சர்க்கரையைக் கொட்டுவது போல. கடலும் இனிக்காது. சர்க்கரையும் வீணாகும்.

இதுவரை யாரும் கேள்விப்பட்டிராத அளவில் மாபெரும் சோதனை நிகழ்த்தப்பட வேண்டும். மானிட சமுதாயத்தின் கணிசமாக அளவினரைத் தொடுகிற முறையில் பெரிய அளவில் நடத்தப்பட வேண்டும்.

குறைந்த பட்சம் சமுதாயத்தின் மையம், சமுதாய ஆத்மாவானது அதனால் விழித்துக் கொள்ள வேண்டும்.

சாதாரண விளிம்பு நிலை மனிதர்கள் தூங்கிக் கொண்டே இருப்பார்கள். அந்தத் தூங்கும் மனங்கள் தூங்கிக் கொண்டே இருக்கட்டும். ஆனால் அறிவு குடி கொண்டிருக்கும் மையத்தில் ஒளியைக் கிளறிவிட வேண்டும்.



காலம் கனிந்திருக்கிறது. அதற்கான நேரம் வந்துவிட்டது. என்னுடைய காரியமெல்லாம் ஒரு சக்திப் புலத்தை, புத்தப் பிரதேசத்தை உருவாக்கி விடுவதுதான். அங்கேதான் இந்த அழியாத உண்மைகளைப் பேச முடியும். அரிதாக அமைந்துள்ள வாய்ப்பு இது.

பல நூற்றாண்டுகளின் இடைவெளிக் காலத்துக்குப் பிறகு இந்த வாய்ப்பு அமைந்திருக்கிறது. இதைத் தவற விட்டுவிடாதீர்கள். நிறைந்த கவனத்துடன் தயாராக இருங்கள்.

சொல்லப்படுவதைத் தலையாலன்றி இதயத்தாலும் கேளுங்கள். உங்கள் இருப்பின் ஒவ்வொரு தசை நார் கொண்டும் கேளுங்கள். உங்கள் முழுமை அதனால் கிளர்ந்தெழட்டும்.

இந்தப் பத்து நாள் மௌனத்துக்குப் பிறகு புத்தர் திரும்பி வரச் சரியான சமயம் அமைந்துவிட்டது. அவர் உயிருடன் உங்களிடையே இனி உலவப் போகிறார். புத்தரின் காற்றுகள் உங்களிடையே வீசப் போகின்றன.

ஆம், அவரைத் திரும்ப அழைக்க முடியும். காரணம் யாருமே காணாமற் போய்விடுவதில்லை என்பதுதான். புத்தர் இனி உடலெடுத்த மனிதர் அல்லர். அவர் எங்கும் ஒரு தனிமனிதராக இல்லை. ஆனால் அவரது சாரம், அவரது ஆத்மா இப்போது பிரபஞ்ச ஆத்மாவின் ஒரு பகுதி.

ஆழ்ந்த ஆர்வமும், நிறைந்த ஆவலும், பிரார்த்தனை நிறைந்த இதயமும், உணர்ச்சிமயமான ஆசையும் மிகப் பலருக்கு ஏற்படுமானால், தனி மனித ஆத்மாவில் கலந்து கரைந்துவிடும். பின் அதுவே பல கோடி வழிகளில் வெளிப்படும்.

உண்மையான ஞானி சாவதில்லை. சாகவும் முடியாது. மரணம் அவர் முன் வந்து நிற்பதில்லை. மரணம் என்பதே



அவர்களுக்கு இல்லை. அதனால்தான் அவர்கள் ஞானகுருவாக இருக்கிறார்கள்.

வாழ்வின் நிரந்தரத்தை அறிந்தவர்கள் அவர்கள். உடல் இல்லாமல் போவதை அவர்கள் பார்த்திருந்தாலும் உடலே அனைத்தும் அன்று. உடல் வெறும் விளிம்புதான். உடல் ஆத்மாவின் ஆடை மட்டுமே.

உடல் இருப்பிடம். உயிரின் வீடு. வீட்டின் விருந்தினர் காணாமல் போய்விடுவதே இல்லை. விருந்தினர் வீடு வீடாக மாறிக் கொண்டே இருப்பார்.

ஒருநாள் வரும். அப்போது அந்த விருந்தினர் வீடில்லாமல் வெட்ட வெளியில் வானத்தின் கீழ் வாழத் துவங்கி விடுவார். உடல்களும் வீடுகளுமே வந்து போகின்றன, பிறக்கின்றன, இறக்கின்றன. ஆனால் உள்ளார்ந்த தொடர்ச்சி ஒன்று இருக்கிறது. அது நிரந்தரமானது. காலம் கடந்தது. மரணமற்றது.

நீங்கள் குருவை நேசிக்கும் போது, இயேசு, புத்தர், ஜராதுஸ்டிரர், லாவோ சு போன்றவர்களை நேசிக்கும்போது, உங்கள் உணர்வு முழுமை பெறும்போது, சட்டென அவர்களுடன் உங்களுக்கு ஓர் இணைப்பு ஏற்பட்டுவிடுகிறது.

எனது பேச்சு, வெறும் விளக்கவுரையன்று. ஒரு பாலத்தை உருவாக்கும் முயற்சி. இந்தப் பூமியில் வாழ்ந்த மிக முக்கியமான தனிச்சிறப்பு மிக்க ஈடு இணையற்ற மகான் புத்தர். அவரிடம் உங்களுக்குச் சிறிதளவு ஈடுபாடு ஏற்பட்டாலும் உங்களுக்கு நன்மைதான். நலமே விளையும்.

இந்தப் பத்து நாள் மௌனத்துக்குப் பிறகு நீங்கள் என்னுடன் மௌனத்தில் இணையத் தயாராகிவிட்டீர்கள் என்பதை நான் மகிழ்ச்சியோடு சொல்லப் போகிறேன். தொடர்பினால் ஏற்படும் இறுதி நிலை இதுதான். சொற்கள் சக்தியற்றவை. பகுதி உண்மையைத்தான் சொற்கள்



உணர்த்தும். முழுமையாக உணர்த்த வல்லது மௌனமே.

சொற்களைப் பயன்படுத்துவது ஆபத்தான விளையாட்டும் கூட. காரணம், அர்த்தம் என்னுடனேயே தங்கிவிட சொல் மட்டுமே உங்களை அடைகிறது. அந்தச் சொல்லுக்கு உங்கள் அர்த்தத்தையே நீங்கள் தருகிறீர்கள். உங்கள் நிறத்தையே தருகிறீர்கள்.

அந்தச் சொல்லின் உண்மை அர்த்தம் என்னவோ அது அப்போது உங்களிடம் இருக்காது. வேறு ஏதோ ஓர் அர்த்தம் அதில் இருக்கும். தாழ்ந்த அர்த்தமே இருக்கும்.

அதில் உங்கள் அர்த்தமே இருக்கும். என் அர்த்தம் இருக்காது. மொழியை நீங்கள் திரிக்கலாம். அது தவிர்க்க முடியாத ஒன்றுதான். ஆனால் மௌனத்தைத் திரிக்க முடியாது. ஒன்று அதைப் புரிந்து கொள்ளலாம் அல்லது புரிந்து கொள்ள முடியாமல் போகலாம். அவ்வளவுதான்.

இந்தப் பத்து நாட்கள் இருவகையான மக்கள் மட்டுமே இங்கே இருந்தார்கள். புரிந்து கொண்டவர்கள். புரிந்து கொள்ளாதவர்கள். ஆனால் தவறாகப் புரிந்து கொண்டவர் ஒருவர் கூட இருக்கவில்லை.

நீங்கள் மௌனத்தைத் தவறாகப் புரிந்து கொள்ளவே முடியாது. மௌனத்தின் அழகே அதுதான். பாகுபாடு தெளிவாக இருக்கும். ஒன்று நீங்கள் புரிந்து கொள்வீர்கள் அல்லது புரியாமல் போய்விடும். அவ்வளவுதான். தவறாகப் புரிந்து கொள்ள அங்கே எதுவுமே இல்லை.

வார்த்தைகளின் விவகாரமே எதிர்மறையானது. புரிந்து கொள்வது மிகச் சிரமம். உங்களுக்குப் புரியவில்லை என்பதைப் புரிந்து கொள்வது மிகச் சிரமம். இந்த இரண்டுமே ஏறத்தாழ சாத்தியமில்லாதவை. அதனால் இருக்கும் சாத்தியக் கூறு தவறாகப் புரிந்து கொள்வதுதான்.



இந்தப் பத்து நாட்கள் அபூர்வமான அழகு கொண்டவை. ஒரு மர்மமான கம்பீரமும் கூட. நான் இனி இந்தக் கரைக்குச் சொந்தக்காரன் அல்லன். எனது கப்பல் நீண்ட காலமாக எனக்காகக் காத்திருக்கிறது. நான் போயிருக்க வேண்டும். நான் இன்னும் இந்த உடலில் தங்கியிருப்பது ஓர் அற்புதம்தான்.

அந்தப் பெருமையெல்லாம் உங்களுடையதுதான். உங்களது அன்பு, உங்களது பிரார்த்தனை, உங்களது வேண்டுதல்தான் காரணம். நான் இன்னும் கொஞ்ச காலம் இக்கரையில் தங்கியிருக்க விரும்புகிறீர்கள். அதனால்தான் நடக்க முடியாதது நடந்திருக்கிறது.

இந்தப் பத்து நாட்களாக உடலும் உயிருமாய் இருப்பதை நான் உணரவில்லை. வேர் பிடுங்கப்பட்டது போலவே உணர்ந்தேன். இந்த உடலில் நாம் இல்லை என்று உணரும்போது உடலில் தங்கியிருப்பது ஆச்சரியம்தான்.

அதைவிட அதிசயம் நமக்குச் சொந்தமல்லாத இடத்தில் வாழ்ந்து கொண்டிருப்பது. எனது வீடு மறு கரையில் இருக்கிறது. அழைப்பு தொடர்ந்து வந்து கொண்டே இருக்கிறது. உங்களுக்கு நான் தேவை என்பதால் பிரபஞ்சக் கருணை இன்னும் கொஞ்சம் காலம் வாழ்ந்து கொள்ள அனுமதித்திருக்கிறது. நீங்கள் அதைக் கடவுளின் கருணை என்பீர்கள்.

அது ஓர் அற்புதம். அது ஓர் அழகு. அது ஒரு மர்மம். அது ஒரு கம்பீரம். உங்களில் பலரும் அதை உணர்ந் திருக்கக் கூடும். பலரும் பலவிதமாய் உணர்ந்திருப்பீர்கள்.

சிலர் மிகவும் அச்சம் தரும் அம்சமாக உணர்ந் திருக்கலாம். சிலருக்கு மரணமே கதவைத் தட்டுவது போல இருந்திருக்கும். சிலருக்குப் பெரும் குழப்பமாகக் கூட



இருந்திருக்கலாம். சிலருக்கு அதிர்ச்சி ஏற்பட்டிருக்கும். பெரிதாக ஒவ்வொருவரும் ஏதாவது ஒரு வகையில் அதனால் தீண்டப்பட்டிருப்பீர்கள்.

புதிதாக வந்தவர்களுக்கு மட்டுமே இழப்பு குறைவு. என்ன நடக்கிறதென்றே அவர்களுக்குப் புரிந்திருக்காது. ஆனால் அவர்களுக்கு நான் நன்றி செலுத்துகிறேன். என்ன நிகழ்கிறது என்று தெரியாமலிருந்தும் கூடக் காத்திருந்தார்களே, ஏதாவது சொல்வேன் என்று கடைசி வரை நம்பிக்கையோடு காத்திருந்தார்களே, பலருக்கு இனி நான் பேசவே போவதில்லை என்ற அச்சம் கூட ஏற்பட்டிருக்கும். அதற்கான சாத்தியக்கூறும் உண்டுதான். எனக்கே உறுதியாகத் தெரிந்திருக்கவில்லை.

சொற்கள் எனக்கு மேலும் மேலும் சிரமமாக இருக்கின்றன. மிகவும் சிரமப்பட்டே பேச வேண்டியிருக்கிறது. எனக்குச் சொல்ல வேண்டியது இருப்பதால் உங்களிடம் பேசிக் கொண்டிருக்கிறேன்.

ஆனால் நீங்கள் சீக்கிரம் தயாராகிவிட வேண்டும். அப்படி ஆனவுடன் நான் மௌனத்தில் அமர்ந்துவிடலாம். பறவைகளின் பாடல் கேட்கலாம். சொந்த இதயத் துடிப்பை கேட்கலாம். சும்மா இருந்து எதையுமே செய்யாமல்...

சீக்கிரம் தயாராகிவிடுங்கள். நான் என்றைக்கு வேண்டுமானாலும் பேச்சை நிறுத்திவிடக் கூடும். இந்தச் செய்தி உலகின் எல்லா மூலை முடுக்குகளுக்கும் என் சன்னியாசிகளுக்கும் பரவட்டும். என்னை வார்த்தைகளால் புரிந்து கொண்டவர்களுக்கெல்லாம் தெரியட்டும்.

அப்போதுதான் அவர்கள் இங்கே விரைந்து வரக் கூடும். நான் எப்போது வேண்டுமானாலும் பேசுவதை நிறுத்திவிடுவேன் என்று முன்னறிவிப்பு இல்லாமல், எப்போது வேண்டுமானாலும் அது நிகழ்ந்துவிடலாம். ஒரு வாக்கி



யத்தின் நடுவில் கூட சட்டென்று நின்றுவிடலாம். நான் அந்த வாக்கியத்தை முடிக்கக் கூட மாட்டேன். அப்புறம் அந்த அரை வாக்கியம் முழுமை பெறாது அந்தரத்திலேயே தொங்கிக் கொண்டிருக்கும். என்றென்றைக்குமாக...

ஆனால் இந்த முறை என்னை நீங்கள் பின்னுக்கு இழுத்துவிட்டீர்கள்.

புத்தரின் இந்த உபதேசங்களைத்தான் தம்மபதம் என்கிறார்கள். முதலில் இந்த சொல்லைப் புரிந்து கொள்ளுங்கள் 'தம்ம' என்ற சொல், பல பொருள் தரும்.

சட்டம் அல்லது விதிமுறை என்றும் ஒரு பொருள் உண்டு. விதி என்பது, பிரபஞ்சத்தையே ஒன்றிணைத்து வைத்திருக்கும் மேலான விதி. கண்களுக்குப் புலப்படாத விதி. புதிரான விதி. ஆனால் சர்வ நிச்சயமாக இருக்கும் விதி.

இல்லாவிட்டால் பிரபஞ்சம் சிதறுண்டு போகுமே. எல்லையற்ற விசாலமான பிரபஞ்சம் எவ்வளவு இணக்கமாக, அமைதியாக, ஒத்திசைவாக இயங்கிக் கொண்டிருக்கிறது. எல்லாவற்றையும் எல்லாவற்றோடும் இணைக்கும் ஆதார சக்திப் பிரவாகம் ஒன்று இருக்கிறது என்பதற்கு அந்த ஒத்திசைவான இயக்கமே சான்று.

எல்லாவற்றையும் இணைக்கும் பாலமாக அமைந்திருப்பது அந்தச் சக்திப் பிரவாகம். நாம் தீவுகள் அல்ல. ஒரு சிறு புல்லின் இலையும் மாபெரும் நட்சத்திரத்தோடு பந்தப்பட்டிருக்கிறது. ஒரு சிறு புல்லின் இலையைச் சிதைத்தாலும் மதிப்புமிக்க பிரபஞ்சப் பகுதி ஒன்றைச் சிதைத்ததாகவே ஆகிவிடும்.

இயற்கையில் அந்தஸ்து பாகுபாடு கிடையாது. அதில் உயர்வு தாழ்வு கிடையாது. மாபெரும் விண்மீனும்



மிகச்சிறிய புல்லின் இலையும் சமம். அதனால்தான் 'தம்மா' என்பதன் இன்னொரு பொருள் நீதி என்றாகிறது.

சமத்துவம், ஏற்றத் தாழ்வின்மை என்று பொருள். இயற்கை ஒரு பூரணமான கம்யூனிஸ்ட். அதில் வர்க்க பேதமே இல்லை. எல்லோரும் சமம். அதனால்தான் தர்மம் என்பதன் பொருள் நீதி என்றாகிறது.

மூன்றாவது பொருள் நன்மை. அதாவது அறம். இயற்கை அறவழிப்பட்டது. ஒழுக்கமானது. இயற்கையில் ஏதாவது ஒன்று ஒழுக்கமில்லை என்று உங்களுக்குத் தோன்றினால், அது உங்களின் புரியாமையின் விளைவே தவிர உண்மையில் அப்படி இல்லை.

இயற்கை முற்றிலும் அறவழிப்பட்டது. இங்கே இப்போது நிகழ்வது. எங்கேயும் எப்போதும் சரியாக நிகழும். தவறானது எப்போதும் நிகழாது. உங்களுக்கு ஒன்று தவறாகத் தோன்றலாம், அதற்குக் காரணம் எது சரி எது தவறு என்பதைப் பற்றிய உங்களது தவறான கண்ணோட்டம்தான்.

நீங்கள் விருப்பு வெறுப்பின்றிப் பார்த்தால் பிரபஞ்சத் தில் எதுவுமே தவறில்லை. எல்லாம் சரியே. பிறப்பு சரி. சாவு சரி. அழகு சரி. அழகின்மையும் சரியே.

நமது மனங்கள் சிறியவை. புரிதல் ஆற்றலும் குறுகியது. முழுமையைப் பார்க்க நம்மால் முடிவதில்லை. ஒரு பகுதியை மட்டுமே நாம் பார்க்கிறோம். வீட்டுக்குள்ளி ருந்து கொண்டு கதவடைத்துவிட்டு சாவித் துவாரத்தின் வழியாகத் தெருவைப் பார்க்கிறவர்களைப் போலத்தான் நாம் இருக்கிறோம்.

அப்படிப் பார்க்கிறவருக்குச் சாலையின் ஒரு பகுதி மட்டுமே தெரியும். நடந்து போகும் ஓர் ஆள். விரைந்து



மறையும் ஒரு கார். இப்படி. ஒரு கணம் தோன்றி மறுகணம் மறைந்துவிடும்.

நாம் இயற்கையைப் பார்ப்பது இப்படித்தான். எதிர்காலத்தில் ஏதோ இருப்பதாகச் சொல்கிறோம். அப்புறம் அது நிகழ்காலத்துக்கு வருகிறது. பிறகு அது இறந்த காலத்துக்குள் போய்விடுகிறது.

சொல்லப் போனால் காலம் என்பது மனிதனின் கண்டு பிடிப்பு. இருப்பதென்னவோ எப்பொழுதும் இப்பொழுது தான். இயற்கைக்கு இறந்த காலமும் தெரியாது. எதிர் காலமும் தெரியாது. இயற்கை அறிந்ததெல்லாம் நிகழ் காலம் மட்டுமே.

ஆனால் நாமோ உள்ளே அமர்ந்து சாவித்துவாரத்தின் வழியாகப் பார்த்துக் கொண்டிருக்கிறோம். முதலில் யாரும் தெரிவதில்லை. பிறகு சட்டென ஓர் ஆள் தோன்றுகிறான். உடனே மறைந்துவிடுகிறான். இப்போது நீங்கள் காலத்தை உருவாக்க வேண்டி வருகிறது.

அந்த ஆள் தோன்றுமுன் அவன் எதிர்காலத்தில் இருக்கிறான். அவன் அப்பொழுதே இருக்கத்தான் செய்தான். ஆனால் உங்களைப் பொறுத்த அளவில் அவன் எதிர்காலத்தில் இருந்தவன்தான். அப்புறம் அவன் தோன்றுகிறான். தோன்றியவுடனே நிகழ்காலத்துக்கு வந்துவிடுகிறான். அதே ஆள்தான்.

அதற்குப் பிறகு சின்னத் துளை வழியாக அவனைப் பார்க்க முடிவதில்லை. அவன் இறந்த காலத்துக்குள் போய் விடுகிறான். இறந்த காலம் என்று எதுவும் இல்லை. எதிர் க்ர்லமும் இல்லை. இருப்பதெல்லாம் எப்பொழுதும் நிகழ் காலமே. நாம் பார்க்கும் விதம் வேறுபட்டிருப்பதால் வரையறைக்கு உட்பட்டிருப்பதால் அப்படியெல்லாம் தோன்றுகிறது.



அதனால்தான் இந்த உலகில் துன்ப துயரங்கள், இது அது ஏன் இருக்கின்றன என்று நாம் கேட்கிறோம். பூரணத்தை நாம் பார்க்க முடிந்தால் இந்த வினாக்கள் எல்லாம் காணாமல் போய்விடும்.

முழுமையைக் காண நீங்கள் வீட்டை விட்டு வெளியே வரவேண்டும். கதவு திறக்க வேண்டும். சாவித் துவார வழியைப் புறக்கணிக்க வேண்டும்.

மனம் அப்படிப்பட்டதுதான். அதுவொரு சாவித் துளை. மிகச் சிறிய துளை. விசாலமான பிரபஞ்சத்துடன் ஒப்பிடும்போது நமது விழிகளும் செவிகளும் கைகளும் எம்மாத்திரம்? நாம் எதைப் பற்ற முடியும்? முக்கியமானது எதையும் பற்ற முடியாது.அந்தச் சிறு பகுதி உண்மைகள் காரணமாக அவற்றின் மீது அதிகப் பற்றுதல் கொண்டு விடுகிறோம்.

எல்லாவற்றின் இருப்பையும் அதனதன் இயல்புப்படி முழுமையாகப் பார்க்க முடிந்தால்தான் எல்லாமே சரி என்பதன் அர்த்தம் புரியும். தவறு என்பதே இல்லை. கடவுள்தான் இருக்கிறார். சாத்தான், மனிதனின் படைப்பு.

'தம்மம்' என்பதன் மூன்றாவது பொருள் கடவுள். ஆனால் 'கடவுள்' என்ற சொல் தவறான பொருள் தந்துவிடக்கூடும் என்பதால், புத்தர் அந்தச் சொல்லைப் பயன்படுத்துவது இல்லை.

இருப்பது விதி. மனிதனல்ல. அதனால் புத்தர் கடவுள் என்ற சொல்லைப் பயன்படுத்தவில்லை. ஆனால் கடவுளைப் பற்றி ஏதாவது சொல்ல நேரும்போது, அவர் தம்மம் என்ற சொல்லைப் பயன்படுத்துகிறார். பூரணமான ஒரு விஞ்ஞானியின் மனம் புத்தருக்கு.

இதன் காரணமாகவே பலர் அவரை ஒரு நாத்திகர் என்று சொல்கிறார்கள். உண்மையில் அவர் நாத்திகர்

அல்லர். இந்த உலகம் இதுவரை கண்ட, இனிக் காணப் போகிற ஆத்திகர்களில் தலை சிறந்த மனிதர் அவர். ஆனால் கடவுளைப் பற்றி அவர் பேசவேயில்லை. அவ்வளவுதான்.



ஆனால் அவர் சொல்லும் தம்மம் கடவுளைத்தான் குறிப்பிடுகிறது. 'கடவுள்' 'தம்மம்' இரண்டும் ஒரே பொருள் தரும் சொற்கள்.

தம்மம் என்றால் 'கட்டுப்பாடு'. உலகின் பல்வேறு பரிமாணங்கள். உண்மை காண விரும்புகிறவர்கள் பல விதங்களில் தம்மைக் கட்டுப்படுத்திக் கொள்ள வேண்டும்.

கட்டுப்பாடு என்ற சொல்லின் பொருளையும் மறந்து விட வேண்டாம். கற்பதற்குரிய தகுதி, கற்பதற்குரிய ஆர்வம், கற்றலை ஏற்கும் பண்பு என்பது அதன் பொருள்.

இந்த 'டிசிப்ளின்' என்ற சொல்லின் அடிப்படையில் தோன்றுயதே 'டிசைப்பிள்' என்ற சொல். தன்னுடைய விருப்பு வெறுப்புகளை எல்லாம் விட்டுவிட்டு, மனதைப் புறம் தள்ளிவிட்டு முன் கருத்து ஏதுமில்லாமல், விருப்பு வெறுப்பின்றி ஒன்றைக் காண்பவனே டிசைப்பிள், சீடன், மாணவன் ஆகிறான்.

தம்மம் என்றால் கட்டுப்பாடு.

தம்மம் என்றால் இறுதி உண்மை என்றும் பொருள். மனம் காணாமல் போக, ஆணவம் மறைந்து விட, மிச்சமிருப்பது எது? நிச்சயம் எதுவோ எஞ்சி இருக்கவே செய்யும். அதை 'எதுவோ' என்று சொல்ல முடியாது. அதனால்தான் அதை புத்தர், 'சூன்யம்' என்கிறார்.

மறுபடியும் உங்களுக்கு நினைவுபடுத்துகிறேன். இல்லாவிட்டால் தவறாகப் புரிந்து கொள்வீர்கள். எங்கெல் லாம் அவர் 'நத்திங்' என்கிறாரோ அங்கெல்லாம் அவர் கருதுவது 'நோ திங்' என்பதுதான். அந்தச் சொல்லை



இரண்டாக்கி விடுங்கள். ஒரே சொல்லாக வேண்டாம். 'நோ'வுக்கும் 'திங்'குக்கும் இடையில் ஒரு சிறு கோடு போட்டுவிடுங்கள். அப்போது தான் 'நத்திங்' என்ற சொல்லின் பொருள் விளங்கும்.

இறுதி விதி என்பது ஒரு பொருள் அல்ல. கண்டு கொள்ளக் கூடிய ஒரு பொருள் அல்ல. அது உங்கள் உள்ளார்ந்த இயல்பு. அக நிலை.

டென்மார்க் நாட்டின் தத்துவ ஞானி 'சோரன் கீர்க்கே கார்'டுடன் புத்தர் உடன்படுகிறார். உண்மை என்பது அகவய மானது என்கிறார் அவர். உண்மைக்கும் நடப்புக்கும் உள்ள வேறுபாடு அதுதான். நடப்பு என்பது புறநிலை எதார்த்தம்.

அறிவியல் தொடர்ந்து புறநிலை எதார்த்தங்களைத் தேடிக் கொண்டே இருக்கிறது. அதனால் உண்மையை அடைய அறிவியலால் முடியாது போகிறது. அதன் இலக்கணத்தைக் கூட அதனால் கண்டு கொள்ள முடியாது.

உண்மை விஞ்ஞானியின் உள்ளார்ந்த இயல்பு. ஆனால் அவர் அதைக் கவனிப்பதே இல்லை. அவர் தொடர்ந்து வேறு விஷயங்களைக் கவனிக்க ஆரம்பித்துவிடுகிறார். தமது சொந்த இருப்பை இவர் கண்டு கொள்வதே இல்லை.

இதுதான் தம்மம் என்பதன் கடைசிப் பொருள். உங்கள் உள்ளார்ந்த இயல்பு. உங்கள் அகப்பண்பு. உங்களது உண்மை.

முக்கியமானது ஒன்று உண்டு. துணிச்சலாக இதயத்தின் ஆழத்துக்குள் அமிழ்ந்து விடுங்கள். உண்மை ஒரு கோட்பாடு அல்ல. அனுமானமும் அல்ல. அது எப்போதும் ஓர் அனுபவமே.

அதன் காரணமாக எனது உண்மை உமது உண்மை ஆகாது. எனது உண்மை வேறெதுவுமாக முடியாத அளவுக்கு என் உண்மைதான். அது என் உண்மையாகவே இருக்கும்.



உங்கள் உண்மை ஆகிவிடாது. அதை நாம் பங்கிட்டுக் கொள்ளவும் வழியில்லை. பகிர்ந்து கொள்ள முடியாததே உண்மை. அது மாற்றித் தர முடியாதது. தொடர்புபடுத்த முடியாதது. சொல்லி விளக்க முடியாதது.

அதை நான் எவ்வாறு அடைந்தேன் என்பதை உங்களுக்குச் சொல்ல முடியுமே தவிர, அது என்ன என்பதை விளக்க முடியாது. எப்படி என்பதை விளக்கலாம். ஏன் என்பதை விளக்க வழியில்லை.

கட்டுப்பாட்டைக் காட்டலாம். ஆனால் குறிக்கோளைக் காட்ட முடியாது. ஒவ்வொருவருக்கும் நம் சொந்த வழியில்தான் அதை அடைய முடியும். ஒவ்வொருவரும் தம் சொந்த இருப்பின் மூலம்தான் அதை அடைய முடியும். பரிபூரணத் தனிமையில்தான் அது வெளிப்படும்.

இனி இரண்டாவது சொல்லான பதம். பதம் என்பதற்குப் பல பொருட்கள் உள்ளன. மிகவும் அடிப்படை யான பொருள் **'பாதை'** என்பதாகும்.

மதத்திற்கு இரண்டு பரிமாணங்கள் உண்டு. 'என்ன' என்ற பரிமாணமும் 'எப்படி' என்ற பரிமாணமும். என்ன என்பது பேச முடியாதது. சாத்தியமற்றது. ஆனால் எப்படி என்பது பற்றிப் பேச முடியும். பகிர்ந்து கொள்ளக் கூடியது இது. பாதை என்பதன் பொருளும் இதுதான்.

நான் பாதையை உங்களுக்கு சுட்டிக்காட்ட முடியும். நான் எவ்வாறு பயணம் செய்தேன், எவ்வாறு ஒளிமயமான சிகரத்தை அடைந்தேன் என்பதை உங்களுக்கு விளக்க முடியும். அதன் நில விளக்கம், இட அமைப்பு எல்லாம் விளக்க முடியும். பயண வழித்தட வரைபடம் கூட உங்களுக்குக் காட்ட முடியும். ஆனால் சிகரத்தின் உச்சி ஒளியில் இருந்த அனுபவம் எப்படியிருந்தது என்பதை விளக்கிச் சொல்ல முடியாது.



இமயமலைத் தொடரின் கௌரிசங்கர் சிகரத்தை எவ்வாறு அடைந்தார்கள் என்று எட்மண்ட், ஹிலாரி ஆகியோரைக் கேட்பது போல அது. அவர்கள் ஒரு வரைபடமே போட்டுக் காட்டி விடுவார்கள்.

ஆனால் சிகரத்தை அடைந்தபோது என்ன உணர்வு ஏற்பட்டது என்று கேட்டால் தலையசைத்து விடுவார்கள். அந்தச் சுதந்திர உணர்வு வாக்குக்கு அப்பாற்பட்டது. அதன் அழகு, அதன் அருள், விசாலமான வானம், உயரம், வண்ண மேகங்கள், கதிரவன், தூய காற்று, எவரும் காலடி வைத்திராத கன்னிப் பனி எல்லாமும் விளக்கத்துக்கு அப்பாற்பட்டவை. அதை உணர, ஒளியில் மூழ்கியுள்ள சிகரத்தை அடைய வேண்டும்.

பதம் என்றால் பாதம், கால், காலடி வைப்பு, ஆதாரம் என்றெல்லாம் பொருள். இந்தப் பொருள்கள் எல்லாமே முக்கியத்துவம் கொண்டவை.

நீங்கள் இருக்கும் இடத்தை விட்டு நகர வேண்டும். ஒரு பெரிய வளர்ச்சி மாற்றத்திற்கு நீங்கள் ஆட்பட வேண்டும்.

மக்கள் தேங்கிய குட்டைகளாக மாறிவிட்டார்கள். அவர்கள் ஆறாக வேண்டும். ஆறுகள்தாமே கடலில் கலக்கும்.

அந்தச் சொல்லுக்கு அடிப்படை, அடித்தளம், ஆதாரம் என்பதும் பொருள். அதுதான் வாழ்வின் அடிப்படை உண்மை. தம்மம், தர்மம் இல்லாமல் இறுதி உண்மை யோடு ஏதாவது ஒரு வகையில் தொடர்பு கொள்ளாமல் உங்கள் வாழ்வுக்கு அடித்தளம் அமையாது. அந்த வாழ்வுக்கு ஒரு முக்கியத்துவமோ பெருமையோ கிடைக்காது. உழைப்பெல்லாம் வீணாகும் வாழ்வாகவே அமைந்துவிடும்.

பூரணத்துடன் நீங்கள் பாலம் அமைத்துக் கொள்ளவில்லை என்றால், உங்களுக்கு எந்த முக்கியத்துவமும் இல்லாமல் போய்விடும். காற்றில் மிதக்கும் சருகாகி விடுவீர்கள். எங்கே போவோம் என்பதும் தெரியாது. நாம் யார் என்பதும் புரியாது.



உண்மைக்கான தவிப்புடன் கொண்ட தேடலே பாலமாகும். அடித்தளமாகும்.

தம்மபதம் என்ற பெயரால் தொகுக்கப்பட்டுள்ள இந்த சூத்திரங்களை அறிவு பூர்வமாகப் புரிந்து கொள்வதை விட்டுவிட்டு, இருப்பியல்போடு விளங்கிக் கொள்ள வேண்டும்.

கடற்பஞ்சு போல அவை ஆகிவிட வேண்டும். அவை உங்களுக்குள்ளே முங்கி மூழ்கி ஊற விடுங்கள். அதை எடைபோட்டு விமர்சித்துக் கொண்டிருக்காதீர்கள். நீங்கள் புத்தரையே இழந்துவிட வேண்டி வரும்.

அது சரியா தவறா என்பதை மனதில் போட்டுக் குழப்பிக் கொண்டு சும்மா அமர்ந்திருக்காதீர்கள். முக்கியமான அம்சத்தை இழந்து விடுவீர்கள். சரியா தவறா என்பதைப் பற்றிக் கவலையே படாதீர்கள்.

முக்கியமான முதல் விஷயம் புத்தர் என்ன சொல்கிறார், என்ன சொல்ல முயல்கிறார் என்பதைப் புரிந்து கொள்வது. இப்போது மதிப்பீடு செய்ய வேண்டாம்.

அவர் என்ன சொல்கிறார் என்பதை உணர்ந்து கொள்வதே முதல் அடிப்படை. அதன் அழகு என்னவென்றால் அது புரிந்தவுடனே அதன் உண்மை உங்களை நம்ப வைத்துவிடும். உங்களுக்கு உண்மை தெரிந்துவிடும்.

உண்மை மக்களை நம்ப வைக்க, தனக்கேயுரிய தனி வழிகள் வைத்திருக்கிறது. அதற்கு வேறு நிரூபணங்கள் தேவையில்லை.



உண்மை வாதிடுவதேயில்லை. அது ஒரு பாடல். அதர்க்கமன்று.

இனி அந்தச் சூத்திரங்கள்.

**நம் எண்ணம் எப்படியோ**
**அப்படியே நாம்.**
**நாம் எழுவதெல்லாம்**
**நம் எண்ணங்களால்தான்.**
**உலகை உருவாக்குவதும் நம்**
**எண்ணங்களால்தான்.**

கீழை நாட்டு ஞானிகள் உலகம் ஒரு பொய்த் தோற்றம் என்று நம்புவதாக மீண்டும் மீண்டும் உங்களுக்குச் சொல்லப்பட்டிருக்கிறது.

அது உண்மைதான். அவர்கள் அவ்வாறு நம்புவது மட்டுமல்ல. அவர்களுக்கு உலகம் ஒரு மாயை என்பது தெரியும். அது ஒரு பொய்த் தோற்றம், மாயை, கனவு என்பது அவர்களுக்குத் தெரியும்.

அவர்கள் சம்சாரம் என்ற சொல்லைப் பயன்படுத்தும் போது அது உலகைக் குறித்தாலும் அறிவியல் ஆராயும் புறவுலகை அவர்கள் குறிப்பிடுவதில்லை. மலைகள், மரங்கள், ஆறுகள் அடங்கிய உலகை அவர்கள் குறிப்பிடுவதில்லை.

அவர்கள் குறிப்பிடுவது, உங்கள் மனம் என்ற இராட்டையானது நூல் நூற்று நெசவு செய்து கொண்டே இருக்க, நீங்கள் படைக்கும் உலகைத்தான்.

சம்சாரம் என்பது வெளி உலகோடு எந்தத் தொடர்பும் அற்றது.

மூன்று விஷயங்களை நீங்கள் நினைவில் வைத்துக் கொள்ள வேண்டும். ஒன்று வெளி உலகம். புறநிலை

உலகம். புத்தர் அதைப் பற்றி எதுவுமே சொல்வதில்லை. அது அவரது பிரச்சினையே அல்ல. அவர் ஆல்பர்ட் ஐன்ஸ்டீன் அல்லர்.



அப்புறம் இரண்டாவது உலகம். அது மனவுலகம். உளவியல் மேதைகள், உளவியல் மருத்துவர்களின் உலகம். அவர்கள் ஆராயும் உலகம். புத்தர் அதைப்பற்றிக் கொஞ்சம் சொல்கிறார். ஆனால் கொஞ்சமாகத்தான்.

முதலாவதாக அது மாயை, அதில் உண்மையில்லை.

அது புறநிலையுமன்று, அகநிலையுமன்று. இரண்டுக்கும் இடையில் நிற்பது.

முதல் உலகம் புறநிலை உலகம். அறிவியல் ஆராயும் உலகம். இரண்டாவது உலகம் மனவுலகம். மூன்றாவது உலகம் உங்கள் அகவுலகம். உங்கள் உள்ளிருப்பு. சுயம்.

புத்தர் குறிப்பிடுவது உங்களது அடியாழ உள்ளிருப்பு. நீங்கள் அதிகம் மனதோடு சம்பந்தப்பட்டிருக்கிறீர்கள். மனதின் பொறியிலிருந்து தப்பிவிட அவர் உதவவில்லை என்றால் மூன்றாவது உலகமான மெய்யுலகை உணர வழியில்லை. அதுதான் உங்கள் உள் சரக்கு. அதனால் தான் அவர் இவ்வாறு ஆரம்பிக்கிறார்:

**'நம் எண்ணம் எப்படியோ**
**அப்படியே நாம்.'**

எல்லோருமே அப்படித்தான். தன் மனமாகவே.

**'நாம் எழுவதெல்லாம்**
**நம் எண்ணங்களால்தான்.'**

நமது மனதில் எல்லா எண்ணங்களும் ஒரு கணம் நின்று போவதைக் கற்பனை செய்து பாருங்கள். அப்போது நீங்கள் யார்? எல்லா எண்ணங்களும் அற்றுப் போய்விடும் கணத்தில் நீங்கள் யார்?



நான் ஒரு கிறிஸ்துவன், நான் ஒரு புரோட்டஸ்டண்ட், நான் ஒரு இந்து, நான் ஓர் இஸ்லாமியன் என்று அப்போது நீங்கள் சொல்லிக் கொள்ள முடியுமா? முடியாது.

எல்லா எண்ணங்களும் இல்லாமல் போய்விடும்போது குரான், பைபிள், கீதை எல்லாமே இல்லாமல் போய்விடும். சொந்தப் பெயரைக் கூட உங்களால் சொல்ல முடியாது. மொழிகளெல்லாம் மறைந்துவிடும்போது நீ எந்த நாட்டுக் காரன் எந்த இனத்தவன் என்றும் சொல்ல வழியில்லை.

எண்ணங்கள் மறைந்து போகையில் நீ யார்? சுத்தமான வெறுமை, சூன்யம், ஒன்றும் இன்மை.

இதன் காரணமாகத்தான் புத்தர் வினோதமானதொரு சொல்லைப் பயன்படுத்தினார். அவருக்கு முன்னும் பின்னும் யாருமே அந்தச் சொல்லைப் பயன்படுத்தவில்லை.

நமது அடியாழ உள்ளிருப்பைக் குறிப்பிட சுயம் என்ற சொல்லையே ஞானிகள் பயன்படுத்தினர்.

புத்தர் பயன்படுத்திய சொல் சுயம் இன்மை.

எனக்கு இதில் பூரண உடன்பாடு. அவர் மிகமிகச் சரி. உண்மைக்கு நெருக்கமாகப் போய்விட்டார். சுயம் என்ற சொல்லைப் பயன்படுத்தும் போது அதன் முதல் எழுத்தைப் பெரிதாகப் போட்டாலும் கூட வேறுபாடு ஒன்றுமில்லை. அது ஆணவ உணர்வையே தந்து கொண்டிருக்கும். முதல் எழுத்தைப் பெரிதாகப் போட்டால் பெரிய ஆணவத்தைக் குறிக்கும்.

ஆத்மா, சுயம், அட்டா என்ற சொற்களைப் புத்தர் பயன்படுத்துவதில்லை. சுயமின்மை, அனாத்மா, அனாட்டா என்ற மாறான முரணான சொற்களையே பயன்படுத்து கிறார்.

மனம் அற்றுப் போய்விடும்போது சுயம் இருக்காது. நீங்கள் பிரபஞ்சம் ஆகிவிடுவீர்கள். அகந்தையின்



எல்லைகளை எல்லாம் கடந்து பாய்ந்துவிடுவீர்கள். தூய வெட்ட வெளியாகிவிடுவீர்கள். எதனாலும் தொடர்பு கொள்ள முடியாத நிலையை அடைந்து விடுவீர்கள் என்கிறார் புத்தர். நீங்கள் ஒரு பிரதிபலிக்கும் கண்ணாடி. அவ்வளவுதான்.

**'நம் எண்ணம் எப்படியோ**
**அப்படியேதான் நாம்.**
**நாம் எழுவதெல்லாம்**
**நம் எண்ணங்களால்தான்.**
**உலகை உருவாக்குவதும்**
**நம் எண்ணங்களால்தான்.'**

நீங்கள் யார் என்பதை உண்மையாகத் தெரிந்து கொள்ள வேண்டுமானால், சிந்தனையை நிறுத்தி மனமற்றுப் போவது எவ்வாறு என்பதைக் கற்றுக் கொள்ள வேண்டும். அதற்குத்தான் தியானம்.

தியானம் என்பது மனம் கடந்து செல்வது. மனதைக் கழற்றிவிட்டு மனமிலா வெளியில் பிரவேசிப்பது. மனமற்ற நிலையில்தான் இறுதி உண்மையான தம்மம் விளங்கும்.

மனதிலிருந்து மனமற்ற நிலைக்குப் போவதே காலடி வைப்பு. அதுதான் பாதம், பதம். தம்மபதத்தின் முழு இரகசியமும் இதுதான்.

**'தூய்மையிலா மனதுடன்**
**பேசினாலும் செயல்பட்டாலும்**
**உன்னைத் துன்பங்கள்**
**பின் தொடரும்,**
**எருதைப் பின் தொடரும்**
**வண்டிச் சக்கரம் போல.'**



புத்தர் தூய்மையிலா மனம் பற்றிக் குறிப்பிடும்போதெல்லாம் அதைத் தவறாகப் புரிந்து கொள்ளும் வாய்ப்பு உண்டு. தூய்மையற்ற மனம் என்று அவர் குறிப்பிடுவது மனதைத்தான். ஏனென்றால் எல்லா மனங்களும் தூய்மையற்றவையே.

மனம் தூய்மையற்றது. மனமின்மை தூய்மையானது. தூய்மை என்பது மனமின்மை. தூய்மை கெட்டது என்றாலே அது மனம்.

**'தூய்மையிலா மனதுடன்**
**பேசினாலும் செயல்பட்டாலும்**
**உன்னைத் துன்பங்கள்**
**பின் தொடரும்'**

துன்பம் என்பது மனம் உற்பத்தி செய்பவற்றின் கிளை. மனதின் நிழல். துன்பம் ஒரு பேய்க்கனவு. தூங்கும்போதுதான் துயரம் வருகிறது. தூங்கிக் கொண் டிருக்கும் வரை தப்பிக்க மார்க்கமில்லை. அது வடிவங் களை மாற்றிக் கொள்ளும். அது இலட்சக்கணக்கான வடிவங்கள் எடுக்கும் என்றாலும், அது இருந்து கொண்டேதானிருக்கும்.

துன்பம் ஒரு மனநிழல். மனம் என்றால் உறக்கம். மனம் என்றால் பிரக்ஞை இழப்பு. மனம் என்றால் விழிப்பின்மை. மனம் என்றால் நீங்கள் யார் என்பது அறியாமை என்றாலும், அறிந்ததாகக் காட்டிக் கொள்ளும்.

மனம் என்றால் நீங்கள் யார் என்பதை அறியாததோடு குறிக்கோள் இருப்பதாகவும் நடிப்பது. வாழ்க்கை என்றால் என்னவென்று அறிந்தது போலக் காட்டிக் கொள்வது. ஆனால் வாழ்க்கையின் அர்த்தமே புரியாதிருப்பது. எனினும் புரிந்துவிட்டது போல நம்ப வைப்பது.



சக்கரம் எருதைப் பின்பற்றிச் செல்வது போல, மனம் நிச்சயம் துயரத்தையே கொண்டு வரும்.

**'நம் எண்ணம் எப்படியோ**
**அப்படியே நாம்.**
**நாம் எழுவதெல்லாம்**
**நம் எண்ணங்களால்தான்.**
**உலகை உருவாக்குவதும்**
**நம் எண்ணங்களால்தான்.**
**தூய்மையிலா மனதுடன்**
**பேசினாலும் செயல்பட்டாலும்**
**உன்னைத் துன்பங்கள் பின் தொடரும்.**
**உதறிவிட முடியாத நிழல் போல.'**

மீண்டும் நினைவில் வையுங்கள். மனமற்ற நிலையையே புத்தர் தூய மனம் என்கிறார். புத்தரைப் போன்ற ஒருவரை விளக்குவது மிகவும் சிரமம். ஒரு வகையில் முடியாத காரியம் என்றே சொல்ல வேண்டும்.

புத்தர் மொழியைத் தனதேயான ஒரு வகையில் பயன்படுத்துகிறார். தமக்கென ஒரு மொழியை உருவாக்கிக் கொள்கிறார். அவர் சாதாரண மொழியை சாதாரணப் பொருளில் கையாள்வதில்லை. காரணம் அவர் அசாதாரண விஷயத்தைச் சொல்ல முற்படுவதுதான்.

புத்தரின் அனுபவத்துக்கு சாதாரணச் சொற்கள் அர்த்தமற்றவை. சிக்கலை நீங்கள்தான் புரிந்து கொள்ள வேண்டும். சிக்கல் இதுதான். முற்றிலும் புதியதான ஒரு மொழியையும் அவர் பயன்படுத்த முடியாது. அப்படிப் பயன்படுத்தினால் அதை யாரும் புரிந்து கொள்ள மாட்டார்கள். அது ஓர் உளறலாகவே இருக்கும்.

இப்படித்தான் 'ஜிப்பரிஷ்' என்ற சொல் உருவாயிற்று. ஒரு சூஃபியிடமிருந்து வந்தது இது. அவரது பெயர் ஜப்பார்.



அவர் ஒரு புதிய மொழியைக் கண்டுபிடித்தார். யாருக்கும் அதன் தலையும் புரியவில்லை காலும் புரியவில்லை.

முற்றிலும் புதியதான மொழியை எப்படித்தான் புரிந்து கொள்வது? அவர் ஒரு படுமுட்டாளைப் போல, பைத்தியம் போலக் காணப்பட்டார். சீன மொழி புரியாத நீங்கள், அதைக் கேட்டால் உளறலாகத்தானே தோன்றும்!

சீனாவுக்குப் போய்வந்த ஒருவரிடம் இன்னொருவர் கேட்டார்: ''சீன மக்கள் எப்படித்தான் சிங் சாங் சுங் என்றெல்லாம் பெயர் வைக்கிறார்கள்?''

அவர் பதில் சொன்னார் இப்படி : ''அவர்களுக்கு ஒரு வழி இருக்கிறது. வீட்டிலிருக்கும் எல்லாக் கரண்டி களையும் எடுத்து மேலே வீசுவார்கள். அவை தரையில் விழும். சிங்... சுங்... சாங்... என்று, எந்த ஓசை காதில் விழுகிறதோ அந்தப் பெயரைக் குழந்தைக்கு வைத்து விடுவார்கள்.''

சீனமக்கள் ஆங்கிலம் கேட்டாலும், ''இது என்ன உளறல்,'' என்றுதான் சொல்வார்கள்.

கோடிக்கணக்கான மக்கள் பயன்படுத்தும் மொழி களின் நிலைமை இதுதான். புத்தர் வேறு ஒரு புதிய மொழியைக் கண்டுபிடிக்க வேண்டுமா? கண்டுபிடித்தால் அது அவருக்கு மட்டுமே புரியும். வேறு யாருக்குமே விளங்காது.

ஜப்பார் அதைச் செய்தார். அவர் பெரிய துணிச்சல் காரராக இருந்திருக்க வேண்டும். மக்கள் அவரைப் பைத்தியம் என்று தான் சொன்னார்கள்.

ஜிப்பரிஷ் என்ற ஆங்கிலச் சொல் ஜப்பாரிலிருந்துதான் வருகிறது. அவர் பேசியது யாருக்கும் விளங்கவில்லை. அதை எவரும் எழுதி வைக்கவும் முயலவில்லை. எப்படி



எழுதுவது? எழுத்து வடிவம் இல்லையே. அவர் பேசுவதன் பொருளும் விளங்கவில்லை. எப்பேர்ப் பட்ட செல்வத்தை நாம் இழந்து விட்டோமோ தெரியவில்லை.

புத்தரின் சிக்கல் என்னவென்றால் உங்கள் மொழியை உங்களைப் போலவே பயன்படுத்த வேண்டும் என்ற நிர்ப்பந்தம். அப்படிப் பயன்படுத்தினால் தம் அனு பவத்தைச் சொல்லவும் முடியாது. புதிய மொழியோ யாருக்கும் விளங்காது.

அதனால்தான் எல்லா மகான்களும் நடுவில் இருக்க நேர்கிறது. அவர்கள் உங்கள் மொழியைத்தான் பயன்படுத்து கிறார்கள். ஆனால் அதற்குத் தங்கள் மணத்தையும் நிறத்தையும் தந்துவிடுகிறார்கள். குடுவை உங்களுடையது. அதிலுள்ள மது அவர்களுடையது.

குடுவை நம்முடையது என்பதால் மதுவும் நம்முடையது என்று கருதி, பல நூற்றாண்டுகளாகப் பாதுகாத்து வருகிறோம். சில சமயம் நமதுதானே என்று குடித்தும் விடுகிறோம். அதனால் போதை, போதம் ஏற்பட்டு விடுகிறது.

அதனால்தான் மொழிபெயர்ப்பு கடினமாகிவிடுகிறது. புத்தரின் மொழி அவரைச் சூழ்ந்திருந்தவர்களுக்கே விளங்கவில்லை. நுட்பமான முறையில் சொற்களை அவர் மாற்றியும் திரித்தும் பேசியதால் யாரும் அதிர்ச்சி யடையவும் இல்லை. விழித்துக் கொள்ளவும் இல்லை. தம்முடைய மொழியைக் கேட்பதாகவே அவர்கள் நினைத்துக் கொண்டார்கள்.

மனமற்ற நிலையைக் குறிக்கவே புத்தர் தூய மனம் என்ற சொல்லைப் பயன்படுத்தினார். மனமிலா நிலை என்று அவர் சொல்லியிருந்தால் அது புரியாமல்



போயிருக்கும். தூய மனம் என்றால் ஒரு தொடர்புக்கு வாய்ப்பிருக்கிறது. மெல்ல மெல்ல அது மனமற்ற நிலை என்பதும் புரிந்து விடும்.

ஆனால் நீண்ட காலம் பிடிக்கும். மெல்ல மெல்ல நீங்கள் பூரணமானதொரு புதிய அனுபவத்தில் அகப்பட்டு விடுவீர்கள். ஆனால் எப்போதும் நினைவில் வைத்துக் கொள்ளுங்கள். தூயமனம் என்பது மனமற்ற நிலை. தூய்மையற்றதே மனம்.

ஆரம்ப நிலையிலேயே தயார் நிலையை அடையாமல் நீங்கள் தப்பி ஓடிவிடக்கூடும் என்பதால்தான் தூய்மை, தூய்மையற்ற என்ற அடைமொழிகளை அவர் சேர்க்கிறார். உங்களை எப்படியாவது மயக்கி வசப்படுத்திவிட வேண்டும். எல்லா மகான்களுமே மயக்கி வசப்படுத்து கிறவர்கள்தான். அவர்களது கலையே அதுதானே!

எதைக் கொடுத்தாலும் நீங்கள் குடித்துவிடுகிற அளவுக்கு மெல்ல மெல்ல உங்களை அவர்கள் மயக்கி விடுகிறார்கள்.

முதலில் அவர்கள் சாதாரணத் தண்ணீர்தான் கொடுக்கிறார்கள். அப்புறம் கொஞ்சம் கொஞ்சமாய் அதில் திராட்சை ரசத்தைக் கலந்து விடுகிறார்கள். பிறகு தண்ணீரைக் குறைத்து நிறுத்தியே விடுகிறார்கள். அப்புறம் ஒரு நாள் உங்களுக்கு முழுப்போதை ஏறிவிடுகிறது. ஆனால் இதெல்லாம் நிதானமாகத்தான் நடந்தேறுகிறது.

சூத்திரங்களுள் ஆழ்ந்து சென்றால் இது விளங்கும்.

தூய்மையற்ற மனம் என்பதே வெறும் மனம்தான். தூய மனம் என்பது மனமின்மை. இந்தத் தூயமனம், அதாவது மனமின்மை பெற்றால் மகிழ்ச்சி உங்களைப் பின்தொடரும்.

'மகிழ்ச்சி உன்னைப் பின்தொடரும்
உதறிவிடமுடியாத நிழல் போல.'



துயரம் ஒரு துணைத் தயாரிப்பு. பரவசம் கூடத்தான். துன்பம் தூக்கத்தின் துணைத் தயாரிப்பு. பரவசம் விழிப்பின் துணைத் தயாரிப்பு. அதனால்தான் பரவசத்தை நேரடியாகத் தேடிக் கண்டடைய முடிவதில்லை. அவ்வாறு அதை நேரடியாகத் தேடிச் செல்வோர் பரிதாபமாகத் தோற்று விடுவார்கள்.

நேரடியாகத் தேடிச் செல்லாதவர்களே ஆனந்த பரவசம் அடைவார்கள். அதற்கு மாறாக அவர்கள் விழிப்புணர்வைத் தேடுவார்கள். விழிப்புணர்வு ஏற்பட்டதும் ஆனந்தபரவசம் தானாக வந்துவிடும். உதறிவிட முடியாத சொந்த நிழல் போல.

'பார், என்னை எவ்வளவு
அவமதித்துவிட்டான், அடித்துவிட்டான்.
என்னைக் கீழே தள்ளி
எவ்வாறு கொள்ளையடித்துவிட்டான்
என்ற எண்ணங்களால் வாழ்வது
வெறுப்பில் வாழ்வதாகும்.
அவ்வகை எண்ணங்களை விட்டுவிட்டு
அன்பில் வாழ்க.'

ஆழ்ந்த முக்கியத்துவம் வாய்ந்தது ஒன்றுண்டு. அதுதான் வெறுப்பு. வெறுப்பு கடந்த காலத்திலும் எதிர்காலத்திலும் இருப்பது. அன்புக்கு இறந்த காலமும் இல்லை, எதிர் காலமும் கிடையாது.

வெறுப்பு இறந்த காலத்தோடு தொடர்புடையது. நேற்று யாராவது உங்களை அவமானப்படுத்தியிருப்பார்கள். அதை ஒரு காயமாக, தலைவலியாக நீங்கள் சுமந்து கொண்டிருக்க



லாம். அல்லது நாளை யாராவது உங்களை அவமானப்படுத்தக்கூடும் என்ற பயம், பயத்தின் நிழல் இருக்கலாம். அதை எதிர்கொள்ள நீங்கள் தயாராக இருக்கலாம்.

வெறுப்பு இறந்த காலத்திலும் எதிர் காலத்திலும் இருப்பது. நிகழ்காலத்தில் உங்களால் வெறுக்க முடியாது. முயற்சி செய்து பாருங்கள். முடியவே முடியாது. இறந்த கால, எதிர்காலத் தொடர்பில்லாமல் வெறுப்புக் காட்டவே முடியாது.

அது முடியாத காரியம். விவகாரங்களின் இயல்பு அப்படி. யாராவது முன்பு ஏதாவது செய்திருந்தால்தான் உங்களுக்கு வெறுப்பு தோன்ற முடியும். அல்லது யாராவது நாளை ஏதாவது செய்துவிடுவார்களோ என்று தோன்றினால் தான் வெறுப்பு பிறக்க முடியும்.

ஒருவர் உங்களுக்கு எதுவும் செய்யாமல் சும்மா உட்கார்ந்திருந்தால் அவர் மேல் உங்களுக்கு வெறுப்பு எப்படித் தோன்றும்? அன்புதான் செலுத்த முடியும்.

அன்புக்கு எந்த அடிக்குறிப்பும் தேவையில்லை. அதுதான் அன்பின் அழகு. அதுதான் அன்பின் சுதந்திரம். வெறுப்பு ஒரு பந்தம். ஒரு சிறை. உங்கள் மீது திணிக்கப்படுவது.

வெறுப்பு வெறுப்பையே உருவாக்கும். வெறுப் பையே கிளறிவிடும். ஒருவரை நீங்கள் வெறுக்கும்போது அவர் மனதில் உங்களுக்கு எதிரான வெறுப்பை உருவாக்கி விட்டுவிடுவீர்கள்.

உலகமே வெறுப்பிலும் அழிவிலும் வன்முறையிலும் பொறாமையிலும் போட்டியிலும் வாழ்ந்து கொண்டிருக் கிறது. ஒருவர் குரல் வளையை ஒருவர் நெரித்துக் கொண் டிருக்கிறார்கள். செயலாலோ மனதாலோ ஒவ்வொருவரும்



மற்றவரைக் கொன்று கொண்டிருக்கிறார்கள். அதனால்தான் ஒரு சுவர்க்கம் ஆகக்கூடிய இந்த உலகை நரகமாக ஆக்கிக் கொண்டிருக்கிறோம்.

அன்பு செய்யுங்கள். இந்த உலகம் மீண்டும் சுவர்க்கமாகும். அன்பின் எல்லையற்ற அழகே அதற்கு எந்த அடிக்குறிப்பும் தேவை இல்லை என்பதுதான். அன்பு காரணமில்லாமல் நிகழ்வது. அது உங்கள் பரவச வெளிப்பாடு. உங்கள் இதயத்தின் பகிர்வு. உங்கள் இருப்பின் பாடலைப் பங்கிட்டுக் கொள்வது. உங்கள் மகிழ்வைப் பகிர்ந்து கொள்வது.

பகிர்வதில் ஆனந்தம் இருக்கிறது. அதனால்தான் பகிர்ந்து கொள்கிறார்கள். எந்த நோக்கமும் இல்லாமல் பகிர்வதற்காகவே பகிர்ந்து கொள்வது அது.

நீங்கள் இதுவரை எதை அன்பென்று நினைத்துக் கொண்டிருக்கிறீர்களோ அது, நான் சொல்லும் அன்பு அன்று. புத்தர் சொல்லும் அன்பும் அன்று. உங்களது அன்பு வெறுப்பின் மறுபக்கம் தவிர வேறில்லை.

அதனால் உங்கள் அன்பிற்கு ஒரு பின்னணி இருக்கும். யாராவது நேற்று உங்களிடம் இனிமையாக நடந்து கொண்டிருந்திருப்பார்கள். அதனால் உங்களுக்கு அவர் மீது அன்பு தோன்றியிருக்கும். அது அன்பே அன்று. அது வெறுப்பின் மறுபக்கம். பின்னணியே அதை நிரூபிக்கும்.

அல்லது நாளை யாராவது உங்களிடம் இனிமையாகப் பேசி உங்களைத் தம் வீட்டுக்கு அழைக்கலாம். அவர் நாளை அன்பாக நடந்து கொள்ளக்கூடும் என்பதால் அன்பு தோன்றினால் அது அன்பே அன்று.

அது புத்தர் குறிப்பிடும் அன்பன்று. வெறுப்புத்தான் அன்புவேடம் பூண்டு வருகிறது. அதனால்தான் உங்கள்



அன்பு எந்தக் கணத்திலும் வெறுப்பாக மாறிவிடக் கூடியதாக இருக்கிறது.

ஒருவரை லேசாகச் சுரண்டிப் பாருங்கள். அன்பு மறைந்து வெறுப்பு வெளிப்பட்டுவிடும். அதற்குத் தோலின் ஆழம் கூடக் கிடையாது. மாபெரும் காதலர்கள் தொடர்ந்து சண்டையிட்டுக் கொண்டே இருக்கிறார்கள். ஒருவர் கழுத்தை ஒருவர் நெரித்துக் கொண்டே இருக்கிறார்கள் அழிக்கும் முயற்சியில். மக்களோ இதைக் காதல் என்கிறார்கள்.

அஸ்தா அபியானாவைக் கேளுங்கள். தினந்தோறும் அஸ்தாவின் கன்னங்கள் வீங்கிவிடும். அப்படியொரு காதல். மாபெரும் சண்டை. அது மாபெரும் காதலாம். எந்தச் சண்டை சச்சரவும் இல்லையென்றால் வெறுமை தோன்றிவிடுகிறது.

வெறுமையை விட சண்டை சச்சரவே மேல். இதுதான் கோடானகோடி மக்களின் கருத்து. குறைந்தபட்சம் சண்டை உங்களை உயிர்த்துடிப்போடு வைத்திருக்கிறது. உங்களுக்கு முக்கியத்துவம் தருகிறது. வாழ்வுக்கு ஏதாவதுஅர்த்தம் வேண்டாமா? இது அசிங்கமான அர்த்தம். ஆனால் ஏதோ ஓர் அர்த்தம் இருக்கவே செய்கிறது.

உங்களது அன்பு அன்பன்று. அதற்கு நேர் எதிரானது. மாறுவேடம் பூண்ட வெறுப்புத்தான் அது. அன்பாக நடித்து நடை போடுகிறது. உண்மையான அன்பிற்குப் பின்னணி கிடையாது. அது நேற்றைப் பற்றியோ நாளையைப் பற்றியோ நினைக்காது.

உண்மை அன்பு உங்கள் உள்ளத்தின் மகிழ்ச்சியின் இடையறாத வெளிப்பாடு. அதைப் பகிர்ந்து கொள்வதற்கும் பொழிவதற்கும் காரணமே தேவையில்லை. வேறு நோக்கமே தேவையில்லை. பகிர்ந்து கொள்ளும் மகிழ்விற்காகவே பகிர்ந்து கொள்வது.



காலை வேளையில் பறவைகள் பாடுகின்றன. ஒரு குயில் தூரத்திலிருந்து அழைக்கிறது. காரணம் இல்லாமல்தான். இதயத்தில் நிறைந்த மகிழ்ச்சி ஒரு பாடலாக வெடித்துப் பீரிடுகின்றது.

நான் குறிப்பிடும் அன்பு அப்படிப்பட்ட அன்பு. இதை மறந்து விடாதீர்கள். அப்படிப்பட்ட அன்பின் பரிமாணத்துக் குள் நீங்கள் பிரவேசிக்க முடியுமானால் அதுவே சுவர்க்கம். உடனடிச் சுவர்க்கம். அப்போது நீங்கள் பூமியின் மீது ஒரு சுவர்க்கத்தையே படைத்து விடுகிறீர்கள்.

வெறுப்பு வெறுப்பை உருவாக்கி விடுவதுபோல அன்பு அன்பையே உருவாக்கும்.

‘இவ்வுலகில்
வெறுப்பு வெறுப்பை விரட்டாது.
அன்பே வெறுப்பை விரட்டும்;
இதுதான் விதி.
தொன்மையான தீர்ந்து போகாத விதி.
ஏஸ் தம்மோ ஸனந்தனோ-
இதுதான் நிரந்தர
தொன்மையான முடிந்து போகாத விதி.’

எது விதி? வெறுப்பு வெறுப்பை விரட்டாது. இருள் இருளை விரட்டாது. அன்பே வெறுப்பை விரட்டும். ஒளியே இருட்டை விரட்டும்.

அன்பே ஒளி. உங்கள் இருப்பின் ஒளி. வெறுப்பு உங்கள் இருப்பின் இருள். உள்ளே இருளிருந்தால் உங்களைச் சுற்றிலும் வெறுப்பே சூழ்ந்திருக்கும். உங்கள் உள்ளே ஒளியிருந்தால் அந்தப் பிரகாசத்தை உங்களைச் சுற்றிலும் பரப்பிக் கொண்டே இருப்பீர்கள்.

ஒரு சன்னியாசி ஒளிப் பிரகாசியாக அன்புப் பிரகாசியாக இருக்க வேண்டும்.

'ஏஸ் தம்மோ ஸனந்தனோ..'



புத்தர் இதை மீண்டும் மீண்டும் குறிப்பிடு கிறார். இதுதான் சாஸ்வதமான விதி.

அன்பு மட்டுமே வெறுப்பை விரட்டும். ஒளி மட்டுமே இருளை விரட்டும். இதுவே நிரந்தர விதி.

ஏன் அப்படி? காரணம் இருள் தனக்குள் எதிர்மறைப் பண்பைக் கொண்டிருக்கிறது. உடன்பாட்டு அம்சம் எதுவும் அதனிடம் இல்லை. ஒரு வகையில் அது இல்லவே இல்லை. இல்லாததை எப்படி விரட்டுவது? இருளிடம் நேரடியாக எதுவும் செய்ய முடியாது.

இருளை எதாவது செய்ய வேண்டுமானால் ஒளியைத் தான் ஏதாவது செய்ய வேண்டும். ஒளியை இருளருகே கொண்டுவர வேண்டும். அப்போது இருள் ஓடிப் போகும். ஒளியை விலக்கினாலோ உடனே இருள் வந்துவிடும்.

ஆனால் இருளை நேரடியாகக் கொண்டு வரவோ வெளியேற்றவோ முடியாது என்பதை மறந்துவிட வேண்டாம். ஒழுக்க நெறி உபதேசிகளுக்கும் சமய ஞானிகளுக்கும் உள்ள வேறுபாடு அதுதான்.

ஒழுக்க நெறி உபதேசிகள் பொய்யான விதிகளைத் தொடர்ந்து நிறுவிக் கொண்டே வருகிறார்கள். ''இருளை எதிர்த்துப் போரிடு. வெறுப்பை எதிர்த்துப் போரிடு. சினத்தை எதிர்த்துப் போரிடு. காமத்தை எதிர்த்துப் போரிடு. இதை எதிர். அதை எதிர்,'' என்கிறார்கள்.

அவர்களது அணுகல் முறையே எதிர்மறையை எதிர்த்துப் போரிடுவதுதான். ஆனால் மெய்ஞ்ஞானிகள் உடன்பாட்டு முறையில் செயல்படுகிறவர்கள். அவர் களுடைய விதி, 'ஏஸ் தம்மோ ஸனந்தனோ..' நிரந்தர விதி, இருளோடு மோதாதே என்பதுதான். வெறுப்புத்தான் இருள்.

காமம்தான் இருள். பொறாமைதான் இருள். பேராசைதான் இருள். சினம்தான் இருள்.



**ஒளியைக் கொண்டு வா!**

**எவ்வாறு ஒளியைக் கொண்டு வருவது?**

மௌனமாக, சிந்தனையற்று பிரக்ஞையோடு தயார் நிலையில் விழித்திரு. இதுதான் ஒளியைக் கொண்டு வருவது.

தயார் நிலை, விழிப்புணர்வு பெறும் கணத்திலேயே வெறுப்பு காணாமல் போய்விடும். விழிப்புணர்வுடன் யாரையாவது வெறுக்க முயன்று பாருங்கள். இதெல்லாம் செய்து பார்க்க வேண்டிய பரிசோதனை. வெறும் சொற்களைப் புரிந்து கொண்டு பயனில்லை. சோதனைகள் நடத்தப்பட வேண்டும்.

அதனால்தான் அறிவு பூர்வமாக அறிந்து கொள்ள மட்டும் முயலவேண்டாம் என்று கூறுகிறேன். இருப்பியல் அனுபவத்துடன் சோதனைகள் செய்ய வேண்டும். யாராவது ஒருவரை பிரக்ஞை பூர்வமாக வெறுக்க முயன்று பாருங்கள். உங்களால் முடியாது.

ஒன்று பிரக்ஞை பறந்து போகும். அல்லது வெறுப்பு பறந்து போகும். ஒன்று இருந்தால் மற்றது இருக்காது. அவை ஒன்று சேர்ந்து இருக்க வழியில்லை. அவை ஒன்றுபட்டு வாழ்வது சாத்தியமே இல்லை. ஒளியும் இருளும் ஒன்றுபட்டு வாழா. ஏனென்றால் இருள் என்பது ஒன்றுமில்லாதது. ஒளி இல்லாமையே இருள்.

மெய்ஞ்ஞானிகள் நீங்கள் கடவுளை எவ்வாறு அடைவது என்பதைக் கற்றுத் தருவார்கள். உலகைத் துறந்துவிடச் சொல்லவே மாட்டார்கள். துறவு என்பது எதிர்மறையானது. உலகை விட்டு ஓடிப்போ என்று அவர்கள் சொல்லவே மாட்டார்கள். கடவுளை நோக்கிப் போ என்றுதான் சொல்வார்கள்.



பொய்களோடு போராட வேண்டாம். உண்மையைத் தேடுங்கள், என்றே அவர்கள் உபதேசிக்கிறார்கள். பொய்களோ கோடானுகோடி. அவற்றோடு மோத ஆரம்பித்தால் அவை கோடானு கோடிப் பிறவிகள் எடுக்கும். நம்மால் வெற்றி பெற முடியாது. ஆனால் உண்மையோ ஒன்றே ஒன்றுதான். அதனால் உண்மையை உடனே அடைந்துவிட முடியாது. இந்தக் கணத்திலும் அது சாத்தியம்.

**'நீயும் போய்விடுவாய்**
**இதை அறிந்தபின்**
**எவ்வாறு உன்னால் சச்சரவிட முடியும்?'**

வாழ்வு சிறியது. கணப்பொழுது. இதை சச்சரவிட்டா கழிப்பது? உங்கள் சக்தியை எல்லாம் தியானத்திற்காகத் திரட்டுங்கள். அதே சக்தியைத்தான். அது கொண்டு போராடவும் செய்யலாம், அதை ஒளியாகவும் மாற்றலாம்.

**'வலிமையற்ற மரத்தை காற்று**
**எவ்வளவு எளிதில் சாய்த்துவிடுகிறது.**
**புலன்களில் மகிழ்ச்சி தேடுதலும்**
**ஊணிலும் உறக்கத்திலும்**
**நினைவு கொள்ளலும்**
**உன்னைச் சாய்த்துவிடும்.'**

புத்தர் சொல்கிறார் : ''இதை நினைவில் நிறுத்து. புலனின்பங்களைச் சார்ந்திருக்கும் வரை நீ பலவீனன்தான்.'' காரணம் புலன்கள் உனக்குச் சக்தி தருவதில்லை. நிலையான அடித்தளத்தை அவற்றால் அமைக்க முடியாததால் அவற்றால் சக்தி தரமுடியாமல் போகிறது. அவை தொடர்ந்து இளகிச் சென்று கொண்டே இருப்பவை. எல்லாமே மாறிக் கொண்டிருப்பவை. எங்கே



நீங்கள் பாதுகாப்புத் தேடுவது? எங்கே நீங்கள் அடித்தளம் அமைப்பது?

ஒரு கணம் ஒருத்தி அழகாக இருப்பாள். மறுகணம் வேறொருத்தி. புலன்களால் எடைபோட விரும்பினால் உங்களுக்குத் தொடர் குழப்பம்தான். திட்டவட்டமான முடிவுக்கு வரவே முடியாது. காரணம் புலன்கள் தம் கருத்தை மாற்றிக் கொண்டே இருப்பவை.

ஒரு கணம் ஒன்று அற்புதமாக இருக்கும். மறுகணம் அருவருப்பாகத் தோன்றும். இப்படிப்பட்ட புலன்களைத் தான் நாம் நம்பியிருக்கிறோம்.

புத்தர் சொல்கிறார்: ''புலன்களை நம்பாதே. விழிப்புணர்வை நம்பு.'' விழிப்புணர்வு புலன்களுக்குப் பின்னால் மறைந்திருப்பது. அது காணும் கண்ணன்று. கண் மருத்துவரிடம் போனால் காண்பது கண்ணல்ல என்று கூறுவார்.

கண் ஒரு கருவி மட்டுமே. அதன் மூலமாகப் பார்ப்பது ஒரு மனிதன். கண் ஒரு சாளரம். சாளரமே பார்க்குமா? சாளரத்தருகில் நிற்கும் நீங்கள்தாம் வெளியே பார்க்கிறீர் கள். தெருவழியே போகிறவர்கள் சாளரம்தான் என்னைப் பார்க்கிறது என்று நினைக்கலாம். சாளரம் கண். கண் ஒரு துளை. கண்ணுக்குப் பின்னால் இருப்பது யார்?

காது கேளாது. காதுக்குப் பின்னால் இருப்பவர் யார்? உணர்பவர் யார்? இதைத் தேடிக் கொண்டே போனால் ஓர் அடிப்படை அகப்படும். இல்லாவிட்டால் உங்களது வாழ்வு காற்றில் அலையும் காய்ந்த இலையாகிவிடும்.

**'காற்றினால் மலையைப் புரட்ட முடியாது.**
**விழிப்புணர்வும் வலிமையும் அடக்கமும்**
**கொண்டு விதியை மதித்துத் தன்னை**
**ஆள்பவனை ஆசை தொடாது.'**



தியானம் உங்களுக்கு விழிப்புத் தரும். வலிமையுடன் அடக்கமாய். தியானம் விழிப் புணர்வு தருவதற்கான காரணம் அது உங்களுக்கு உங்களுடைய முதல் அனுபவத்தைத் தருவதுதான்.

நீங்கள் உடலன்று. நீங்கள் மனமன்று. நீங்கள் தூயபிரக்ஞைப் பார்வையாளர். அந்தப் பிரக்ஞைப் பார்வையைத் தொடும்போது மாபெரும் விழிப்புணர் வொன்று நிகழும். சுருண்டு கிடக்கும் பாம்பு சட்டென்று எழுந்து நிற்பது போல. உலுக்கி எழுப்ப ஒருவர் விழித்துக் கொள்வது போல. அப்போது உள்ளே மாபெரும் விழிப்புணர்வொன்று நிகழும். நீங்கள் யார் என்பதை முதன் முதலாக உணரும் நேரம் அது. இருப்பின் உண்மையை முதன் முதலாக உணர்ந்து கொள்வது அது.

அது நிச்சயமாக உங்களுக்கு வலிமை சேர்க்கும். காற்றால் கீழே சாய்க்கப்படும் வலிமையற்ற மரமாக நீங்கள் இருக்க மாட்டீர்கள். அதன் பின் பலவீனராக இருக்க மாட்டீர்கள். நீங்கள் அசையாத மலையாகி விடுவீர்கள்.

இப்போது உங்களுக்கு வலிமையான அடித்தளம் கிடைத்து விடுகிறது. வேர் இறங்கிவிடுகிறது. மலையைக் காற்று அசைக்காதே. நீங்கள் வலிமையும் விழிப்புணர்வும் பெற்றுவிடுவீர்கள். என்றாலும் அடக்கமாக இருப்பீர்கள். அந்த வலிமை ஆணவத்தைக் கொண்டு வந்து விடாது.

ஒவ்வொருவருக்குள்ளும் விலங்கு, பறவை, தாவரம், பாறைகளுக்குள்ளிலும் கூட பார்த்திருக்கும் ஆத்மா ஒன்று இருப்பது உங்களுக்குத் தெரிந்துவிடுவதால், நீங்கள் அடக்கமுடையவர் ஆகிவிடுவீர்கள். இவையெல்லாம் வெவ்வேறு வகையான உறக்க முறைகள்.

சிலர் வலப்பக்கம், சிலர் இடப்பக்கம், சிலர்-மல்லாக்கப் படுத்து உறங்கவார்கள். பலவகையில்



உறங்குவது. பாறையும் தனக்கான வகையில், மரமும் தனக்கான வகையில், ஒரு பறவையும் தனக்கேயான வகையில் உறங்கும்.

உறங்கும் வகைதான் வேறு. ஆனால் இருப்பின் அடியாழ மையத்தில் அதே பார்த்திருத்தல்தான். அதே கடவுள்தான். அதுதான் உங்களை அடக்கமுடையவர் ஆக்கி விடுகின்றது.

ஒரு பாறைக்கு முன்னால் கூட நீங்கள் சிறப்பானவர் அல்லர் என்பது உங்களுக்கே விளங்கிவிடும். ஏனென்றால் இந்தப் பிரபஞ்சம் முழுவதுமே அந்தப் பிரக்ஞை என்பதால்தான் உண்டாக்கப்பட்டுள்ளது. நீங்கள் விழித்துக் கொண்டால், வலிமையும் அடக்கமும் பெற்றுவிட்டால் உங்கள் மீதான ஆதிக்கம் உங்களுக்கு வந்துவிடும்.

> 'சேறு படிந்த சிந்தனைகளும்
> நிறைந்த ஏமாற்றும் துணிவும் கொண்டவன்
> மஞ்சளாடை அணிவது பொருந்துமா?'

சன்னியாசிகளுக்கு நான் ஆரஞ்சு நிற ஆடையைத் தேர்ந்தெடுத்திருப்பது போல புத்தர் மஞ்சளாடையைத் தேர்ந்தெடுத்தார். எங்கள் அணுகுமுறைகளின் வேறுபாடு இதுதான். மஞ்சள் மரணம் குறிப்பது. பழுத்த இலையைப் போல. மஞ்சள் மாலையில் சரியும் கதிரவனைக் குறிப்பது.

புத்தர் சாவை அளவுக்கு அதிகமாக வலியுறுத்திச் சொன்னவர். அதுதான் அவர் வழி. அவ்வாறு அதை வலியுறுத்துவது அவருக்கு உதவுபடியாக இருந்தது. மரணத்திற்கு நேர் எதிராக வாழ்வைப் பற்றிய விழிப்புணர்வு மக்களுக்கு மிகுதியாக ஏற்பட்டது. மரணத்தை அதிகமாக வலியுறுத்த மக்கள் விழிப்படைந்தார்கள்.

மரணம் வரப்போகிறது என்பதால் அவர்கள் விழித்துக் கொண்டார்கள். ஒரு புதியவர் சன்னியாசம் ஏற்கும்போது புத்தர் இவ்வாறு சொல்வார்: ''சுடுகாட்டுக்குப் போ. அங்கே நிகழும்



மயானக் கிரியைகளைக் கவனித்துக் கொண்டிரு. பிணங்கள் புதைக்கப்படுவதையும் எரிக்கப்படுவதையும் கவனி. அது உனக்கும் நிகழும் என்பதை மனதில் வை. அப்படி மூன்றுமாதங்கள் சாவை தியானித்திருந்துவிட்டுப் பின் வா.'' அதுதான் சன்னியாசத்தின் ஆரம்பம்.

இரண்டு சாத்திய வழிகள் இருக்கின்றன. ஒன்று, மரணத்தை வலியுறுத்துவது. மற்றொன்று வாழ்வை வலியுறுத்துவது. இயற்கையில் இருப்பவை இரண்டே, வாழ்வும் சாவும்! புத்தர் மரணத்தை ஒரு குறியீடாக எடுத்தார். அதனால்தான் மஞ்சளாடை.

ஆரஞ்சு நிறம் வாழ்வை அடையாளப்படுத்துவது. இது இரத்தத்தின் நிறம். காலைக் கதிரவனின் அடையாளம். அதிகாலையில் கிழக்கு வானம் சிவக்கிறது. அது என் வாழ்வின் வலியுறுத்தல். ஆனால் நோக்கம் என்னவோ ஒன்றுதான்.

நீங்கள் வாழ்வின் மீது தீவிர நேசம் கொள்ள வேண்டும் என்கிறேன் நான். அது உங்களுக்கு விழிப்புணர்வு தரும். வாழ வேண்டும் என்ற தீவிர உணர்வு விழிப்புணர்வை உண்டாக்கிவிடும்.

மரணம் எதிர்காலத்தில் இருக்கிறது. வாழ்க்கை இப்போது இருக்கிறது. நீங்கள் மரணம் பற்றி நினைக்கத் தொடங்கினால் எதிர்காலம் பற்றி நினைப்பதாக அர்த்தம். மரணம் பற்றி நினைப்பது ஓர் அனுமானம். யாரோ சாவதைப் பார்க்கிறீர்கள். நீங்கள் சாவதை உங்களால் பார்க்க முடியாது. வேண்டுமானால் கற்பனை செய்து பார்த்துக்கொள்ளலாம். அனுமானிக்கலாம். நினைக்கலாம். ஆனால் அது வெறும் நினைப்பு மட்டுமே.

வாழ்க்கை ஒரு நினைப்பல்ல. மரணத்தைக் காட்டிலும் மனமற்று இருப்பதற்கு வாழ்வுதான் உதவும். அதனால்தான் எனது தேர்வு புத்தரை விடச் சிறந்தது. காரணம் வாழ்க்கை



இங்கே இப்போது கைவசம் இருக்கிறது. மயானத்தைத் தேடிப் போக வேண்டியதில்லை.

வாழ்க்கை எங்கும் இருப்பதைத் தயார் நிலை பெற்றுப் பார்த்தால் போதும். மலர்களில் பறவைகளில் சுற்றிலுமுள்ள மக்களில் சிரிக்கும் குழந்தைகளில் உங்களுக்குள் இருக்கிறது. வாழ்க்கை இப்போதே. அதை யோசிக்க வேண்டிய தேவையே இல்லை. ஊகிக்க வேண்டிய அவசியமே இல்லை. கண்களை மூடிக் கொண்டால் கூட அதை உணரலாம். அதன் உணர்வை உணரலாம். அதன் துடிப்பை உணரலாம்.

இரண்டு வழிமுறைகளையும் பயன்படுத்தலாம். தியானம் செய்ய மரணத்தையும் பயன்படுத்தலாம். என் வகையான வாழ்வையும் பயன்படுத்தலாம். என் வழி புத்தரின் வழியைக் காட்டிலும் மிகச் சிறந்தது என்பதை மீண்டும் வலியுறுத்த விரும்புகிறேன்.

புத்தரின் சாவுக்குறியீட்டு வழியைப் பின்பற்றியதால் இந்த நாடு ஊக்கமிழந்து மந்தமாகி செத்துப் போனது. என் வழிதான் நாட்டுக்குப் புத்துயிர் ஊட்ட முடியும். இந்த நாட்டுக்கு மட்டுமல்ல. உலகம் முழுவதற்குமேதான்.

புத்தர் மட்டும் மரணத்தைக் குறியீடாக ஏற்கவில்லை. கிறிஸ்துவ மதமும் அதையே செய்தது. சிலுவையை. ஆகவே உலகின் மாபெரும் இரு மதங்களான பௌத்தமும் கிறிஸ்துவமும் மரணத்தை வலியுறுத்துவனவாக அமைந்துவிட்டன.

இவ்விரண்டின் இந்தப் போக்குக் காரணமாக ஏற்பட்ட விளைவுகள் பெரியவை. கிறிஸ்துவம் மேலை உலகை மாற்றியது. பௌத்தம் கீழை உலகை மாற்றியது. புத்தரும் இயேசுவும் மாபெரும் போதகர்கள்.

ஆனால் மரணத்தைக் குறியீடாகத் தேர்ந்தெடுத்தது மிகவும் ஆபத்தான செயல். பேராபத்தை உண்டாக்கி விட்டது அது.



நான் வாழ்வைத் தேர்வு செய்பவன். இந்த உலகம் முழுவதும் வாழ்வின் உயிர்த்துடிப்பு மேலும் மேலும் செழுமை பெற வேண்டுமென்று விரும்கிறேன். ஆனால் மஞ்சளாடை பற்றி புத்தர் என்ன சொல்கிறாரோ அதையே ஆரஞ்சு ஆடை பற்றியும் நான் சொல்ல விரும்புகிறேன்.

அவர் சொல்கிறார் :

'சேறு படிந்த சிந்தனைகளும்
நிறைந்த ஏமாற்றும் துணிவும் கொண்டவன்
மஞ்சளாடை அணிவது பொருந்துமா?
தன்னியல்பை ஆள்பவன் எவனோ,
ஒளியும் தெளிவும் உண்மையுமானவன்
எவனோ அவனே மஞ்சளாடை
அணியலாம்.'

அவர் மஞ்சளாடை பற்றிச் சொல்வதையே நான் ஆரஞ்சு ஆடைக்குச் சொல்கிறேன்.

எவரொருவர் ஒளியாய் தெரிவாய்
உண்மையாய் இருக்கிறாரோ
அவரே ஆரஞ்சு ஆடை அணியலாம்.
ஏஸ் தம்மோ ஸனந்தனோ





தம்மபதம் – ஓஷோவின் சொற்பொழிவுகள்

# ஒரு வெற்று நாற்காலி

2





முதல் வினா

அன்பிற்குரிய குருவே,

'ஒரு வெற்று நாற்காலி
ஒரு மௌன மண்டபம்
புத்தருக்கொரு முகவுரை
எவ்வளவு அற்புதப் பேச்சாக இருக்கும்...
எவ்வளவு அபூர்வமாக இருக்கும்...'

**ஆமாம்** சுபுதி, புத்தரை உனக்கு அறிமுகப்படுத்த அது ஒன்றுதான் வழி. மௌனத்தின் மொழி கொண்டுதான் அவரை நன்றாக விளக்க முடியும். சொற்கள் தகுதியற்றவை. போதாதவை. குறுகியவை. வெற்றிடம். பரிபூரண அமைதி மட்டுமே புத்தரின் இருப்பைப் புலப்படுத்தும்.

ஜப்பானில் ஒரு கோயில் இருக்கிறது. ஒரு புத்தர் சிலை கூட இல்லாமல் வெறுமையாக இருக்கிறது. ஆனால் அது புத்தருக்கு அர்ப்பணிக்கப்பட்ட ஆலயம்.

பார்வையாளர்கள் அங்கே வரும்போது, ''புத்தர் எங்கே? புத்தருக்காக அர்ப்பணிக்கப்பட்ட கோயிலாயிற்றே...'' என்று கேட்கிறார்கள்.



அங்கே உள்ள பிட்சுக்கள் சிரித்துவிட்டு, ''இந்தத் தூய, வெறுமையான மௌனமான இடமே புத்தர்,'' என்கிறார்கள்.

கற்கள் அவரைப் பிரதிநிதிப்படுத்துமா? சிலைகள் அவரை அடையாளம் காட்டுமா? புத்தர் கல் அல்லர். புத்தர் சிலை அல்லர். புத்தர் ஒரு வடிவத்தில் இருப்பதில்லை. புத்தர் வடிவமில்லாத நறுமணம்.

அதனால்தான் பத்துநாள் மௌனத்துக்குப் பிறகு புத்தரைப் பற்றிப் பேச முற்பட்டேன். இது எதேச்சையாக நிகழ்ந்ததன்று. மௌனமே அவருக்கான சாத்தியக்கூறான முன்னுரை.

சுபுதி, நீ சொன்னது சரிதான். ஒரு வெற்று நாற்காலி... ஆமாம். ஒரு வெற்றிடம்தான் அவரைப் பிரதிநிதித்துவப் படுத்தும். இந்த நாற்காலி வெற்று தான். உன்னோடு பேசிக் கொண்டிருப்பவனும் வெற்றுதான். உனக்குள் பாய்ந்து கொண்டிருப்பதும் வறுமைதான். உனக்குள் யாரும் இல்லை. வெறுமைதான் இருக்கிறது. மௌனமே இருக்கிறது.

உன்னால் மௌனத்தைப் புரிந்து கொள்ள முடியாது என்பதால் அதை மொழியில் பெயர்க்க வேண்டி வருகிறது. உன் குறைபாடு காரணமாகவே நான் பேச நேர்கிறது. இல்லாவிட்டால் இதற்குத் தேவையே இல்லை.

உண்மை சொல்ல முடியாதது. இதுவரை சொல்லப் படாதது. இனியும் சொல்ல முடியாதது. உண்மை பற்றிப் பேசும் எல்லா கிரந்தங்களும் தொடர்ந்து விடாமல் பேசிக் கொண்டே இருக்கின்றன. ஆனால் எதுவும் அதை விளக்க இயலாது. வேதங்கள், பைபிள், குரான், உட்பட. காரணம் எவற்றின் மெய்யான இயல்பும் விளக்கத்துக்கு அப்பாற்பட்டது.

சொல்ல முடியாதது அது. ஆனால் காட்டலாம். தர்க்க ரீதியாக அதை நிரூபிக்க முடியாது. ஆனால் அதை அன்பு



நிரூபித்துவிடும். தர்க்கம் தோற்றுப் போகிற இடத்தில் அன்பு வென்றுவிடும். மொழி தோற்றுப் போகிற இடத்தில் மௌனம் வென்றுவிடும்.

என்னால் அதை நிரூபிக்க முடியாது. ஆனால் எனக்குள் ஒரு 'நான்' இல்லாமல் போவதே அதற்கான சரியான நிரூபணம். புத்தரைப் புரிந்து கொள்ள, சரியாகப் புரிந்து கொள்ள நானிருக்கும் மௌனத்தை நெருங்கி நெருங்கி வரவேண்டும். உன்னிடம் பேசிக் கொண்டிருக்கும் யாருமில்லாதவனுக்குக் கிடைக்கக் கூடியவராக பலவீனராக நெருங்கியவராக ஆக வேண்டும்.

நானொரு ஆளல்ல. ஆள் மறைந்து நீண்ட காலம் ஆகிவிட்டது. இப்போது இருப்பது ஒரு தோற்றம். இன்மையும் ஒரு தோற்றமே. ஒரு மனிதன் என்ற முறையில், ஓர் ஆள் என்ற முறையில் நான் இல்லாதவன்.

நான் இருப்பது ஒரு வாகனமாக, ஒரு வழியாக, உள்ளீடற்ற மூங்கிலாக. இது ஒரு புல்லாங்குழல் ஆகலாம். வெற்று மூங்கிலே புல்லாங்குழல் ஆக முடியும்.

நான் என்னை பூரணத்துக்கு வழங்கிவிட்டேன், பூரணத்தின் விருப்பம் எதுவோ அதன்படி நான்... அது என் வழியாகப் பேச விரும்பினால் நான் அகப்படுவேன். அதன் விருப்பமே இப்போதுள்ள ஒரே விருப்பம். எனக்கெனத் தனி விருப்பம் எதுவும் இல்லை.

அதனால்தான் என் பேச்சில் முரண்பாடுகள் இருப்பதைப் பலமுறை நீங்கள் பார்க்கிறீர்கள். காரணம் என்னால் எதையும் மாற்ற முடிவதில்லை. கடவுள் முரண்பட்டவர். மாறுபட்ட இரு துருவங்கள் கொண்டவர். அவரே ஒளியும் இருளும். அவரே கோடையும் குளிர்காலமும். வாழ்வும் சாவும்.



சில சமயம் அவர் வாழ்வாகப் பேசுகிறார். சில சமயம் மரணமாக. சில சமயம் கோடை காலமாக வருகிறார். சில சமயம் குளிர் காலமாக... நான் என்ன செய்ய?

நான் குறுக்கிட்டால் அவரைத் தவறாகப் பிரதி நிதிப்படுத்துவதாக ஆகிவிடும். நான் உறுதியாக நின்றாலோ நான் பொய்யாகிவிடக்கூடும். கடவுளிடம் உள்ள எல்லா முரண்பாடுகளுக்கும் நான் இடம் கொடுத்தால்தான் நான் உண்மையாக இருக்க முடியும்.

இந்த நாற்காலி வெறுமையாகத்தான் இருக்கிறது, சுபுதி. எப்போது நீ இந்த நாற்காலியின் வெறுமையைக் காண முடிகிறதோ, இந்த உடலின் வெறுமையைக் காண முடிகிறதோ, இந்த இருப்பின் வெறுமையைக் காண முடிகிறதோ அப்போதுதான் நீ என்னைக் காண முடியும். சீடன் குருவைச் சந்திக்கும் உண்மையான கணம் அதுதான்.

அது ஒரு கலைப்பு. ஒரு மறைவு. பனித்துளி சொட்டுச் சொட்டாய்க் கடலில் விழுந்து காணாமல் போவது. அல்லது கடல் நழுவிப் பனித்துளியாவது.

இரண்டும் ஒன்றுதான். குரு சீடனுக்குள் மறைந்து போவதும் சீடன் குருவுக்குள் கரைந்துபோவதும்... அப்புறம் மிஞ்சுவது பரிபூரண மௌனமே.

அது ஓர் உரையாடல் அன்று. கிழக்கத்திய சமயங்கள் அப்படித்தான். குறிப்பாக பௌத்தம். இது கிறிஸ்துவம், யூதம், இஸ்லாம் ஆகிய சமயங்களை விட உயர்ந்து சென்று சிகரங்களைத் தொட்டது. காரணம் இம்மூன்று சமயங்களும் ஏதோ ஒரு வகையில் உரையாடலைப் பற்றிக் கொண்டிருந்தன.

உரையாடல் இருமையை, துவைதத்தை வலி யுறுத்துபவை. இஸ்லாம், கிறிஸ்துவம், யூதம் ஆகியவை



பிரார்த்தனை மதங்கள். பிரார்த்தனை என்றவுடன் உன்னிலும் வேறாகக் கடவுள் ஒருவர் இருக்கிறார், நீ அவருடன் பேசுகிறாய் என்று பொருள்.

அதனால்தான் மார்ட்டின் பூபரின் 'நானும் நீயும்' என்ற புத்தகம் பிரபலமானது. பிராத்தனையின் சாரமே அதுதான். நான்-நீ என்பது இருமை. அங்கே உரையாடல் தேவைப்படுகிறது.

அந்த உரையாடல் எவ்வளவு அழகாக இருந்தாலும் அங்கு நிலவுவது பிரிவினைதான். பிளவுதான். இன்னும் ஒன்றுபடாத இருமை. ஆறு இன்னும் கடலில் சங்கம மாகவில்லை. அது நெருங்கி வந்திருக்கலாம். விளிம்பை அடைந்திருக்கலாம். என்றாலும் பின் இழுத்துக் கொண்டு தான் நிற்கிறது.

பௌத்தம் ஒரு பிரார்த்தனை மதமன்று. அது தியான மதம். பிரார்த்தனை ஓர் உரையாடல். தியானம் மௌனம். இதுதான் வேறுபாடு. பிரார்த்தனை இன்னொருவரிடம் முறையிடுவது. உண்மையோ உண்மையில்லையோ யாரிடமாவது முறையிடுவதுதான் அது.

தியானத்தில் முறையீடே கிடையாது. ஒருவர் மௌனத் தில் வீழ்ந்துவிடுவது அது. ஒன்றுமில்லாமல் அப்படியே காணாமல் போய்விடுவது அது. ஒருவர் இல்லாமல் போய்விடும்போது எஞ்சி நிற்பது தியானம் மட்டுமே.

புத்தரே ஒரு தியானம். அவரது நறுமணமே அதுதான்.

இந்தப் பத்து நாட்கள் நாம் மௌனத்தில் ஆழ்ந்திருந்தோம். தியானத்தில் ஆழ்ந்திருந்தோம். உண்மை அப்போது சொல்லப்பட்டுவிட்டது. அப்போது அதைக் கேட்காமல் போனவர்களுக்காவே இப்போது பேசுகிறேன்.

இந்தப் பத்து நாள் மௌனம் வித்தியாசமானது. அதுதான் புத்தருக்கும் எனக்குமுள்ள அணுகல்முறை



வேறுபாடு. சின்ன வேறுபாடுதான். என்றாலும் மிகப் பெரிய முக்கியத்துவம் கொண்டது.

நான் புத்தருக்கு வெறும் விரிவுரையாளன் அல்ல என்பதால், அந்த வேறுபாட்டை நீங்கள் புரிந்து கொள்ள வேண்டும். நான் புத்தரின் எதிரொலி அல்லன். நான் அவரைப் பிரதிபலிக்கும் ஒரு கண்ணாடி அல்லன். நான் அவரது பாதிப்பு, பிரதிபலிப்பு அல்ல. நான் அறிஞன் அல்லன். அவரது கருத்துகளை அறிவு பூர்வமாக ஆராய்பவனும் அல்லன்.

அவர் கண்ட ஒன்றுமின்மையே நானும் கண்டிருக்கிறேன். ஆனால் என் வழியில். புத்தருக்குத் தனி வழி இருந்தது. எனக்கு என் வழி. பார்ப்பது இருப்பது எல்லாம் என் தனி வழியில். இரு வழிகளும் ஒரே சிகரத்தை அடையும் என்றாலும் அவை வேறு வேறு வழிகளே. என் வழி சற்றே வேறுபட்டது. என்றாலும் மிக முக்கியமான இறக்குமதி என்பதை மறந்துவிடக் கூடாது.

இந்தப் பத்து நாட்கள் வெறும் மௌனத் தியானம் மட்டுமன்று. இசையும் மௌனமும் தியானமும் நிறுவிய காலம். இதில் என் பங்களிப்பு இசைதான். புத்தர் இதை அனுமதித்திருக்க மாட்டார்.

இந்த ஓர் அம்சம் காரணமாக நாங்கள் சண்டையிட நேர்ந்திருக்கும். அவர் இசையை அனுமதித்திருக்க மாட்டார். அது இடையூறு என்று அவர் சொல்லியிருப்பார். தூய மௌனத்தையே அவர் வலியுறுத்தி இருப்பார். நிசப்தமே போதும் என்றிருப்பார். அங்கேதான் நாங்கள் முரண்பட ஒப்புக் கொள்கிறோம்.

எனக்கு இசையும் தியானமும் ஒரே நிகழ்வின் இரண்டு அம்சங்கள். இசை இல்லாமல் தியானத்தில்



ஏதோ குறையும். இசையற்ற தியானம் மந்தமாய் உயிர்த்துடிப்பு அற்றதாய் இருக்கும்.

தியானம் இல்லாத இசை வெறும் சப்தம். எவ்வளவு ஒத்திசைவாக இருந்தாலும் அது வெறும் ஓசையே. தியானம் கலவாத இசை மேலும் மேலும் எதிர்மறைப் பண்பாக மாறும். மரணத்தை நோக்கிச் செல்வதாக மாறும்.

அதனால்தான் இசையும் தியானமும் ஒன்றிணைந்து செல்ல வேண்டுமென்று வலியுறுத்துகிறேன். ஒன்று மற்றொன்றுக்குப் புதிய பரிமாணத்தைக் கொடுக்கும் சேர்க்கை அது, அதனால் இரண்டுமே செழுமை பெறும்.

மூன்று Rகளை நினைத்திருப்பது போல மூன்று M களை நீங்கள் நினைவில் வைத்திருக்க வேண்டும். முதல் M மேதமேட்டிக்ஸ் - கணிதம். கணிதமானது ஒரு தூய விஞ்ஞானம். இரண்டாவது M மியூசிக், இசை - இசையானது ஒரு தூய கலை. மூன்றாவது M மெடிடேஷன், தியானம். தியானமே தூய சமயம். இம்மூன்றும் ஒன்று சேரும்போது நீங்கள் முத்திரித்துவம், திரிமூர்த்தம் பெற்றுவிடுவீர்கள்.

எனது அணுகல் முறை அறிவியல் பூர்வமானது. நான் ஒரு அதர்க்கமான அறிவிப்புச் செய்தால் கூட அதை நான் தர்க்க ரீதியாகவே செய்வேன். நான் முரண்பாடுகளை வெளிப்படுத்தினாலும் தர்க்க ரீதியாகவே வெளிப் படுத்துவேன்.

நான் சொல்லும் எதற்குப் பின்னாலும் கணிதம் இருக்கும். ஓர் ஒழுங்குமுறை இருக்கும். ஒரு வகை அறிவியல் முறை இருக்கும். நான் அறிவியலுக்கு மாறுபட்டவன் அல்லன். என் சமயத்தை அறிவியலே வழங்கியிருக்கிறது. அறிவியலே இறுதிநிலை அன்று. ஆனால் அது ஓர் அழகிய ஆரம்பம்.



எனது அணுகுமுறை கலாபூர்வமானது. அழகியல் ரீதியானது. இந்தச் சக்திப்புலம் இசை வடிவமாக ஆகாமல் போனால் உங்களுக்கு நான் உதவ வழியில்லை. இசை ஒரு தூய கலை. அது கணிதத்துடன் சேரும்போது உங்களது உள்ளார்ந்த இயல்பைத் தூண்டிவிடுகிற மிக ஆற்றல் வாய்ந்த கருவி ஆகிவிடும்.

ஆனால் அது தியானத்தோடு இணையாத வரை முழுமை பெறாது. என் முத்திரித்துவம் இதுதான். கணிதம், இசை, தியானம், இதுதான் என் திரிமூர்த்தி. மூன்று முகக் கடவுள்.

நீங்கள் ஒரு முகத்தின் வழியாகவும் கடவுளை அடையலாம். ஆனால் அந்த அனுபவம் இருமுக வழியாக அடைவது போல வளமாக இருக்காது. மூன்று முகங்கள் வழியாக அடையாத வரை ஏதோ குறைபாடு மற்ற வழிகளில் இருக்கவே செய்யும்.

கடவுளை மும்மூர்த்தியாக உணரும்போது, மூன்று பரிமாணங்கள் வழியாகச் செல்லும்போது உங்கள் அனுபவம், உங்களது நிர்வாணம், உங்கள் ஞானம் வளம் மிக்கதாக அமையும்.

புத்தர் தியானத்தை மட்டுமே வலியுறுத்துகிறார். அது கடவுளின் ஓர் முகம் மட்டுமே. முகம்மது நபி தொழுகை, இசை, பாடலை வலியுறுத்தினார். அதனால்தான் குரானில் இசைப் பண்பு காணப்படுகிறது. குரானைப் போல வேறு எந்த வேத நூலிலும் அந்த அளவு இசையைக் காண முடியாது.

குரான் என்றாலே 'ஒப்பி' 'பாடு' என்று பொருள். முகம்மது நபியின் முதல் வெளிப்பாடே அதுதான். அப்பால் வெளியிலிருந்து ஏதோ ஒன்று அழைத்து, 'ஒப்பி, ஒப்பி, பாடு' என்று சொன்னது.

இஸ்லாம் கடவுளின் இன்னொரு முகம். சில சமயங்கள் மூன்றாவது 'எம்' ஆகிய கணிதத்தின் மூலம் கடவுளை



அணுகின. சமணம் அந்த மூன்றாவது அம்சத்தின் தூய பிரதிநிதி.

மகாவீரர், ஆல்பர்ட் ஐன்ஸ்டீனைப் போலப் பேசுகிறார். மனிதகுல வரலாற்றில் சார்புடைமைக் கோட்பாடு பற்றிப் பேசிய முதல் மனிதர் மகாவீரர் என்பது எதேச்சையாக நிகழ்ந்ததன்று. இருபத்தைந்து நூற்றாண்டுகளுக்குப் பிறகுதான் ஐன்ஸ்டீனால் அறிவியல் பூர்வமாக அதை நிரூபிக்க முடிந்தது. ஆனால் மகாவீரர் தம் தரிசனத்தில் அதைக் கண்டுவிட்டார்.

மகாவீரரைப் படித்துப் பார்த்தால் முற்றிலும் கணித மயமாகவும் தர்க்க ரீதியாகவும் இருப்பதைக் காண்பீர்கள். சமண நூல்களில் சாறு இல்லை. அவை வறட்சியானவை. கணித மயமானவை. இது கடவுளின் இன்னொரு முகம்.

உலகில் மூன்று வகையான சமயங்கள் மட்டுமே உண்டு. சமணத்தைப் போலக் கணித சமயம். இஸ்லாம் போல இசைச் சமயம். கிறிஸ்துவமும் யூதமும் இந்து சமயமும் இதில் அடங்கும். தியான சமயம் பௌத்தம், தாவோயிஸம்.

இம்மூன்று அம்சங்களும் சேர்ந்த முழுமையானதொரு சமயத்தையே நான் வழங்க முயல்கிறேன். பேராசை கொண்ட சாகசம்தான் இது. இதுவரை இப்படியொரு முயற்சி நடந்ததில்லை. அதனால் எனக்கு இதுவரை இல்லாத எதிர்ப்பு கிளம்பியிருக்கிறது.

நீங்கள் ஆபத்தான ஆளுடன்தான் பயணம் புறப்பட்டிருக்கிறீர்கள். ஆனால் இந்தப் பயணம் அற்புதமாக இருக்கப் போகிறது. நீங்கள் எதிர்கொள்ளப் போகும் எல்லா அபாயங்களும் உங்களுக்குச் சிலிர்ப்பையே உண்டாக்கப் போகின்றன.

பயணம் மந்தமாக இராது. உயிர்த்துடிப்புடன் இருக்கப் போகிறது. பன்முகப் பரிமாணத்துடன் நாம் கடவுளை



நோக்கிப் போகப் போகிறோம். பயணத்தின் ஒவ்வொரு நொடியும் நமக்கு மதிப்பு மிக்கவை.

பத்து நாளைய திட்டமிட்ட மௌனத்துக்குப் பிறகே இந்தத் தொடர் சொற்பொழிவை நான் ஆரம்பித்திருக் கிறேன். மௌனத்தில் ஆரம்பிப்பது ஓர் உத்தி. புத்தர் மகிழ்ச்சியடையும் அம்சம் இது.

இசை காரணமாகக் கொஞ்சம் எதிர்ப்புக் காட்டினாலும் காட்டலாம். ஆனால் நான் என்ன செய்ய? வேறு வழியே இல்லை.

எனது சமயம் ஆடலும் பாடலும் சிரிப்புமாக இருக்க வேண்டும். வாழ்வை மையமாகக் கொண்டிருக்க வேண்டும். வாழ்வின் மீது நம்பிக்கை கொண்டதாக இருக்க வேண்டும். வாழ்வின் மீது காதல் கொண்டதாக இருக்க வேண்டும். அது மறுப்பன்று, மகிழ்ச்சி.

இரண்டாவது வினா

**அன்பிற்குரிய குருவே,**

**'அந்த உணர்வைப் பற்றிக் குறிப்பிட**
**விரும்புகிறேன். எப்போதும் அது**
**இருந்துகொண்டே இருக்கிறது.**
**அதை உணரும்போது அது வெகு தூரத்தில்**
**இருப்பது போலத் தோன்றுகிறது.**
**அதுதான் என்ன?'**

**தேவபிரசாந்தம்**, உண்மை தேடுகிறவர்கள் எல்லாருக்குமே ஏற்படுகின்ற தொடர் பிரச்சினைதான் அது. உண்மையை உன்னால் பற்ற முடியாது. முயன்றால் அது தூர, தூரப் போய்க் கொண்டே இருக்கும்.



உண்மையை உடைமை கொள்ள முடியாது. முயன்றால் உன் கை வெறுங்கையாகவே தான் இருக்கும். அது ஒரு பொருளன்று. அதனால்தான் பிடித்து வைக்க முடிவதில்லை.

ஆனால் அது உன்னைப் பற்றிக் கொள்ளும். அதை அனுமதிக்கிற துணிச்சல் உங்களுக்கு வேண்டும். காரணம் அது ஒரு காதல் விவகாரம்.

அது உங்களைப் பற்றிக் கொள்ள விடுங்கள். அப்போது அது என்னவென்று புரிந்துவிடும். ஆனால் அதற்கு மாறாகவே நீங்கள் செயல்படுகிறீர்கள். அதைப் பற்றிக் கொள்ளவே முயல்கிறீர்கள். மனம் அப்படித்தான் விரும்புகிறது. ஆசைப்படுகிறது. அதைத்தான் மனம் 'புரிந்து கொள்ளுதல்' என்கிறது. எதையாவது ஒன்றைப் பற்றாதவரை மனம் நிறைவடைவதே இல்லை.

உண்மை பாதரசம் போன்றது. நீங்கள் அதைக் கையால் பற்ற விரும்பினால் கையை இறுக்குகிற அளவுக்கு அது வெளியேறிவிடும். அப்புறம் அதன் மீதுள்ள நம்பிக்கையே போய்விடும். அப்படி ஒன்று இல்லையென்று சொல்லும் அளவுக்குப் போய்விடுவீர்கள்.

உண்மை தானாக வருவது. அதைக் கொண்டுவர முடியாது. உண்மை தானாக நிகழ்வது. உங்களால் அதை எதுவும் செய்ய முடியாது. காரணம், செய்கிறவரே ஒரு பிரச்சினை, ஒரு தடை, இடையூறு ஆகிவிடுவார்.

செய்பவனே ஆணவம். செய்பவன் குறுக்கிடாமல் பார்த்துக் கொண்டால், அது பின் வாசல் வழியாக வந்துவிடும். ஒரு பார்வையாளனைப் போல, ஓர் அனுபவசாலியைப் போல. ஆனால் அது, அதே ஆணவம் தான், மாறுவேடத்தில் வருகிறது.

அதனால்தான் உணரும்போது அது காணப்படாமல் போய்விடுகிறது. செயல்படுபவன், நோட்டம் பார்ப்பவன்



போல வருகிறான். செயல்படுகிறவன் சுத்தமாகக் கரைந்து காணாமல் போய்விட வேண்டும். நுட்பமான வகையில், இரகசிய வழியில் அவன் உள்ளே நுழைந்துவிடக்கூடாது.

உண்மை உள்ளபடி இருக்கட்டும். அதைப் புரிந்து கொள்ளவோ உணரவோ அவசரப்பட வேண்டாம். அது அங்கேயே இருக்கட்டும். நீங்கள் எதுவும் செய்ய வேண்டாம். செயலின்றி, முயற்சியின்றி, ஆணவமின்றி நீங்கள் சும்மா இருந்தால் புரிந்து கொள்ளலாம். உணர்ந்து கொள்ளலாம். உங்களுக்கு அது கிடைத்துவிடும். அதை நேரடியாகப் பெற முடியாது. மறைமுகமாகவே பெற முடியும்.

பிரசாந்தம், அங்கேதான் நீ தவற விட்டுவிடுகிறாய். எல்லோரும் அந்த இடத்தில்தான் இழந்துவிடுகிறார்கள். சட்டென அது உங்கள் முன் நெருங்கி வரும் நேரங்கள் உண்டு. நீங்கள் அதைப் பிடித்துவிடவும் விரும்புவீர்கள்.

அந்த ஆவல் எழுவதே பேராசை காரணமாகத்தான். அந்த ஆசை எழுவதே அச்சம் காரணமாகத்தான். எங்கே மனம் நுழைகிறதோ அங்கிருந்து உண்மை வெளியேறிவிடும்.

எதுவும் செய்யாமல், சாதாரண மௌனத்துடன் உடலளவிலோ உணர்வுபூர்வமாகவோ அறிவு பூர்வமாகவோ எதுவும் செய்யாமல், சும்மா அப்படியே முழு அமைதியுடன் இருக்க முடியாதா? முடிந்தால் அது உங்களைப் பிடித்துக் கொள்ளும். அதை அறிவதற்கான ஒரே வழி, அது உங்களைப் பிடித்துக் கொள்ள அனுமதிப்பதுதான்.

அந்த உணர்வு எப்போதும் அங்கே இருக்கிறது என்கிறாய். ஆமாம். அது எப்போதும் இருக்கவே செய்கிறது. அதுதான் நமது உண்மையான இருப்பு. அதனால்தான் நாம் உருவாக்கப்பட்டிருக்கிறோம்.



உண்மை உங்களில் வேறானதன்று. நீங்களே உண்மை. ஆனால் உங்கள் பிரக்ஞை. உங்கள் இருப்பின் ஆதாரமே அதுதான். அதைத் தேடிக் கண்டுகொள்ள நீங்கள் எங்கேயும் போக வேண்டியதே இல்லை. காசிக்கோ, காபாவுக்கோ ஒரு ஒற்றைக் காலடி கூட எடுத்து வைக்க வேண்டியதில்லை.

லாவோ சூ சொல்கிறார்: ''அது உங்கள் சொந்த வீட்டில் உட்கார்ந்து கொண்டிருக்கிறது. எங்கேயும் போக வேண்டாம். அது அங்கேதான் இருக்கிறது. தேட ஆரம்பித்தால், ஆராயத் தொடங்கினால், நீங்கள் அதை விட்டு விலகியே போக வேண்டியிருக்கும். ஒவ்வொரு தேடலும் உங்களுடன் இருக்கும் உண்மையை விட்டு விலகிச் செல்லவே வழிவகுக்கும்.''

அது அங்கேயேதான் இருக்கும். அதை உணரும் கணங்கள் ஏற்படும். மகிழ்வு, காதல், அழகின் கணங்கள். உலகம் சட்டென நின்றுபோய்விடுகிற கணங்கள் அவை. ஓர் அழகான அந்தி மாலையின் போது அது சட்டென உங்களைக் கவ்விக் கொள்ளும். பற்றிக் கொள்ளும். அதனால் நீங்கள் பற்றிக் கொள்ளப்படுவீர்கள். நீங்கள் அதைப் பற்றுவதில்லை.

எப்படி உங்களால் அதைப் பற்ற முடியும்? அந்திப் பொழுதுதான் உங்களைப் பற்றிக் கொள்கிறது. உங்களை நிரப்பி விடுகிறது. உங்களுடைய மூலை முடுக்கெல்லாம் அந்த அழகு நிரம்பி வழிய ஆரம்பித்து விடுகிறது.

அப்போதுதான் ஒருவருடைய இருப்பின், அடியாழ இருப்பின் மையம் தெரியும். அது எப்போதும் அங்கேயே இருந்து வந்ததுதான். அதற்குச் சொற்களே தேவையில்லை. சொற்களாகவன்றி உணர்வால் உணர்வது அது.

காதல் வயப்பட்டிருக்கும்போது, இனிய கவிதையைக் கேட்கும்போது, பறவைகளின் பாடல் கேட்கும்போது, காற்று



மரங்களிடையே வீசும்போது, தண்ணீர் சலசலத்து ஓடும்போது உங்களை அவை பற்றிக் கொள்ள நீங்கள் அனுமதித்தால் சட்டென எங்கிருந்தோ உண்மை வெளிப்பட்டுவிடும். கடவுள் தோன்றுவார். தம்மம் தோன்றிவிடும்.

அப்போது புதிரானதைத் தொட்டுவிட்டதாகப் பொருள். அருவமானதைக் கண்டுவிட்டதாகப் பொருள். அப்போது நிரந்தரத்தோடு ஒரு தொடர்பு ஏற்பட்டுவிட்டதாகப் பொருள். ஏஸ் தம்மோ ஸனந்தனோ, நிரந்தர விதி, முடிந்து போகாத விதி.

எல்லாமே உங்களுக்குள் ஒத்திசைவாக அமையும் நேரம் எல்லாருக்கும் ஏற்படக்கூடியதுதான். இந்த அனுபவக் கணங்களுக்கும் ஆலயம், மாதகோயில், பள்ளி வாசல் களுக்கும் ஒரு தொடர்பும் இல்லை. சொல்லப் போனால் மாதாகோயில், பள்ளிவாசல், ஆலயங்களில் ஞானம் பெறுவது அபூர்வம்.

வைகறை விண்மீன் மறைவதைப் பார்த்தபடி மரத்தடியில் அமர்ந்திருக்கும் போதுதான் புத்தர் ஞானம் பெற்றார். எந்த ஆலயத்திலும் அல்ல. ஒரு மரத்தடியில். விண்மீன் மறைவதைப் பார்த்துக் கொண்டிருக்கும்போது. ஏதோ அவரைப் பிடித்துக் கொண்டிருக்க வேண்டும். மறையும் விண்மீன், மெல்ல மெல்ல மறைந்து கொண்டிருக் கிறது. போகிறது. போகிறது. போயே போய்விட்டது.

ஒரு கணம் இருந்தது. இப்போது அது இல்லை. அந்தக் கணப் பொழுதில் சட்டென அவருக்குள் ஏதோ நிகழ்ந்திருக்கிறது. ஆணவத்தின் கடைசிக் கோட்டையும் தகர்ந்து காணாமல் போயிருக்கிறது. மறைந்துவிட்ட விண்மீன் போல.



வானத்தில் நிர்மலம், அவருக்குள்ளும் நிர்மலம். நிர்மலமான இரண்டு ஒன்றாகி விடுகின்றன. ஏனென்றால் நிர்மலமாகிவிட்டதற்கு எல்லைக்கோட்டு வரையறைகள் கிடையாது. ஆனால் எதை நிர்மலம் என்று வரையறுப்பது? இரண்டு ஒன்றுமில்லாத வற்றைத் தனித்தனியாக வைத்திருக்க முடியாது. இரண்டு ஒன்றுமில்லாதவை ஓர் ஒன்றுமில்லாததாகி விடுகின்றன.

நட்சத்திரம் மறைந்தது. வானம் வெறுமையாகி விட்டது. ஆணவம் மறைந்தது. உள்ளிருந்து வானமும் வெறுமையாகிப் போனது. உடனே அகம் புறம் என்ற வேற்றுமை மறைந்தது. இருப்பது ஒரே வானம் தான் என்றாகிப் போனது.

அந்தக் கணம் புத்தருக்கு ஞானோதயம் கிடைத்தது. அந்தக் கணம் அவர் தம்மத்தைத் தெரிந்து கொள்ள வந்தார். உலகைத் தெரிந்து கொள்ள வந்தார். தாவோவைத் தெரிந்து கொள்ள வந்தார். கடவுளைத் தெரிந்து கொள்ள வந்தார். வாழ்வின் பிரபஞ்ச தத்துவத்தைத் தெரிந்து கொள்ள வந்தார்.

மகாவீரருக்கு ஞானம் கிட்டியது ஒரு கோயிலில் அல்ல. ஒரு சமணக் கோயிலிலும் அல்ல. அவர் காலத்தில் பல சமணக் கோயில்கள் இருந்தன. மகாவீரர் இருபத்து நான்காவது தீர்த்தங்கரர். அவருக்கு முன் இருபத்து மூன்று தீர்த்தங்கரர்கள் இருந்திருக்கிறார்கள். எனவே அவருக்கு முன்பே சமணக் கோயில்கள் இருந்திருக்கின்றன. ஆனால் அவர் ஞானம் பெற்றது ஒரு சமணக் கோயில் வளாகத்தில் அல்ல. சமணர்கள் இதைக் குறிப்பாகக் கவனத்தில் கொள்ள வேண்டும். அவருக்கு ஞானம் பிறந்தது வனத்தில். சும்மா உட்கார்ந்திருந்த போது, ஒன்றும் செய்யாமல் சும்மா உட்கார்ந்திருந்த போது. ஒரு வெள்ளமென அவருள் பாய்ந்தது.



முகம்மதுவின் ஞானம் பிறந்தது மலையொன்றின் உச்சியில். அப்படியேதான் பிறருக்கும். லாவோ சூ, ஸாராதுஸ்ட்ரா, கபீர், நானக், என்று யாருக்குமே கோயில் வளாகத்தில் ஞானம் பிறக்கவில்லை. மாதா கோயிலிலும் இல்லை. மசூதியிலும் இல்லை. எதற்காக அங்கே போக வேண்டுமென்கிறாய்?

அதிகாலையில் எழுந்து போய் உதிக்கும் சூரியனைப் பார். நடு இரவில் உட்கார்ந்து வானத்து நட்சத்திரங்களைப் பார். மரங்களையும் பாறைகளையும் நண்பராக்கிக் கொள். ஆற்றருகே உட்கார்ந்து அதன் கலகலப்பைக் கேள். அப்படிச் செய்யும்போது கடவுளின் உண்மையான கோயிலுக்கு வெகு அருகில் போய்ச் சேர்வாய். இயற்கையே அவருடைய உண்மையான கோயில். இயற்கை உன்னைத் தன் வசப்படுத்த விடு. இயற்கையை உன் உரிமையாக்க நினைக்காதே. ஆள வேண்டும் என்ற ஆசை லோகாதயமானது. வசப்பட வேண்டும் என்ற ஆசை தெய்விகமானது.

பிரசாந்தம், அடுத்த முறை அப்படி நடக்கும்போது அதைப் பற்றி ஒன்று செய்ய முயற்சிக்காதே. நாம் புரிந்து கொள்ள வேண்டியிருக்கிறது. கூர்ந்து பார்க்க வேண்டியிருக்கிறது. பரிசோதிக்க வேண்டியிருக்கிறது. பகுத்துப் பார்க்க வேண்டியிருக்கிறது. அது அப்படியே இருக்கட்டும். அது உன்னை வசப்படுத்தட்டும், விடு. அதை ஆடி அனுபவி. அதைப் பாடி அனுபவி. அதனோடு இரண்டறக் கலந்துவிடு. அதுதான் அதை அறிந்து கொள்ளும் ஒரே வழி.

என்ன சொன்னாய்? அது எப்போதும் இருந்து கொண்டிருந்திருக்கிறது என்ற உணர்வு என்றாய். அந்த உணர்வு மிகச் சத்தியமான உணர்வு. அதை உணர்ந்த உடனே அது வெகு தூரத்தில் இருப்பதாய்த் தெரிகிறது என்றாய். சரிதான்.



அந்த உணர்வு வரும்போதே 'நான்' என்ற உணர்வும் சேர்ந்து வந்து விடுகிறது. 'நான்' என்பதே உனக்கும் சத்தியத்துக்கும் இடைப்பட்ட தூரமாகிறது. 'நான்' என்பது எவ்வளவு பெரியதாக இருக்கிறதோ அவ்வளவு அந்தத் தூரமும் அதிகமாக இருக்கிறது. எவ்வளவு சிறியதாக இருக்கிறதோ அவ்வளவுக்கு அந்தத் தூரம் குறைவாகிவிடுகிறது. 'நான்' என்பது இல்லை எனும் போதுதான் தூரம் என்பதும் இல்லாமல் போகிறது.

''அது என்ற இது என்ன?'' என்று கேட்கிறாய்.

நான் அதை விளக்கிச் சொல்ல முடியாது. அதுதான் இந்தக் கணம். அது உன்னை வசப்படுத்தி வைத்துக் கொள்ளட்டும். அதுதான் இங்கே என்பது. உன்னை அது வசப்படுத்தி வைத்துக் கொள்ளட்டும். அது என்னுடைய வார்த்தைகளில் இல்லை. இடைவெளிகளில் இருக்கிறது. என்னுடைய கூற்றுகளில் இல்லை. கூற்றுகளுக்கு இடையே இருக்கிறது. வரிகளுக்கு இடையே தொக்கி நிற்பதைப் புரிந்து கொள்ளப் பார்.

ஆனால் ஒரு முக்கியமான விஷயத்தை நினைவில் கொள். அது உன்னை வசப்படுத்தி வைத்திருக்கும் போதுதான் நீ அதைப் புரிந்து கொள்ள முடியும். என்றாலும் இப்படி நம்மை ஒப்புக் கொடுத்துவிடுவதைப் பற்றி நமக்குப் பயம் அதிகம். கொடுத்துவிட்டால் கட்டுப்பாடு இழந்து விடுவோமோ என்ற பயம். கரைந்து இல்லாமல் போய்விடுவோமோ என்ற பயம். நம்மை எங்கே கொண்டு போய்விடுமோ என்ற பயம். அங்கிருந்து திரும்பி வரமுடியுமோ முடியாதோ என்ற பயம்.

இந்தப் பயங்கள் எழும்போது நீ சுருண்டு போகிறாய். அப்படிச் சுருண்டு போகும்போதுதான் தூரங்கள் ஏற்படுகின்றன. தூரம் உன்னுடைய கைவண்ணம்தான். நீ



மட்டும் தூரங்களை ஏற்படுத்திக் கொள்ளாமல் இருந்தால் அது இங்கே எப்போதும் இப்போதாக இருக்கப் போகிறது. எனவே தூரங்களைப் படைக்காதே. பயங்களைக் கொண்டு வராதே.

எல்லா மொழிகளிலும் ஆன்மிக வாதிக்கு, கடவுளுக்குப் பயப்படுகிறவர் என்ற பொருள் தரும் வார்த்தைகள் இருக்கின்றன. அசிங்கமான வார்த்தைகள் அவை. பச்சைப் பொய்கள். ஆன்மிகவாதி கடவுளைக் கண்டு பயப்படுபவனல்ல. கடவுளை நேசிப்பவன். அவரைப் பார்த்துப் பயந்து கிடக்கிறவன் அல்ல, ஆனால் இந்தப் பூசாரிகள் இருக்கிறார்களே அவர்களுக்குத்தான் இந்தப் பயம் தேவை. உன்னுடைய பயத்தைத் தனக்குச் சாதகமாக்கிக் கொள்கிறான். உன்னிடம் பயத்தை ஏற்படுத்துகிறான். நீ பயந்திருக்கிறாயா இல்லையா என்பதைப் பொறுத்தே அவனுடைய காரியம் அமைகிறது.

பயங்களை விட்டுத் தொலை. கடவுளைப் பார்த்துப் பயந்து கொள்ள வேண்டியதேயில்லை. கடவுள் ஒரு முழுமை. முழுவதும் அவரே. இருப்பவரும் அவரே. நாம் அவருடைய பகுதிகள். பகுதிகள் முழுமையைப் பார்த்துப் பயந்திருப்பது எப்படி? முழுமைக்குத் தன் பகுதிகளின் மேல் அக்கறை இருக்கிறது. பகுதிகள் இல்லாமல் முழுமை இருக்க முடியாதல்லவா? அதனால்தான் முழுமை தன் பகுதிகளை அலட்சியப்படுத்த முடியாது.

இதைத் தெரிந்து கொள்ள வரும்போது விசுவாசம் பிறக்கிறது. இதைத் தெரிந்து கொள்ளும்போது முழுமை தன்னை வசப்படுத்தி வைத்துக் கொள்ளத் தன்னை ஒப்புக் கொடுக்கிறான். இதைத் தெரிந்து கொள்ளும்போது பயங்களை விட்டுத் தொலைக்கிறான். சரணடைகிறான். அது இருப்பது சரணாகதியில், விசுவாசத்தில்.



அது எங்கே என்று நான் குறிப்புத் தர முடியும். ஆனால் அதை விளக்கிச் சொல்ல முடியாது. பிரசாந்தம், அது ஏற்கெனவே உனக்குச் சித்தித்தாயிற்று. நீ பாக்கியசாலி. அதற்கும் உனக்குமிடையே தூரங்களைப் படைத்துக் கொள்வதை நிறுத்து. அதை மிகச் சுலபமாகச் செய்யலாம். தெரியாத ஒன்றுக்குள் ஓர் அடி எடுத்து வைக்கக் கொஞ்சம் துணிச்சல் வேண்டும். அவ்வளவுதான். பயம் இருக்கும்தான். அந்தப் பயமின்றியும் தெரியாததற்குள் நுழைந்துவிடு. அதற்குள் போய்விடும்போதுதான் பயம் விலகிப் போகும். அப்போதுதான் பயந்து கொள்ள ஒன்றுமே இல்லை என்பதைப் புரிந்து கொள்வாய்.

தெரியாத அது உன்னைத் தன் வசப்படுத்திக் கொள்ளும்போது அந்த யாத்திரைக்கு முடிவேயில்லாமல் போகிறது. முடிவில்லாத யாத்திரை, நித்தமும் தொடரும் யாத்திரை, என்று நிகழும் யாத்திரை... ஏஸ் தம்மோ ஸனந்தனோ.. நித்தியமானதும் முடிவில்லாததும்...

மூன்றாவது வினா

அன்பிற்குரிய குருவே,

உங்களுடைய பொழுது போக்கு என்ன?

**ஆனந்தோ,** அப்படி எதுவும் எனக்கு இல்லை. எனக்குத் தேவையுமில்லை. பொழுது போக்கு என்பதே எப்படியோ உன்னை இழுத்து வைத்துக் கொண்டிருக்க ஒரு வழிதானே. எத்தனை நாளைக்குத்தான் சாப்பாட்டுக்காகப் பாடுபட்டுக் கொண்டிருப்பது? யாருக்கும் அலுப்புத் தோன்றத்தான் செய்யும். அப்படி அன்றாட வேலையில் அலுப்புத் தோன்றும்போது இரண்டு வழிகளில் ஒன்றைக்



கைக்கொள்ள வேண்டியிருக்கிறது. சும்மாயிருப்பது. ஆனால் அதுவோ உன்னைப் பயப்பட வைக்கிறது. சும்மாயிருப்பது என்பது தன்னோடேயே மட்டும் இருப்பது என்றாகிறதே, அதுதான் பயத்துக்குக் காரணம். சுத்தமாகத் தன்னோடு மட்டுமே இருப்பது. தம் வீழ்ச்சிகளை நேரிடையாகக் காண்பது. பயங்கரமாகத்தான் தெரிகிறது. திகில் கொள்ள வைக்கிறது. அவரவர் வாழ்வையும் சாவையும் நேரிடச் சந்திப்பது. அவரவர் உள்ளாழத்தில் இருப்பதை எதிர்கொள்வது. அடேயப்பா, முடிவில்லாது நீள்கிறதே. புரிந்து கொள்ளவும் முடியவில்லையே. அதன் பரந்திருக்கும் அளவே பயப்பட வைக்கிறது. உனக்குள் பெரியதொரு நடுக்கத்தைத் தோற்றுவிக்கிறது.

ஒரு வழி சும்மாயிருக்கும்போது உன் காரியங்களைப் பற்றித் தியானித்திருப்பது. மற்ற வழி ஏதோ ஒரு முட்டாள்தனமாக காரியத்தில் இறங்கிவிடுவது. அதற்குப் பொழுதுபோக்கு என்று பெயர் வைத்துவிடுவது.

சிலர் தபால் தலைகளைச் சேகரிக்கிறார்கள். என்ன முட்டாள்தனம். அதை அவர்கள் பொழுதுபோக்கு என்கிறார்கள். எல்லாப் பொழுது போக்குகளும் அப்படித்தான். உன்னிடமிருந்தே தப்பித்திருக்கச் செய்யும் முயற்சிகள்தான்.

எனக்கு என்னிடமிருந்தே ஆனந்தம் பெற முடிகிறது. தனியே இருப்பதும், சும்மா இருப்பதும் எவ்வளவு பெரிய ஆனந்தம் தெரியுமா? ஒரு முறை அதை அனுபவித்துவிட்டால் பொழுதுபோக்கு என்ற முட்டாள்தனங்களை விட்டுவிடுவாய். பொழுதுபோக்கு என்பதே வேலைக்கு வேறொரு பெயர்தான். உண்மையான வேலை என்று எதுவும் இல்லாத போது இப்படியான போலி வேலைகளில் பொழுதைக் கழிக்கிறாய்.



அதன் முட்டாள்தனத்தைக் கொஞ்சம் நினைத்துப் பார். வாரத்தில் ஆறு நாட்களை ஞாயிற்றுக் கிழமையை எதிர்பார்த்துக் கழிக்கிறாய். ஓய்வெடுக்க வேண்டுமே. சற்றே தளர்வாக இருக்க வேண்டுமே. உன்னோடேயே கொஞ்ச நேரம் இருக்கலாமே.

இந்த உலகத்து அலுப்பு அதிகமாகத்தான் ஆகிவிட்டது. எப்போதடா ஞாயிறு வரும் என்று ஏங்குகிறாய். அப்படியே ஞாயிற்றுக்கிழமையும் வந்துவிடுகிறது. என்ன செய்கிறாய் என்கிறாய். அந்த நாளையும் ஏதோ ஒன்றைச் செய்வதில் கழிக்கிறாய். அதற்குப் பொழுதுபோக்கு என்று பெயர் வைத்துவிடுகிறாய். சும்மாயிருப்பது முடியாத காரியமாகிவிட்டது. அதுதான் உன் பிரச்சினையே.

ஞாயிற்றுக்கிழமைக்குப் பின்னால் வார நாட்களில் இருப்பதை விட அதிகம் களைத்துப் போயிருக்கிறாய். எத்தனை பொழுது போக்குகள், பிக்னிக்குகள், டிரைவிங், இப்படி ஆயிரத்தொரு காரியங்கள். ஆறு நாட்கள் காத்துக் கொண்டிருந்தாயே அந்தக் காரியங்கள். இப்படியிருக்க நீயோ ஞாயிற்றுக் கிழமை வரட்டும், ஓய்வெடுக்கலாம் என்று நினைத்திருக்கிறாய்.

உனக்கு ஓய்வு கிடையாது. உனக்கு ஓய்வெடுக்கத் தெரியாது. தளர்வாக இருக்கத் தெரியாது, முடியாது. அக்கடா என்றிருப்பது என்ற பெயரில் ஏதோ ஒன்றைச் செய்து கொண்டிருப்பாய். ஓய்வெடுக்கிறேன் பேர்வழி என்று ஏதோ ஒன்றைச் செய்து கொண்டுதான் இருப்பாய்.

அதற்குச் சம்பளம் இல்லையென்ற ஒரே காரணத்தால் அது வேலையில்லை என்றாகிவிடுமா என்ன? சீட்டாடலாம். செஸ் ஆடலாம். அதற்குச் சம்பளம் இல்லையென்பது உண்மைதான். ஆனால் அதனாலென்ன பெரிய வித்தியாசம் வந்துவிடப் போகிறது? அதுவும் ஒரு வேலைதான், சம்பளமில்லாத வேலை.



பொழுது போக்குகளைத் தேடுவதை விட்டுவிட்டுச் சந்தர்ப்பங்களைத் தேடிப்பார். எப்போதெல்லாம் செய்வதற்கு ஒன்றுமில்லையோ அப்போதெல்லாம் உன்னோடேயே இருந்து பார். சும்மாயிருக்கும் போதெல்லாம் இதை முயன்று பார். உன்னோடு இருந்து பார். உனக்குள்ளே இருந்து பார். அதை விட்டு வெளியே வராமல் இருந்து பார். தபால் தலைகளைச் சேகரிக்க ஆரம்பித்து விடாதே.

இரண்டு முதிய யூதர்கள் ஒரு பூங்காவினுள் ஆசனத்தில் உட்கார்ந்திருந்தார்களாம்.

''ரிடையர் ஆகிவிட்டாயே, என்ன செய்து கொண்டிருக்கிறாய்?'' என்றார் ஒருவர்.

மற்றவர், ''எனக்கு ஒரு பொழுது போக்கு இருக்கிறது. நான் புறாக்கள் வளர்க்கிறேனே,'' என்றார்.

''புறாக்களா? எப்படி சாத்தியம்? நீ இருப்பதோ ஒரு விடுதியிலாயிற்றே,'' என்றார் அவர்.

''ஓர் அலமாரிக்குள் வைத்திருக்கிறேன்.''

''அலமாரிக்குள்ளா? உன்னுடைய உடைகளை எல்லாம் அசிங்கப்படுத்தி வைத்துவிடுமே.''

''இல்லை. அவற்றை ஒரு பெட்டிக்குள் வைத்திருக்கிறேன்.''

''பெட்டியா? எப்படி அவை மூச்சுவிட முடியும்?''

''மூச்சு விடுவதா? எதற்கு? அவைதான் செத்துக் கிடக்கின்றனவே!''

''செத்தா? செத்த புறாக்களையா வைத்திருக்கிறாய்?''

''அதுலே என்னப்பா இருக்குது. சும்மா ஒரு பொழுது போக்குத்தானே!'' என்றார் அவர்.



நான்காவது வினா

அன்பிற்குரிய குருவே,

'இன்று காலை எங்களை
'அன்புக்குரிய போதி சத்துவர்களே,' என்று
நீங்கள் அழைத்தபோது அது மெய் என்று
அப்போது தோன்றியது.
ஆனால் பின்னர் நினைத்துப் பார்த்தபோது
ஒரு நாளைக்கு நாமும்
போதி சத்துவர்களாவோம் என்ற சாத்தியம் கூட
ஒரு கனவு போலத் தோன்றுகிறதே...'

**ஷீலா,** அது நிஜம்தான். அதனால்தான் நான் நம்பிக்கையோடு உங்களை அப்படி அழைத்தபோது, அது உடனே உங்கள் ஆழத்துக்குள் ஒரு மணியோசையை எழுப்பியது. ஆனால் அது என்னுடைய நம்பிக்கை ஒலிக்கச் செய்த மணி. மறுபடியும் சொல்வேன், நீங்கள் போதிசத்துவர்கள் தான். அடிப்படையில் புத்தர்கள், புத்தராகும் சாத்தியமுள்ள விதைகள், புத்தராவதற்கான ஆற்றலுடையவர்கள்.

நான் எதைச் சொன்னாலும் எதார்த்தமாகத்தான் சொல்லுவேன். அது அப்படித்தான் என்றால் அதை அப்படி என்றுதான் சொல்வேன். அப்படி நான் சொல்லும்போது என்னோடு சுருதி கூடியவர்களாக இருப்பதால் அது முடிந்த உண்மையாகத் தெரியும். நிரூபணம் தேவையிருப்ப தில்லை. வாதப் பிரதிவாதங்கள் இருப்பதில்லை.

நான் சொல்லும் நிஜத்துக்காக நான் வாதாட வேண்டியதில்லை. பார்க்கப் போனால் எந்த நிஜத்துக்காக வும் வாதாட வேண்டியதில்லை. மிக எளிமையான நிஜம்



எப்போதுமே ஒரு மணியோசை எழுப்பக் கூடியது. ஒரே தேவை என்னவென்றால் அது உன் நெஞ்சத்திலிருந்து பிறந்திருக்க வேண்டும். அப்படிப் பிறந்திருந்தால் அது உன் நெஞ்சத்துக்கு இயல்பாகப் போய்ச் சேரும்.

என்னுடைய அறிவு நிலையில் நின்று நான் பேசவில்லை. என்னுடைய உயிரை உன்னுடைய உயிருக்குள் கொட்டுகிறேன். அது சக்திகளின் சங்கமம். ஆன்மாக்களின் சந்திப்பு. அதனால் என்னோடு இருக்கும் போது நான் பேசுவது சத்தியமாகத் தெரிகிறது. உன்னால் நம்பாமல் இருக்க முடியவில்லை.

ஆனால் நீயே தனிமையில் இருக்கும்போது, நான் அங்கே இல்லையெனும் போது சந்தேகங்கள் பிறக்கின்றன. உன்னுடைய பழைய மனது வந்து சேர்ந்துவிடுகிறது. வரும்போது வெஞ்சினத்தோடு வலிமையாகவும் வருகிறது.

''ஷீலா, இதோ பார். நீயா போதிசத்துவர்? வீட்ராக் மேல் காதல் வைத்திருக்கிறாயே, அது என்ன? காதலிக்கும் நீ போதிசத்துவரா? பொறாமை இன்னுமிருக்கிறதே உன்னிடம். அது மட்டுமா? கோபப்படுகிறாய். இப்படி என்னென்ன குறைகளை வைத்துக் கொண்டிருக்கிறாய், நினைத்துப் பார். நீ போதிசத்துவரா? அவர் வேடிக்கை யாகச் சொல்லியிருக்க வேண்டும். அல்லது உன்னைச் சிக்க வைத்து வேடிக்கை பார்க்க நினைத்திருக்க வேண்டும்.''

இந்தக் குரல்கள் உனக்குள் ஒலித்துக் கொண்டே இருப்பதால் உன்னிடம் பெரிய பெரிய சந்தேகங்கள் வந்து சேர்ந்து விடுகின்றன.

என்னோடு வருகிறாய். நாமிருவரும் சேர்ந்து நடக்கிறோம். கொஞ்ச நேரத்துக்கு அருகருகே நடக்கிறோம். என்னிடம் ஒரு விளக்கு இருக்கிறது. அந்த விளக்கு



வெளிச்சத்தில் உன் பாதை நன்றாகத் தெரிகிறது. பிறகு நாம் பிரிய வேண்டிய கணம் வருகிறது. பிரிந்து தான் ஆக வேண்டியிருக்கிறது. ஒரு சாலைச் சந்திப்பில் நாம் ஆளுக்கு ஒரு திசையில் திரும்புகிறோம்.

திடீரென நீ இருட்டுக்குள் இருப்பதை உணர்கிறாய். ஒரே குழப்பம் உனக்கு. ''என்ன ஆயிற்று வெளிச்சத் துக்கு?'' என்று திகைக்கிறாய்.

அந்த ஒளி உன்னுடையதல்ல. உன்னுடைய வழியில் வெளிச்சம் இருந்ததுதான். ஆனால் அந்த ஒளி உன்னுடைய தல்ல. எனவே என்னிடமிருக்கும்போது உன்னைச் சுற்றி வெளிச்சம் இருக்கிறது. அந்த வெளிச்சத்தில் எல்லாமும் தெளிவாகத் தெரிகின்றன. என்னோடு இல்லையெனும் போது இருட்டு வந்து விடுகிறது.

அந்த இருட்டில் எல்லாமும் சந்தேகத்துக்கு இடமாகிப் போகிறது. நம்பிக் கொண்டிருந்ததன் மேல் அவநம்பிக்கை கொள்கிறாய். அந்த இருட்டின் கருமையில் வெளிச்சம் கிடைக்கும் என்ற நம்பிக்கையைக் கூட இழந்துவிடுகிறாய். சில கணத்துக்கு முன்னர் வரை வெளிச்சத்தில் இருந்தோம் என்பதைக்கூட நம்ப முடிவதில்லை.

உன்னுடைய மனது, ''கனவு கண்டு கொண்டிருந் திருக்க வேண்டும் நீ. அல்லது மாயத் தோற்றங்கள் உன்னை மயக்கியிருக்க வேண்டும். எங்கே வெளிச்சம்? இருந்தது என்றால் எங்கே போயிற்று?'' என்று கேட்டுக் கொள்கிறாய்.

இது மறுபடி மறுபடி நடக்கக் கூடியது. இதில் புரிந்து கொள்ள வேண்டிய ஒருமுக்கியமான விஷயம் இருக்கிறது. என்னோடு நீ இருக்கிறாய் என்பது உண்மையானால் உடல்ளவில் என்னோடு இருக்க வேண்டும் என்பதில்லை.



நான் சொல்வதைக் கேட்டுக் கொண்டு என்னருகே உட்கார்ந்து கொண்டு இருப்பது எப்போதுமே சாத்தியமான ஓர் உணர்வாக முடியும். என்ன செய்ய வேண்டும் என்கிறாயா? உன்னுடைய பக்தியில் இன்னும் கொஞ்சம் ஆழப் போக வேண்டும். அவ்வளவுதான். என்னிடமிருந்து உடலளவில் வெகு தூரத்தில் இருந்தாலும் ஆத்மிகமாக வெகு அருகில் இருக்கிறாய். பிறகு அந்த நம்பிக்கை தொடர்ந்து இருக்க வரும். சந்தேகங்கள் உன்னை அணுகத் துணியா.

இப்போதும் என்மீது பக்தி வைத்திருக்கிறாய்தான். ஆனால் அது முழுமையானதல்ல. இன்னமும் உன்னிடம் இருக்கும் சில பிரதேசங்களை நான் பார்க்க நீ விட மாட்டேனென்கிறாய்.

ஷீலா மட்டுமல்ல அப்படி இருப்பது. பலரும்தான் அப்படி இருக்கிறார்கள். இன்னும் சில மூலை முடுக்கு களை மறைத்து வைத்துக் கொண்டு தனியாக, உங்களுக்கு மட்டுமே உரியதாக வைத்துக் கொண்டிருக்கிறீர்கள். உங்களுடைய நெஞ்சங்களை முழுக்கத் திறந்து வைத்தி ருக்கவில்லை. இன்னமும் நிர்வாணமாகத் தயாரில்லை.

எதையாவது மறைத்து வைத்துக் கொண்டிருப்பது என்றாகிவிட்டால், மறைத்து வைத்திருப்பதே உங்களுக்கும் எனக்குமிடையே இருக்கும் தூரத்தை நிர்ணயப்படுத்தி விடுகிறது.

எனவே என்னோடு இருக்கும் போது, என்னுடைய தாக்கத்துக்கு ஆட்பட்டிருக்கும் போது, நான் இருப்பதே போதும் உங்களுடைய மனதைக் கொஞ்சம் விலக்கி வைத்திருப்பதற்கு. ஆனால் என்னை விட்டு நகர்ந்தால் உடனே உங்கள் மனங்கள் வந்து ஒட்டிக் கொள்கின்றன. இன்னமும் கழித்துக் கட்டியாகவில்லையே.



ஒரு படிப்பினையைக் கற்றுக் கொள். என்னிடமிருந்து விலகியிருக்கும் போதும், என்னைக் காண முடியாத போதும் கூட என்னோடு இருப்பதை உணர்ந்திருக்க முயற்சி செய். என்னுடைய அணுக்கத்தை ஓர் நித்திய அனுபவமாக்கு. பிறகென்ன? இறப்புக் கூட நம்மைப் பிரிக்க முடியாது.

அப்போது கால தேச வர்த்தமானங்கள் கிடையாது. என்னோடு நித்தியமாக இருப்பாய். நம்பிக்கை விலகாது. தொடரவும் செய்யும். அது உன்னுடைய நித்திய கூறாகிப் போகும். உன்னுடைய நம்பிக்கை மட்டுமே நித்தியமானதாகி விடும். பிறவெல்லாம் மாறி மாறிப் போய் வந்து கொண்டிருக்க இந்த நம்பிக்கை மட்டும் நித்தியமானதாக நினைத்துவிடும்.

உன்னுடைய மையத்தை நீ கண்டு கொண்டிருப்பாய். அந்த அனுபவமே வீடு போய்ச் சேர்வதாகும்.

ஐந்தாவது வினா

அன்புக்குரிய குருவே,

'சமீப காலமாக
உங்களுடைய போதனைகள் பற்றியும்
ஆசிரமம் பற்றியும்
முட்டாள்தனமான பல கருத்துகளைப்
பத்திரிகைகள் வெளியிடுகின்றன.
உண்மைக்குப் புறம்பாக
இருப்பதைப் பார்க்கும் போது
எனக்குக் கோபம் கோபமாக வருகிறது.
மறுத்து எழுதும் கடிதங்களைப்
பிரசுரிக்க மாட்டேனென்கிறார்கள்.

இதைத் தாங்கள் பொருட்படுத்த
மாட்டீர்கள் என்று தெரியும்.
மறு கன்னத்தைக் காட்டு என்று
இயேசு சொன்னது இதைத்தானோ?'



**ஸரீன்,** எது எப்படி இருக்க வேண்டுமோ அப்படி இருக்கிறது. என்னைப் போன்ற ஒருவர் எதிர்ப்பில்லாமல் இருக்க முடியாது. என்னைப் போன்ற ஒருவர் மக்களை இரண்டு வகையினராகப் பிரிப்பது என்பது தவிர்க்க முடியாதது. என்னோடு இருப்பவர்கள், என்னோடு இல்லாதவர்கள்.

கொஞ்ச நாளைக்கு முன் ஒரு நண்பர் ஒரு கடிதம் எழுதியிருந்தார்.

இப்போதைக்கு இரண்டு வகையான மக்கள் மட்டுமே இருக்கிறார்கள். பக்தர்கள், என்மீது அன்பு வைத்திருப்ப வர்கள். எதிரிகள், என் மீது பெரும் துவேஷம் கொண்டிருப்பவர்கள். அந்தக் கடிதம் எழுதியவர் மூன்றாவது ஒரு வகையைக் கண்டுபிடிக்க முயல்கிறார். என்னை விரும்புபவராக இல்லாமல், என்னை வெறுப்பவராக இல்லாமல், பட்ச பாதமின்றி என்னைப் பார்க்கிறவர்கள்.

அவர் சொல்வது தர்க்க ரீதியாகச் சரியாக இருக்கிறது. ஆனால் அது காரிய சாத்தியமில்லை. என்றும் நடந்ததில்லை. இனி நடக்கப் போவதுமில்லை. நடக்க முடியாது. அவரே சந்நியாசியாவதற்கு முடியாமல் திணறிக் கொண்டிருக்கிறார்.

என்னுடைய பழைய நண்பரல்லவா? என்னிடம் சீடராகச் சரணடைய முடியவில்லை. அவரால் எனக்குப் பின்னால் வர முடியாது. என்னை வெறுக்கவும் முடியாது. என்னைத் தெரியும். என் மீது அன்பு இருக்கிறது. நீண்ட காலத்து நண்பர் அல்லவா. எனவே அவருக்கு அது ஒரு பெரிய பிரச்சினைதான்.



என்னுடைய நண்பராகவும் சகாவாகவும் இருந்துவிட்டதால் என்னிடம் சரணடைய அவருடைய கௌரவம் இடம் தரவில்லை. என்னைத் தம்மளவில் உணர்ந்தவராக இருப்பதால் எனக்கு எதிராகத் திரும்பவும் முடியவில்லை. எக்கச்சக்கமாக மாட்டிக் கொண்டிருக்கிறார். எனவே ஏதாவது வழி கிடைக்குமா வெளியே போவதற்கு என்று பார்க்கிறார். எனவே மூன்றாவதாக ஒரு சாதியைக் கற்பித்துக் கொள்கிறார்.

என் பக்கமுமில்லை. எனக்கு எதிரியுமில்லை. என்னைப் பாரபட்சமின்றிப் பார்க்கிறவர்கள். அப்படிப்பட்டவர்கள் மலடுகள். பாரபட்சமின்றி இருப்பவர்களை நான் கண்டு கொள்ளத் தயாரில்லை. மூன்றாவது சாதியில் எனக்கு எந்த அக்கறையுமில்லை. அதற்கும் ஒரு காரணம் இருக்கிறது.

அவர்கள் மரத்துப் போனவர்களாயிருப்பார்கள். என் மீது தணியாத வெறுப்புக் கொண்டவர்களையாவது நான் அக்கறையோடு கவனிப்பேன். இவர்களைக் கவனிக்கவே மாட்டேன். அவர்களுக்கு உணர்வுகள் இருக்கின்றனவே. எந்த உணர்வாக இருந்தாலென்ன? அவற்றை மாற்ற முடியும். ஆனால் உணர்வில்லாதவர்களை வைத்துக் கொண்டு ஒன்றும் செய்ய முடியாது.

அதீத வெறுப்பில் யாரும் ரொம்பக் காலம் தள்ள முடியாது. எனவே என்னை வெறுப்பவர்கள் ஒரு நாளைக்கு என்னிடம் வந்து சேர்வார்கள். வெறுப்பு உன்னையே புண்படுத்தும். என்னை வெறுப்பதால் என் மீது விருப்பம் கொள்ள முடியாது.

ஸரீன், நீ சொல்வது சரிதான். இந்த உலகம் முழுக்க என்னை வெறுக்கட்டும். அது ஒரு பொருட்டேயில்லை. அது எந்த வித்தியாசத்தையும் கற்பிக்கப் போவதில்லை. நான் என்னுடைய ஆனந்தத்தில் கவலையின்றி இருக்கத்தான் போகிறேன்.



என்னுடைய ஆனந்தத்தைப் பிறருடைய வெறுப்பும் பகையும் எப்படியும் பாதிக்காது. ஆனால் வெறுப்பிலேயே வாழ்ந்து கொண்டிருப்பவர்கள், பாவம், தங்களையே சித்திரவதை செய்து கொள்கிறார்கள். தங்களையே புண்படுத்திக் கொள்கிறார்கள்.

எத்தனை நாளைக்கு இப்படியே இருக்க முடியுமென்கிறாய்? இப்போதோ அப்போதோ, புண்கள் ஆறத்தானே வேண்டும்? அவர்களுடைய அதீத வெறுப்பே அதீத பக்தியாக மாறப் போகிறது.

ஒரு கதை நினைவுக்கு வருகிறது, ஸரீன்.

ஒரு ஸூஃபி ஞானி குரானைப் பற்றி ஒரு புத்தகம் எழுதினார். எல்லோரும் அதை எதிர்த்தார்கள். வைதிகச் சமயம் அந்தப் புத்தகத்தைத் தடை செய்தது. அதைப் படிப்பது குற்றம் என்று அறிவித்தது. குரானுக்கு அதுவரை சொல்லியிருந்த விளக்கங்களில் இருந்து அவருடைய விளக்கங்கள் முழுக்க வித்தியாசமாக இருந்தன. எனவே அதைக் கடவுள் நிந்தனையாகவும் ஆபத்தானதாகவும் கருதினார்கள். சம்பிரதாயத்துக்கு முரணாகப் பேசியிருப்பதாகச் சொன்னார்கள்.

அவர் தன்னுடைய முதன்மையான சீடரைக் கூப்பிட்டார். புத்தகத்தை அவரிடம் கொடுத்து பெரிய குருவிடம் தந்து என்ன நடக்கிறது என்பதைக் கவனித்து வந்து சொல்லுமாறு அனுப்பினார்.

''என்ன நடக்கிறதோ அதை அப்படியே இங்கே வந்து சொல்ல வேண்டும். எனவே கவனத்துடன் பார்த்து வர வேண்டும். என்ன நடந்தாலும் சரி. இதை என்னுடைய அன்பளிப்பாக அவரிடம் கொடுக்கும்போது அவர் அதை எப்படி எடுத்துக் கொள்கிறார், என்ன செய்கிறார், என்ன சொல்கிறார், என்று எல்லாவற்றையும் மிகச் சரியாக



நினைவில் வாங்கிக் கொண்டு வந்து சொல்ல வேண்டும். நடந்ததை அப்படியே சொல்ல வேண்டி யிருக்கும்,'' என்று சொல்லிவிட்டு மேலும் தொடர்ந்தார்:

''இது உனக்குக் கூட ஒரு பரீட்சை மாதிரித்தான். புத்தகத்தைக் கொடுத்தோமா வந்தோமா என்றிருக்கக் கூடாது. என்ன நடந்தது என்பதைக் கொஞ்சம் கூடப் பிசகாமல் வந்து சொல்ல வேண்டும்,'' என்றும் சொன்னார்.

அவரும் போனார். மிகக் கவனத்துடன் இருந்தார். எச்சரிக்கையாக இருந்தார். உள்ளே போவதற்கு முன்னால் உடலையும் மனதையும் குலுக்கிச் சுதாரித்துக் கொண்டார்.

புத்தகத்தைக் கொடுத்துத் தன்னுடைய குருவின் பெயரையும் சொல்லவும் அவர் உடனே அதைத் தெருவை நோக்கி வீசி எறிந்தார்.

''அந்த ஆபத்தான ஆள் கிட்டேயிருந்து கொண்டு வந்திருக்கிறேன் என்று முதலிலேயே ஏன் சொல்லவில்லை? அதைத் தொட்டேயிருக்க மாட்டேனே. இப்போது என் கைகளைக் கழுவிக் கொள்ள வேண்டியிருக்கிறது. அதைத் தொடுவதே பாபம்,'' என்றார்.

அவருடைய மனைவி பக்கத்தில் உட்கார்ந்திருந்தார். அவர், ''பாவம் அந்தப் பையனை மோசமாகத்தான் நடத்திவிட்டீர்கள். அவனென்ன செய்துவிட்டான்? அப்படியே புத்தகத்தை விட்டெறிய வேண்டுமென்றாலும் அவன் போனதற்குப் பிறகு வீசியெறிந்திருக்கலாமே. பெரிய லைப்ரரி வைத்திருக்கிறீர்கள். அப்படியிருக்க அதை விட்டெறிவதை என்னால் புரிந்து கொள்ள முடியவில்லை. ஆயிரக்கணக்கான புத்தகங்களில் ஒன்றாக இதையும் வைத்திருக்கலாமே. அதைப் படிப்பதில்லையென்றால் பரவாயில்லை. படிக்க வேண்டியதில்லைதான். குறைந்தது



அவன் போனதற்கப்புறம் அதை வீசியெறிந்து விட்டுக் கைகளைக் கழுவியிருக்கலாம். ஒரு குளியல் கூடப் போட்டிருக்கலாம். என்ன வேண்டு மானாலும் செய்திருக்கலாம். பாவம் அவனை ஏன் துன்புறுத்தினீர்கள்?'' என்றார்.

சீடர் திரும்பிப் போய்த் தன் குருவிடம் நடந்ததை அப்படியே விலாவாரியாகச் சொன்னார். குருவோ, ''நீ என்ன நினைக்கிறாய்?'' என்று கேட்டார்.

''நானா? அந்தப் பெண்மணி சிறந்த பக்தையாக இருக்க வேண்டும். அவர் மேல் எனக்கு அலாதி மரியாதை தோன்றிவிட்டது. அந்த ஆளோ அசிங்கம் பிடித்தவர். கழுத்தை நெரிக்கத் தோன்றியது,'' என்றார் சீடர்.

குருவோ, ''எனக்கு அந்த ஆள் மீதுதான் அதிக அக்கறை. அவரை மாற்றிவிடலாம். கோபப்படும் அளவுக்கு வெறுப்புக் கொள்பவர் அதீத அன்பு கொண்டவராகவும் தான் இருக்க வேண்டும். வெறுப்பும் அன்பும் ஒரே சக்தியின் இரண்டு வடிவங்கள்தான். அன்பு தலைகீழாக நிற்கும்போது, சிரசாசனம் செய்யும் போது வெறுப்பாகிறது. திரும்ப அவனைக் கால்களால் நிற்கச் செய்வது சுலபம். ஆனால் அந்தப் பெண்பிள்ளைக்கோ உணர்வுகள் மரத்துக் கிடக்கின்றன. அவளை மாற்ற முடியாது,'' என்றார்.

இந்த ஸூஃபி குரு சொன்னதை நான் அப்படியே ஏற்றுக் கொள்கிறேன். எனக்கு எதிராக இருப்பவர்கள் ஏன் அப்படி இருக்கிறார்கள், ஸரீன்? அவர்களுடைய நெஞ்சத்தில் சலனம் தோன்றிவிட்டது. என்னவோ அவர்களுக்குள் நடக்க ஆரம்பித்துவிட்டது. அது நடந்துவிடக் கூடாது என்று பார்க்கிறார்கள். அப்படி நடப்பதென்றால் அதில் ஆபத்திருக்கிறது என்று நினைக்கிறார்கள். அவர்களுடைய வாழ்வில் நான் ஒரு தாக்கத்தை ஏற்படுத்திவிட்டேன்.



அவர்களுக்கு என்னோடு வர விருப்பமில்லை என்றாலும் கூட.

அவர்களுடைய மொத்த மூலதனமும் அதை எதிர்க்கிறது. என்னைத் தவிர்க்க விரும்புகிறார்கள். என்றாலும் என்னைத் தவிர்க்க முடியாது என்பது தெரிந்திருக்கிறது. அதனால் கொதித்துப் போகிறார்கள். அதனால்தான் இவ்வளவு வெறுப்பும். அதனால்தான் அவர்கள் பொய்களைக் கற்பித்துக் கொண்டிருக்கிறார்கள்.

ஆனால் இவர்களைப் பற்றி எனக்கு மிகப் பெரிய நம்பிக்கை இருக்கிறது. பார்க்கப் போனால் எனக்கு அவர்கள் மீது அலாதிப் பிரியம் என்று கூடச் சொல்ல வேண்டும். வெகு சீக்கிரத்தில் அவர்கள் என்னிடம் வந்து சேரப் போகிறார்கள்.

உண்மையான பிரச்சினை அலட்சியப்படுத்துகிறவர்கள் தான், வெறுப்பும் இல்லை விருப்பும் இல்லை என்கிறவர்கள். மனித குலம் முழுவதையும் இரண்டு சாதிகளாகப் பிரிக்க வேண்டும். நண்பர்கள், விரோதிகள். நண்பர்கள் அதிகம் எனும்போது விரோதிகளும் அதிகமாகத் தான் செய்வார்கள். அப்படி இல்லையென்றால் சமநிலை பாதித்துவிடும். நண்பர்கள் அதிகம் என்றால் விரோதிகளும் அதிகம். சமநிலைப்படுத்தி வைத்திருக்க வேண்டும். வாழ்வு தொடர்ச்சியாகத் தன்னைச் சமநிலைப்படுத்திக் கொண்டே இருக்கிறது.

இந்த வேடிக்கையை நான் பார்த்து ரசிக்கிறேன்.

இதைப் பற்றிக் கவலைப்பட வேண்டியதில்லை, ஸரீன். ஆனாலும் உன் கவலை எனக்குப் புரிகிறது.

''சமீப காலமாக உங்களுடைய போதனைகள் பற்றியும் ஆசிரமம் பற்றியும் முட்டாள்தனமான பல கருத்துக்களைப் பத்திரிகைகள் வெளியிடுகின்றன,'' என்கிறாய்.



இன்னும் அதிகமாகத்தான் போகிறது. ஏனென்றால் இன்னும் பலபேர் என்னிடம் வந்து சேர வேண்டியிருக்கிறது. கோடிக்கணக்கான பேர் வந்து கொண்டிருக்கிறார்கள். எத்தனை பேர் இங்கே வந்து சேர்கிறார்களோ, இங்கு நடப்பதில் ஈடுபாடு கொள்கிறார் களோ அத்தனை பேர் இதை எதிர்த்துக் கிளம்பவும் செய்வார்கள். இது ஒரு வகையான சமநிலைப்பாடு. அப்படித்தான் உலகத்தில் எல்லாமும் நடக்கின்றன. அது இயற்கையின் போக்கு.

எல்லா விதமான முட்டாள்தனமான பேச்சுகளும் இருக்கத்தான் செய்யும். அவர்கள்தான் இங்கே வந்து பார்க்காதவர்களாயிற்றே. பார்த்திருந்தால் எதிர்க்க மாட்டார்கள். வதந்திகளை நம்பிப் பேசித் திரிகிறார்கள். அதுவும் மோசமான வதந்திகள் வேகமாகத்தான் பரவும். சுலபமாக, வேகமாக. ஏனென்கிறாயா? உலகமே எதிர்மறையில்தானே வாழ்கிறது?

உதாரணம் தருகிறேன். கனடா நாட்டு அரசாங்கம் எனக்குக் கடிதம் ஒன்று அனுப்புகிறது. கனடா நாட்டைச் சேர்ந்த சன்னியாசிகளையும் என்னிடம் வரும் கனடா நாட்டுக்காரர்களைப் பற்றியும் கவலையாக இருக்கிறதாம். என்னதான் நடக்கிறது இங்கே என்று கேட்கிறார்கள். இன்னொரு ஜோன்ஸ்டௌன் ஆகிவிடுமோ என்று பயந்து போனார்கள். எனக்கோ மகிழ்ச்சிதான். ஓர் அரசாங்கம் என்ன நடக்கிறது என்று கவலைப்படும்போது என்னவோ நடக்கிறது என்றுதானே பொருள். தூர தேசத்து அரசாங்கம் ஒன்று இங்கே என்ன நடக்கிறது என்று அவ்வளவு கவலைப்படுகிறது என்றால் இங்கே ஏதோ நடந்து கொண்டிருக்கிறது என்றுதானே பொருள்? அவர்களுக்கு நான் ஒரு தொந்திரவாகிப் போனேன். அவர்களுடைய தூக்கத்தைக் கெடுக்கும் கனவுகளில் நான் தெரிகிறேன்.



அப்படி எதனால் பயந்து கொண்டிருக்கிறார்கள் என்கிறாயா? ஒரு அமெரிக்கர் இங்கே தற்கொலை செய்து கொண்டார். இன்னொரு அமெரிக்கச் சன்னியாசிக்குப் பைத்தியம் பிடித்துவிட்டது. இந்த இரண்டு போதுமே அவர்களுக்கு...

அமெரிக்கர்கள் எல்லோருக்கும்தான் பைத்தியம் பிடித்திருக்கிறது. தற்கொலை செய்து கொள்வதைப் பற்றிச் சிந்தித்தேயிராத அமெரிக்கன் ஒருவனைக் காட்ட முடியுமா உன்னால்? ஒவ்வொரு அமெரிக்கனும் வாழ்வில் நான்கு முறையாவது தற்கொலை செய்து கொள்வதைப் பற்றி நினைத்துப் பார்க்கிறான் என்கிறார்கள் மனோதத்துவ அறிஞர்கள். தற்கொலை செய்து கொள்கிறவர்கள் அமெரிக்காவில்தான் அதிகம்.

நூறாயிரம் சன்னியாசிகளில் ஒருவன் தற்கொலை செய்து கொண்டான். அதுபோதும். அதுவும் ஓர் அமெரிக்கச் சன்னியாசி. அமெரிக்கச் சன்னியாசி வேறு என்ன செய்யப் போகிறான்?

இன்னொரு அமெரிக்கனுக்குப் பைத்தியம். இது ரொம்ப சகஜமான சமாச்சாரம். ஆனால் எதிர்மறை நிகழ்ச்சிகள்தானே உடனடியாகக் கருத்தைக் கவர்கின்றன. எத்தனை அமெரிக்கர்கள் புத்தி சுவாதீனத்தோடு இருக்கிறார்கள் என்று யாராவது கவலைப்படுகிறார்களா என்ன? எத்தனை அமெரிக்கர்களைத் தற்கொலையிலிருந்து காப்பாற்றியிருக்கிறார்கள் என்று கவலைப்படுகிறார்களா என்ன? அதையெல்லாம் கணக்குப் பார்ப்பதில்லை.

பத்திரிகைக்காரர்கள், பத்திரிகைகள் மற்றும் வேறு ஊடகங்களும் எதிர்மறை நிகழ்வுகளைப் பற்றியே சிந்தித்துக் கொண்டிருக்கின்றன. தவறு எதுவும் செய்யாத வரை யாரும் செய்திகளில் பேசப்படுவதில்லை.



பெர்னார்ட் ஷா சொல்வார், ''மனிதன் நாயைக் கடித்துவிட்டால் அது செய்தி. நாய் மனிதனைக் கடிப்பது செய்தியல்ல,'' என்று.

நம்ப முடியாதது எனும்போது தான் ஒன்று செய்தி யாகிறது. கண்களை உறுத்துவதாக இருப்பதுதான் செய்தி யாகிறது.

ஆயிரத்தொரு காரியங்களைச் செய்து திரிந்து கொண்டிருந்தாலும் யாரும் கவலைப்படப் போவதில்லை. ஏதோ ஒரு தவறைச் செய்து பார். இந்த உலகம் முழுவதும் உன்னைப் பார்க்க ஆரம்பித்துவிடும்.

தவிரவும் அது அதற்குக் கண் காது மூக்கு வாய் வைத்து விடுவார்கள். வதந்தி ஒருவரிடமிருந்து இன்னொருவருக்குப் போகும்போது கொஞ்சம் சேர்த்துக் கொண்டுதான் போகிறது. அதைக் கேட்டவன் இன்னொருவனிடம் சொல்லும்போது கேட்டதை மட்டுமா சொல்லப் போகிறான்? புதிதாக ஒரு வண்ணம் பூசி, கொஞ்சம் ஆழ, அகல, நீளப்படுத்திச் சொல்லப் போகிறான். கவர்ச்சியானதாக்குகிறானோ இல்லையோ மிகைப்படுத்திவிடுவான். இப்படியே ஒருவரிடமிருந்து மற்றவருக்கு என்று போகும் வதந்தி.

வதந்திகளுக்கென்றே பரவ ஒரு வழி இருக்கிறது. ஒவ்வொருவனும் கூட்டிக் கொண்டேதான் போவான். உண்மைக்கு அங்கே இடமே இல்லை. அப்படித்தான் நடக்கிறது. அப்படித்தான் தொடர்கிறது. நான் போய் விடுவேன். வதந்திகளோ போய்க் கொண்டே இருக்கும். தமக்கென ஒரு வழியை நிர்ணயித்துக் கொண்டு அவை போய்க் கொண்டேதானிருக்கும்.



நான் கேள்விப்பட்ட ஒன்று.

கடவுளுக்கு ஒரு நாள் கொஞ்சம் ஆசை வந்துவிட்டதாம். ஸெயிண்ட் பீட்டர், பூமிக்குப் போய் ஒரு கிரேக்கப் பெண்ணோடு சல்லாபம் செய்யலாமே என்று யோசனை சொன்னாராம். அன்னப்பறவை போல உடை உடுத்திய கிரேக்கப் பெண்.

கடவுள் சொன்னாராம்:

''கிரேக்கப் பெண்களோடு நிறுத்திக் கொண்டிருந்தவரை பிரச்சினையில்லாமல் இருந்தது. ஆனால் இரண்டாயிரம் வருடத்துக்கு முன்னால் அந்த யூதப் பெண்ணைத் தொட்டதிலிருந்து வம்புதான். இன்னும் அதைப் பற்றிப் பேசிக் கொண்டிருந்தார்களோ, தொலைந்தேன்.''

வதந்திகள் போய்க் கொண்டேதானிருக்கும். என்னை அவர்கள் நடத்தும் முறையில் அசாதாரணம் எதுவுமில்லை. எதிர்ப்பார்த்ததுதான். இயேசுவுக்கு, சாக்ரட்டிஸுக்கு, மன்சூருக்கு, புத்தருக்கு, கபீருக்கு என்று எல்லாருக்குமே இதைத்தானே செய்து கொண்டிருந்திருக்கிறார்கள்.

இவர்கள் அப்படி எதுவும் செய்யவில்லையென்றால் அதுதான் அசாதாரணம். இப்படியெல்லாம் செய்யவில்லை யென்றால் எனக்கும் அவ்வளவாகச் சுவாரசியம் இருக்காது. என்னையும் புத்தர்களோடு சேர்த்து வைத்து எண்ண வேண்டும். அதற்கு இதுதான் சுலபமான வழி.

இயேசு பூமிக்குத் திரும்புவதாக முடிவெடுத்தாராம். அமெரிக்காவில் இயேசு இயக்கம் மும்முரமாக இருப்பதைப் பார்த்ததால் வந்த வினை. அதுவுமில்லாமல் பேப்டிஸ்டுகள் (ஞான முழுக்குத் தருபவர்கள்), ஒரு முறை பிறந்தவர்கள்



இயக்கத்தைப் பிரமாதமாக நடத்திக் கொண்டிருந் தார்கள். தன்னோடு பீட்டரையும் அழைத்து வந்தார்.

பூமிக்கு வந்தவுடன் தான்தான் இயேசு, கடவுளின் மகன் என்று பிரகடனப்படுத்திக் கொண்டார். யாரும் நம்பத் தயாராயில்லை. பைத்தியம் என்று நினைத்துக் கொண்டார்கள். எனவே பீட்டரிடம் எப்படி மக்களை நம்ப வைப்பது என்று யோசனை கேட்டார். தான்தான் அவர்களை ஈடேற்ற வந்திருப்பவர் என்று எப்படி நம்ப வைப்பது?

பீட்டரோ, ''கலிலியில் செய்த தந்திரம் நினைவிருக் கிறதா? தண்ணீர் மேல் நடந்து காண்பிக்க வேண்டியதுதான்!'' என்றார்.

எனவே அடுத்த நாள் இயேசு தண்ணீர் மேல் நடப்பார் என்று பத்திரிகை அறிக்கை ஒன்று கொடுத்தார்கள். அடுத்த நாள் டெலிவிஷன், பத்திரிகை என்று அவர் நடக்க இருந்த குளத்தின் கரையில் ஒரே கூட்டம். இயேசுவும் பீட்டரும் படகொன்றில் ஏறி நடுக்குளத்துக்கப் போனார்கள். பிறகு இயேசு தண்ணீரில் இறங்கவும் அப்படியே உள்ளே போய் விட்டார். அவர் மேலே வந்தவுடன் பீட்டர், ''என்ன ஆச்சு? ஏன் முழுகிப்போனீர்கள்?'' என்று கேட்டார்.

''வாயை மூடு முட்டாள். முன்னே நான் இதைச் செய்தபோது என்னுடைய கால்களில் ஓட்டைகள் இல்லையே'' என்றாராம்.

இயேசு, புத்தர் காலத்தில் இருந்ததை விடவும் இப்போது எல்லாமும் சிரமமாகிப் போய்விட்டது. என்றாலும் எனக்கு எல்லாமும் சரிதான். ஸரீன், கவலைப்படாதே. எல்லாவற்றையும் அனுபவி என்றுதான் சொல்வேன்.

"உண்மைக்குப் புறம்பாக இருப்பதைப் பார்க்கும்போது எனக்குக் கோபம் கோபமாக வருகிறது,'' என்கிறாய்.



கோபப்பட வேண்டாம். அதனால் எந்தப் பயனும் இல்லை. முட்டாள்தனங்களின் வேகம் கூடக் கூட அதை என் மக்கள் ரசித்துப் பார்க்க வேண்டுமென்கிறேன். என்னுடைய காரியம் சிறக்கச் சிறக்க முட்டாள்தனமான வதந்திகள் கூடிக்கொண்டேதான் போகும். உண்மைக்கும் அவற்றுக்கும் எந்தச் சம்பந்தமும் இருக்காது. அப்படியே கொஞ்ச நஞ்ச உண்மை இருந்தாலும் அதுவும் திரித்துச் சொல்லப்பட்டிருக்கும்.

இன்னும் பலவிதமான கதைகளைக் கண்டுபிடிக்கத்தான் போகிறார்கள். கோபப்பட்டால் அவர்களுக்குத்தான் லாபம். அதைத்தான் அவர்கள் எதிர்பார்க்கிறார்கள். என்னிடம் இருப்பவர்கள் கோபப்பட்டு அந்தக் கோபத்தைக் காட்டவும் ஆரம்பித்தால், அதுவே சாக்காகக் கொண்டு அவர்களை அடக்கிவைத்து விடலாம் அல்லவா? அடக்கி வைக்க முடியும் அவர்களால். சிதைத்துவிடவும் முடியும் அவர்களால். நம்மோடு இருப்பவர்கள் எண்ணிக்கையில் குறைந்தவர்கள்தானே, என்னதான் பொறுக்கி எடுத்தவர்களாக இருந்தாலும்.

கோபப்படாதே. அப்படிக் கோபப்பட்டு அவர்கள் விரித்த வலையில் விழுந்துவிடக் கூடாது. இதைப் பற்றியெல்லாம் தெரியவரும்போது வாய்விட்டுச் சிரித்துவிடு. சிரிக்கக் கற்றுக் கொள். சிரிப்பே உன் பதிலாக இருக்கட்டும். நீ சிரிக்கச் சிரிக்க அவர்கள் முட்டாள்தனமாக இருப்பதாக நினைத்துக் கொள்வார்கள். எனக்கு எதிராக யாராவது ஏதாவது சொன்னால் வாய்விட்டுச் சிரி. முதுகில் தட்டிக் கொடுத்துக் கட்டி அணை. நல்ல முத்தமொன்றும் கொடுத்துவிடு.

இயேசு சொன்னதும் அதுதான். எதிரிகளை நேசி. என்றாலும் நேசிப்பது பக்கத்து வீட்டுக்காரனை நேசிப்பதை

விடச் சுலபம் என்பது எனக்குத் தெரியும். அதனால் இயேசு சொல்வதைப் போல உன் பக்கத்து வீட்டுக்காரனையே நேசி. எல்லாரும் ஒன்றுதான்.



கட்டிப்பிடி. வெறுமனே ஆத்மார்த்தமான அன்பு மட்டும் செலுத்தாதே. அன்பை வெளியே காண்பி. என்னைப் பற்றி முட்டாள்தனமாக யாராவது சொல்லும் போது அன்பைக் காண்பி. அவன் குழம்பித் தவிக்கட்டும். நான் முட்டாளா அல்லது அவன் முட்டாளா என்று. அவனுக்கும் விடை தெரியப் போவதே இல்லை. என்ன நடக்கிறது? ஏன் கட்டிப் பிடிக்கிறான்?

அவன் குருவைப் பற்றி அப்படி ஒன்றும் நல்லது சொல்லவில்லை என்றாலும் கட்டிப் பிடிக்கிறானே. அந்தக் குழப்பம் அவனைக் குருவைப் பார்க்க ஏங்க வைக்கும். சீடனே இப்படி என்றால் குரு எப்படியோ என்று வருவான்.

ஸரீன் கோபப்படத் தேவையேயில்லை.

''மறுத்து எழுதும் கடிதங்களைப் பிரசுரிக்க மாட்டேனென்கிறார்கள்,'' என்கிறாய்.

மாட்டார்கள்தான். பத்திரிகைகள், டெலிவிஷன் என்று எல்லாமுமே இந்தச் சுரண்டல்காரர்கள் கையில்தானே இருக்கின்றன. ஒரு பத்திரிகை, இந்து ஒருவருடைய பத்திரிகை. இன்னொன்று முகம்மதியருடையது. மற்றொன்று சமணருடையது. இன்னுமொன்றோ கிறிஸ்துவருடையது. எல்லாப் பத்திரிகைகளும் அரசில்வாதிகளுடையது. உன்னுடைய கடிதங்களைப் பிரசுரிக்க மாட்டார்கள். இதை எல்லாம் அப்படியே ஏற்றுக் கொள்ள வேண்டியதுதான்.

''இதைத் தாங்கள் பொருட்படுத்த மாட்டீர்கள் என்று தெரியும். ஒரு கன்னத்தைக் காட்டு என்று இயேசு சொன்னது இதைத்தானோ?'' என்கிறாய்.



ஆமாம், இயேசு சொன்னது அதுதான். மக்களை மாற்றுவதற்கு அதுதான் மிகச் சிறந்த வழி. உன்னுடைய வழிக்கு மக்களைத் திருப்ப மிகச் சிறந்த வழி மறு கன்னத்தைக். காட்டுவதுதான். அவர்களை நேசி. அவர்களுடைய முட்டாள்தனத்தைக் கண்டு சிரி. அவர்களுடைய வதந்திகளை ரசி. அவற்றைக் கொண்டு வேடிக்கைத் துணுக்குகள் சொல். அவர்களை குழப்பமடைய வை.

இதைச் செய்ய முடியுமானால், ஸரீன், என்னுடைய காரியம் பலிதமாகும்.

இன்றைக்கு இது போதுமே.





மெய்யைப் பொய்யெனவும்
பொய்யை மெய்யெனவும்
கொள்பவன் இழப்பது
தன் நெஞ்சுதான்.
அவன் ஆசையால் தன்னை
நிரப்பிக் கொள்பவன்.

பொய்யைப் பொய்யெனக் கொள்.
மெய்யை மெய்யெனக் கொள்.
நெஞ்சகத்தை நோக்கு.
இயல்பைக் கைக்கொள்.

பிரதிபலிக்காத மனம்
ஓட்டைக் கூரை வீடு.
உணர்வெனும் மழை வெள்ளம்
நிரப்பிவிடும் வீடு.
ஓட்டையில்லாக் கூரையே
வீட்டைப் புகலிடமாக்கும்.

களங்கப்பட்ட எண்ணங்களைத்
தொடர்வோன்
இங்கும் அங்கும் காண்பது துயரமே.



உணர்வதற்கு உள்ளது
தவறுகளே எனில்
இவ்வுலகிலும் அவ்வுலகிலும்
பெறுவது பெரும் துயரே.

ஆயின்
நெறிவழிச் செல்வோன்
இங்கும் அங்கும்
காண்பது ஆனந்தமே.
காண்பதற்கு உள்ளது
நலனே எனில்
இவ்வுலகிலும் அவ்வுலகிலும்
பெரும் கொண்டாட்டமே.

இவ்வுலகில் பெரும்பயன்
அவ்வுலகிலோ இன்னும் பெரும்பயன்.
என்னதான் சாத்திரங்கள் படித்தாலும்
என்னதான் சாத்திரங்கள் பேசினாலும்
கடைப்பிடிக்காத சூத்திரத்தின் பயனென்ன?

பிறன் மந்தை ஆடுகளை
எண்ணிக் கொண்டு
தன் வழியை மறந்த இடையனோ நீ?

கொஞ்சமே படி.
கொஞ்சமே பேசு.
ஆயின் நெறிவழி நட.

உணர்ச்சி வெறுப்பு மூடம் -
பழையன அவை. விட்டு விலகு.
மெய்யை உணர். நிம்மதி காண்.
காட்டிய நெறியைக் கைக்கொள்.



**மெய்** யென்பது இருப்பது. அதைக் கண்டு பிடிக்க வேண்டிய அவசியம் ஏதுமில்லை. அதைக் காணலாம்.

புதிதாகக் கண்டுபிடிக்க வேண்டியதில்லை. எனில் அப்படிக் காணத் தடையாவது எது? நமக்குச் சொல்லித் தந்திருப்பதெல்லாம் பொய்கள்தானே. மலையளவு பொய்கள். அவையே மெய்யைப் பொய்யாக்கிக் காட்டுகின்றன. எது இருக்கிறதோ அதைப் பற்றிச் சிந்திக்க நமது நெஞ்சைத் தடுக்கின்றன.

மெய்யானது தர்க்க வாத முடிவுகள் பாற்பட்டதல்ல. மெய் என்பது இருத்தல். ஓர் எதார்த்தம். ஏற்கெனவே இருப்பது. என்றும் இருந்து கொண்டேயிருப்பது. மெய் மட்டுமே இருக்கிறது.

பிறகு ஏன் நாம் அதைக் காணமுடிவதில்லை? அது எப்படி அதைக் காணாமல் இருப்பது நமக்குச் சாத்தியமாகிறது? சிறு குழந்தையாயிருந்த போதிருந்தே பொய்யும், வெறுப்பும், கோட்பாடுகளும், மதங்களும், தத்துவங்களும் எனப் பொய்ம்மையே போதித்துவிட்டதால் அவை நம்மை திசை திருப்பி விட்டுவிட்டன.

மெய் என்பது ஓர் எண்ணமல்ல. அதைக் காண ஒருவன் இந்துவாகவோ, கிறிஸ்துவனாகவோ, முகம்மதி யானாகவோ இருக்க வேண்டியதில்லை.

அதிலும் இந்துவாக இருந்து விட்டாலோ அதைக் காண்பது காரிய சாத்தியமே இல்லை. மெய்யைக் காணக் கண்ணில்லாமல் போவதற்கு இந்துவாக இருப்பதே போதும். நான் ஓர் இந்து, நான் ஒரு முகம்மதியன், நான் ஒரு கிறிஸ்துவன் என்று சொல்லிக் கொள்வதற்கு என்ன பொருளென்கிறாய்? எனக்கு மெய்யைப் பற்றி ஏற்கெனவே ஒரு சில கருத்துகள் இருக்கின்றன என்பதுதான்.



பைபிளிலிருந்தோ, குரானிலிருந்தோ, கீதை யிலிருந்தோ எப்படியோ ஏற்கெனவே மெய்யைப் பற்றி எனக்குத் தெரியும் என்பதுதான்.

தெரியும் என்ற அந்த நினைப்பே தீர்க்க வேண்டிய ஒரு பிரச்சினை.

மெய்யைப் பற்றிய உன் கற்பிதங்களை விட்டுவிடும் போது மெய்யை எதிர்கொள்ள வருகிறாய். உனக்குள்ளி ருப்பதும் புறத்தேயிருப்பதுமான மெய்யைத்தான். வேறெதுவும் இல்லையென்பதால் அதை நேர் எதிர்கொள்வாய்.

ஆனால் பெற்றோர், சமுதாயம், நாடு, மதம், கல்வி முறை, அனைத்தும் பொய்களைச் சார்ந்தே இருக்கின்றன. குழந்தை பிறந்தவுடனே அந்தப் பொய்கள் அவனைச் சூழ்ந்து கொண்டு தமது பொறிக்குள் சிக்க வைத்து விடுகின்றன.

குழந்தை பாவம் என்ன செய்ய முடியும்? பெற்றோர்களைச் சார்ந்தேயிருக்க வேண்டியிருப்பதால் அவர்களிடமிருந்து விலகிப் போக முடிவதில்லை. இப்படிச் சார்ந்திருக்க வேண்டிய நிலையே கால காலத்துக்கும் பொய்களுக்குச் சாதகமாகிப் போய்விடுகிறது.

குழந்தைகள்தான் இதில் மிக அதிகமாகப் பாதிக்கப் படுகிறவர்கள். தொழிலாள வர்க்கம், பெண்கள் என்று யாருமே களங்கமற்ற இந்தக் குழந்தைகள் அளவுக்கு மோசமாகச் சிதைக்கப்படவில்லை. சார்ந்தேயிருந்து தீரவேண்டிய வகையற்ற குழந்தைகளுக்கு சொல்லிக் கொடுத்ததையெல்லாம் கற்றுக்கொள்வதைத் தவிர வேறு வழியில்லாமல் போகிறது. அவர்கள் மீது திணிக்கும் எல்லாப் பொய்களையும் ஏற்றுக் கொண்டாக வேண்டியிருக்கிறது.



இல்லாவிட்டால் பிழைத்திருக்க முடியாது. பிழைப்பதற்குப் பிறரைச் சார்ந்திருக்க வேண்டியிருக்கிறதே. வாழ்வா சாவா என்ற கேள்விதான். இந்துக்களாக இருந்து தொலைக்க வேண்டியிருக்கிறது. முகம்மதியர்களாக இருந்து தொலைக்க வேண்டியிருக்கிறது. கிறிஸ்துவர்களாக இருந்து தொலைக்க வேண்டியிருக்கிறது. அவர்களது மனதில் எதையெதையெல்லாம் திணிக்க விரும்புகிறாயோ அத்தனையையும் திணித்துக் கொண்டே இருக்க முடிகிறது.

அவர்களை மேலும் துடிப்புடையவர்களாக, விழித்துக் கொண்டவர்களாக, சிந்தனையுடையவர்களாக ஆக்குவதை விடுத்து, தெளிந்த கண்ணாடியைப் போலப் பிரதிபலிக்க வைப்பதற்குப் பதிலாக எண்ணங்களைத் திணித்து, ஒன்றுக்கு மேல் ஒன்றாகத் தூசிப் படலங்களைப் பூசி விடுகிறார்கள்.

விளைவு? இருப்பதைப் பார்க்க முடியாமல் போகிறது. இல்லாத திரிபுகளைக் கண்டு உள்ளதைப் பார்ப்பதை நிறுத்தி விடுகிறார்கள்.

எனவே மெய்யாலுமே ஆன்மீகவாதியாக இருப்பதென்பது ஒரு மறுபிறப்பெடுப்பது. இன்னுமொரு முறை குழந்தையாகிவிடுவது. சமுதாயம் உனக்குத் தந்திருப்பதையெல்லாம் கழித்துவிட்டுக் குழந்தையாகிப் போவது.

ஆன்மிகம் ஒரு புரட்சி. உன்மீது திணிக்கப்படும் அனைத்தையும் எதிர்த்து வெடிக்கும் புரட்சி. உன்னை ஒரு கம்ப்யூட்டராகச் சிறுத்துப் போக வைக்கும் முயற்சியை எதிர்த்த புரட்சி. உள் நோக்கி உன் கண்களைத் திருப்பு.

உனக்குத் தெரிந்ததெல்லாம் பிறர் உனக்குச் சொல்லிப் போனதுதான். அது நீயாகத் தெரிந்து கொண்ட அசலான அறிவு அல்ல. உன்னுடையதே அல்ல எனும்போது அது எப்படி அசலானதாக முடியும்? நீ அதற்கெல்லாம் ஒரு சாட்சி. சூழ்நிலைக்கு இரையாகிப் போனவன். அவ்வளவே.



இந்தியாவில் பிறந்திருப்பதோ இங்கிலாந்தில் பிறந்திருப்பதோ ஒரு தற்செயல். இந்துக் குடும்ப மொன்றிலோ கிறிஸ்துவக் குடும்பமொன்றிலோ பிறந்திருப்பது ஒரு விபத்து. இந்த விபத்துக்களால் உன்னுடைய அடிப்படை இயல்புகளை இழந்துவிட்டாய். அவற்றை இழக்க உன்னைக் கட்டாயப்படுத்தி விட்டார்கள்.

இழந்ததை மீண்டும் பெற வேண்டுமா? மறுபடி பிறக்க வேண்டியது தான்.

இயேசு நிகோடெமஸிடம், ''நீ மறுபடி பிறக்கவில்லை யென்றால் கடவுளின் ராச்சியத்துக்குள் நுழைய முடியாது,'' என்று சொன்னது அதனால்தான். தற்கொலை செய்து கொண்டு மீண்டும் பிறக்க வேண்டுமென்கிறாரா? இல்லை இல்லை. அப்படியானால் நடந்ததுதான் மீண்டும் நடக்கப் போகிறது. ஏதோ பெற்றோருக்கு ஏதோ ஒரு சமூகத்தில் ஏதோ ஒரு மதத்தில் மீண்டும் அதே முட்டாள்தனத்துக்கு உன்னை ஆட்படுத்தப் போகிறார்கள். அவ்வளவே.

மறுபடி பிறப்பதென்பது இயேசுவைப் பொறுத்த அளவில் உனக்குச் சொல்லிக் கொடுத்திருப்பதை எல்லாவற்றையும் தன்முனைப்போடு, உணர்வோடு கிழித்துப் போடுவது. அறிந்ததை அழித்துவிடு. களங்கமில்லாத வனாகிவிடு. அதைத் தவிரக் களங்கத்தைப் போக்கிக் கொள்ள வேறு வழியேயில்லை.

அறிவே ஒரு மாசு. எதையும் அறிந்து கொள்ளாமல் இருப்பதே களங்கமில்லாதிருப்பது. அப்படி இருந்துகொண்டு வாழ்வதே மெய்யைப் புரிந்து கொள்வதற்கான ஒரே வழி.

கீழ்க்கண்ட கௌதம புத்தரின் சூத்திரங்களை மனதில் நிறுத்து. அவை மிகவும் முக்கியமானவை.



'மெய்யைப் பொய்யென்றும்
பொய்யை மெய்யென்றும்
கொள்பவன் இழப்பது
தன் நெஞ்சுதான்.
அவன் ஆசையால் தன்னை
நிரப்பிக் கொள்பவன்.'

மனம் என்பது ஆசையேயன்றி வேறில்லை. நெஞ்சில் ஆசைகள் இல்லை. எல்லா ஆசைகளும் நினைவகத்தைச் சேர்ந்தவை என்பதைக் கேட்க உனக்கு ஆச்சரியமாகத்தான் இருக்கும். நெஞ்சம் இந்தக் கணத்தில் வாழ்கிறது. அதன் துடிப்பு இந்தக் கணத்துக்கானது. கடந்து போனது எதுவும் நெஞ்சத்துக்குப் பொருட்டில்லை. வருவது எதுவும் பொருட் டில்லை. அது இப்போது, இங்கே, எப்போதும் இருப்பது.

அப்படிச் சொல்லும்போது நான் எந்தத் தத்துவமும் போதிக்கவில்லை. ஒரு சாதாரண உண்மையைச் சாதாரண மாகச் சொல்கிறேன். உனக்குள்ளே எட்டிப் பார்த்து நான் சொன்னது உண்மைதான் என்பதைத் தெரிந்து கொள்ளலாம்.

உன்னுடைய இதயம் இப்போது துடித்துக் கொண்டிருக் கிறதா இல்லையா? கடந்த காலத்தில் அது துடிக்க முடியுமா? எதிர்காலத்தில் அது துடிக்க முடியுமா? இந்தக் கணத்துக் கெனவே துடிக்கும் இதயம்- அதனாலேயே பரிசுத்த மானதாகிறது. பழைய நினைவுகள், பட்ட அறிவு, அனுபவம், சொல்லப்பட்டதும் சொல்லிக் கொடுத்ததும், சாத்திரங்கள், சம்பிரதாயங்கள், என்று எந்த மாசும் அங்கே இல்லை. முட்டாள்தனமான அவை ஒன்றும் அதற்குத் தெரியாது. நாளை என்பதைப் பற்றியோ எதிர்காலம் பற்றியோ ஒன்றும் தெரியாது.

கடந்தது கடந்து போய்விட்டது. இனி வருவது இன்னும் வரவில்லை. எனவே அது முழுவதுமாக இங்கே இப்போதில் இருக்கிறது.



மனமோ நெஞ்சுக்கு நேர் எதிர். மனம் எப்போதுமே இங்கே இப்போதையதில் இருப்பதில்லை. கடந்த காலத்தில் பெற்ற அழகிய அனுபவங்களை அசை போட்டுக் கொண்டிருக்கிறது. அல்லது அத்தகைய அழகிய அனுபவங்களை எதிர்காலத்தில் எதிர்நோக்கிக் கற்பனையில் திளைக்கிறது.

கடந்த காலத்துக்கும் எதிர்காலத்துக்குமாக ஊசலாடிக் கொண்டு நிகழ்காலத்தில் கால் ஊன்றுவதேயில்லை. நிகழ்காலத்தைப் பற்றிய உணர்வே இருப்பதில்லை. மனதுக்கு நிகழ்காலமென்பது இல்லாமல் போய்விட்ட வொன்று. என்ன விஷயமென்று பார். நிகழ்காலம்தான் இருப்பது.

ஆனால் மனதைப் பொறுத்த அளவில் நிகழ் காலமொன்றுதான் இல்லாமல் போயிவிடுகிறது. கடந்த காலம் கழிந்து போய்விட்டது. எதிர்காலம் இன்னமும் இருக்க வராதது. ஆனால் மனத்தளவில் அவையே இருப்பதான பிரமை இருந்து கொண்டேயிருக்கிறது.

பிரச்சினையே அறிவார்ந்த மனம்தான். தீர்வு நெஞ்சகத்தில் இருக்கிறது. குழந்தை நெஞ்சத்தால் வாழ்கிறது. வளர வளர நெஞ்சத்திலிருந்து மனதுக்கான நகர்தலும் நடந்துவிடுகிறது.

பல்கலைக் கழகத்திலிருந்து ஒரு பட்டத்தோடு வெளியே வரும்போது நெஞ்சம் மறந்து போன, மரத்துப் போன விஷயமாகிவிடுகிறது. மூளையின் தாக்கத்தில் கட்டுண்டு போய் உனது சக்தியெல்லாம் அங்கேயே தங்கிவிடுகிறது. எதார்த்தம் பற்றி ஒன்றுமே தெரியாமல் போய் விடுகிறது. அறிஞனென்ற குப்பைக் கூடையாகி விடுகிறாய். பி.எச்.டியா? டி.லிட்டா? பலவற்றைத் தெரிந்து கொண்டு ஒன்றையும் அறிந்து கொள்ளாதவனாகி விடுகிறாய்.



ஏனென்கிறாயா? அறிதல் மூளையில் நடப்பதல்ல. நெஞ்சில் நிகழ்வது. பல்கலைக் கழகங்களோ நெஞ்சத்திலிருந்து மனதுக்கு உன்னை அலைக்கழித்து அழைத்துப் போகவே இருக்கின்றன.

இன்றையப் பல்கலைக் கழகங்கள் வரை அனைத்துப் பல்கலைக் கழகங்களுமே மானுடத்துக்கு எதிரிகள்தான். அவற்றின் முழுநேரத் தொழிலே அரசாங்கத்துக்கும் மதத்துக்கும் கையாளாக இருப்பதுதான். இருப்பதை அப்படியே வைத்துப் பாதுகாக்கும் முகவர்கள். சுயநல மிகளின் முகவர்கள். அவை இருப்பதும் செய்வதும் உங்களுக்காக அல்ல. அதிகாரம், எஜமானர்கள், கொடுங்கோலர்கள், சுரண்டல்காரர்கள், இவர்களுக்காகத்தான் அவை இருக்கின்றன. செயல்படுகின்றன. அதிகாரத்தில் யார் இருக்கிறார்களோ அவர்களுக்குப் பணிவிடை செய்யத்தான் பல்கலைக் கழகங்கள். மானுடத்துக்குப் பணி செய்ய அவை இன்னும் முன்வரவில்லை.

உண்மையிலேயே பல்கலைக் கழகங்கள் மானுடத்தின் சேவைக்கெனத்தான் இருக்கின்றன என்றால், அவை, புரட்சிகள் கிளம்பி வெடிக்கும் இடங்களாகத்தான் இருக்க வேண்டும். பல்கலைக் கழகங்கள் புரட்சிக்காரர்களைப் படைத்தளிக்கும். சம்பிரதாயமான கட்டுப்பெட்டிகளை வளர்த்துவிடாது. அசம்பிரதாயமான முற்போக்கு வாதிகளையே பிரசவிக்கும். ஆம். புரட்சிக்காரர்கள், தேடுதல் தீவிரமுடையவர்கள், சத்தியத்துக்காக உயிரைப் பணயம் வைப்பவர்கள். அது இன்னும் நடக்கவில்லைதான்.

கல்வி என்ற பெயரில் ஓர் அசிங்கம் அரங்கேறிக் கொண்டிருப்பதுதான் வருத்தம் தருகிறது. கல்வி என்ற அலங்கார முகப்புக்குப் பின்னால் குற்றங்களே தொடர்கின்றன. என்ன குற்றமென்கிறாயா? நெஞ்சிலிருந்து மனதுக்கு உன் சக்தி அனைத்தையும் பாயச் செய்து வற்றிப் போக விடுகிறது.



அன்பைக் காட்டும் திறனைச் சிதைத்துவிடுகிறது. தர்க்க வாதத்தைக் கைக்கொள்ளக் கட்டாயப் படுத்துகிறது. தர்க்கம் அன்பை விட முக்கியமாகி விடுகிறது. இது மாட்டை வண்டிக்குப் பின்னால் பூட்டுவதைப் போலத்தான். எல்லாம் தலைகீழ்.

அதனால்தான் மானுட சமூகத்தில் இவ்வளவு அலங் கோலங்கள். பொய் மெய்யாகத் தெரிகிறது. மெய் பொய்யாகத் தெரிகிறது. என் பார்வையைத் திரித்துவிடுவ தில் வெற்றி பெற்று விட்டார்கள். புத்தர்கள் இந்த சுயநல மிகளை எதிர்த்துத்தான் போராடிக் கொண்டிருக்கிறார்கள்.

புத்தர் சொன்னது இதுதான் :

'மெய்யைப் பொய்யெனவும்
பொய்யை மெய்யெனவும்
கொள்பவன் இழப்பது
தன் நெஞ்சு தான்.
அவன் ஆசையால் தன்னை
நிரப்பிக் கொள்பவன்.'

மனம் என்பதே ஆசை. மேலும் மேலும் ஆசையைக் கொண்டே உன்னை நிரப்பிக் கொள்கிறாய். மேலும் மேலும் சாதிக்க வேண்டும் என்ற ஆசையைக் கொண்டு. மேலும் மேலும் அதிகாரத்தையும் கௌரவத்தையும் செல்வத்தையும் நோக்கிய ஏக்கத்தைக் கொண்டு.

ஆனால் உனக்குள்ளும் இதயமொன்று துடித்துக் கொண்டிருப்பதை மறந்து விடுகிறாய். ஏற்கெனவே இறைவ னோடு இணைந்திருக்கும் இதயத்தை, ஏற்கெனவே சத்தியமாகிப் போன நித்திய நெறியோடு நிற்கும் இதயத்தை மறந்து போகிறாய்.

ஏஸ் தம்மோ ஸனந்தனோ. வற்றாத நித்திய நெறி. கடவுளோடு உன்னை இணைப்பது உன் இதயமே.



கடவுளெனும் மண்ணில் கிளை பரப்பும் வேர்கள்தான் உங்களுடைய இதயம்.

உங்களுடைய இதயங்களை இன்னமும் பாதுகாத்துக் கொண்டு இருப்பது கடவுளும் சத்தியமுமே. ஆனால் நீதான் அதில் இருப்பதில்லை. அந்த இடத்தைக் வெற்றிடமாக்கிவிட்டாய். மூளைக்குள் குடிபெயர்ந்து விட்டாய். நாளும் இரவும் மூளையாலேயே வாழ்கிறாய். அங்கிருந்து எப்போதும இறங்கி வருவதில்லை.

தூங்கும்போதும் கனவுகளுக்குப் பின் கனவுகளாக ஒவ்வொரு கனவிலும் உன் எண்ணங்களின் ஊர்வலம்தான். பகலில் எண்ணங்கள். இரவில் கனவுகள். இரண்டுக்கும் வித்தியாசமிருப்பதில்லை.

எண்ணங்களைத் தூக்கத்தின் மொழியில் பெயர்த்துத் தருவதே கனவு. எண்ணமே கனவுகளைப் பிரக்ஞையின் மொழியில் பெயர்ப்பதுதான். இரண்டுக்குமிடையே ஊசலாடிக் கொண்டு வாழ்வைக் கழிக்கிறீர்கள். இரண்டுமே ஆசையின் வடிவங்கள்.

எதை நினைத்துக் கொண்டிருக்கிறாய் என்கிறாய்? ஆசையைத் தவிர நினைத்துப்பார்க்க வேறு என்ன இருக்கிற தென்கிறாய். ஆசையைத் தவிர வேறு எதைக் கனவு காண்கிறாய்?

புத்தர், பொய் மெய்யெனத் தோன்றுகிறதென்கிறார். இதற்குக் காரணம் உன்னுடைய சத்தியத்தைப் பொய்யாக்கி விட்டதுதான். உன் இதயத்துக்குத் துரோகம் இழைத்து விட்டதுதான். திரும்ப உன் செஞ்சகத்துக்குப் போய்ச் சேர். பிறகே மெய்யை மெய்யெனக் காண்பாய். பொய்யைப் பொய்யெனக் காண்பாய். இதுதான் ஞான சித்தி என்பது. இதுதான் தன் வீட்டுக்குப் போய்ச் சேர்வதென்பது.

பொய்யைப் பொய்யெனக் கொள். ஆனால் அங்கே ஆரம்பிப்பது என்கிறாயா? பொய்யைப் பொய்யென இனம்



காண்பதோடு ஆரம்பி. அதனால்தான் புத்தர்கள் அனைவரும் எதிர்மறையாளர்களாக தோன்று கிறார்கள். அவர்கள் இல்லாமல் போக வைக் கிறார்கள். சிதைப்பவர்களாகத் தோன்றுகிறார்கள்.

இயேசு அதைத்தான் செய்தார். எப்படித் திரும்பத் திரும்ப உறுதியாகப் பேசுகிறார் பாருங்கள்: ''முன்பு உங்களுக்குச் சொல்லப்பட்டது இது. ஆனால் நான் சொல்வது இது.'' இப்படியாக நிலைப்பாட்டை முழுக்க மாற்றியமைக்கிறார்.

உதாரணத்துக்கு இதைப் பாருங்கள்: ''முன்பு உங்களுக்குச் சொல்லப்பட்டது அடிக்கு அடி என்பதே சட்டம். உன் மேல் ஒரு சிறு கல்லை எறிந்தவன் மேல் ஒரு பாறையை எடுத்து வீசு. ஆனால் நான் சொல்வதோ ஒரு கன்னத்தில் அறைந்தால் மறு கன்னத்தைக் காட்டு என்பதே. உன்னுடைய மேலங்கியை ஒருவன் எடுத்துக் கொண்டானென்றால் அவனுக்கு உன் சட்டையையும் கழட்டிக் கொடுத்துவிடு. யாராவது தன்னோடு ஒரு மைல் தூரம் வர உன்னைக் கட்டாயப்படுத்தினால் அவனோடு இரண்டு மைல் தூரம் போ.''

தன் மக்கள் பல உருவங்களையும் பல நூற்றாண்டு களாகத் தொழுது கொண்டிருந்து விட்டதாலேயே முகம்மது உருவ வழிபாட்டை எதிர்த்தார். நாளுக்கு ஒரு கடவுள் என்று அவர்களுக்கு முன்னூற்று அறுபத்தைந்து கடவுளர் இருந்தார்கள். முகம்மது நபி காலத்தில் காபா உலகத்திலேயே பிரமாதமான கோயிலாக இருந்தது, முன்னூற்று அறுபத்தைந்து மூர்த்திகளோடு. முகம்மது நபி அனைத்தை யும் உடைத்தெறிந்தார். இது எதிர்மறைப் பாங்காகத் தெரிகிறதுதான்.

புத்தர் சொல்வதைக் கேளுங்கள்: வேதங்களிலும் உபநிடதங்களிலும் எந்த உண்மையுமில்லை. அழகிய வார்த்தைகளைக் காணும்போது கவனமாயிருங்கள்.



தத்துவார்த்தமான வாதங்களை கவனமாகக் கவனியுங்கள். நுண்மையான தர்க்கத்தில் உன் நேரத்தை வீணடிக்காதே. மோனம் கைக்கொள். வேதங்களை உன் மூளையிலிருந்து கடாசி எறிந்துவிடு. அப்போதுதான் மோனம் சாத்தியப்படும்.

இப்படிச் சொல்வதால் புத்தர் எதிர்மறைவாதியாகத் தோன்றுகிறார். இயக்கத்தை முடக்குபவராகத் தெரிகிறார். ஆனல் அப்படித் தவிர வேறு எப்படியும் உங்களுக்கு அவர் உதவ முடியாது.

பொய்யைப் பொய்யெனக் காட்ட வேண்டியிருக்கிறது. இதுவுமில்லை அதுவுமில்லை என்று ஆரம்பிக்க வேண்டியிருக்கிறது. இது பொய். அதுவும் பொய் என்று குரு உனக்குச் சொல்ல வேண்டியிருக்கிறது. முதலில் எதுவெதுவெல்லாம் பொய்யோ அனைத்தையும் அடையாளம் கண்டுகொள்ளும்போது உன்னுடைய உணர்வுகளில் ஒரு மாற்றம் நிகழ்கிறது. பொய்யைத் தெரிந்துகொள்ள வரும்போது உண்மையைத் தெரிந்து கொள்கிறாய்.

இதுதான் சத்தியம் என்று உனக்குச் சொல்லித்தர முடியாது. ஆனால் இது மெய்யல்ல என்பதைச் சொல்லித்தர முடியும். உனக்கொரு வார்ப்புருவைத் தத்துவிட்டார்கள். அந்த வார்ப்புருவைச் சிதைக்க வேண்டியிருக்கிறது.

இந்து, முகம்மதியன், கிறிஸ்துவன், சமணன் என்று மனமயக்கத்துக்கு ஆட்பட்டு விட்டீர்கள். அந்த மன மயக்கத்தை நீக்குவதே குருவின் பணி. மனமயக்கத்தை விட்டு நீங்கும்போது சத்தியத்தைக் காண முடிகிறது. சத்தியத்தை யாரும் போதிக்க வேண்டியதில்லை.

'பொய்யைப் பொய்யெனக் கொள்
மெய்யை மெய்யெனக் கொள்
நெஞ்சகத்தை நோக்கு
இயல்பைக் கைக்கொள்.'



மிக முக்கியமான சேதிகளில் ஒன்று நெஞ்சகத்தை நோக்கு, இயல்பைக் கைக் கொள் என்பதாகும். சாத்திரங்களின் படி நடந்து கொள்ளச் சொல்லவில்லை. தன்னைப் பின்பற்ற அழைக்கவில்லை. ஏதோ ஒரு சில நன்னடத்தை விதிகளைக் கடைப்பிடிக்கச் சொல்லவில்லை. எந்த ஒழுக்க நெறியையும் போதிக்கவில்லை. உனக்கென ஒரு குணாதிசயம்கொண்ட பாத்திரத்தைப் படைத்துக் கொள்ளச் சொல்லவில்லை.

குணாதிசயங்கள் பாற்பட்ட எந்த ஒரு பாத்திரமும் ஓர் அழகிய சிறைக் கொட்டடி என்பது அவருக்குத் தெரியும். ஒரு வாழ்வு நெறியை வகுக்கவில்லை. உன்னுடைய இயல்பைக் கைக்கொள்ளத் தைரியம் ஊட்டுகிறார். ஊக்குவிக்கிறார். உன்னுடைய இதயத் துடிப்பைக் கேட்டு அதன் வழி போகத் தேவையான தைரியம் உனக்கிருக்க வேண்டும் என்பதுதான் அவர் விருப்பம்.

உன் இயல்பைக் கைக்கொள் என்பதற்கு உன்னோடேயே இயைந்து பிரவாகிக்க வேண்டும் என்பது பொருள். நீயே ஒரு சாத்திரம். உன்னுடைய அடி ஆழத்தில் நிச்சலனமான மெல்லிய குரல் ஒலித்துக் கொண்டிருக்கிறது. மௌனத்தில் அந்தக் குரலைக் கேட்கும்போது அங்கிருந்து உனக்கு ஒரு வழி பிறக்கும்.

குருவானவர் உனக்குள்ளிருக்கும் குருவைத் தெரிந்து கொள்ள உதவுகிறவர். அதைச் செய்துவிட்டால் அவருடைய பணி முடிந்துவிடுகிறது. அதன் பின் நீ நீயாக இருக்க விட்டுவிட்டுப் போய்விடுவார். உன்னை உனக்கே அளித்துவிட்டுத் தான் விலகிப் போய்விடுகிறார்.

குருவின் பணி சீடனை அடிமைப்படுத்துவதல்ல. சீடனைச் சுதந்திரமானவனாக்குவது. ஒட்டு மொத்தச் சுதந்திரத்தை அவனுக்குத் தருவது. இயல்பைக் கைக்கொள்வதே சுதந்திரம் பெறுவதற்கான ஒரே வழி. இயல்பு என்பதையே தம்மா என்று கொள்கிறார் புத்தர்.



பள்ளத்தை நோக்கிப் பாய்வது நீரின் இயல்பு. உயர எழுவது சுவாலையின் இயல்பு. அப்படியே உனக்கென ஓர் இயல்பு உனக்குள் மறைந்திருக் கிறது. உனக்குப் பழக்கமாகிப் போன சமூகக் காரணிகள் பலவும் உன்னை விட்டு விலகுமானால், திடீரென ஒருநாள் உன் இயல்பைக் கண்டு கொள்வாய். உன்னுடைய இயல்பே கடவுளாகிறது. ஏஸ் தம்மோ ஸந்தனோ. அதுதான் நித்தியமான வற்றிப் போகாத விதி. உன்னுடைய இயல்பே கடவுளாகிப் போவதுதான்.

மனிதன் ஒவ்வொருவனும் கடவுளாகும் சாத்திய முடையவன். ஒரு போதிசத்துவர். மனிதன் கடவுளாக வேண்டும் என்பது விதி. அதைவிடக் குறைந்தது எதிலும் திருப்தியில்லை. பயனுமில்லை.

என்னதான் உலகத்தின் அதிகாரம் அனைத்தும், சொத்து முழுவதும், கௌரவம் பூராவும் உன்னுடையதே என்றாலும் உன் தெய்விக இயல்பு மலரவில்லையென்றால், மொட்டு நெகிழவில்லையென்றால், நீ ஒரு தாமரையாக, ஆயிரம் இதழ் கொண்ட தாமரையாக ஆகவில்லையானால் உனக்குள் இருக்கப்போவது வெறுமைதான். உன்னுடைய மெய்யான அடையாளம் விளங்கத் தோன்றவில்லையென்றால் திருப்தி அடையவே முடியாது.

சாதாரண ஆன்மிக வாழ்வைப் போதிப்பவர் என்ன இருக்கிறதோ அதில் திருப்தியைக் காணவேண்டம் என்பார். திருப்தியடைந்த மனத்தனாக இரு என்றுதான் எல்லா ஞானிகளும் போதிக்கிறார்கள். திருப்தி என்பது அவர்களுடைய அடிப்படை போதனைகளில் ஒன்று. ஆனால் உண்மையான குருவின் பாதை அதிலில்லை.

உண்மையான குருவானவர் உனக்குள் அதிருப்தியைக் கிளப்பிவிடுகிறார். உலகத்தைச் சார்ந்த எதுவுமே



திருப்திப்படுத்த முடியாத அதிருப்தி அது. அனைத்தையும் கடந்ததைச் சென்று சேரும் வரைக்கும் உன்னைச் சுடர்விட்டு எரிந்து கொண்டிருக்க வைக்கும் ஏக்கம் அது.

வாழ்வின் கணங்கள் நழுவிக் கொண்டே இருக்கின்றன. நழுவிப் போன எந்தக் கணத்தையும் மீட்டுக் கொள்ள முடியாது. கடவுளை இன்னும் நீ அடைய முடியவில்லை எனும்போதே, இன்னுமொரு நாள் கடந்துவிட்டதே என்ற வலியையும், துயரையும், உண்மையான குரு உன்னை அறிய வைக்கிறார்.

அப்படி ஓர் ஆழ்ந்த ஏக்கத்தை, இதயத்தில் ஒரு வலியைத் தோற்றுவிப்பவரே மெய்யான குருவாகிறார். கண்களில் நீர் திரையிட அந்த அதிருப்தியே உங்களை இளக வைக்கும். அந்த அதிருப்தியே உங்களைப் பிரபஞ்சம் தாண்ட வைக்கும். தெரியாததை நோக்கிய பிரபஞ்சத் தாண்டல்.

அந்த அதிருப்தியே உங்களுடைய சக்தி. அனைத்தையும் ஒருங்கு திரள வைக்கும். எதையும் பணயம் வைக்கத் தூண்டும். நீ யார் என்று தெரிந்து கொள்ள மேற்கொள்ளும் முடிந்த பயணத்தை மேற்கொள்ள வைக்கும்.

இயல்பைக் கைக்கொள். இயல்பே பிரக்ஞை. ஆனால் இந்தப் பூசாரிகளோ இந்தச் சட்டதிட்டங்களின்படி நடந்து கொள், பத்து கட்டளைகளுக்குக் கீழ்ப்படிந்து நட, என்று சொல்வதன்றி, உன் இயல்பின்படி நடந்து கொள் என்று சொல்வதேயில்லை. பூசாரிகளுக்கு உன் இயல்பைக் கண்டு பயம். உன்னுடைய இயல்பின்படி நடந்து கொண்டால் அவர்களுடைய பிடிக்குள் இருக்க மாட்டாய். அவர்களுக்கு அடிமையாக இருக்க மாட்டாய். தேவாலயங்களுக்கும்



கோயில்களுக்கும் மசூதிகளுக்கும் போய் முட்டாள்தனமான பூசாரிகளின், அரசியல் வாதிகளின், தலைவர்கள் எனப்படுவோரின் பேச்சைக் காது கொடுத்துக் கேட்க மாட்டாய்.

தலைவர்கள் எனப்படுவோர் என்று ஏன் சொன்னேன் தெரியுமா?

அவர்கள் குருடர்கள். ஒரு குருடன் பிற குருடர்களை நடத்திப் போவதைப் போலத்தான் அவர்கள் தலைவர்களாக இருப்பது.

உன்னுடைய இயல்பின் பேச்சைக் கேட்க ஆரம்பித்துவிட்டால் அவர்களுடைய பேச்சைக் கேட்க மாட்டாய். உன்னுடைய உட்குரல் உன் காதுகளில் ஒலிக்க ஆரம்பித்துவிட்டால் நீ விடுபட்டுவிடுவாய்.

அதனால்தான் உன் உட்குரலை நசுக்குகிறார்கள். முழுக்கச் சிதைக்கிறார்கள். முடியவில்லை என்றால் குறைந்தது தெளிவற்றுப் போகுமாறு செய்து கேட்டாலும் புரியாமல் போகுமாறு செய்கிறார்கள். இதில் அவர்களுக்கு வெற்றிதான். அவர்களுடைய முயற்சியை எதிர்த்துக் கடுமையாகப் பாடுபடாவிட்டால் நீ வெல்வது சாத்தியமில்லை.

பலகாலமாகவே அவர்கள் ஏய்த்துக் கொண்டிருந்து விட்டார்கள். அவர்களுடைய அடக்குமுறை பல்லாண்டு மூத்தது. அவர்களுடைய தந்திரங்களும் சாதுரியமானவை. தவிரவும் அவர்களிடம் இருக்கும் அதிகாரத்துக்கும் வரம்பில்லை. தனியொருவனான நீ எம்மாத்திரம்?

ஆனால் உன் நெஞ்சுக்குள்ளே நுழைந்து உன் இதயத் துடிப்பை உன்னால் கேட்க முடியுமென்கிறபோது, இந்த உலகத்தின் எந்த அதிகாரமும் உன்னை இன்னொரு முறை அடிமைப்படுத்திவிட முடியாது.



இயல்பைக் கைக்கொள் என்றேன். இயல்பு இன்னதெனத் தெரியாத வரை அதை எப்படிக் கைக் கொள்வது? அதைத் தெரிந்து கொள்ளத்தான் விடுவதில்லையே. என்ன செய்ய வேண்டும் என்பதற்குக் கட்டளைகள் தான் பல போடுகிறார்களே. எதைச் சாப்பிடுவது, எப்போது தூங்கி எழுவது, எப்போது படுக்கப் போவது என்று எல்லாவற்றையும் வரையறுத்து வைத்திருக்கிறார்கள். அவற்றின்படி நடந்து கொண்டால் அடிமையாகிவிடுகிறாய். அப்படி நடந்து கொள்ள வில்லையா, குற்றவாளி ஆகிவிடுகிறாய்.

அப்படியே நடந்து கொண்டால் நீ ஒரு ஞானி. ஆனால் அடிமை. பிறர் உன்னைப் போற்றுவார்கள். மரியாதை காட்டுவார்கள். ஆனால் அத்தனை மரியாதையும் உங்களுக்குள் செய்து கொண்ட ஓர் ஒப்பந்தம் தான். ''நாங்கள் சொல்கிறபடி நடந்து கொண்டால் உனக்கு மரியாதை. இல்லையேல் சிறைவாசம்.''

ஆத்மாவை ஒப்புக் கொடுத்துவிட வேண்டும். அல்லது உடலளவில் சிறைக்குள் கிடக்க வேண்டும். இவற்றில் ஒன்றையே தேர்வு செய்ய வேண்டிய கட்டாயத்தில் சமூகம் உன்னைத் தள்ளிவிடுகிறது. ஆனால் கடவுள் இருந்து கொண்டு பேசும் ஒரு மூலாதாரம் உனக்குள் இருக்கிறது. அதுவே உன்னை நெறிப்படுத்தும் என்பதைத் தெரிந்து கொள்ள உன்னை விடுவதேயில்லை.

கடவுள் பேசிக் கொண்டேதானிருக்கிறார். அவருக்கு எந்தப் பாரபட்சமும் இல்லை. முகம்மது அல்லது மோஸஸிடம்தான் பேசுவேன் என்பதில்லை. உன்னோடு பேசமாட்டார் என்பதில்லை. முகம்மதுவிடமும் மோஸஸிடமும் பேசியதைப் போலவே உன்னிடமும் பேசிக் கொண்டுதானிருக்கிறார். ஒரே வித்தியாசம் என்னவென்றால், கடவுள் சென்று சேர்வதற்குத் தயாராக



முகம்மது இருந்தார். நீ இன்னமும் அதற்குத் தயாராகவில்லை.

உன்னுடைய உள்ளியல்பு உன்னை வந்தடைவதற்குத் தயாராக இருப்பதையே தியானம் என்கிறேன்.

குணாதிசயம், பிரக்ஞை ஆகிய இரண்டு வார்த்தைகளை மனதில் நிறுத்து. குணாதிசயம் என்பது அரசியல்வாதிகளும் பூசாரிகளும் உனக்கெதிராகச் சதி செய்து கற்பித்துவிட்டது.

பிரக்ஞையோ உன் இயல்பு. பிரக்ஞையுடையவனுக்கும் ஒரு குறிப்பிட்ட குணாதிசயம் இருக்கிறது. ஆனால் அது அவனுடைய இயல்புகளிடமிருந்து தோன்றி வருவது. வேறு யாரும் அவன் மீது திணிப்பதல்ல. அவனுடைய தீர்மானமாக வெளிப்படுவது. அதற்குள் அவன் சிறைப்பட்டுப் போவதில்லை. அதை எப்போது வேண்டுமானாலும் மாற்றியமைத்துக் கொள்ள அவனுக்குச் சுதந்திரம் இருக்கிறது. சூழ்நிலை மாறும்போது பிரக்ஞை ஒருவனுக்கு வெவ்வேறு திசைகளைக் காண்பித்து அவனுடைய குணாதிசங்களை மாற்றியமைக்கிறது.

குணாதிசயங்கள் பாற்பட்டவன் சிறைப்பட்டவன். என்னதான் சூழ்நிலைகள் மாறினாலும் ஒரே விதமான குணாதிசங்களைத் திரும்பத் திரும்ப வெளிப்படுத்துகிறவன். காலத்துக்கு ஏற்புடையதாக இல்லையென்றாலும் அவன் அதையே பிடித்துத் தொங்கிக் கொண்டிருக்கிறான். எந்தச் சூழ்நிலையில் அது பொருள் பொதிந்ததாக இருந்ததோ அது மாறிப்போன பின்னும் அதே முட்டாள்தனத்தில் அவன் தொடர்ந்து இருந்து கொண்டிருக்கிறான். அவன் சொன்னதைச் சொல்லும் கிளிப்பிள்ளை. அவனிடம் எதிர்த்துடிப்பிருப்பதில்லை. இயந்திரத்தனமான எதிர்வினைதான் இருக்கிறது.



பிரக்ஞையுடையவன் எதிர்த்துடிப்பு கொண்டவன். அவனுடைய துடிப்பு இயல்பானது. இந்த இயல்பிலும் பிரக்ஞையிலும் புதுவிதமானதொரு செயல் பிறப்பெடுக்கிறது. அதில் எந்தத் தளையும் இல்லை. எந்தக் கர்மாவும் இல்லை. அந்தச் செயல் உன்னை விடுவிக்கிறது. உன்னுடைய உள்ளியல்பின் மொழியைக் கேட்டு நடக்கும்போது நீ சுதந்திரமானவனாகிறாய்.

இந்த எளிய யோசனை பின்பற்றுவதற்கு மிகச் சிரமமானதாகத் தோன்றுகிறது. இதைவிட எளியது வேறெதுவும் இருக்க முடியாது. பிறக்கும் ஒவ்வொரு குழந்தையும் தன் இயல்பு வழி போகத்தான் செய்கிறது. ஆனால் வளர வளர அந்த இயல்போடான தொடர்பை இழந்து விடுகிறான். தொடர்பை இழக்கக் கட்டாயப் படுத்தப்படுகிறான். இந்தத் தொடர்பு மீட்டுக் கொள்ளக் கூடியது. மீளக் கண்டுபிடிக்கக் கூடியது. பின்னாளில், விஷயஞானம் நிறைந்தவனாகி, குறிப்பிட்டதொரு குணாதிசயத்துக்குள் சிறைப்பட்டுப் போகும்போது, உன்னுடைய நெஞ்சுக்கும் இயல்புக்கும் அயலானாகிப் போகும்போது, இப்படிப்பட்ட கேள்விகளைக் கேட்க ஆரம்பித்துவிடுகிறான்.

நேற்றுத்தான் பிரேம் விஜென் கேட்டான்.

''அன்புக்குரிய குருவே, 'உனக்குள்ளேயே போ,' என்று சொல்வதன் பொருள் என்ன?''

'உள்ளே போ' என்பது எளியதொரு கூற்று. நீயோ அதற்குப் பொருள் என்ன என்று கேட்கிறாய். உள்ளே போ என்ற எளிய வார்த்தைகளைக் கூடப் புரிந்து கொள்ள முடியவில்லையா?



புரிகிறது. ஆனால் செய்யத்தான் முடிய வில்லை என்கிறாயா? வெளியே வருவதையும் வெளியே இருப்பதையுமே தெரிந்து வைத்திருப் பவன்தானே. உன்னுடைய உணர்வுகள் யாவும் பிறரை நோக்கியே திரும்பியிருக்கின்றன. உன்னை நோக்கிப் போகும் வழி மறந்து போய்விட்டது.

பிறாது வீட்டுக் கதவுகளையே தட்டிப் பழகிப் போன உன்னிடம் உன் வீட்டுக்குப் போ என்று சொல்லும் போது, அது என்ன என் வீட்டுக்குப் போவது என்று கேட்கிறாய். பிறாது வீடுகளை அடையாளம் தெரிந்து வைத்திருக்கும் உனக்கு, உன் வீட்டின் அடையாளம் தெரியாமல் போய்விட்டது. இத்தனைக்கும் அதை உனக்குள்ளேயே வைத்திருக்கிறாய்.

புறத்தே இருப்பதை மட்டுமே நோக்க உன்னைக் கட்டாயப்படுத்தி வைத்திருக்கிறார்கள். அக நோக்குக்கான வழிகளைத் தெரிந்து கொள்ளும் வழி முறைகளைக் கற்றுக் கொள்ள வேண்டியிருக்கிறது.

ஸெரென் கீர்க்கேகார்டு கூட ஆன்மிகம் என்பது அகத்திருப்பல் என்கிறார். தன் உள்ளிருப்புக்குள் போவது என்கிறார். என்றாலும் உள்ளே போ என்ற எளிய வார்த்தைகளைப் புரிந்து கொள்வது சிரமமாகிவிட்டது. வெளியே போக மட்டுமே தெரிந்த மனதுக்கு ரிவர்ஸ் கியர் இல்லாமல் போய்விட்டது.

போர்டு முதலில் வடிவமைத்த காரில் ரிவர்ஸ் கியர் இல்லையாம். பிறகுதான் அந்த வசதி செய்யப்பட்டது. ரிவர்ஸ் கியர் இல்லாமல் பெரும் பிச்சனைதான். திரும்பிப் போக வேண்டுமென்றால் பல மைல் தூரம் போக வேண்டியிருந்தது. ஒரு சில அடிகள் தூரம் பின்னால் போவதற்கும் பல மைல்கள் முன்னால் போக



வேண்டியிருந்தது. அதற்குப் பிறகுதான் ரிவர்ஸ் கியரின் தேவை போர்டுக்குத் தெரிந்தது.

உனக்குச் சொல்ல வேண்டியது என்ன வென்றால் அப்படியான ரிவர்ஸ் கியர் ஏற்கெனவே வடிவமைக்கப்பட்டு உனக்குள் இருக்கிறது என்பதுதான். புறத்தேயிருப்பதை நோக்கிப் போக உனக்குத் தெரிந்திருக்கிறது. யாருமே வெளியே இருப்பதை நோக்கிப் போவது என்றால் என்ன என்று கேட்பதில்லை. ஆனால் எல்லோருமே உள்ளே போவது என்றால் என்ன என்று கேட்கிறார்கள்.

எண்ணங்களின் வயப்படுவது வெளியே போவது. எண்ணங்களற்று இருப்பது உள்ளே போவது. எண்ண ஆரம்பிக்கும்போதே உன்னிடமிருந்து விலகிப் போகவும் ஆரம்பித்து விடுகிறாய். வெகு தூரம் இட்டுச் செல்வது எண்ணம் என்ற சாலை. எண்ணங்களின்றி இருந்தால், ஆசைகளைக் கழித்துவிட்டிருந்தால், வெளியே போவது முடியாது. எண்ணமும் ஆசையுமே வெளியே போகும் யாத்திரைக்கு எரிபொருட்கள்.

மௌனத்தில் உறைந்து போய் எண்ணங்களையும் ஆசைகளையும் விலக்கி வைத்திருக்கும்போது, நீ எங்கிருக்கிறாய் தெரியுமா? உள்நோக்கிப் போவதென்பது போவதே அல்ல. வெளியே போகாமல் இருந்துவிடுவது. நீ உள்ளேயேதான் இருக்கிறாயென்பதைத் தெரிந்து கொள்ளும்போது உனக்கே ஆச்சரியமாகத்தான் இருக்கும்.

பிரேம் விஜென், போவதை விட்டுவிடு. போவ தென்றாலேயே வெளியே போவதுதான். போவதை விட்டுவிடு. எங்கேயும் போவதை நிறுத்திவிடு.

எங்கேயும் போகாமல் மௌனமாக இருந்து விட முடியாதா என்ன? சும்மா உட்கார்ந்துவிட வேண்டியதுதான்.



அது ஒன்றும் அவ்வளவு சிரமமான காரியமல்ல. யோகாசனம் பயின்று ஒரு குறிப்பிட்ட ஆசனத்தில் உன் உடலைச் சிலை போல உறைய வைக்கலாம்தான். ஆனால் பிரச்சினை என்னவென்றால் உள்ளே என்ன நடக்கிறது என்பதுதான். ஆசைகள், சிந்தனைகள், கற்பனை, எல்லாவிதமான முன்னிறுத்தல்கள் அனைத்தையும் உறைய வைத்துவிடு.

எப்படி அவற்றை நிறுத்தி வைப்பது? அவற்றை அலட்சியப்படுத்திவிடு. அவை பற்றிக் கவலைப்பட வேண்டாம். அவை இருந்தாலும் அவற்றைக் கண்டு கொள்ளாதே. அவற்றுக்கு எந்த முக்கியத்துவமும் கொடுக்காதே. இருக்கட்டும் விடு. எல்லாவற்றையும் கவனித்துக் கொண்டு மௌனமாக இருந்துவிடு. கவனிப்பது என்ற வார்த்தையை மனதில் கொள். சாட்சியாக இருத்தல், விழிப்போடிருத்தல்.

இந்தக் கவனித்தல் பெருகும்போது, ஆழ்ந்ததாகும் போது, ஆசைகள், சிந்தனைகள், நினைவுகள், கற்பனை என்று வடிவெடுத்த அதே சக்தி, அந்தப் புதிய ஆழத்துக்குள் முங்கிப் போகிறது. ஆழ்ந்த உள்ளிருப்பே அதே சக்தியைப் பயன்படுத்திக் கொள்கிறது. அப்போது உள்ளே போ என்று நான் சொன்னதைப் புரிந்து கொள்வாய்.

அகராதிகளையோ கலைக்களஞ்சியங்களையோ புரட்டப் போய்விடாதே. இது வார்த்தைகளின் பாற்பட்டதல்ல. வார்த்தைகளை மிக எளிதில் புரிந்து கொள்ளலாம். உள்ளே போ எனும்போது உள்ளே போவதைத்தான் குறிக்கிறேன். வார்த்தைகளைப் பற்றி ஒன்றும் கேட்காதே. அவற்றில் தொக்கி நிற்கும் செய்தி என்ன என்பதைப் பார். இல்லையென்றால் ரயிலைத் தவற விட்ட கதையாகித்தான் போகும். அது என்ன ரயிலைத் தவறவிட்ட கதை என்கிறாயா?



சொல்கிறேன்.

ஒரு விவசாயியின் மனைவி. வெகுளிப் பெண். பேடிங்டன் ஸ்டேஷனுக்கு ரயிலைப் பிடிக்க வந்தாள். ரயில் வருவதற்குக் கொஞ்ச நேரம்இருந்தது. பக்கத்திலிருந்த எடை பார்க்கும் இயந்திரத்தில் தன் எடையைப் பார்க்கலாமே என்று நினைத்தாள்.

அப்படியே அந்த இயந்திரத்தின் மேல் ஏறி நின்று காசைப் போட்டாள். எகிறி விழுந்த அட்டை உன் எடை நூற்று ஐம்பது பவுண்டு என்றும், அடுத்த ஐந்தாவது நிமிடம் நீ அபானவாயுவைச் சத்தமாக வெளியிடுவாய் என்றும் சொல்லியது. தர்ம சங்கடத்தில் முகம் சிவக்கக் கொஞ்சம் கோபத்தோடே கூட அவள் இயந்திரத்தை விட்டுக் கீழே இறங்கினாள். என்ன ஆச்சரியம் அடுத்த ஐந்தாவது நிமிடம் அவள் சத்தமான நீளமான அபான வாயுவை வெளியிட்டாள்.

தர்ம சங்கடம்தான். என்றாலும் திரும்ப அந்த இயந்திரத்துக்குப் போய் இனி என்ன சொல்லப் போகிறதோ என்று மறுபடி தன் எடையைப் பார்த்தாள். இன்னமும் உன் எடை நூற்று ஐம்பது பவுண்டுதான் என்றும், அடுத்த ஐந்தாவது நிமிடம் உன்னை ஒருவன் கற்பழிப்பான் என்றும் அட்டை சொல்லியது. வெறுப்போடு இயந்திரத்தை விட்டு இறங்கிய அவள் உறுதியான அடிகளோடு நடந்தாள்.

பிளாட்பாரத்தில் செய்தித்தாள் விற்கும் ஒருவன் அன்று காலை அவ்வளவாக வியாபாரம் இல்லாமல் டல்லடித்துப் போயிருந்தான். அட இந்த நாட்டுப்புறத்துக் கட்டையோடு கொஞ்சம் சல்லாபம் செய்யலாமே என்று தனது கடைக்குள் இழுத்துப் போட்டு அவளைக் கற்பழித்தான்.



சில நிமிடங்களுக்குப் பின் வெளியே வந்த அவளுடைய தொப்பி ஒரு பக்கம் சாய்ந்திருக்க, செருப்பின் ஒரு தோல் அறுந்திருக்க அதிர்ச்சியோடு அவள் தள்ளாடி நடந்து மீண்டும் அந்த இயந்திரத்துக்குப் போனாள். என்ன செய்கிறோம் என்பதே தெரியாமல் இன்னுமொரு நாணயத்தை எடுத்துப் போட்டு அதன் மேல் ஏறி நின்றாள். எகிறி விழுந்தது அட்டை. இன்னமும் உன் எடை நூற்று ஐம்பது பவுண்டுதான். இந்த ஃபார்டிங்கிலும் ஃபக்கிங்கிலும் நீ ரயிலைத்தான் தவற விட்டுவிட்டாய் என்றது.

இப்படித்தான் வார்த்தைகளில் அதீதக் கவனத்தைச் செலுத்தி இதற்கு என்ன பொருள், வார்த்தை வார்த்தையாக இது என்ன சொல்கிறது என்றெல்லாம் கேட்டுக் கொண்டிருந்தால் விஜென், நீயும் ரயிலைத் தவறவிட்டு விடுவாய். வார்த்தைகளோடு அதிக நேரத்தைப் போக்காதே.

குறிப்பாக இந்த அறிவு ஜீவிகள் இருக்கிறார்களே அவர்களுக்குத்தான் இந்த வியாதி. குறைந்தது கடந்த ஐம்பது ஆண்டுகளாக தத்துவம் இதைப் போல வார்த்தைத் தேடல்களிலேயே இருந்திருக்கிறது. கடவுள் யார் என்ற கேள்வி இல்லை. கடவுள் இருக்கிறாரா இல்லையா என்ற கேள்வி இல்லை.

சககாலத்திய தத்துவம் கேட்பதெல்லாம், ''கடவுள் என்ற வார்த்தைக்குப் பொருள் என்ன?'' என்பதுதான். கடவுள் இருக்கிறாரா இல்லையா என்ற கேள்வி வேறு, இது வேறு. எப்படிக் கடவுளை அடைவது என்ற கேள்வி வேறு, இது வேறு. கேள்வியே திரிந்து போன கேள்வியாகிவிட்டது. ''கடவுள் என்ற வார்த்தையைப் பயன்படுத்தும்போது என்ன பொருளில் பயன்படுத்துகிறாய்?'' இதுதான் இன்றைய கேள்வி.



ரோஜா என்ற சொல்லைப் பயன்படுத்தும்போது என்ன அர்த்தம் என்று கேட்டால் என்ன செய்ய? இந்தத் தத்துவராயரை ஒரு பூங்காவுக்குக் கூட்டிப் போக வேண்டும். ஒரு ரோஜாப்பூவைக் காண்பிக்க வேண்டும். ''பாருங்கள், நான் ரோஜா என்று சொல்லும்போது குறித்த அர்த்தம் இதுதான்,'' என்று சொல்ல வேண்டும். சுலபமாகச் செய்யலாமில்லையா? ஆனால் இதைக் கடவுள் என்ற வார்த்தைக்கோ, தியானம் என்ற வார்த்தைக்கோ உள்ளே திரும்பு என்பதற்கோ செய்ய முடியாது.

எனவே மொழியியல் அக்கறைகளை ஒரு பக்கம் ஒதுக்கி வைத்துவிட்டு வா. மொழியியல் பகுப்பாய்வுக்கல்ல நீ இங்கே இருப்பது.

என்னுடைய நோக்கமே வாழ்வியம் நோக்கம். உள்ளே போ என்பதற்குப் பொருள் தெரிந்து கொள்ள வேண்டும் என்ற நிஜமாகவே நினைத்தால் உள்ளே போய்ப் பார்த்துக் கொள்ள வேண்டியதுதான்.

அதற்கென்ன வழியா? உன்னுடைய எண்ணங்களை உன்னிப்பாகக் கவனித்துக் கொண்டிரு. உன் எண்ணங்களும் நீயும் வேறு வேறு என்பதை நினைவில் வைத்திரு. எந்த விருப்பு வெறுப்புமின்றி விட்டேற்றியாக உன் எண்ணங்களைக் கவனித்துப் பார். எந்த விதமான தீர்வும் காணவேண்டும் என்ற எண்ணத்தை விட்டுவிட்டுக் கவனி. இவை தவறு என்றும் அவை சரி என்றும் தீர்மானங்களின் பாற்பட்டு எண்ணங்களைப் பார்க்காதே. அவை பற்றி எந்தக் கருத்தும் சொல்லாதே. சாலை ஓரத்தில் நீ நின்றிருக்க அந்தச் சாலையில் வாகனங்கள் விரைந்து போய்வந்து கொண்டிருப்பதைப் பார்த்து நிற்பதைப் போல உன் எண்ணங்களின் ஊர்வலத்தைப் பார்த்து நில்.



எது எதுவெல்லாம் உன்னைக் கடந்து போகிறது என்பது அவ்வளவு முக்கியமில்லை. பஸ் போகட்டும். டிரக் போகட்டும். ஒரு சைக்கிள் போகட்டும். இப்படி உனக்குள்ளே நித்தமும் நகர்ந்து கொண்டிருக்கிற எண்ணங்களின் போக்குவரத்தை விட்டேற்றியாகப் பார்க்க ஆரம்பித்துவிட்ட கணத்திலிருந்து, அந்தப் போக்குவரத்து முற்றிலும் நின்று போகும் கணம் வெகு தூரத்திலில்லை.

நகர்வதற்குச் சக்தியை நீ கொடுக்கும் வரைக்கும் அது நகர்ந்து கொண்டுதான் இருக்கும். போக்குவரத்துக்கான எரிபொருளைத் தருவதை நிறுத்திவிடுதல், சக்தி போக்குவரத்தாக இயங்குவதைத் தடுத்துவிடுதல், அதுதான் கவனிப்பதென்பது. உன்னுடைய சக்தியே அவற்றை நகர்த்திக் கொண்டிருந்திருந்திருக்கிறது. உன்னிடமிருந்து சக்தி கிடைக்கவில்லையென்றால் அவை கழன்று விழுந்துவிடும். தம்மளவிலேயே அவை இருக்கவோ இயங்கவோ முடியாது.

மனதில் சாலை வெறிச்சிட்டுப் போகும்போது நீ உள்ளே இருக்கிறாய். அதைத்தான் விஜென், உள்ளே போவது என்கிறேன். உன்னுடைய இயல்பைக் கைக்கொள் என்று சொன்னபோது புத்தர் குறிப்பிட்டதும் அதுதான்.

**'பிரதிபலிக்காத மனம்**
**ஓட்டைக் கூரை வீடு.**
**உணர்வெனும் மழை வெள்ளம்**
**நிரப்பிவிடும் வீடு.**
**ஓட்டையில்லாக் கூரையே**
**வீட்டைப் புகலிடமாக்கும்.'**

பிரதிபலிக்கும் மனம் எனும்போது சிந்திக்கும் மனம் என்று கொள்ளவில்லை. பிரதிபலிப்பது என்றால்



பிரதிபலிப்பதுதான். ஒரு கண்ணாடி பிரதி பலிக்கிறதே அப்படி. ஒரு கண்ணாடிக்கு முன் நிற்கும்போது கண்ணாடி உன்னைச் சிந்தித்தா பார்க்கிறது? கண்ணாடி வெறுமனே திருப்பிக் காட்டுகிறது. அப்படித் திருப்பிக் காட்டுவதைத்தான் புத்தர் இங்கே குறிப்பிடுகிறார்.

பிரதிபலிக்காத மனம்... திருப்பிக் காட்டுவதை மறந்துவிட்ட மனம் ஓர் ஓட்டைக் கூரை. திருப்பிக் காட்டுவதை மறந்தவர்களாகிவிட்டோம். சிந்திப்பதைத் தெரிந்து கொண்ட நாம் பிரதிபலிக்கத் தெரியாதவர் களாகிவிட்டோம்.

பிறந்த குழந்தை பற்றி ஒரு கணம் எண்ணிப் பாருங்கள். முதன்முதலாகக் கண்ணைத் திறந்து மரங்களைப் பார்க்கும் குழந்தைக்கு, அவை மரங்கள் என்று தெரியுமா? மரங்களைப் பார்க்கும்தான் என்றாலும் இவை மரங்கள் என்று தனக்குத்தானே சொல்லிக் கொள்ளுமா?

விளக்கின் வெளிச்சத்தைப் பார்க்கும் குழந்தை இது மின்சார விளக்கு என்று சொல்லிக் கொள்ளுமா? சிவந்த ரோஜாப்பூவைப் பார்க்கும் போது இது ரோஜாப்பூவென்றோ இதன் நிறம் சிவப்பென்றோ சொல்லிக்கொள்ளுமா?

எல்லாவற்றையும் பார்த்தாலும் எதைப்பற்றியும் ஒன்றும் சொல்லிக் கொள்ளாது. இதுதான் பிரதிபலிப்பது என்பது. வெறுமனே பிரதிபலிப்பது. பிரதிபலிக்கும் கண்ணாடி அப்பழுக்கின்றி இருந்தால் பிரதிபலிக்கப்பட்ட மரங்கள் இயற்கையாக இருப்பதையும் விடப் பசுமையாக இருக்கும். ஆமாம், தூசு படியாத கண்ணாடி, எண்ணங்களே தூசுத் துகள்கள்.

பூங்காவுக்குள் போய் ரோஜா அழகு என்று சொல்லும்போது ரோஜாவைப் பார்க்காமலே கூடச்



சொல்லலாம். பிறர் சொன்னதைத் திருப்பிச் சொல்வதுதானே அது. பிறர் சொல்லக் கேட்டுப் பழகிப் போனதால் நீ சொல்வது. ரம்மியமாகச் சூரியன் மறைவதைப் பார்த்துக் கொண்டிருக்கும்போது என்னதான் உன் கவனம் வேறு ஏதாவது ஒன்றின் மீது இருந்தாலும் உனக்குத் தெரியாமலேயே, வெகு சுவாதீனமாக நீ என்ன அழகான காட்சி என்று சிலாகிக்கலாம். அப்படிச் சொல்லும்போது அர்த்த பூர்வமாகப் பேசுகிறாயா, அனுபவித்ததற்கு வார்த்தை வடிவம் கொடுக்கிறாயா என்று கேட்டால், அப்படி ஏதும் செய்யாமலேயே பிறர் சொன்னதைத் திருப்பிச் சொல்வதாகக் கூட அமையலாம். கொஞ்சம் நினைத்துப் பார்த்தால் அப்படி ஒரு சமயம் உன் தாயோ, தந்தையோ, ஆசிரியையோ, நண்பனோ சொன்ன வார்த்தைகளை அப்படியே சொல்கிறாய் என்பதைக் கூட நீ தெரிந்து கொள்ளலாம். இன்னும் கொஞ்சம் ஆழ நினைவுக்குக் கொண்டு வந்து பார்த்தால் நீ கேட்க அந்த வார்த்தைகளை முதன்முதலாகச் சொன்னது யாரென்ற நினைவு கூட உனக்குத் தோன்றலாம்.

எனவே எவ்வளவு அழகு என்று சொல்லியதன்றியும் நீயாக அந்தக் காட்சியைக் காணவில்லை என்பதும், நீ அப்படிக் கண்டதை உன்னுடைய வார்த்தைகளில் வடிக்க வில்லை என்பதும்தான் உண்மை. அந்தக் காட்சியின் காட்சிமையை, நிகழ்வை, அழகின் உடனடித் தாக்கத்தை நீ பார்க்கவில்லை என்றுதான் ஆகிறது.

புத்தர் என்ன சொல்கிறார்?

**‘பிரதிபலிக்காத மனம்**
**ஒட்டைக் கூரை வீடு.**
**உணர்வெனும் மழை வெள்ளம்**
**நிரம்பிவிடும் வீடு.’**



சத்தியத்தைப் பிரதிபலிப்பதை மறந்துவிட்ட மனம் ஆசைக்கு இறையாகிப் போகிறது. சிந்தனைக்கு இரையாக, எதிர்காலத்துக்கு இரையாக, இதை அல்லது அதை நோக்கிய ஏக்கத்துக்கு இரையாக ஆகிப் போகிறது. ஆனால் எந்த ஆசையும் நிறைவேறப் போவதில்லை. ஓர் ஆசை நிறைவேறும்போது பத்து ஆசைகள் அதன் இடத்தைப் பிடித்துக் கொள்கின்றன.

இது தொடர்ந்து கொண்டே இருக்கிறது. வாழ்வோ குறுகியது. இறப்பு எப்போது வேண்டுமானாலும் உன்னைக் கொத்திக் கொண்டு போகலாம்.

நிறைவேற்றத்துக்கெனப் பிறப்பெடுத்து வந்தும் நிறைவேற்றம் ஏதுமில்லாமல் இந்த உலகை விட்டு நீங்கிப்போகிறாய். எனவே நீ மறுபடி வந்துதானாக வேண்டியிருக்கிறது. இந்த உண்மையை உணர்ந்து கொண்டாலன்றி, ஏதோ ஒரு வயிற்றுக்குள் தூக்கி எறியப்பட்டு திரும்பத் திரும்பப் பிறந்து கொண்டே இருக்கிறாய். பள்ளிக் கூடத்துக்கு அனுப்புவார்கள். பல்லாயிரம் முறை உன்னைப் பள்ளிக்கூடத்துக்கு அனுப்பியாயிற்று. இப்போதாவது உண்மையைத் தெரிந்து கொண்டாலன்றி இந்த வாழ்விலும் ரயிலைத் தவற விடப் போகிறாய்.

ஜாக்கிரதை. பிரதிபலிக்க வேண்டுமானால் உன் கண்ணாடியில் தூசு படியாது வைத்திரு.

**'உணர்வெனும் மழை வெள்ளம்**
**நிரம்பிவிடும் வீடு.**
**ஓட்டையில்லாக் கூரையே**
**வீட்டைப் புகலிடமாக்கும்.'**

சத்தியத்தை எப்படிப் பிரதிபலிப்பது என்று தெரிந்து விடுமானால் உனக்குப் புகலிடம் உண்டு. கடவுளைப்



போய்ச் சேர்ந்துவிடுவதால் உனக்குப் பாதுகாப் புண்டு. சத்தியத்தின் ஒரு பகுதியாகிவிடுகிறா யென்பதால் உனக்குப் பாதுகாப்புண்டு.

**'களங்கப்பட்ட எண்ணங்களைத்**
**தொடர்வோன்**
**இங்கும் அங்கும் காண்பது துயரே.**
**உணர்வதற்கு உள்ளது**
**தவறுகளே எனில்**
**இவ்வுலகிலும் அவ்வுலகிலும்**
**பெறுவது பெரும் துயரே.'**

எல்லா எண்ணங்களும் களங்கப்பட்டவைதான். எந்த எண்ணமும் பரிசுத்தமானதாக இருக்க முடியாது. அதனால் மறுபடியும் நினைவுபடுத்த விரும்புகிறேன். களங்கப்பட்ட எண்ணங்கள் என்று புத்தர் சொல்லும்போது எண்ணங் களைத்தான் குறிக்கிறார். வெறுமனே எண்ணங்கள் என்று சொன்னால் உனக்குப் புரியாது என்பதால்தான் களங்கப்பட்ட என்று உரிச்சொல்லைச் சேர்த்துச் சொன்னார். எனவே களங்கப்பட்ட எண்ணங்கள் என்று சொல்லும்போது எண்ணங்களையே குறிக்கிறார். எல்லா எண்ணங்களும் களங்கமுடையவை. ஏனென்றால் எண்ணுகிறாய் எனும் போதே நீயன்றி மற்றதைப் பற்றி நினைக்கிறாய் என்று பொருள். ஆசை பிறந்துவிட்டது என்று பொருள். களங்கமற்ற எண்ணம் என்று சொல்லும்போது அவர் எண்ணங்களற்றுப் போவதைத்தான் குறிக்கிறார்.

எண்ணங்களற்ற நிலையே பரிசுத்தமானது. ஏனென்றால் அந்த நிலையில்தான் நீ மொத்தமாக நீயாக இருக்கிறாய். நீ மட்டுமாக, வேறெந்தக் குறுக்கீடும் இல்லாமல்.

ஜான் பால் சாத்ரே என்ன சொல்கிறார்? தன்னைத் தவிர்த்தது நரகம் என்கிறார். அவர் சொல்வது ஒருவகையில்



சரிதான். பிறவொன்றைப் பற்றி நினைக்கும்போது நீ நரகத்தில்தானிருக்கிறாய். எண்ணங்களே பிற வற்றைப் பற்றியதுதானே. எனவே எண்ணங்கள் இல்லாமல் போகும்போது தனிமையில் இருக்கிறாய். தனிமையே பரிசுத்தம். அந்தத் தனிமையில் என்ன நடக்க வேண்டுமோ அதுவெல்லாம் நடக்கிறது.

**'ஆயின்**
**நெறிவழி செல்வோன்**
**இங்கும் அங்கும்**
**காண்பது ஆனந்தம்.**
**காண்பதற்கு உள்ளது**
**நலனே எனில்**
**இவ்வுலகிலும் அவ்வுலகிலும்**
**பெரும் கொண்டாட்டமே.'**

இதையே திரும்பப் பார்த்தால், உனக்கென நீயே ஒரு நரகத்தை உருவாக்கிக் கொள்கிறாய். நீயாகத்தான். வேறு யாருக்கும் அதில் பொறுப்பில்லை. இதை உணரும்போது வருந்தத்தான் செய்வாய். மிக அதிகமான வருத்தம்தான். எவர் மீதும் பொறுப்புச் சுமத்த முடியாதென்பதால் சால்ஜாப்புச் சொல்ல முடியாது.

துயரம் இருக்கத்தான் செய்யும். மிக வருத்தும் துயரமாகத்தான் அது இருக்கும். ''என்ன முட்டாள்தனம். யாரும் என்னை வருத்தவில்லை. என்னுடைய எண்ணங்களே காரணமாக நான் வருந்துகிறேன். எவ்வளவுக்கெவ்வளவு நானன்றிப் பிறவற்றை நோக்கி என்னைத் திருப்பிவிட்டுக் கொண்டேனோ அந்த அளவுக்கு நான் வருந்துகிறேன். நானே அதற்கு முழுக்கப் பொருப்பாகிவிட்டேனே.''

விளைவு... துயரம்தான். ஆனால் இதன் மறுபக்கம் மிகவும் சாத்தியமான உண்மை. எந்த அளவுக்கு தம்மாவைக்



கைக்கொள்கிறாயோ, தாவோவைக் கைக் கொள்கிறாயோ, உன்னுடைய உள்ளீடான இயல்பைத் தொடர்கிறாயோ அந்த அளவுக்கு ஆனந்தம். இங்கும், அங்கும். இவ்வுலகிலும், அவ்வுலகிலும்.

புத்தருக்கு அவ்வுலகத்தைப் பற்றி அவ்வளவாக அக்கறை கிடையாது. ஆனாலும் இங்கே உனக்கு ஆனந்த மென்றால் அங்கேயும் உனக்கு ஆனந்தம்தானென்கிறார். இந்தக் கணத்தைக் கொண்டாடுகிறாயென்றால் அடுத்த கணத்தையும் கொண்டாடத்தான் போகிறாய் என்பதுதான். ஏனென்றால் அடுத்தகணம் இந்தக் கணத்திலிருந்துதானே பிறக்கிறது.

ஆனந்தமோ வேகம் கூடுவது. மேலும் மேலும் திரள்வது. இந்தக் கணம் துன்பப்படுகிறாய் என்றால் அடுத்த கணம் இன்னும் அதிகமாகத்தான் துன்பப்படப் போகிறாய். உனக்குத்தான் துன்பப்படும் பாதைகள் பரிச்சயமாகிப் போய்விட்டனவே. துன்பப்பட்டுக் கொண்டேயிருப்பதற்குப் பழகிப் போனவனாகிறாய். துன்பத்தை உருவாக்குவதில் திறமை கூடிப் போவதால் அடுத்த கணத்துக்கென அதிகமான துன்பத்தைத்தான் உருவாக்கிக் கொள்ளப் போகிறாய். இப்படி இந்தக் கணம் எப்படியாக அமைகிறதோ அதனுடைய மிகுபட்ட வடிவத்தைத்தான் அடுத்த கணம் காணப் போகிறது.

ஆனால் புத்தருக்கு அடுத்த கணத்தைப் பற்றி எந்தக் கவலையுமில்லை. அவர் ஓர் உண்மையைப் பட்டவர்த் தனமாகச் சொல்லிப் போகிறார்.

அடுத்த கணத்தைப் பற்றிக் கவலைப்பட்டுக் கொண்டேயிருக்காதே. அடுத்த பிறவியைப் பற்றியும்தான். அடுத்த உலகத்தைப் பற்றியும்தானென்கிறேன். இந்தக்



கணத்தை ஒரு கொண்டாட்டமாக்கு. இந்தக் கணத்தை ஒரு பரவசக் கணமாக்கு. அடுத்த கணம் தானாகவே தொடர்ந்து வரும்.

அடுத்த பிறவியும் உலகமும் கூடத்தான். இந்தக் கணத்தில் நீ என்னென்னவாக இருக்கிறாயோ அத்தனையும் ஆழ்ந்ததாக்கப்படும். நீயே உன் பரவசத்துக்கு ஊற்றுக் கண் என்று தெரிந்து கொள்ளும்போது உன்னுடைய பரவசம் அதீதப்பட்டுவிடும்.

யாரும் உனக்கு அதைத் தரவில்லையெனும்போது, அதை இரந்து கேட்டுப் பெற்றுக் கொள்ளவில்லை எனும்போது, யாருடைய அன்பளிப்பும் அல்ல அது என்பதை உணரும் போது, யாரும் தராததால் யாரும் அதை எடுத்துக் கொள்ளவும் முடியாது என்பதை உணரும்போது நீ இன்னும் இன்னும் என்று மகிழ்வடைகிறாய்.

**'இவ்வுலகில் பெரும்பயன்**
**அவ்வுலகிலோ இன்னும் பெரும்பயன்.**
**என்னதான் சாத்திரங்கள் படித்தாலும்**
**என்னதான் சாத்திரங்கள் பேசினாலும்**
**கடைப்பிடிக்காத சூத்திரத்தின் பயனென்ன?'**

ஆனால் அத்தனையும் செயல்களைச் சார்ந்தவை. அருமையான எண்ணங்களை நினைத்துக் கொண்டிருப்பதோடு எல்லாமும் முடிந்துவிடுவதில்லை. அருமையான ஆசைகளை வளர்த்துக் கொள்வதோடு எல்லாமும் தீர்ந்துவிடுவதில்லை.

கடவுளைப் பற்றி, சொர்க்கம் பற்றி, மோட்சத்தைப் பற்றித்தான் சொல்கிறேன். தியானத்தைப் பற்றி நினைப்பதல்ல. செயல்படுவது, அதைப்பற்றி ஏதேனும் செய்வது. செயல் மட்டுமே உனக்கு உதவியாகும். ஈடுபாட்டோடு கடப்பாடும் கைக்கொள்ள வேண்டியிருக்கிறது.



அநேகம் பேர் என்னிடம் வந்து, ''உங்கள் பிரசங்கம் அருமையாக இருக்கிறது. எங்களுக்கு மிகவும் பிடித்திருக்கிறது. ஆனால் தியானம் செய்ய எங்களுக்குப் பிரியம் இல்லை. சன்னியாசிகளாக ஆவதற்கும் நாங்கள் தயாரில்லை. இது போதாதா?'' என்கிறார்கள்.

''உங்களுடைய அருமையான பேச்சைக் கேட்டுக் கொண்டிருப்பது போதாதா?'' என்கிறார்கள். இது வெட்டி வேலையாகத்தான் போகும்.

நான் பேசுவதைக் கேட்பது மட்டுமே என்றால் அது அடிமுட்டாள்தனம். செயல்படத் தயார் இல்லையென்றால் அது ஒரு நேரக் கேடு. பயனேதும் இருக்காது. செயல்படாமல் என் வார்த்தைகளைக் கேட்டுக்கொண்டே இருப்பது என்றால் அவை உனக்கு ஆறுதல் தரலாம். உன்னை ஏற்றுக் கொள்ள வைக்கலாம். அறிவார்த்தமாக நான் சொல்வதை நீ மகிழ்ந்து அனுபவிக்கலாம். நான் உன்னோடு இருப்பதை உணர்ந்து அனுபவிக்கலாம். ஆனால் அது மட்டுமே போதாது. செயல்படுவதென்பது மிக மிக அவசியமாகிறது.

எந்த ஓர் உண்மையை ஏற்றுக் கொள்கிறாயோ அதன் அடிப்படையில் செயல்படத் துவங்கிவிடு. அதுவும் உடனடியாகத் துவங்கிவிடு. இந்த மனதின் மிகப் பெரிய சூழ்ச்சியே தள்ளிப்போடுவதில்தான் இருக்கிறது. 'நாளைக்குப் பார்த்துக் கொள்ளலாமே,' என்கிறது. நாளை என்ற நாள் வருவதேயில்லை.

''நாமும் ஒரு நாள் தியானம் செய்யத்தான் போகிறோம். ஆனால் அதற்கு முன் தியானம் என்றால் என்னவென்று தெரிந்து கொள்வோமே,'' என்கிறது, வாழ்க்கை முழுக்கத் தெரிந்து கொள்வதிலேயே கழிந்து போக வேண்டியதுதான். செயல்படுவது மட்டும் நடக்கப் போவதில்லை. செயல்பட்டாலொழிய எதுவும் நடக்கப் போவதில்லை. எந்த மாற்றமும் ஏற்படப்போவதில்லை.



சன்னியாசம் ஒரு கடப்பாடு. என் மேல் நீ வைத்திருக்கும் அன்புக்குச் செயல்வடிவம் தருவது. என்னுடைய விதியோடு உன்னைச் சம்பந்தப்படுத்தி விடுவது. என்னுடைய படகுக்குள் ஏறிக் கொள்வது. இதில் அபாயங்கள் இருக்கின்றன.

கரையில் நின்று வேடிக்கை பார்த்துக் கொண்டிருப்பதில் பத்திரம் இருக்கிறது. அப்படி வேடிக்கை பார்ப்பதென்பது ஒரு பொழுது போக்காகிவிடும். ஆன்மிகப் பொழுது போக்கு என்று வைத்துக்கொள்ளேன். ஆனால் அது நேரத்துக்குக் கேடு. பயனேதுமில்லாதது.

இதைத்தான் சத்சங்கங்களில் பலரும் செய்கிறார்கள். ஞாயிற்றுக் கிழமையானால் தேவாலயத்துக்குப் போகிறார்கள். மிகக் கவனமாகத்தான் பாதிரியாரின் பிரசங்கத்தைக் கேட்கிறார்கள். ஆனால் வெளியே வந்த அதே கணம் அதை மறந்து விடுகிறார்கள். அவர்களுடைய வாழ்வில் அதன் தாக்கம் எதுவும் இருப்பதில்லை. பார்க்கப் போனால் அந்தப் பாதிரியாரின் வாழ்வில் கூட அதன் விளைவுகளாக ஏதும் நடப்பதில்லை.

பிரசங்கிப்பது அவருடைய பிழைப்பு. அதற்குத்தான் அவருக்கு ஊதியம் கொடுத்து வைத்திருப்பது. தொழில் முறையில் அவர் பேசுகிறார். அவர் பேச்சைக் கேட்பதென்பது ஒரு சம்பிரதாயமாகிவிட்டது. சமூகத்தில் தானும் கடவுளை நம்புகிறவர் என்று பிறரை நம்ப வைக்கவே பலரும் ஞாயிற்றுக்கிழமை தவறாமல் சர்ச்சுக்குப் போகிறார்கள். தவிரவும் எல்லோரையும் பார்ப்பதற்கு அது ஒரு சந்தர்ப்பமும் ஆகிறது. வம்பளக்கத்தான், வேறு எதற்கு? அதுவும் மதம் என்ற பெயரில் வம்பளப்பது. இது ஒரு வகை ரோட்டரி கிளப், லையன்ஸ் கிளப். அதில் எந்த முக்கியத்துவமும் இல்லை. அது எவர் வாழ்வையும் எப்படியும் மாற்றி அமைக்கப் போவதில்லை.



முன்பொரு சமயம் ஒரு கிறிஸ்துவப் பாதிரியார் வாழ்ந்த இடத்தில் நானும் வாழ்ந்திருந்தேன். அவர் பிரமாதமான பிரசங்கி. ஒரு நாள் தன்னுடைய வீட்டுத் தோட்டத்தை எனக்குக் காண்பித்தார். நாங்கள் இது அது என்று தொடங்கிப் பல விஷயங்கள் பற்றியும் பேசிக் கொண்டிருந்தோம். திடீரென அவர், ''என் மகனுக்கு நீங்கள் கொஞ்சம் உதவி செய்வீர்களா?'' என்ற கேட்டார்.

என்ன விஷயம் என்று கேட்டேன்.

''அவன் என்னுடைய பிரசங்கத்தை எல்லாம் வினயமாக எடுத்துக் கொள்ள ஆரம்பித்துவிட்டான். பிரசிங்கப்பது என் தொழில். பிரமாதமாகப் பேசுவேன். ஆனால் அதை அப்படியே எடுத்துக் கொள்ள ஆரம்பித்துவிட்டானே. கேட்டுக் கேட்டு இப்போது கல்யாணமே வேண்டாம் என்கிறான். பாதிரியாராக வேண்டுமாம். கொஞ்சம் அவனுக்கு உதவி செய்வீர்களா?''

''செய்கிறேன். அது தான் என் காரியமே. முடியும்தான். புனிதர்களைத் தம் புனிதத்தை விட்டுவிட வைப்பதுதான் என் தொழில். அவனை அனுப்பி வையுங்கள். அவனை இழுத்துப் பிடித்து வைக்கிறேன்.''

ஆனாலும் இதை நினைவில் வைத்துக் கொள்ளுங்கள்: ''என் வார்த்தைகளை அப்படியே நம்பிக் கொள்ள ஆரம்பித்துவிட்டான்.'' தன் வார்த்தைகளைக் கேட்பவர்கள் அவற்றால் செயல்பட வேண்டும் என்று அவர் நினைப்பதாகவே தெரியவில்லை. அப்படி யாராவது செய்திருந்தால் அவர்கள் முட்டாள்களாகத்தான் இருக்க வேண்டும் என்றே அவர் சொல்வது போல இருந்தது.

ஆனால் ஒரு புத்தருக்கு அருகில் இருக்கும்போது, ஒரு இயேசுவுக்கு அருகில் இருக்கும்போது, ஒரு கிருஷ்ணருக்கு



அருகில் இருக்கும்போது, ஒருமுகம்மதுவுக்கு அருகில் இருக்கும்போது அவர்களுடைய வார்த்தைகளை எடுத்துக் கொள்வதல்ல முக்கியம். அந்த வார்த்தைகளில் இருக்கும் சத்தியத்தைத் தெரிந்து கொள்வதும் அதன்படி நடந்து கொள்வதும்தான் முக்கியமாகிறது.

உன்னுடைய நெஞ்சில் ஒரு துடிப்புத் தெரிந்தால், அங்கே ஒரு மணி ஒலிக்க ஆரம்பித்துவிட்டால் அந்தத் துடிப்பையும் ஓசையையும் நிறுத்திவிடாதே. அதைத் தொடர்ந்து ஆழமாகப் போய்ப்பார். அது ஒன்று மட்டுமே நிலை மாற்றத்துக்கான வழி. அது ஒன்று மட்டுமே நித்தியத்துக்குப் போகும் வழி. ஏஸ் தம்மோ ஸனந்தனோ. அது ஒன்று மட்டுமே இருத்தலின் ஆதார சுருதியான நித்தியத்தைக் காணும் வழி.

அந்த ஆதார சுருதியை அறிவதே இறைவனை அறிவது, பேரானந்தம் அடைவது, காலங்கடந்து போய்விடுவது, மரணத்தைத் தாண்டிப்போய்விடுவது, துயரத்தைத் தாண்டிப் போய்விடுவது.

இரு பெண்கள் ஒரு மாலை நேரம் தேத்தண்ணீர் அறையில் அரட்டை அடித்துக் கொண்டிருந்தார்கள். பள்ளித் தோழிகள். வெகுகாலம் கழித்துச் சந்தித்துக் கொண்டவர்கள். ஐஸ்கிரீமும் கேக்கும் தாராளமாகப் புழங்கின. ஒருத்தி தன்னுடைய திருமண வாழ்வைப் பற்றிப் பெருமை பேசிக் கொண்டிருந்தாள்.

''என்னுடைய வைரங்களில் எண்ணெய் இறங்கி விட்டால் உடனே புது வைரங்களை அவர் வாங்கித் தந்துவிடுவார். யார் பழையதைப் போய்ச் சுத்தம் செய்து கொண்டிருப்பது?'' என்றாள்.



இன்னொருத்தி, ''ஃபெண்டாஸ்டிக்,'' என்றாள்.

அவள், ''ஆமாமென்கிறேன். இரண்டு மாதத்துக்கு ஒரு புதிய கார்தான். தவணை முறையிலா? மூச், அதெல்லாம் அவருக்குப் பிடிக்காது. முழுக்கப் பணம் கொடுத்துத்தான் அவர் வாங்குவார். பழையதா? இந்த நீக்ரோ தோட்டக்காரன் இல்லையென்றால் வீட்டு வேலைக்காரன் என்று யாருக்காவது அன்பளிப்பாகக் கொடுத்து விடுவோம்,'' என்று தொடர்ந்தாள்.

மற்றவள், ''ஃபெண்டாஸ்டிக்,'' என்றாள்.

''எங்க வீடா? அதைப்பற்றி என்ன சொல்வது? அது வந்து அப்படியே...'' என்று அவள் தொடரும் முன்பு குறுக்கிட்ட மற்றவள், ''ஃபெண்டாஸ்டிக்,'' என்று முடித்தாள்.

''சரி சரி. நீ எப்படியிருக்கிறாய்?'' என்ற அவள் கேட்டாள்.

இவள், ''ஒரு மந்திரப் பள்ளிக்குப் போய்க் கொண்டிருக்கிறேன்,'' என்றாள்.

''மந்திரப் பள்ளியா? பிரமாதம். என்ன சொல்லிக் கொடுக்கிறார்கள் அங்கே?'' என்று கேட்டாள்.

இவள், ''புல்ஷிட் என்று சொல்ல நினைக்கும் போதெல்லாம் ஃபெண்டாஸ்டிக் என்று சொல்லப் பழக்குகிறார்கள்,'' என்றாள்.

புல்ஷிட் என்று சொல்ல வரும்போதெல்லாம் ஃபெண்டாஸ்டிக் என்று சொல்லிப் பழகிக் கொள்ளலாம் தான். என்ன வித்தியாசம் இருக்கிறதென்கிறாய்? ஒன்றுமில்லை. ஆன்மிக மற்றும் மத வார்த்தை ஜாலங்களை நீ கற்றுக் கொண்டு கதைக்கலாம்தான்.

அநேகம் பேர் இப்படி எதார்த்தத்துக்குப் பொருந்தாத மொழி பேசுவதில் சமர்த்தர்களாக இருக்கிறார்கள். பல நிலைகள் என்பார்கள். பல உடல்கள் என்பார்கள். பல



மையங்கள் என்பார்கள். அவர்கள் பேசுவதில் இருக்கும் ஈடுபாட்டைப் பார்த்தால் அவர்கள் சொன்னது ஒவ்வொன்றையும் அவர்கள் நேரில் பார்த்துவிட்டுப் பேசுகிறார்கள் என்பது போலத் தோன்றும்.

இப்படியான எதார்த்தமற்ற அறிவைக் கைவிடு. எதார்த்தம் தாண்டிய மொழியைப் பயன்படுத்தாதே. இதில் எந்த அறிவும் இல்லை. சும்மா மக்களை முட்டாளாக்கு கிறார்கள். அப்படியான இலக்கியம் படிக்க வேண்டுமா? தியோஸபிஸ்ட் இலக்கியம் படித்துப் பார்த்துக் கொள்.

எதை வேண்டுமானாலும் சொல்லலாம் என்று ஆகிப் போய்விடுகிறது. என்னமோ இந்த உலகத்தைப் பற்றியதைத் தவிர பிற உலகம் பற்றிய வார்த்தைகளைச் சொல்ல வேண்டியது. அவ்வளவுதான். அதை நிரூபிக்கவோ தவறு என்று காட்டவோ முடியாது. அதெப்படி ஏழு அல்லது பதின்மூன்று நிலைகள் இருப்பதாக நிரூபிப்பது?

ஒரு தடவை ஒருவர் என்னிடம் வந்தார். அவருடைய மதத்தில் பதினான்கு நிலைகளில் ஆத்ம அனுபவம் பற்றி சொல்லியிருக்கிறதாம். வரைபடமெல்லாம் வைத்துக் கொண்டிருந்தார். மகாவீரர் ஐந்தாம் நிலையில் இருக்கிறாராம். புத்தர் ஆறாம் நிலையிலாம். கபீரும் நானக்கும் ஒன்பதாம் இடத்திலாம். இவர் ஒரு பஞ்சாபி என்பதால் அவர்களுக்கு அவ்வளவு உயர்ந்த இடம். ஆனால் அவருடைய ராதாகிருஷ்ண குருவோ பதினான்காம் நிலைக்குப் போய்ச் சேர்ந்து விட்டாராம்.

புத்தரே ஆறாம் நிலையில் தொங்கிக் கொண்டிருக்கும் போது ராதாகிருஷ்ண குரு பதினான்காம் நிலையில் இருந்தார். முகம்மதுவா? அவர் மூன்றாம் நிலையில். அதெப்படி ஒரு பஞ்சாபியாகவும் இந்துவாகவும் இருந்து கொண்டு முகம்மதுவுக்கு அதற்கு மேல் பெருமை தருவது? இயேசு நான்காம் நிலையில். ஆனால் அவருடைய ராதாகிருஷ்ண குருவோ பதினான்காம் நிலையில். யாருக்கும்



அவரைப் பற்றி ஒன்றும் தெரியாது. பதினான்காவது நிலை 'சச் கந்த்' எனப்படும் சத்தியத்தை அடைந்துவிட்ட நிலை.

நான் அவரிடம், ''பிற பதின்மூன்று நிலைகள் வேறென்னவாம்?'' என்று கேட்டேன்.

அவர், ''அவை சத்தியத்துக்குக் கொஞ்சம் கொஞ்சம் நெருங்கி வருகின்றன. ஏறக்குறைய சத்தியமானவை,'' என்றார்.

ஏறக்குறைய ஏதாவது சத்தியமாக இருக்க முடியுமா என்ன? ஒன்று அது சத்தியமாக இருக்க வேண்டும். அல்லது சத்தியமில்லாததாக இருக்க வேண்டும். இந்த நாற்காலியில் நான் உட்கார்ந்திருக்கிறேன். அல்லது உட்கார்ந்திருக்க வில்லை. இரண்டில் ஒன்றுதானே உண்மையாக இருக்க முடியும்? ஏறக்குறைய இந்த நாற்காலியில் நான் இருக்க முடியுமா? எனவே ஏறக்குறைய என்பதே பொய்க்கு ஓர் அழகான பெயர் - அவ்வளவுதான்.

பதினான்கு நிலைகளைப் பற்றி என்னுடைய கருத்து என்ன என்று கேட்க வந்திருந்தார். நானோ, ''பதினைந்தாம் நிலைக்குப் போய்விட்டவன் நான். நீ எப்படி இந்த நிலைகளைப் பற்றிக் கேட்கிறாயோ அப்படியேதான் உன்னுடைய ராதாகிருஷ்ண குருவும் என்னிடம் இந்தப் பதினைந்தாவது நிலையைப் பற்றிக் கேட்டுக்கொண்டே இருக்கிறார். எப்படி அந்த நிலைக்கு போய்ச் சேருவதென்று...'' என்றேன்.

வந்தவருக்குக் கோபம் வந்துவிட்டது. ''பதினைந்தாவது நிலை பற்றிக் கேள்விப்பட்டதேயில்லையே,'' என்றார்.

''அதெப்படிக் கேள்விப்பட்டிருக்க முடியும்? உன்னுடைய குருவே பதினான்காவது நிலை வரைக்கும் போனவர்தானே. அதற்குமேல் அவர் எப்படித் தெரிந்து வைத்து உனக்குச் சொல்லிக் கொடுத்திருக்க முடியும்? நானோ பதினைந்தாம் நிலையைப் பார்த்தவன்,'' என்றேன்.



இதெல்லாம் முட்டாள்தனமான பேச்சு. ஆனால் பேசும் விதத்தில் பேசினால் என்னவோ மிகப் பெரிய உண்மைகளாகத் தெரியும்.

புத்தர், ''என்னதான் சாத்திரங்கள் படித்தாலும், என்னதான் சாத்திரங்கள் பேசினாலும் கடைப்பிடிக்காத சூத்திரத்தின் பயனென்ன?'' என்கிறார்.

நம்பிக்கை என்பது வார்த்தைகளின் உலகில் பவனி வருகிறது. விசுவாசம் என்பது ஆழ்ந்த விசுவாசம் என்பதுதான் உன்னைச் செயல்பட வைக்கும். செயல்படுவதில் சிக்கல்கள் இருக்கின்றன. அடுத்த கரை பற்றிப் பேசுவது சுலபம். நீந்திப் போவது கடினம். வரைபடம் கூட இல்லையே. இருக்கிறதோ இல்லையோ அடுத்த கரைபற்றி யாரும் நிச்சயமான எண்ணங்களைக் கொண்டிருப்பது கூட முடிவதில்லை.

சாதாரண நம்பிக்கை மட்டும் போதாது. வாழ்வின் மீதும் உனக்குள் ஒலிக்கும் ஆத்மாவின் குரல் மீதும் மிகப் பெரும் விசுவாசம் இல்லையானால், வரைபடங்கள் வரையப்படாத கடலில் பயணம் செய்வது இயலாத காரியம்.

செயலாக்கம் மட்டுமே விசுவாசத்துக்குச் சாட்சியாக அமையும். செயல் மட்டுமே உன் நிலை மாற்றத்துக்கு வழிவகுக்கும்.

**'பிறன் மந்தை ஆடுகளை**
**எண்ணிக் கொண்டு**
**தன் வழியை மறந்த இடையனோ நீ?'**

புத்தர் அடிக்கடி தன்னுடைய மந்தை மாடுகளை எண்ண மறந்து போய், மற்றவன் மந்தை மாடுகளை எண்ணிக் கொண்டே காலத்தைக் கழிப்பவனைப் பற்றிப் பேசுகிறார். அவன் மந்தையில் பதினைந்து, இவன் மந்தையில் பதின்மூன்று என்று எண்ணிக் கொண்டிருப்பவன்



மந்தையிலோ ஒரு மாடு கூட இருப்பதில்லை. பிறருடைய மந்தை மாடுகளையோ ஆடுகளையோ கணக்குப் பண்ணிக் கொண்டிருப்பதில் என்ன பயன்? உனக்கு எதுவும் கிடைக்கப் போவதில்லை. வெறுமனே காலத்தைக் கழிப்பதுதான்.

ஆனால் இதைத்தான் மதம் என்ற பெயரில் செய்து கொண்டிருக்கிறார்கள். வேதங்கள் என்ன சொல்கின்றன? வேதங்களைப் புரிந்து கொள்ளும் முயற்சியிலேயே உலகம் முழுக்கக் கால விரயம் நடக்கிறது. பைபிளின் பொருளைத் தெரிந்து கொள்ளத் தம் வாழ்நாள் முழுக்கக் கழித்தவர்கள் தான் எத்தனை பேர்? இதுதான் பிறருடைய மந்தை ஆடுகளை எண்ணுவது என்பது.

உனக்குள்ளேயே போய்ச் சேர்ந்து அங்கே ஒரு பைபிள் தோன்றக் காணலாம். இயேசு அப்படித்தானே கேட்டார்? இயேசுவுக்கு உன்மீது எந்த அதிகாரமும் கிடையாது. யாரும் யார் மேலும் அதிகாரம் செலுத்த முடியாது. நித்தியமான சட்டத்துக்கு முன், தம்மாவுக்கு முன் அனைவரும் சமமே. இந்த உலகிலோ யாரும் யாருக்கும் சமமில்லை. இருக்கவும் முடியாது. இந்த உலகில் கம்யூனிஸம் காரிய சாத்தியமேயில்லாத ஒன்று.

ஆனால் உள்ளே இருக்கும் உலகிலோ அனைவரும் சமம். அங்கே கம்யூனிஸம் தவிர வேறு எதுவும் சாத்திய மில்லை. கம்யூனிஸம் என்பதே ஓர் அகநிகழ்வு. புற உலகைக் கம்யூனிஸ்டு உலகமாக ஆக்குவதென்பது வியர்த்தமான முயற்சி. உலக இயல்புகளே அதைத் தடுத்துவிடும்.

சோவியத் ரஷ்யாவில் பழைய வர்க்கங்கள் இப்போது இல்லை. ஆனால் புதிய வர்க்கங்கள் தோன்றிவிட்டன. பழைய வர்க்கங்களின் இடத்தில் புதிய வர்க்கங்கள். முன்பு முதலாளியும் தொழிலாளியுமாக வர்க்கங்கள் இருந்தன. இப்போது ஆள்பவனும் ஆளப்படுகிறவனுமாக இரண்டு



வர்க்கங்கள் இருக்கின்றன. கம்யூனிஸ்ட் கட்சி உறுப்பினர்கள், உறுப்பினரல்லாதவர்கள், கட்சி உறுப்பினர்கள், ஆளப்படுபவர்கள். அதே விளையாட்டுத்தானே வேறு பெயர்களில். வேறென்ன வித்தியாசம்?

புற உலகில் கம்யூனிஸம் சாத்தியமேயில்லை. பேதமே சட்டம். ஒவ்வொருவரும் மற்றவரிடமிருந்து மாறுபட்டவர் தான். யாரோ ஒருவன் உன்னை விடப் பலசாலியாக இருக்கிறான். இன்னொருவன் அறிவாளியாக இருக்கிறான். இன்னுமொருவன் மேதையாக இருக்கிறான்.

மக்கள் ஒருவரிடமிருந்து மற்றவர் வித்தியாசப்படுகிறார் கள்தான். அவர்களைக் கட்டாயப்படுத்தி இணையாக்க முடியாது. அப்படிச் செய்தால் மானுடத்தை அழிப்ப தாகத்தான் போகும். சமத்துவம் என்பது இல்லாத ஒன்று.

ஆனால் அகவுலகுக்குள் நுழைந்து பார்க்கும்போது பேதங்கள் மறைவதைப் பார்க்கிறாய். மையத்தில் பரிபூரணமான சமத்துவம் இருக்கக் காண்கிறாய். கம்யூனிஸம் என்பதே ஓர் அகநிகழ்வாகும்.

அதனால்தான் நான் எனது புதிய ஆசிரமத்தைக் கம்யூன் என்கிறேன். கம்யூனிஸம் என்ற வார்த்தை கம்யூன் என்ற வார்த்தையிலிருந்து வருகிறது. அது ஓர் அக இயல்பு. முடிந்த அளவுக்கு மக்கள் பிறரிடமிருந்து வித்தியாசமாகத்தான் இருப்பார்கள். பார்க்கப்போனால் புற உலகில் ஒருவர் மற்றவரிடமிருந்து வித்தியாசமானவராகத்தான் இருக்க வேண்டும். தனக்கென ஒரு தனித்துவம், தனக்கென ஒரு மணம், தனக்கென ஒரு கையெழுத்து, இப்படியாக.

புறவுலகில் ஒவ்வொருவருக்கும் தனிப்பட்ட அடையாளம் வைத்திருக்கப் பூரண சுதந்திரம் தேவை. அகத்திலோ ஆணவம் மறைந்துவிடுகிறது. குணாதிசயங்கள்



மறைந்து விடுகின்றன. பரிசுத்தமான பிரக்ஞை மட்டுமே இருக்கிறது. இந்த இரண்டு பிரக்ஞைக்குமிடையே உயர்வு தாழ்வு இல்லை.

பிறருடைய ஆடுகளையே எண்ணிக் கொண்டிருக்காதே. உள்ளே போய்ப் பார். சாத்திரங்களைப் படித்துக் கொண்டே இருந்துவிடாதே. பிறருடைய வார்த்தைகளைக் கேட்டுக் கொண்டே இருந்து விடாதே. மார்க்கங்களைக் பங்கிட்டுக் கொள். ஒரு புத்தரைக் கண்டுகொண்டால் நீ பாக்கியவான். ஒரு புத்தரின் மேல் பக்தி வைத்தால் நீ ஆசீர்வதிக்கப்பட்டவன்.

அவருடைய வார்த்தைகளைக் கேட்டுக்கொண்டே இருந்துவிடாதே. அவருடைய வழியில் நட. மார்க்கத்தைப் பங்கிட்டுக்கொள். அவர் எங்கே பார்த்துத் தன் விரலை நீட்டியிருக்கிறாரோ அங்கே பார். அவருடைய விரலை வணங்க ஆரம்பித்துவிடாதே. தலையைத் தூக்கி நிலவைப் பார்.

'கொஞ்சமே படி.
கொஞ்சமே பேசு.
ஆயின் நெறிவழி நட.'

மறுபடி நினைவு படுத்த வேண்டும். சட்டம் என்ற வார்த்தையை ஆங்கிலத்தில் தவறாகப் புரிந்து கொள்கிறோம். அது தம்மாவின் மொழிபெயர்ப்பு. நித்தியமான நெறி. பிரபஞ்ச நெறி. சட்டப்படி நட எனும்போது இந்தியக் குற்றவியல் சடடப்படி நடந்து கொள் என்பதல்ல அர்த்தம். சட்டப்படி நட என்றால் உன்னுடைய இயல்பின் படி நடந்து கொள் என்று பொருள்.

'உணர்ச்சி வெறுப்பு மூடம் -
பழையன அவை, விட்டு விலகு.
மெய்யை உணர். நிம்மதி காண்.
காட்டிய நெறியைக் கைக்கொள்.'



பழையன அவை, விட்டுவிலகு... கடந்த காலத்திலிருந்து உன்னைப் பிரித்தெடுத்துக் கொள்ளவேண்டும். புதியதொரு வகையில் நீ வாழ வேண்டும். ஒரே வீச்சில் பழையதிலிருந்து பிரிந்து வந்துவிட வேண்டும். அதுதான் சன்னியாசம் என்பது. வாளின் ஒரே வீச்சில் கடந்த காலத்திலிருந்து உன்னைப் பிரித்தெடுத்துக் கொள்வது.

பழையன என்ன என்கிறாயா? ஆசையின் வழி, வெறுப்பின் வழி, முட்டாள்தனம் பாவிய பாதை. வெறுப் பின் வழி நடந்து கொள்ளாதே. எதன் மேலும் ஆசை கொள் ளாதே. நம்பிக்கை வைக்காதே. முட்டாள்தனமாக இருக் காதே. இதைச் செய்ய முடியுமானால் நீ தெரிந்து கொள்ளாத உலகம் நோக்கிக் குதித்துவிட்டாய் என்று பொருள்.

பழையது பழகிப்போனது. அதற்குப் பழகிப் போயிருக்கிறாய். அதை விட்டு விடும்போது முதலில் சிரமமாகத்தான் இருக்கும். வழி வகை தெரியாத திகைப்பு இருக்கும். என்ன செய்வது என்பதோ அதை எப்படிச் செய்வது என்பதோ தெரியாது திகைப்பாய். ஏதோ ஒரு வெற்றிடத்தில் இருப்பதைப் போல இருக்கும். அந்த வெற்றிடத்தைத் தாண்டிப் போக வேண்டித்தான் இருக்கிறது. வலியிருக்கத்தான் செய்யும். சத்தியத்தைப் பெற்றுக் கொள்ள ஒரு விலையைக் கொடுக்கத்தானே வேண்டியிருக்கிறது.

அந்த வெற்றிடத்தைத் தாண்டியபின் சத்தியத்தையும் நிம்மதியையும் காண்கிறாய். சத்தியம் இன்னதெனத் தெரிந்து போகிறது. நிம்மதியைத் தொடர்ந்து சத்தியம் நிழல் போல வந்து சேர்கிறது.

நெறியைக் கைக்கொள். புத்தர் திரும்பத் திரும்ப வலியுறுத்துகிறார். பிறருடைய வார்த்தைகளைக்



கேட்பதாலேயே இது நடந்துவிடாது. பிறருடைய நூல்களைப் படிப்பதாலேயே இது நடந்துவிடாது.

**காட்டிய நெறியைக் கைக்கொள்.**
**ஏஸ் தம்மோ ஸனந்தனோ.**

இன்றைக்கு இது போதும்.





தம்மபதம் – ஓஷோவின் சொற்பொழிவுகள்

# அதிர்ஷ்டம், அவ்வளவு தான்!

# 4





முதல் வினா

அன்புக்குரிய குருவே,

போன வருடம் ஹாலந்துக்குத்
திரும்பியதிலிருந்தே
ஏதோ ஒரு பரபரப்பின் பேரில்
உங்களைப் பற்றியே
பேசிக் கொண்டிருந்துவிட்டேன்.
இந்தப் பரபரப்பு நீங்கள் தந்தது.
என்றாலும் அதே சமயம்
அது என் இயல்பின் ஒரு பகுதியும் தான்.

எத்தனை டச்சுக்காரர்களைச்
சன்னியாசிகளாக்க முடியுமோ
அத்தனை பேரையும் ஆக்கிவிடத்தான்
வேண்டும் என்ற இந்தப் பரபரப்பு,
ஒரு வினாடி நேரத்தையும் வீணாக்காது
செயல்பட என்னைத் தூண்டியதால்
விளையாட்டாக எடுத்துக் கொள்ளாமல்
ஆத்மார்த்தமாக இந்தக் காரியத்தைக்
கைக் கொண்டிருக்கிறேன்.



என்னுடைய முனைப்பே
எனக்குத் துயரைத் தருவதாகிவிட்டது.
அலட்சியப்படுத்தினார்கள்.
கேலி செய்தார்கள்.
குறிப்பாக இந்தப் பத்திரிகைக்காரர்கள்.
பார்க்கப் போனால்
என் காரியத்தில் நான் தோற்றுவிடவில்லை.
என்றாலும் ஒரு காரியம் என்ற அளவில்
அது சாதிக்கப்பட்ட உணர்வாக
அமையவில்லை. இந்தப் பரபரப்பை
ஆனந்தத்தோடும் சாவகாசத்தோடும்
என்னால் இணைத்துப் பார்க்க முடியவில்லை.

என்னதான் நீங்களே
உருவாக்கிவிட்டதென்றாலும்
இந்தப் பரபரப்பைப் பற்றிக்
கொஞ்சம் சொல்லுங்களேன்.

**தேவா அம்ரீதோ,** எதையும் விளையாட்டாக எடுத்துக் கொள்வதைப் பற்றிச் சொல்லியிருக்கிறேன். அது மிக மெதுவாகத்தான் நடக்கும். பல ஜென்மங்களில் சேர்த்து வைத்துக் கொண்டிருக்கிறாயே அந்த இறுக்கத்திலிருந்து திடீரென வெளியே குதித்துத் தப்பி விட முடியாது. அந்த இறுக்கத்துக்கென ஒரு வலிவு வந்துவிட்டது.

சாவகாசமான மனோ நிலை என்பது சாதாரண விஷயமல்ல. நமக்குச் சொல்லித் தந்திருப்பதெல்லாம் இறுக்கமும் உளைச்சலும் கவலையும் துயரமுமே எனும் போது, சாவசாகமென்பது மிகச் சிக்கலான விஷயங்களில் ஒன்றாகிவிட்டது. சமுதாயம் இறுக்கத்தையே தன் மையத்தில் கொண்டிருக்கிறது.



விளையாட்டுத்தனமாக இருக்கலாம் என்போர் குழந்தைகளே. வளர்ந்து ஆளாகிப் போனவர்களல்ல. நான் சொல்வது நீங்கள் மறுபடி குழந்தைகளாகிப் போக வேண்டும் என்பதுதான். மறுபடியும் விளையாட்டுத்தனமானவர்கள் ஆகிப் போக வேண்டும் என்பது. இது ஓர் இமாலயத் தாண்டல். புரிந்து கொள்வதற்குக் கொஞ்ச காலமாகும்.

என்னைப் பொறுத்தவரை காரியார்த்தமாகவும் உன்னளவிலும் சாதனை படைத்துவிட்டாய். எதிர்பாராத விதமாக வென்று விட்டாய். வேறு யாராவது உன்னுடைய இடத்தில் இருந்திருந்தால் பைத்தியம்தான் பிடித்துப் போயிருக்கும்.

பரபரப்பாக இருந்திருக்கிறாய். பரபரப்பு என்பது இயற்கையானது. என்னைப் புரிந்து கொண்ட எவரும், உணர்ந்து கொண்ட எவரும் ஒரு கணத்தையும் இழக்கலாகாது என்ற பரபரப்பு அடைகிறார்கள். என் செய்தியைப் பரப்ப வேண்டும் என்ற பரபரப்புத்தான்.

தாங்க முடியாத ஓர் அவசர உந்துதல். இது இயல்பானது. என் மேல் உனக்குப் பிரியம் வந்துவிட்டதென்றால் பிறரும் என்னிடம் வந்து சேரவேண்டும் என்று விரும்புகிறாய். பல நூறு ஆண்டுகளுக்கு ஒரு முறையே கிடைக்கக் கூடிய சந்தர்ப்பத்தை இழந்துவிடக் கூடாதல்லவா?

பொக்கிஷம் ஒன்றைக் கண்டெடுத்தவன் அன்புடையவனாய் இருந்தால் பெற்றதைப் பகிர்ந்து கொள்வான். அதுவும் அந்தப் பொக்கிஷம் எப்போது வேண்டுமானாலும் மறைந்து விடலாம் எனும்போது அந்த அவசரத்தையும், பரபரப்பையும் புரிந்து கொள்ள முடிகிறது. கூரையேறிக் கூவவேண்டும் போல இருக்கிறதென்கிறாய்.



பிறர் அதை எப்படி எடுத்துக் கொள்வார்கள் என்பது சர்வ நிச்சயமானதும் தீர்மானிக்கப்பட்டது மாகி விடுகிறது. எத்தனைக்கு என்னிடம் பிறர் வந்து சேரவேண்டும் என்று நீ நினைக்கிறாயோ, அத்தனைக்கு என்னிடமிருந்து தப்பித்து ஓட வேண்டும் என்ற உணர்வும் பிறருக்கு வந்துவிடுகிறது.

உன்னிடமிருந்து நீ சொல்வதிலிருந்தும்தான். அப்படித் தப்பிக்க ஒரே வழி உன்னைக் கேலி செய்வதும், கிண்ட லடிப்பதும், பைத்தியக்காரனென்பதும்தான்.

அப்படித்தான் அவர்கள் தம்மைக் காத்துக் கொள்ள வேண்டியிருக்கிறது. நீ சொல்வதைப் புரிந்து கொண்டு கேட்டுக் கொண்டால், அவர்களுடைய இருப்பை உன் சொற்கள் நிரப்பிவிட்டால், வெள்ளமென வந்து பாய விட்டால் அவர்களும் அதே பிடிக்குள் தாம் இருப்பதைத் தெரிந்து கொள்வார்கள். உணர்ந்து கொண்டபின் அதிலிருந்து தப்பிப்பது சிரமமாகிவிடும்.

எனவே ஆரம்பத்திலிருந்தே உன்னைக் கேலி செய்வார்கள். விமரிசிப்பார்கள். எதிர்ப்பார்கள். உன்னைப் பார்த்துச் சிரிப்பார்கள். நீ தவறு செய்கிறாய் என்று உணர வைக்க என்னென்ன செய்ய முடியுமோ அத்தயையும் செய்வார்கள்.

ஆனால் அவர்கள் தோற்றுப் போனார்கள். தோற்று விட்டதாக உன்னை அவர்கள் நம்ப வைக்க முடியவில்லை. எந்த அளவுக்கு கிண்டல் செய்தார்களோ, விமரிசித்தார் களோ, எள்ளி நகைத்தார்களோ அதே அளவுக்கு நீ அவர்களை ஏற்றுக் கொள்ள வைக்கிறாய்.

காரியார்த்தமாக நீ வென்றுவிட்டாய். ஆயிரக் கணக்கானோரை ஏற்றுக் கொள்ள வைத்துவிட்டாய். நீ ஹாலந்துக்குப் போனதிலிருந்து நிறைய டச்சுக்காரர்கள்



வந்துவிட்டார்கள். வந்து கொண்டிருக்கிறார்கள். இனியும் வருவார்கள். நல்ல ஒரு தாக்கத்தை ஏற்படுத்தியிருக்கிறாய். பலருடைய நெஞ்சையும் தொட்டுக் கலக்கிவிட்டாய். உன்னுடைய அக வளர்ச்சியிலும் இது மிகப் பெரியதோர் அனுபவமாகிவிட்டது.

நீ ஏற்படுத்திவிட்ட தாக்கத்தின் விளைவு இன்னமும் உன்னைப் பெருமைப்பட்டுக் கொள்ள வைக்கவில்லை. வைத்திருந்தால் ஆணவப்பட்டிருப்பாய். ஆனால் உன்னை எளிமையானவனாக்கி விட்டது. நீ செய்து முடித்துவிட்டது உணர்வளவில் தெரிந்து கொண்ட ஒரு சாதனையாக இல்லாமல் இருக்கலாம். ஆனால் அதற்கு மிக நெருங்கிப் போய்விட்டது. நானும் உணர்வளவில் சாதனையை எதிர்பார்க்கவில்லை. அப்படி எதிர்பார்ப்பதும் அதிகம்தான்.

எங்கே உனக்குப் பைத்தியம் பிடித்துப் போய்விடுமோ என்று எனக்குக் கொஞ்சம் பயமாகக் கூட இருந்தது. அந்த அளவுக்கு பரபரப்பாயிருந்தாய். பரவசப்பட்டிருந்தாய். என் மீது அதீத அபிமானம் கொண்டிருந்தாய். அதைக் கண்டபோது எனக்கு உள்ளூற அச்சம்தான். மிகுந்த பயங்களோடு உன்னை அனுப்பி வைத்திருந்தேன்.

நீயோ சோதனையில் தேர்ந்துவிட்டாய். திரும்பப் பத்திரமாக வந்து சேர்ந்துவிட்டாய். பத்திரிகைகளுக்காகவும் வானொலிக்காகவும் டெலிவிஷனுக்காகவும் நீ பேசியது ஏற்படுத்திய கொந்தளிப்பு, உன்னுடைய அன்பின் பெருக்கத்தைக் காட்டியது. உன் வீட்டை நீ கண்டு பிடித்துவிட்டாய் என்பதைப் புலப்படுத்தியது.

அநேகர் நீ சொன்னதை ஏற்றுக் கொண்டார்கள். ஏற்றுக் கொள்ளாத பலரும் அதைப் பற்றிச் சிந்திக்க ஆரம்பித்துவிட்டார்கள். உன்னைக் கேலி செய்தவர்கள் கூட, எதிர்த்தவர்களும் கூடக் கவனிக்க ஆரம்பித்துவிட்டார்கள்.



இல்லையென்றால் யார் கவலைப்படப் போகிறார் கள்?

பைத்தியக்காரன் என்று எடுத்துக் கொண்டிருந் தால் ஏன் கிண்டல் செய்ய வேண்டும்? எதிர்க்க வேண்டும்? பைத்தியக் காரனைப் பார்த்து யாராவது சிரிப்பார்களா என்ன? கேலி செய்கிறார்களா என்ன? பைத்தியக்காரன் என்று தெரிந்திருப்பதே போதுமே. அத்தோடு எல்லாமும் முடிந்து போகிறதே.

நீ ஆரம்பித்து வைத்துவிட்ட சங்கிலி தொடர்ந்து நீண்டு போகப் போகிறது. உன்னளவுக்கே பல சன்னியாசிகளும் பரபரப்படைய வேண்டும். பரவசமடைய வேண்டும். அவரவர் நாட்டுக்குப் போய்ச் செய்திகளைப் பரப்ப வேண்டும். எல்லோரும் கூரையேறிக் கூவ வேண்டும்.

அன்புடையவர்கள் பைத்தியம் போலத்தான் தெரிகிறார் கள். பைத்தியமேதான். அன்பு ஒரு பைத்தியம். ஆனால் சாதாரணமான இவ்வுலகத்து விஷயங்கள் பாற்பட்ட உணர்வை விட உயர்ந்தது. அன்புக்குக் கண்ணில்லை. ஆனால் இல்லாத கண் கொண்டு காணாததையெல்லாம் காண முடிகிறது.

அன்பானது நாம் உருவாக்கி வைத்திருக்கும் சாதாரண உலகத்தின் ஒரு பகுதியல்ல. அதிலிருந்து அன்பை நாம் வெளியேற்றிவிட்டோம். எனவே அன்பு வைக்கும்போது, ஒரு குருவின் மீது மரியாதை கொள்ளும்போது, ஒரு புத்தரிடம் பக்தி வைக்கும்போது அதற்கு மிக்கதோர் அன்பு இல்லாமல் போகிறது. உன்னைப் பைத்தியமாக அடிக்கிறது. அனைத்தையும் கடந்திருப்பதன் ஒரு பகுதியாக்குகிறது. யாருமே அதைச் சொல்லக் கேட்டு நம்ப முடியாது.

பிறகெப்படி அம்ரிதோ பிறர் உன்னை நம்பப் போகிறார்கள்? நீ அதை அனுபவித்தவன், அவர்கள் இன்னும்



அனுபவிக்காதவர்கள். நீ கண்டு பிடித்துவிட்டாய் என்பதும், அவர்கள் இன்னமும் கண்டுபிடிக்க வில்லை என்பதும் அவர்களுடைய ஆணவத்துக்கு இட்ட சவாலாகிவிட்டது. பிறகென்ன? சுலபமான வழி அதை மறுத்துவிடுவதுதான்.

காணாததைப் பற்றிப் பேசுகிறாய் என்பது, மாயை என்பது, மனமயக்கத்துக்கு ஆட்பட்டவன் என்பது, போதை மருந்து விழுங்கியவன் என்பது- அப்படிச் சொல்லித் திரிவதில் அவர்களுக்கு ஓர் ஆறுதல். ஒருவிதமான சௌகரியம். நீ உண்மையாகவே அதைக் கண்டெடுத்து விட்டாயென்றால் அவர்கள் மிகவும் அசௌகரியமாக உணர்கிறார்கள். அவர்களுடைய வாழ்வு பெரும் தோல்வியாகி விடுகிறது.

அது ஓர் அலாதி அனுபவம். விளையாட்டுத்தன்மாக இருக்க முடியாது என்பது தெரிகிறது. அது சிரமம். அடுத்த முறை அனுப்பும்போது இன்னமும் அதிகமாக விளையாட்டுத்தனம் கொண்டவனாக இருக்கப் போகிறாய். திரும்பிப் போக உனக்கு விருப்பமில்லை என்பது எனக்குத் தெரிகிறது. போதும் போதுமென்கிறாய். ஆனால் இன்னும் ஒரே முறை போய்ப் பாரேன். அடுத்த முறை விளையாட்டாக இருக்கப் போகிறது. எல்லோரும் இயல்பாகச் சிரிக்கப் போகிறார்கள். நீ இன்னமும் பைத்தியமாகிப் போய்விட்டதாகச் சொல்லப் போகிறார்கள். என்றாலும் உன்னோடு சிரித்து, ஆடிப்பாடப் போகிறார்கள்.

இந்தத் தடவை நீ ஏராளமாக வாதம் செய்ய வேண்டியிருந்தது. அடுத்த தடவை எந்த வாதப் பிரதிவாதமும் இருக்கப் போவதில்லை. பாட வேண்டியது, நடனமிட வேண்டியது, தழுவிக் கொள்ள வேண்டியது. அவ்வளவே.



நானோ மிகவும் ஆனந்தமாக இருக்கிறேன். நடந்து போனதெல்லாம் காரியார்த்தமாகச் சிறந்ததாகவே இருந்து விட்டது. உனக்கும் பிறருக்கும் நன்மையாக இருந்து விட்டது. உன்னை ஒரு குறிப்பிட்ட பணி செய்ய அனுப்பியதும் ஒரு வழி வகைதான். உன்னுடைய அக வளர்ச்சியில் முன் வைத்த ஓர் அடி. நீ வென்று விட்டாய்.

தோற்பதற்குச் சாத்தியங்கள் பல இருந்திருக்கின்றன என்றாலும்...

நினைவுக்கு வருகிறது...

ஜார்ஜ் குர்ட்ஜீஃபின் பிரதம சீடர் பி.டி.ஓஸ்பென்ஸ்கி. ஒரு முறை சீடரை லண்டனிலிருந்து வெகு தூரத்தில் இருக்கும் காகஸஸ் மலையில் இருந்த ஓரிடத்துக்கு வரச் சொன்னார். சுலபமான பிரயாணமல்ல. ஓஸ்பென்ஸ்கி திவாலாகிப் போயிருந்தார். பயணத்துக்குப் போதுமான பணவசதியில்லை. வீடில்லை. துணைக்கு யாருமில்லை. பயணமோ வெகு நீண்ட பயணம். வழியில் ஆபத்துகளும் அதிகம்.

அது ரஷ்யப் புரட்சி நடந்து கொண்டிருந்த காலம். புரட்சியின் களத்தில் மாட்டிக் கொண்டால் அவ்வளவுதான். எங்கே பார்த்தாலும் கொலை. எங்கும் அமைதியில்லை. குர்ட்ஜீஃப் கூட ரஷ்யாவை விட்டுப் போய் மலைகளில் ஒளிந்து கொள்ள வேண்டியிருந்தது.

அங்கே போக அது சரியான தருணமல்ல. ஆபத்துகள் அதிகம். ரயில்கள் சரியாக ஓடுவதில்லை. சாலைகளைத் துண்டித்து வைத்திருந்தார்கள். பாலங்களை உடைத்து வைத்திருந்தார்கள். எங்கெங்கும் கொந்தளிப்பு.



ஆனால் குரு வரச் சொல்லும்போது சீடன் போயாக வேண்டுமே. தன்னிடமிருந்ததை யெல்லாம் விற்று பலரிடமும் கடன் வாங்கிக் கொண்டு ஆயிரக்கணக்கான மைல் பிரயாணம் செய்தார்.

குர்ட்ஜீஃப் இருந்த இடம் போய்ச் சேர முப்பது நாட்கள். களைத்துப் போய்க் கிழிந்த உடைகளோடு ஓஸ்பென்ஸ்கி நினைத்துக் கொண்டார்: ''என்ன இது நான் செய்வது? எல்லோரும் ரஷ்யாவை விட்டு விலகி ஓடிக் கொண்டிருக் கிறார்கள். நானோ அங்கே போய்க் கொண்டிருக்கிறேனே.''

கம்யூனிஸ்டுகளின் கருங்காலிப் பட்டியலில் அவருடைய பெயர் இருந்தது. எல்லோருக்கும் தெரிந்தவர். பிரபலமான கணித மேதையும் எழுத்தாளருமாக இருந்தவரின் சீடர். அவருடைய குருவின் புத்தகங்கள் பல மொழிகளிலும் பெயர்க்கப்பட்டு இருந்தன. திரும்ப ரஷ்யாவுக்குப் போவதென்பது பெரிய ஆபத்து. பிடித்துக் கொன்று விடலாம். சிறைக்குள் போட்டுவிடலாம். கம்யூனிஸத்துக்கு விரோதியல்லவா? கம்யூனிஸம் முட்டாள்தனம், கம்யூனிஸ்டாக இருப்பவன் எவனுக்கும் சுயபுத்தி கிடையாது என்று சொன்னவர்.

என்றாலும் ஓஸ்பென்ஸ்கி போனார். கடைசியில் குர்ட்ஜீஃபிடம் போய்ச் சேர்ந்தபோது, ''திரும்பி லண்டனுக்குப் போய்விடு. போய்ப் பிழைப்பைப் பார்?'' என்றார் குரு.

அடாடா, அது ரொம்பத்தான் மோசம். ஓஸ்பென்ஸ் கிக்கு மயக்கமே வந்துவிடும் போலிருந்தது. இதுவரை நம்பவே முடியாது போலிருக்கிறதே. இது என்ன வேடிக்கை? உயிரோடு விளையாடிவிட்டு இப்போது, ''உடனே திரும்பிப் போய்விடு. அதற்கு மேல் சொல்வதற்கு ஒன்றுமில்லை.'' என்கிறாரே.



திரும்பிப் போனார். போனவர் குர்ட்ஜீஃபுக்கு எதிராகத் திரும்பினார். அவருடைய முதல் விரோதியாகிப் போனார். அதுதான் குருவின் மிகப் பெரிய உத்தி. அவரை நம்பியிருந்தால் ஓஸ்பென்ஸ்கி பெரிய ஞானியாகியிருப்பார். சந்தர்ப்பம் தவறிப் போய்விட்டது. அஞ்ஞானியாகவே இறந்தார்.

எல்லாமும் சரியாக இருக்கும்போது நம்புவதும் சுலபமாகத்தான் இருக்கிறது. ஆனால் அந்த நம்பிக்கையில் கால்காசுப் பயனும் இருப்பதில்லை.

எல்லாம் நெறிகெட்டுப் போகும்போதும், சிரமங்கள் சூழும்போதும், ஒவ்வோர் அடியும் வலிக்கும்போதும், எதுவுமே இனி பலிக்காது என்று தோன்றும்போதும் கூட நம்பிக்கை இழக்காமல் இருக்க முடியும். எப்படிப் பார்த்தாலும் நம்பிக்கை என்பது முட்டாள்தனம் எனும்போது, நம்பிக்கை கொண்டிருந்தால் அந்த நம்பிக்கையே நிலைமாற்றம் கொண்டு வரும் சக்தியாகிறது.

அம்ரிதோ, உன்னை மறுபடியும் அனுப்பி வைக்கத்தான் போகிறேன். ஒன்றை நினைவில் வைத்துக் கொள். நான் இப்படித்தான் அல்லது அப்படித்தான் என்று எதுவும் கிடையாது. இரண்டாவது தடவை, மூன்றாவது தடவை என்று உன்னை அனுப்பி வைக்கலாம். என்ன நடக்கிறது என்பதைப் பொறுத்தது அது. ஆனால் இப்போதைக்கு உன்னை மறுபடி அனுப்பி வைக்கத்தான் போகிறேன். அது நிச்சயம்.

ஆனால் இம்முறை உன் காரியம் ஒரு விளையாட்டாக இருக்கப் போகிறது.



இரண்டாவது கேள்வி

அன்புக்குரிய குருவே,

எதற்கு உலகில் இத்தனை மதங்கள்?
ஏன் அவை எப்போதும்
தமக்குள் பூசலிட்டுக் கொண்டே
இருக்க வேண்டும்?

**கீதம்,** இத்தனை மதங்கள் இருப்பதென்பது இயல்பானதுதான். பார்க்கப் போனால் இன்னும் அதிகமாக இருக்க வேண்டும். ஒவ்வொரு மனிதனுக்கும் ஒரு மதம். இப்போது இருப்பதோ ஏறத்தாழ முன்னூறு மதங்கள். மனிதர்களோ எத்தனையோ கோடிப்பேர்.

ஒவ்வொருவனும் தனிப்பட்டவன். பிறரிடமிருந்து வேறானவன். எனவே ஒவ்வொருவருக்கும் ஒவ்வொரு மதம் இருக்க வேண்டும். அது எப்படி இரண்டு பேருக்கு பொதுவாக ஒரு மதம் இருக்க முடியும்? கண்டிப்பாக முடியாது. ஆனால் முடியாததைத்தானே விரும்பிக் கேட்டுக் கொண்டு இருந்திருக்கிறோம். ஒவ்வொருவருக்கும் கடவுளைச் சென்று சேர எனத் தனிப்பட்ட ஒரு மார்க்கம் இருக்க வேண்டும். பிறர் எவரும் அதில் போக முடியாது எனுமளவுக்கு அவருடையதேயான மார்க்கம்.

அதனால் புத்தர்கள் கைகாட்டிவிடுவதோடு சரி. குறிப்புத் தருவதோடு சரி. எல்லா விவரமும் போட்ட வரைபடத்தை உன் கையில் தரமாட்டார்கள். இங்கொன்று அங்கொன்று என்று சில குறிப்புகள். அவ்வளவே. அந்தக் குறிப்புகளை யாரும் மிகவும் வினயமாக எடுத்துக் கொள்ளக் கூடாது. விளையாட்டுத்தனமாக ஏற்றுக் கொள்ள வேண்டும். மதவெறியனாகிவிடக் கூடாது. ஆகிவிட்டால் ஆன்மிக வாதியாயிருக்க முடியாது.



ஆன்மிகவாதி மிக எளிமையானவன். எந்தக் குறிப்பையும் கவனித்துக் கொண்டிருப்பவ்ன். ஒரு தேர்தலுடையவன். புதிய பிரதேசங்களில் அலைபவன். ஒவ்வொன்றிலும் ஒரு புதியதைக் கண்டு கொள்கிறவன்.

பைபிளா, வேதங்களா, தம்மபதமா? எதுவானாலும் சரிதான். புத்தரின் வார்த்தைகளைக் கவனித்துக் கேட்டுக் கொள்வான். இயேசுவா, ஸாரதூஸ்ட்ராவா, யாரானாலும் சரிதான். காது கொடுத்துக் கேட்டுக் கொள்வான். எல்லாவற்றிலிருந்தும் கற்றுக் கொள்வான்.

என்றாலும் தானாகவே இருப்பான். யாரையும் நகலெடுத்தவனல்ல. யாருடைய கார்பன் காப்பியுமல்ல. தன்னுடைய தகைமையைக் கைவிட மாட்டான். எளியவன். உண்மையானவன். தகைமையானவன். யாருடைய போலியுமல்ல. எவரையும் தொடர்பவனல்ல. எவரிடமும் அன்பு கொண்டவன்.

புத்தர் மீது அன்பு வைப்பான். ஆனால் அவருக்குப் பின்னால் போக மாட்டான். சில்லரை விவகாரங்களில் அவரைத் தொடர மாட்டான். அது எப்படி புத்தரை ஒவ்வொரு சின்னச் சின்ன விஷயத்திலும் பின்பற்றுவது முடியுமென்கிறாய்? அவன் தன்னளவில் பிறரிடமிருந்து முழுக்க மாறுபட்டவன்.

நீ முன்பு எப்போதும் இப்போதும் இருக்கும் நீயாக இருந்ததில்லை. உன்னைப் போல வேறு யாரும் எப்போதும் இருந்ததில்லை. இனி இருக்கப் போவதும் இல்லை. எனவே உன் மதம் உன்னுடையதேயாக இருக்க வேண்டியிருக்கிறது. உன்னுடைய சத்தியம், உன்னுடையதேயாக இருக்க வேண்டியிருக்கிறது.

அதுதான் சத்தியத்தின் அழகே. அது பிரத்தியேகமானதொரு வடிவில் உன்னை வந்தடைகிறது.



அப்போது, ''இது கடவுள் எனக்கெனப் பிரத்தியேகமாகத் தந்த வரம்,'' என்பாய். அதனால்தான் அத்தனை மதங்கள். ஒவ்வொன்றும் அழகுதான். இன்னமும் பல வேண்டும்தான். பலரும் ஒரே மாதம் வேண்டுமென்று துடிக்கிறார்கள்.

அது சரியான முட்டாள் தனம். ஒரே மதத்தை ஸ்தாபிக்க யாராலும் முடியாது. ஒரே மதம் என்ற பெயரில் ஏதாவது ஒன்றை எல்லோர் மீதும் திணிக்கலாம். ஆனால் அவர்களுடைய ஆத்மா அழிந்து போகும். சுதந்திரம் தொலைந்து போகும். அவர்களுடைய வாழ்வு முடமாகிப் போய் அவர்கள் வளர்ச்சி விளங்காமல் போய்விடும்.

பல மொழிகளைப் போல மதங்களும் பல இருக்கின்றன. பல விதங்கள் எனும்போது பல அழகுகள். உனக்கேற்ற ஒன்றை நீ தெரிந்தெடுத்துக் கொள்ளலாம். பிறப்பால் மதத்தை நிர்ணயிக்க முடியாது. அப்படிச் செய்து கொள்கிறவன் அடிமுட்டாள். ஓர் இந்துவாகவோ ஒரு கிறிஸ்துவனாகவோ யாரும் பிறப்பெடுக்க முடியாது.

பிறப்புக்கும் மதத்துக்கும் எந்தத் தொடர்பும் கிடையாது. மதம் என்பதே ஒரு தேடுதல். இந்துக்களுக்கு குழந்தையாக நீ பிறக்கலாம். அது ஒரு பக்கம். ஆனால் உன் மீது உன் பெற்றோருக்கு உண்மையான பாசம் இருக்குமானால் உன்னை அவர்கள் ஓர் இந்துவாக மாற்றிவிடக் கூடாது. தமக்குத் தெரிந்ததை எல்லாம் தம் அனுபவங்களை பற்றியெல்லாம் உன்னிடம் சொல்வார்கள். ஆனாலும் உன்னைச் சுதந்திரமாக இருக்க விட்டுவிடுவார்கள்.

உன்னிடம், ''விழிப்போடு இரு. நன்கு கவனி. பக்குபவப்பட்ட மனத்தனாக இரு. பக்குவப்பட்டவன் என்று தெரியும்போது, முடிவெடுக்கலாம் என்று நம்பும்போது உனது மதத்தைத் தேர்ந்தெடு,'' என்று சொல்வார்கள்.



பள்ளிவாசலுக்குப் போ. தேவாலயத்துக்குப் போ. கோயிலுக்குப் போ. குருத்வாராவுக்குப் போ. எதையும் கவனித்து வை. எல்லாப் பூக்களையும் பார். கடவுளின் பூங்காவில்தான் எத்தனை எத்தனை பூக்கள். அத்தனையும் அழகுதான். ரோஜாவென்ன, தாமரையென்ன, பிற ஆயிரத்தொரு மலர்கள் என்ன என்று அத்தனை பூக்கள்.

உனக்குப் பிடித்த மணத்தை நீயே போய்த் தேர்ந் தெடுத்துக் கொள். நீயே தேர்ந்தெடுக்காத வரை உன்னிடம் அர்ப்பணிப்பு இருக்காது. அதனிடம் சரணடைவது முடியாது.

இந்த உலகில் ஆன்மிகம் இல்லாமல போய் விட்டதற்குக் காரணமே மதங்கள் திணிக்கப்படுவதுதான். பெற்றோர்கள், மதஸ்தாபனங்கள், அரசாங்கம், நாடு என்று எல்லாமும் எல்லோரும் குழந்தை மீது ஏதோ ஒரு மதத்தை திணிக்க அப்படி அவசரப்படுகிறார்கள்.

என்ன முட்டாள்தனம். என்ன அறிவீனம். ஆன்மிகத்துக்குத் தேவை பக்குவம். புரிதல். அதுவும் தேர்ந்தெடுக்கும் முன்பே வேண்டிய புரிதலும் பக்குவமும்.

யாரும் ஓர் இந்துவாகவோ முகம்மதியனாகவோ பார்ஸியாகவோ பிறப்பதில்லை. பிறக்கும்போது ஒவ்வொரு வரும் பரிசுத்தமாகப் பிறக்கிறார்கள். களங்க மற்றுப் பிறக்கிறார்கள். பிறகு தேடலும் கண்டுபிடிப்பும்தான். வாழ்வின் அழகே தேடுதலில்தான் இருக்கிறது.

எனவே அவசரப்பட்டு எதிலும் தேங்கி நின்று விடாதே. இருக்கும் எந்த ஒரு மதமும் உனக்குத் திருப்தியளிக்காமல் போகலாம். ஆனால் அதுவும் நல்லதற்குத்தான். ஏனெனில் அது ஒரு புதிய மதம் உனக்குள் பிறக்கப் போவதன் அடையாளம். இன்னுமொரு மதம் என்றால் இந்த உலகத்துக்கு இன்னுமொரு புதிய சம்பத்து. இன்னுமொரு புதிய மரம். இன்னுமொரு புதிய நிகழ்வு.



புத்தர் ஒரு புதிய மதத்தைக் கொண்டு வருகிறார். பௌத்தம் இருந்திராத உலகம், அந்தச் சம்பத்து இல்லாதிருந்துவிட்ட உலகம்தான். தன் பெற்றோருடைய மதத்தை புத்தர் ஏற்றுக் கொண்டிருந்திருக்கலாம். அப்படிச் செய்திருந்தால் இந்த உலகம் இன்னமும் வறுமையைத்தான் கண்டிருக்கும். கடவுளை நோக்கிய அந்த மதிப்புடைய புதியதொரு மார்க்கத்தை இந்த உலகம் இழந்திருக்கும். கடவுளை நோக்கித் திறக்கும் அந்தப் புதியதொரு கதவு இல்லாமலேயே போயிருக்கும்.

புத்தர் ஒரு புதிய கதவை, ஒரு புதிய நோக்கை, ஒரு புதிய ஊடுருவும் பார்வையைத் திறந்து வைத்தார். இல்லையென்றால் அவரும் இன்னுமொரு இந்துவாகவே இருந்திருப்பார். வெடித்துக் கிளம்பினார். எல்லா ஆன்மிகவாதிகளும் வெடித்துக் கிளம்புகிறவர்கள்தான்.

தனிப்பட்ட முறையில் தேடிக் கிளம்பினார். எல்லா ஆன்மிகவாதிகளும் தேடுகிறவர்கள்தான். சாகசத்தை நாடுபவர்கள். பல நூறு ஆண்டுகளாக, தாய் தந்தையர், அவர்களுடைய தாய் தந்தையர் என்று எல்லோரும் பின்பற்றிய மார்க்கத்தைப் பின்பற்றுவது சுலபம். வசதியும் கூட.

எதையும் தேடி ஓட வேண்டியதில்லை. கேள்விகள் கேட்டுக் கொள்ள வேண்டியதில்லை. சத்தியத்தைத் தேடும் முயற்சியைக் கைக்கொள்ள வேண்டியதில்லை.

யாரோ ஒரு ஞானி எப்போதோ கண்டுபிடித்துவிட்ட ஒன்றை, அவரிடமிருந்து இரவல் வாங்கிக் கொள்ள வேண்டியதுதான். ஆனால் இரவலாக வாங்கிக் கொண்டது சத்தியமாக முடியாது. இரவலாக வாங்கிக் கொண்ட சத்தியம் ஒரு பொய்.



புத்தர் தேடிப் போனார். தேடுவது கடினமாக இருந்தது. தன் அரசு, உயிர் என அனைத்தையும் பணயம் வைத்தார். அவ்வளவு பெரும் பணயங்களை வைக்கும்போது வாழ்வு உன் மீது புதிய பொக்கிஷங்களைச் சொரிகிறது. ஒரு புதிய மரம், ஒரு புதிய அர்த்தம், ஒரு புதிய திருஷ்டி - இந்த உலகத்தில் ஜனிக்கிறது.

முகம்மது தன் பெற்றோரின் மதத்தைப் பின்பற்றியிருக்க லாம். இயேசு யூத மதத்தைப் பின்பற்றி இருக்கலாம். ஒரு புத்தனாகி விடு. ஒரு இயேசுவாகி விடு. ஒரு முகம்மதுவாகிவிடு.

ஒரு பௌத்தனாக இருக்காதே. ஒரு முகம்மதியனாக இருக்காதே. ஒரு கிறிஸ்துவனாக இருக்காதே. நீயாகத் தேடிப் பார். பிறரது நகலாக இருக்காதே. அப்படியிருந்தால் நீ ஒரு போலியாகித்தான் விடுவாய்.

போலியாகிப் போனவன் ஆன்மிகவாதியாக முடியாது. ஆன்மிகவாதியாக வேண்டுமானால் மிகப் பெரும் தகைமையே வேண்டும். மிகவும் உண்மையுடையவனாக இருக்க வேண்டும்.

எனவே கீதம், முன்னூறு மதங்கள் இருப்பதும் நல்லதுதான். இன்னமும் அதிகமாக இருக்க வேண்டும். எனக்கு வேண்டியது பலதரப்பட்ட மதங்கள். சாத்தியமான ஒவ்வொரு விதத்திலும் இவ்வுலகம் சம்பத்துடையதாக இருக்க வேண்டும்.

உலகம் முழுக்க ஒரே வகை மலர் இருக்க வேண்டு மென்கிறாயா? ரோஜாப்பூக்கள் மட்டும் அல்லது தாமரை மட்டும்... அப்படியான உலகம் வெறிதாகிப் போயிவிடுமில்லையா? உலகம் முழுக்க ஒரே மொழி இருக்க வேண்டுமென்கிறாயா? அப்படியென்றால் பல மொழிகளும் நுண்மை இல்லாமல் போய்விடுமே.



சில விஷயங்களை அரேபிய மொழியன்றி வேறெந்த மொழியிலும் சொல்ல முடியாது. வேறு சில விஷயங்களை ஹீப்ரூ மொழியிலன்றி வேறெந்த மொழியிலும் சொல்ல முடியாது. இன்னும் சிலவற்றைச் சீன மொழியிலன்றி வேறெந்த மொழியிலும் சொல்ல முடியாது. எனவே இந்த உலகில் ஒரே மொழிதான் என்றால் பல அற்புதமான விஷயங்கள் சொல்லப் படாமலேயே போயிருக்கும்.

தாவோ சூ சீன மொழி மட்டுமே பேசத் தெரிந்திருந்தார். இதைப் பற்றி நீ ஆழமாகச் சிந்தித்துப் பார்த்திருக்க மாட்டாய். தாவோ சூ தன்னுடைய 'தாவோ தெ சிங்' கை ஆங்கிலத்தில் எழுதியிருந்தால் எப்படி இருந்திருக்குமென்கிறாய்? அந்த நூல் வித்தியாசமாகத்தான் இருந்திருக்கும். மிக மதிப்பு வாய்ந்த பல விஷயங்கள் காணாமல் போயிருக்கும். அதனுடைய வண்ணமே மாறிப் போயிருக்கும். சீன மொழியில் அது கண்ட பல சுவாரசியங்கள் இல்லாமல் போயிருக்கும்.

சீன மொழியில் எழுத்துக்கள் இல்லை. குறியீடுகள் தான் உண்டு. எழுத்துக்களன்றிக் குறியீடுகள் மட்டுமே இருப்பதால் ஒவ்வொரு குறியீடும் பல ஆயிரம் விதங்களில் விளக்கம் பெறும் குறியீடுகளில் அந்த நெகிழ்ச்சியுண்டு. கவித்துவம் உண்டு. ஒவ்வொரு குறியீடும் பலதையும் குறிக்கும். அதில் விஞ்ஞானம் ஏதுமில்லை. விஞ்ஞானக் கட்டுரைகளைச் சீன மொழியில் எழுதுவது கடினம். அதற்கு இருக்கவே இருக்கிறது ஆங்கிலம்.

சீன மொழி இல்லாமலிருந்திருந்தால் லாவோ சூ இந்த உலகத்துக்குத் தந்த பலவற்றையும் தந்திருக்க முடியாது. ஒவ்வொரு குறியீட்டுக்கும் பல பொருட்கள். பல கோணங்களில் பல பொருட்கலவை.



உன்னுடைய மனநிலைபாற்பட்டு ஒரு குறிப்பிட்ட பொருளை நீ தேர்ந்து கொள்ளலாம். ஒவ்வொரு குறியீட்டுக்கும் பல நிலைகளில் பொருள் உண்டு. உன்னுடைய புரிதல் வளர வளர அந்தக் குறியீடுகளின் பொருளும் மாறிக் கொண்டே இருக்கும்.

எனவே கீழ்த்திசை நாடுகளில் மேற்றிசையில் படிப்பதிலிருந்து முழுக்க வேறுபட்ட முறை இருந்திருக்கிறது. பெர்னார்ட் ஷாவின் ஒரே புத்தகத்தை மறுபடி மறுபடி படிப்பார்களா என்ன? அப்படித்தானென்றால் உனக்குப் பைத்தியம்தான் பிடித்திருக்க வேண்டும்.

என்ன பயனென்கிறாய்? ஒரு முறை படித்து முடித்து விட்டால் அவ்வளவுதான். அதனால் மெல்லிய அட்டை போட்ட புத்தகங்கள் வந்தன. படித்துவிட்டுத் தூக்கி எறிந்துவிட. கீழ்த் திசையிலோ வேறுபட்டதொரு முறையில் படித்தார்கள். ஒரே புத்தகத்தை வாழ்நாள் முழுக்கத் திருப்பித் திருப்பிப் படித்தார்கள்.

தாவோ தெ சிங் பேப்பர் பேக்கில் வெளியிட முடியாத ஒரு புத்தகம். இபபோது அதையும்தான் செய்கிறார்கள். கூடாது, கூடவே கூடாது. அதைப் படிக்கும் முறையே வேறு.

அதில் பல அடுக்குகளில் பொருள் பொதிந்திருக்கிறது. முதல் முதலில் படிக்கும்போது மேலோட்டமாகப் படிக்கிறாய். எனவே அதுவும் இன்னுமொரு புத்தகம்தான். சில மாதங்களைப் படித்ததைச் சிந்திப்பதில் கழித்த பின் மறுபடி படிக்கிறாய். இன்னுமொரு பொருள் தோன்றுகிறது. இன்னும் சில மாதச் சிந்தனை. திரும்பப் படிக்கும்போது மூன்றாவதொரு பொருள் தெரிகிறது. இப்படியே வாழ்நாள் முழுக்கப் படிக்கும் புத்தகமாகி விடுகிறது.

இப்படியாக வற்றாத பொருள் தரும் ஒரு புத்தகமாகி விடுகிறது. ஏஸ் தம்மோ சனந்தனோ. அனைத்தையும்



கடந்தது நித்தியமாகிவிடுகிறது. தீராததாகி விடுகிறது. அது ஒரு கதைப் புத்தகமல்ல, ஒரு முறை படித்து முடித்து விடுவதற்கு.

ஒரு முறை மட்டுமே படிப்பதில் எதையும் சாதிக்க முடியாது. ஓர் அறிமுகம் கிடைக்கிறது. அவ்வளவே. அதனுடைய தாத்பரியங்களைத் தெரிந்து கொள்ள வாழ்நாள் முழுக்கத் தேவையாகிறது.

எனவே எல்லா மொழிகளும்தான் வேண்டும். ஆங்கிலத்தில் ஒரு விதத் தீர்மானமிருக்கிறது. ஒவ்வொரு வார்த்தைக்கும் ஒரு குறிப்பிட்ட விவரணை உண்டு. அப்படியில்லாத மொழியில் விஞ்ஞானத்தை விளக்க முடியாது.

இந்தியாவில் விஞ்ஞானம் வளராததற்குக் காரணம் மொழிதான். சமஸ்கிருதம் ஒரு கவிதானுபவ மொழி. பாடலாம். இசையிருக்கிறது. பாராயணம் செய்யலாம். ஆனால் வாய்ப்பாடுகளாக்க முடியாது. நிறையப் பாடல்களுண்டு. ஆனால் அதில் விவாதங்களில்லை. வெளிப்படுத்துவதுண்டு. ஆனால் தர்க்க வாதத்தின் மூலமாக இல்லை.

அரேபிய மொழி பல வகையிலும் நம்மைக் கொள்ளை கொள்கிறது. பாராயணம் செய்வதில் நெஞ்சை நிறைக்கிறது. பாராயணத்தை நிறுத்தி விடு. நெஞ்சுக்குள்ளே தொடர்ந்து கொண்டிருக்கும். பாலைவன மொழி என்பதால் அரேபிய மொழி நின்று நிலைக்கக் கூடியதாக இருக்கிறது.

பாலைவனத்து மொழிகளுக்கே ஓர் அமானுஷ்யம் உண்டு. வெகு தூரத்தில் இருப்பவரைப் பாலைவனத்துத் தூரங்களுக்கு இடையே கூப்பிடவும் தோதாக இருக்கிறது. ஒருவிதமான மெட்டோடு குரல் கொடுத்தால் வெகு தூரம் கேட்கும்.



அதனால்தான் குரானின் குறிப்பிட்ட அழகு இருக்க வந்தது. அதை ஒரு புத்தகத்தைப் போலப் படிப்பவர்கள் அதன் பெரும்பகுதியைப் புரிந்து கொள்ள முடியாது. அது பாடப்பட வேண்டியது. அந்தப் பாடலுக்கேற்ப நடனமாட வேண்டும். அப்போதுதான் அதனுடைய மையத்தை அடைய முடியும்.

நிறைய விஷயங்களைச் சொல்லித் தெரிவித்துப் புரிய வைக்க வேண்டியிருப்பதாலேயே உலகில் பல மொழிகள் இருக்கின்றன. உலகம் வளர வளர இன்னும் அதிக மொழிகள் தேவை. அப்போது புதியவற்றை உணர, அனுபவிக்கப் பலரும் இருக்கப் போவதால் பல மொழிகளும் தேவைதான்.

மதம் என்பதே முடிந்து முடிவாகிப் போனதைக் கண்டு தெரிவிக்க இருக்கிறது. கீதம், பல மதங்கள் இருப்பதில் எதுவும் தவறில்லை. அவை ஒன்றுடன் ஒன்று சதா சச்சரவிட்டுக் கொண்டிருப்பது தவறுதான். அது எதைக் காட்டுகிறது என்றால் மதங்களெனப்படுபவை தமது ஆன்மிகச் சாரத்தை இழந்துவிட்டு அரசியலாகிப் போனதைத்தான். அம்மதங்களில் ஜீவனுள்ள குருக்களன்றிச் சடங்குகளைப் பிடித்துத் தொங்கிக் கொண்டிருக்கிற பூசாரிகள் மலிந்து விட்டதைத்தான்.

அதிக எண்ணிக்கை அதிக பலம். அதனால் அவர்கள் சதா சச்சரவிட்டுக் கொண்டு மதமாற்றத்தைக் கைக் கொண்டு திரிகிறார்கள். உலகத்தில் கிறிஸ்துவர்கள் அதிகமென்றால் கிறிஸ்துவத்துக்குப் பலம். வாடிகனில் இருக்கும் போப்புக்கு அதிக அதிகாரம். இந்துக்கள் அதிகமென்றால் அவர்களே பலசாலிகள்.

எண்ணிக்கை தருவது பலம். எனவே கிறிஸ்துவர் களுக்கு எல்லோரும் கிறிஸ்துவர்களாக வேண்டும்.



முகம்மதியர்களுக்கு எல்லோரும் முகம்மதியர்களாக வேண்டும். அவர்களுடைய வழிமுறைகள் மாறலாம். ஆனால் அவர்களுடைய ஆசையும் எண்ணமும் விழுந்து கிடப்பது இந்த அரசியல் அதிகார வேட்கையெனும் சேற்றில்தான். சச்சரவுகள் தோன்றுவது இயற்கை. அரசியலே சச்சரவிடுவதுதான். சச்சரவுக்கும் ஆன்மிகத்துக்கும் எந்தத் தொடர்புமில்லை.

எத்தனை மதங்கள் சாத்தியமோ அத்தனை மதங்கள் இருக்க வேண்டும். அவற்றுக்கிடையே மோதல்களுக் காகவோ என்ற கேள்வியே அபத்தம். மதத்தைப் பொறுத்த அளவில் விருப்பமிருக்கிறதா இல்லையா என்பதுதான் கேள்வி.

எனக்கு ரோஜாப்பூக்களைப் பிடிக்குமென்றால் நீ, ''இல்லையில்லை. துலுக்கமல்லிதான் உனக்குப் பிடித்திருக்க வேண்டும்,'' என்று சொல்வதில்லை. என் விருப்பத்தை அப்படியே ஏற்றுக் கொள்கிறாய். உனக்குத் துலுக்கமல்லிதான் பிடிக்குமென்றால் சரிதான். இதில் வாக்குவாதம் ஏது? சச்சரவேது? நாமிருவரும் சண்டையிட்டுக் கொள்ள வேண்டியதில்லை. புத்தியைத் தீட்டி உரசிக் கொள்ள வேண்டியதில்லை. எனக்குத் துலுக்கமல்லி பிடிக்குமென்பதாலேயே உனக்கு ரோஜா பிடித்துப் போவதைப் பற்றி நான் எந்த வருத்தமும் படவேண்டிய அவசியமில்லை.

விரும்புவதும் விரும்பாததும் சொந்த விஷயங்கள். ஒருவருக்கு பகவத் கீதையும், மற்றொருவருக்குக் குரானும், இன்னுமொருவருக்கு தம்மபதமும் பிடித்துப் போகலாம். சரிதான். இதில் எந்தக் குற்றமோ குறையுமோ இல்லை.

நமது விருப்பங்களை நமக்குள் பங்கிட்டுக் கொள்ளலாம். ஆனால் பிறரை வற்புறுத்தலாகாது. நமது மந்தைக்குள் வர வலுக்கட்டாயப்படுத்தக் கூடாது.



ஆமாம், பங்கிட்டுக் கொள். அதில் அன்பு வெளிப்படுகிறது. ஒரு மூலாதாரத்தைக் கண்டு பிடித்துவிட்டாயா? அதைப் பகிர்ந்து கொள். அப்படிப் பங்கிட்டுக் கொள்வது அன்பின் பாற்பட்டிருக்க வேண்டும். அரசியல் ஆதாயத்துக்காக அல்ல. பிறரைச் சம்மதிக்க வைத்து நமது மந்தைக்குள் இழுத்துக் கொள்வதல்ல.

மதம் என்ற பெயரில் இந்த அசிங்கங்கள் நடந்து கொண்டிருந்தன. துப்பாக்கி முனையில் மதமாற்றம். பணத்தைக் காட்டி மதமாற்றம். லஞ்சம் கொடுத்து மதமாற்றம். சரி தவறு என்பதேயில்லை. கிறிஸ்துவனாகிவிடு என்பதே கோஷம். முகம்மதியனாகிவிடு. இந்துவாகிவிடு. இப்படியேதான் பலரையும் சேர்த்து இன்னும் அதிகாரத்தைப் பெருக்கிக் கொள். யாரும் விட்டு நீங்கிவிடாமல் பார்த்துக் கொள். இதைத்தானே செய்து கொண்டிருந்துவிட்டாய்?

முல்லா நஸ்ருதீன் மகன் தந்தையிடம், ''அப்பா, ஒரு கிறிஸ்தவன் முஸ்லிமானால் அவரை என்ன வென்று கூப்பிடுவது?'' என்று கேட்டார்.

முல்லா புன்சிரிப்போடு, ''அவனுக்குப் புத்தி வந்துவிட்டது. புரிந்து கொண்டான். தெரிந்து கொண்டான். தெளிவு பெற்றுவிட்டான். பொய்யைப் பொய்யெனவும் மெய்யை மெய்யெனவும் தெரிந்து கொண்டான்,'' என்றார்.

மகன் திரும்ப, ''ஒரு முஸ்லிம் கிறிஸ்துவனானால்...'' என்றான்.

முல்லா கோபத்தோடு, ''துரோகி, ஏமாற்றிவிட்டான். முட்டாள்,'' என்றார்.



ஒரு கிறிஸ்துவர் முகம்மதியரானால் தெளிவு பெற்றுவிட்டவர், அறிவுடையவர். ஒரு முகம்மதியன் ஒரு கிறிஸ்துவனானால் துரோகி, முட்டாள். ஒரு கிறிஸ்துவனைக் கேட்டாலும் இதே கதைதான்.

ஓர் இந்து கிறிஸ்துவரானார். இந்துக்கள் அவருக்கு விரோதியாகிவிட்டார்கள். துரோகம் பண்ணிவிட்டானே! ஆனால் கிஸ்துவர்களோ அவரை ஒரு ஞானியாக்கி விட்டார்கள். சத்தியத்தை நிரூபித்திருப்பதால் அவர் இயேசுவின் மறுபிறப்பு என்று கொண்டாடும் அளவுக்கு போனார்கள். இந்துக்களோ அவரைக் கொல்லத் துடித்தார்கள். திடீரென ஒருநாள் அவர் காணாமல் போய்விட்டார். உடல் கூடக் கிடைக்கவில்லை. இந்துக்கள் அவரைக் கொன்றிருக்க வேண்டும். சாது சுந்தர் சிங்குக்கு என்ன நடந்தது என்பது இன்றளவும் ஒரு பெரிய மர்மம்தான்.

எனக்குத் தெரிந்த இந்து ஒருவர் சமணரானார். இந்துக்களிடம் இருந்து ஏக எதிர்ப்பு. எப்படியெப்படியோ அவரைக் கொல்ல முயன்றார்களாம். முடியவில்லை. அவர் ஒரு பெரிய சமண ஆசாரியரானார். சிகரத்தின் உச்சிக்கே போனார். காரணம் என்னவென்கிறாயா? அவருடைய அடிப்படை இயல்பு என்ன என்கிறாயா? அடிப்படையில் இந்துவாக இருந்தவர் சமணரானார். ''சமணம் இந்து மதத்தை விடச் சிறந்தது என்பதை நிரூபித்தார். அப்படி இல்லையென்றால் அவர் ஏன் நமது மதத்துக்கு வரவேண்டும்?'' என்றார்கள். பிறகென்ன? சச்சரவுதான்.

கத்தோலிக்கர் ஒருவர் யூதர் ஒருவரை மதமாற்றம் செய்ய முயல்கிறார். அவரிடம் போய், ''கத்தோலிக்கனாகிவிட்டால் கடவுள் உன் பிரார்த்தனைகளைக் கண்டிப்பாகக் காது



கொடுத்துக் கேட்பார். பாதிரியார் பிஷப்பைக் கொண்டு வருவார். பிஷப் கார்டினலைக் கொண்டு வருவார். கார்டினல் உன்னைப் போப்பிடம் கொண்டு போவார். வாடிகனின் வானத்தில் இருக்கும் ஓட்டை வழியாக போப் உன்னை சொர்க்கத்துக்குள் தள்ளிவிட்டுவிடுவார். அங்கிருந்து ஸெயிண்ட் பீட்டர் கன்னி மேரியிடம் அழைத்துப் போவார். மேரி மாதா உன் சார்பில் இயேசுவிடம் பேசுவார். இயேசு உனக்காகக் கடவுளிடம் சிபாரிசு செய்வார்,'' என்றார்.

யூதர் அவர் சொன்னதை அப்படியே திருப்பிச் சொல்லி, ''நீ சொன்னது சரியாகத்தான் இருக்க வேண்டும். சொர்க்கத்தில் அத்தனை பேரும் கழிக்கும் மலத்தை என்ன செய்கிறார்கள் என்று நான் வியந்ததுண்டு. அத்தனையையும் வாடிகன் வானத்து ஓட்டை வழியாகக் கொட்டி விடுகிறார்கள். போப் அதை வாங்கி கார்டினலிடம் கொடுக்க, கார்டினல் பிஷப்பிடம் கொடுக்க, பிஷப் பாதிரியார்களிடம் கொடுக்க, அப்படித்தான் நீங்களும் அதை வாங்கிக் கொள்கிறீர்கள். இப்போது அதை எனக்கும் கொஞ்சம் தந்துவிட்டுப்போக முயற்சி செய்கிறாய்,'' என்றார்.

மதங்கள் மிகவும் நல்லவை. இன்னமும் அதிக மதங்கள் வேண்டும். ஆனால் சச்சரவிட்டுக் கொள்ளும் மதங்களில் ஆன்மிகம் இல்லை. சச்சரவிடுவதாலேயே அவை அரசியல் இயக்கங்களாகி விடுகின்றன. காலங்காலமாக அரசியல் வாதிகளும் பூசாரிகளும் ரகசியமான ஒரு கூட்டு வைத்துக் கொண்டேயிருக்கிறார்கள். பூசாரிகள் மூலமாக அரசியல் வாதிகள் என்றைக்குமே மக்கள் மேல் ஆதிக்கம் செலுத்திக் கொண்டே வந்திருக்கிறார்கள்.

இருவருமே கொடுமைக்காரர்கள், சுரண்டல்வர்க்கத்தி னர். ஒரே வியாபாரத்தில் கூட்டாளிகள். ஒருவருக்கொருவர்



துணை. அரசியல்வாதி அதிகாரத்தை வைத்துக்கொண்டு பூசாரிக்குத் துணை போகிறான். பூசாரி சொல்வதை எல்லோரும் கேட்கிறார்களே. அவனை எல்லோரும் கும்பிடுகிறார்களே. அவனுடைய வாக்கே கடவுளின் வாக்கு என்கிறார்களே. அரசியல் வாதிக்குத் துணை போகப் பூசாரிக்கு சௌகரியமாகப் போய்விட்டது.

புத்தரால் மட்டுமே பௌத்தத்தைப் பெரியதொரு மதமாக ஆக்க முடியவில்லை. அசோகர் என்ற மன்னன்தான் அதைப் பெரியதொரு மதமாக்க முடிந்தது. புத்தராலல்ல கோடிக்கணக்கானோர் பௌத்தரானது. அவருடைய காலத்தில் மிகச் சிலரே அவர் காட்டிய கடுமையான நெறியைக் கடைப்பிடிக்க முன்வந்தார்கள். அவரோடு சரியான முறையில் தொடர்பு கொண்டு புரிந்து கொள்ள வந்தார்கள். காரணம் அவர் காட்டிய வழியில் போனால் சிரமங்கள் பட வேண்டியிருந்ததுதான். பிறரது கேலியைக் கேட்டுக் கொள்ள வேண்டியிருந்தது. கடுமையான எதிர்ப்பை எதிர் கொள்ள வேண்டியிருந்தது. இத்தனைக்கும் காரணம் ஸ்தாபன ரீதியிலான இந்து மதம் அவரை எதிர்த்தது தான்.

பௌத்தம் உலக மதங்களுள் ஒன்றானது புத்தரால் அல்ல. பேரரசன் அசோகரால். பௌத்த பிக்குகள் அசோகரோடு கை கோர்த்துக் கொண்டபோது பௌத்தம் உலக மதமாயிற்று. ஆசியா முழுக்க மதம் மாற்றப்பட்டது. அசோகரின் அதிகாரம் நிலைத்திருக்க பௌத்தர்கள் உதவினார்கள். அசோகரும் பௌத்தர்கள் மேலும் மேலும் அதிகாரம் பெற உதவினார்.

இயேசு கிறிஸ்துவாலல்ல கிறித்துவம் உலக மதங்களில் ஒன்றானது. இயேசு கிறிஸ்து பன்னிரண்டு சீடர்களோடு சில நூறு பேர் தன்னைப் பின்பற்ற இருந்த மிகவும் தனிமையானவர். அந்தச் சீடர்களும் கிறிஸ்துவைச்



சிலுவையில் அறைந்தபோது சிதறி ஓடிவிட்டார்கள். இவரைப் பின்பற்றியவர்கள் இவ்வரை மறந்து போனார்கள். அவரைப் பற்றிப் பேசினாலே அபாயம் என்பதால் பேசுவது கூட இல்லை.

அவர்கள் சிலுவையில் இருந்த இயேசுவின் முகத்தில் காறித் துப்பினார்கள். ''நாங்கள் இயேசுவுக்குப் பரம விரோதிகள்,'' என்று பிறரிடம் காட்டிக் கொள்ள வேண்டியே அப்படிச் செய்தார்கள். அந்த ஆள்தான் சாகப் போகிறானே, இன்னும் அவரோடு தமக்குத் தொடர்பிருக்கிறது என்றால் இவர்கள் பத்திரமாக இருக்க முடியாதல்லவா? பிழைக்க வேண்டியிருக்கிறதே. உயிரைக் கையில் பிடித்துக் கொண்டிருக்க வேண்டியிருக்கிறதே. அந்த ஆளுக்குத் தாம் எதிரிகள் என்று எப்படியாவது காட்டத்தான் வேண்டியிருந்தது.

இயேசு இறந்து கொண்டிருந்தபோது அவரை மறுத்துப் பேசினார்கள். அவர் மீது மண் அள்ளிப் போட்டார்கள். கற்களை வீசினார்கள். காறித் துப்பினார்கள். எதற்காக? ''பாருங்களப்பா, நாங்கள் என்னவோ அவரைப் பின்பற்றுகிறவர்கள் என்று சொல்லக் கேட்டீர்களே, நீங்கள் கேள்விப்பட்டது எல்லாம் வதந்தி என்பதை நிரூபிக்க இது போதாதா? நீங்கள் எந்த அளவுக்கு அவருக்கு எதிரிகளோ அதற்கு மேலும் அவரை எதிர்ப்பவர்கள்தான் நாங்கள்.'' என்று சொல்லாமல் உணர்த்தினார்கள்.

எதிரிகளல்ல, நண்பர்கள்தான் அவர் மீது காறித் துப்பியவர்கள். தாமாக இயேசு கிறிஸ்து உலகம் பூராவும் தெரிந்தவராக ஆகிவிடவில்லை. ரோமானியப் பேரரசர்களும் கிறிஸ்துவப் பாதிரிமார்களும் கரங்கோத்துக் கொண்ட பின் கிறிஸ்துவம் பரவியது. இதுதான் வேடிக்கை. இயேசுவைச் சிலுவையில் அறைந்ததே ஒரு ரோமானியப் பேரரசன்.



போண்டயஸ் பைலேட் ரோமானிய அரசாங்கத்தின் கையாள். அவ்வளவுதான். ரோம் கிறிஸ்துவத்துக்கு மையமாகும் என்று யாரும் கனவு கூடக் கண்டிருக்க மாட்டார்கள். வரலாறு எப்படிப் போகிறது பார்த்தீர்களா? இயேசுவைக் கொலை செய்தபோது யாராவது ரோம் போப்பாண்டவரின் மாளிகையாகும் என்று கனவாவது கண்டிருப்பார்களா? ஆனால் அப்படித்தான் நடந்தது. பூசாரிகள் பேரரசன் கான்ஸ்டன்டைனோடும் பிறரோடும் கரங்கோர்த்துக் கொண்டபோது கிறிஸ்துவம் உலகளாவிய இயக்கமானது. கிறிஸ்துவம், பௌத்தம், சமணம், இந்து மதம் என்று அனைத்துமே அரசியலைச் சார்ந்திருந்தன. அவற்றை இனியும் மதங்களெனலாகாது. மதங்களின் பெயரால் விளையாடுகிறார்கள். அதற்கு அவை விளையாட்டுக் களங்களாகிவிட்டன.

இந்த உலகில் இருக்கும் ஒவ்வொருவனுக்கும் ஒரு மதம் என்றொரு காலம் வரும்போது பூசாரிகளுக்குத் தேவை இல்லாமல் போய்விடும். அப்படி மட்டுமே இவர்களைத் தொலைத்துக் கட்ட முடியும். உனக்கென ஒரு பிரத்தியேக மதம் இருக்கிறது என்றால் பூசாரி எதற்கு? நீயே பூசாரி. நீயே பின்பற்றுகிறவன். நீயே எல்லாமும்.

உன்னுடைய உட்குரலைக் கேள். புத்தர் சொல்வதும் உன் இயல்பைப் பின்பற்று என்பதுதானே, உனக்காக யாரும் வக்காலத்து வாங்கவேண்டியதில்லை.

அனைவருக்கும் ஒரே மதம் என்ற முட்டாள்தன மெல்லாம் போதும், போதும். ஒரே மதம் என்றால் சச்சரவுகள் இருக்காது என்று அப்படிப்பட்ட உலக மதத்தை ஸ்தாபிக்க முன்னாளில் முயன்றிருக்கிறார்கள். ஆனால் அது காரிய சாத்தியமே இல்லை. அப்படியே ஒரு மதத்தை உலகம் பூராவும் கொண்டு வந்து விட்டாலும் அதிலும்



புரோடஸ்டண்டுகள், கத்தோலிக்கர்கள் என்று பல கிளைகள் தோன்றித் துளிர்விட்டுத் தழைத்துவிடும். பிறகென்ன? பழைய குருடி கதவைத் திறந்த கதைதான். மறுபடியும் சச்சரவுகள். காரணமா? ஒவ்வொரு வரது தேவைகளும் புரிதல்களும் பிறருடையதிடமிருந்து வேறுபட்டிருப்பதுதான்.

கேட்ட கதை ஒன்று நினைவுக்கு வருகிறது.

ஓர் அழகான இளம்பெண் லண்டனிலிருந்து வீடு வந்து சேர்ந்தாள். அவள் ஒரு சிறு கிராமத்துக் கத்தோலிக்கக் குடும்பத்துப் பெண். நான்கைந்து வருடம் லண்டனில் இருந்து பெரும் பணக்காரியாகியிருந்தாள். பெற்றோரைப் பார்க்க வந்திருந்தாள். அம்மாவுக்குத் தன் கண்களையே நம்ப முடியவில்லை.

''எப்படி இவ்வளவு பெரிய பணக்காரியானாய்? அடாடா, என்ன உடுப்பு, வைர மோதிரம், அழகான கார்!'' என்று வியந்தாள்.

அவளோ, ''அம்மா, நான் ஒரு ப்ராஸ்டிட்யூட் ஆகிவிட்டேன்,'' என்றாள்.

கேட்டவுடனே அம்மா மயங்கி விழுந்தாள். மயக்கம் தெளிந்தவுடன், ''என்ன சொன்னாய்?'' என்று கேட்டாள்.

மகள், ''அம்மா, நான் ஒரு ப்ராஸ்டிட்யூட் ஆகி விட்டேன்,'' என்றாள்.

''அடாடா, ஒரு ப்ரோடஸ்டண்ட் என்றல்லவா என் காதில் விழுந்தது,'' என்றாள்.

ஒரு விலைமாதாகிப் போவது பரவாயில்லை. ஒரு ப்ரோடஸ்டண்ட் ஆவதோ? பிறகென்ன? மறுபடி அதே சச்சரவுகள் தான். சிறிய அளவினரே கடைப்பிடிக்கும் மதம்



சமணம். அந்தச் சமணத்துக்குள்ளேயும் கூடப் பல பிரிவுகள், உட்பிரிவுகள். பார்க்கப் போனால் இன்னமும் ஒவ்வொருவருக்கும் அவரவருக்கேயான கடவுட் கோட்பாடு இருக்க வேண்டியதன் அவசியத்தையோ, ஒவ்வொருவருக்கும் கடவுளை உணர்தற்கென்று தனிப்பட்ட நெறிமுறைகள் இருக்கின்றன என்பதையோ நாம் தெரிந்து கொள்ளவில்லை.

ஒருவனை ஒரு விலைமாது தன் அறைக்குக் கூட்டிப் போனாள். காலேஜில் வாங்கிய பதக்கங்களும் பட்டங் களுமாகச் சுவரை நிறைத்திருந்தன. அவனுக்கு ஒரே ஆச்சரியம்.

''இவையெல்லாம் நீ வாங்கியவையா?'' என்று கேட்டான்.

அவள் விட்டேற்றியாக, ''ஆமாம். கொலம்பியாப் பல்கலைக் கழகத்தில் முதுநிலைப் பட்டம். ஆக்ஸ்போர்டு பல்கலைக் கழகம் ஷேக்ஸ்பியரைப் பற்றிய எனது கட்டுரைக்கு பி.எச்டி. பட்டம் தந்தது.'' என்றாள்.

அவனால் நம்பவே முடியவில்லை. ''அது சரி, அப்படிப்பட்ட ஒருத்தி இந்தத் தொழிலுக்கு வந்ததெப்படி?'' என்றான்.

''எனக்குத் தெரியாது. அதிர்ஷ்டம் அவ்வளவுதான்.'' என்றாள்.

ஒவ்வொருவரும் ஒவ்வொன்றையும் வெவ்வேறு வகைகளில் புரிந்து கொள்கிறார்கள். வெவ்வேறு கோணத்தில் பார்க்கிறார்கள். வெவ்வேறு வகைகளில் வியாக்கியானம் தருகிறார்கள். அவர்களுக்கு அதற்கான சுதந்திரம் இருக்க வேண்டும்தான்.

மூன்றாவது வினா



அன்புக்குரிய குருவே,

என்னுடைய பெற்றோர்கள்
25 வருடம் இந்தியாவில்
கிறித்துவத் தொண்டாற்றியிருக்கிறார்கள்.
என்னுடைய தம்பி
ஒரு போதை மருந்துக்கு அடிமையாகிப் போனான்.
தங்கையோ
மனமாரப் பொய் சொல்கிறவளாகிவிட்டாள்.
நானா?
சிரித்தாலே வாய் வலிக்கும்
எனுமளவுக்கு இறுக்கமானவன்.
எப்படி நான் இங்கே வந்து சேர்ந்தது?

**பிரேம் பாரிஜாத்,** உன் அதிர்ஷ்டம் அவ்வளவுதான். வேறென்ன. பரவசத்தில் வாழ்ந்து பரவசத்திலேயே முடியப் போகிறாய். எண்பத்தேழு வயதான ஒருவன் பத்தொன்பது வயதுப் பெண்ணொருத்தியைக் கல்யாணம் செய்து கொண்ட கதை தெரியுமா உனக்கு?

இன்னதெனத் தெரியாத வியாதியால் செத்துப் போனான். பரவசம். அதுதான் வியாதி. மூன்று நாட்களாயிற்று. அவனுடைய முகத்துப் புன்முறுவலை வழித்தெறிய.

உனக்கும் அப்படித்தான் நடக்கப் போகிறது. வாழ்வது முறுவலில். எனவே முறுவலை வழித்தெறிவது பிறருக்குச் சிரமமாகத்தான் இருக்கப் போகிறது.

கிறிஸ்துவத் தொண்டருக்குப் பிறந்ததாலேயே நீ இங்கு வந்து சேர்ந்திருக்கிறாய் என்றும் சொல்லலாம். சரி, இந்து மதம் என்றாலும் சரி, இஸ்லாம் ஆனாலும் சரி, மதத்



தொண்டர்கள் பெற்ற மக்கள் அவர்களுடைய முட்டாள்தனத்தைச் சகித்துக் கொள்ள முடிவதில்லை. பூசாரி பெற்ற மகனாக இருப்பதைப் பற்றி ஒன்று நிச்சயம். பூசாரிகள் கடவுளை நம்புவதில்லை என்பது அவர்களுக்குத் தெளிவாகத் தெரிந்துவிடுகிறது. அது அவர்களுடைய தொழில். பக்தியும் நம்பிக்கையும் எல்லாமும் அவர்களுக்கு ஒரு பாசாங்கு. அவ்வளவுதான்.

பூசாரிக்கு மக்களாகப் பிறப்பதே அரியதொரு வாய்ப்புத்தான். அவர்கள் போதிப்பதெல்லாம் வெறும் வார்த்தைகள். அவர்களே அவற்றைப் பின்பற்றுவதில்லை. இதெல்லாம் பூசாரிகளின் குழந்தைகளுக்குத் தெளிவாகத் தெரிந்து விடுகிறது. குழந்தையாக இருப்பதே எதையும் நுணுகிப் பார்த்துத் தெரிந்து கொள்ளும் புலனுடைய தாயிருப்பதுதான். பூசாரிகளின் மக்கள் ஆன்மிகவாதிகள் எனப்படுவோரின் போலித்தனத்தை அருகிருந்து சர்வ நிச்சயமாகத் தெரிந்து கொள்ள முடிகிறது.

பூசாரிகள் குடும்பத்தில் ஒருவராக இருந்து கொண்டு, பூசாரிகள் தான் உலகத்திலேயே மிகப் பெரிய நாத்திகர்கள் என்பதைத் தெரிந்து கொள்ளாமல் இருக்க முடியாது.

பூசாரிகள் மதத்தை வைத்தக் கொண்டு சுரண்டுகிறவர் கள். அவர்கள் மக்களின் நம்பிக்கையைச் சுரண்டுகிறார்கள். உலகத்தின் மிகப் பெரிய ஏமாற்றுக்காரர்கள் இந்தப் பூசாரிகள்தான். நம்பிக்கைத் துரோகம் என்பது மிகப் பெரிய குற்றம். அவர்களுடைய நம்பிக்கைகளைத் தம்மளவில் இந்தப் பூசாரிகள் தகர்த்தெறிந்துவிட்டவர்கள். இப்படி ஏமாற்றுவதே பூசாரிகளின் பிழைப்பாகிவிட்டது. அதுதான் அவர்களுடைய தொழில் ரகசியமாகிவிட்டது.



ஒரு பிஷப் அழகான மாளிகை ஒன்றைக் கட்டிக் கொண்டார். அதைப்பற்றி அவரக்கு மிகப் பெருமை. ஒருநாள் அவரும் நண்பரொருவரும் பேசிக் கொண் டிருந்தபோது அழகுணர்ச்சி பற்றிப் பேச்சுத் திரும்பியது.

இப்படியாக ஆன்மிகத்துக்குச் சம்பந்தமில்லாத விஷயங்களில்தான் இந்த மதவாதிகள் தம்பெரும் பொழுதைக் கழிக்கிறார்கள். கடவுளில்லாத கிறிஸ்துவம். அதைப் பற்றிப் பகிரங்கமாகப் பேசித் திரிகிறார்கள். விவாதிக்கிறார்கள்.

பிரெடெரிக் நீட்ஷேவுக்குப் பிறகு யாராவது 'கடவுள் இறந்துவிட்டார்' என்ற சொல்லியிருக்கிறாரா? கிறிஸ்துவத் தில் கொந்தளிப்புகள் இருக்கின்றன என்று சொல்லி யிருக்கிறாரா? இனி என்ன செய்வது என்று திகைத் திருக்கிறாரா?

கடவுளுக்குத் தேவையேயில்லாத ஒரு கிறிஸ்துவத்தைப் பிடித்துத் தொங்க வேண்டும் என்பதிலேயே பிறர் குறியாக இருந்திருக்கிறார்கள். அதுவும் சாத்தியமாகித்தான் போய் விட்டது. பௌத்தத்தில் கடவுள் இல்லையே. கடவுளில்லா மல்தானே சமணமும் இருக்கிறது. எனவே கடவுளில்லாத கிறிஸ்துவம் ஏன் இருக்கக்கூடாது?

கடவுள் ஒரு பெரும் தடையாகிப் போனார். கடவுள் என்ற வார்த்தையை அழுத்தமாகச் சொன்ன அதே கணத்தில் எல்லோரையும் மரத்துப் போக வைத்துவிடுகிறோம். அதனால்தான் இந்த கிறிஸ்துவக் கடவுள்வாதிகள் கடவுளுக்குத் தேவையேயில்லாத ஒரு கிறிஸ்துவத்தை எப்படி நிறுவுவது என்பதைப் பற்றியே விவாதித்துக் கொண்டு, சிந்தித்துக் கொண்டு பொழுதைக் கழிக்கிறார்கள்.



கடவுளில்லாத கிறிஸ்துவம் காரிய சாத்தியமானதுதான். கடவுளில்லாத பௌத்தம் இருக்கிறதே. சமணம் இருக்கிறதே. பின் கடவுள் இல்லாத கிறிஸ்துவம் ஏன் இருக்கக் கூடாது?

அந்தப் பிஷப் விஷயத்துக்கு வருவோம். அழகுணர்ச்சி பற்றி அவரது பேச்சு திரும்பியிருந்தது. நண்பர், ''பிஷப் அவர்களே, கடவுளை நம்புகிறீர்களா இல்லையா? மழுப்பலில்லாமல் பதில் சொல்ல வேண்டும். ஆமாம் இல்லை என்ற பதில் சொல்ல வேண்டும்,'' என்றார்.

கொஞ்ச நேரம் எடுத்துக் கொண்ட பிஷப், ''நம்புகிறேன் தான். அவரைத் தவிர வேறு யார் இந்தக் கட்டடம் கட்ட வேண்டிய பணத்தைக் கொடுத்திருக்க முடியும்?'' என்றார்.

அந்த அழகிய மாளிகை சாத்தியமானதற்குக் காரணம் மக்கள் கடவுள் மேல் நம்பிக்கை வைத்திருப்பதுதான். கடவுளை நம்புவதால் பிஷப்பை நம்புகிறார்கள். கடவுள் இல்லையென்று பகிரங்கமாக அவர் சொல்லிவிட முடியாது. கடவுள் இல்லையென்றால் இயேசு கடவுளின் மைந்தனாக முடியாது. போப்பாண்டவர் கடவுளின் பிரதிநிதியாக முடியாது. இப்படியே பலரும் பலவும் இல்லையென்றாகி விடும். எல்லாமும் ஓடையில் விழுந்த நீரெனக் கழிந்து போகும். கடவுள் உச்சாணியிலும் பூசாரி கடைசிப் படியிலுமாக மதத்துக்கென ஓர் ஏணிக் கட்டமைப்பு தேவைப்படுகிறது.

நிச்சயமாகப் பூசாரிக்குக் கடவுள் இல்லை என்பது தெரியும். கடவுள் இருக்கிறார் என்பதைத் தெரிந்தவனா யிருந்தால் அவன் பூசாரியாகவே இருக்க மாட்டான். இன்னொரு இயேசுவாகி விடுவான். இன்னொரு புத்தராகி விடுவான். பூசாரியாக இருக்க மாட்டான். ஒரு தீர்க்கதரிசி ஆவானே தவிர ஒரு பூசாரியாக மாட்டான். புதிதான ஒன்றை,

இதுவரை தெரிந்திராத ஒன்றை மக்களின் வாழ்வியலுக்குள் கொண்டு வருவானே தவிர இருப்பதை அப்படியே வைத்துக் கொண்டு இருக்கத் துணை போகமாட்டான். ஏற்கெனவே இருக்கும் எவனும், ஓரளவுக்கு ஆன்மிக உணர்வும் அனுபவமும் உள்ள எவனும் மத ஆசாரத்தின் உறுப்பாக இருக்கத் துணிய மாட்டான். மந்தையை விட்டு விலக வேண்டியிருந்தது. புத்தரும் முகம்மதுவும் கூடத்தான். இது எப்போதும் நடந்து கொண்டிருக்கும் ஒரு நிகழ்வுதான். சுரண்டுவதையே தொழிலாகக் கொண்டிருக்கும் மதவாதிகள் மற்றும் அரசியல்வாதிகளின் ஆளுகைக்குள் மதங்கள் இருப்பதால் புதிதாகத் தோன்றும் எந்த ஓர் ஆன்மிகவாதியும் மந்தையை விட்டு விலகி நிற்கத்தான் வேண்டியிருக்கிறது.

ஆனந்த் மோக்ஷா எனக்கொரு சேதி அனுப்பியி ருக்கிறான்.

கோடெமாலாவில் பெரியதொரு பூகம்ப வெடிப்பின் பின் விளைவுகள் இன்னமும் அங்கங்கே தங்கியிருந்தன. அப்போது ஒரு மலைச்சரிவில் அழகான ஒரு வீடு சொற்ப வாடகைக்குக் கிடைக்கும் என்று அறிந்தேன். காரணமா, வீட்டுக்கு நேர் மேலே எப்போது விழுந்துவிடுமோ என்பதுபோலப் பெரியதொரு பாறை இருந்தது. பயந்து போய் யாரும் அந்த வீட்டில் குடியிருக்கத் தயாராக இருக்கவில்லை. எனக்கென்னவோ அந்த வீடு எனக்கேற்றதாய்த் தோன்றியது. எனவே வாடகைக்கு எடுத்துத் தங்கினேன்.

பிஷப்பிடம்சொன்ன போது பதற்றத்துடன் கையை வீசி, ''அந்தப் பாறை எப்போது வேண்டுமானாலும் விழலாம் என்ற பயம் உனக்கு இல்லையா?'' என்று கேட்டார்.

நானோ, ''கடவுள் என்னை எடுத்துக் கொள்ள வேண்டும் என்று நினைத்தால் எடுத்துக் கொள்ளத்தான் செய்வார்,'' என்றேன்.



தோள்களைக் குலுக்கிக் கொண்ட பிஷப், ''நீ சொன்னதில் உனக்கு நம்பிக்கை இருக்கிறதா என்ன?'' என்று கேட்டார்.

கிறிஸ்துவத் தொண்டர்களுக்குப் பிறந்து விட்டதானா லேயே, பாரிஜாதா, உனக்கு இங்கே வந்து சேர்வதென்பது நடந்தேறியிருக்க வேண்டும். கிறிஸ்துவத் தொண்டு, அதுவும் இந்தியாவில் இருபத்தைந்து வருடங்கள், சரிதான், சரிதான். முதலாவது உன்னுடைய பெற்றோர் கிறிஸ்துவத் தொண்டர்கள் என்பது. இரண்டாவது இந்தியாவில் இருபத்தைந்து வருடங்கள் என்பது. போதும் போதும். அவர்களுடைய குழந்தைகள் தமது பெற்றோர் போலி ஆன்மிகவாதிகள் என்று தெரிந்து கொள்ள அது போதும், மதம் அவர்களுக்குத் தொழில் என்பதற்கு. அவர்களுடைய நம்பிக்கை இல்லையென்பதற்கு.

பார்க்கப் போனால் அது நம்பிக்கைகள் பாற்பட்ட சமாச்சாரமேயில்லை.

ஒரு சிறு கதை.

ஒரு கிறிஸ்துவப் பள்ளியில் ஆசிரியை ஒருவரின் கேள்வி : ''வரலாற்றில் மிகச் சிறந்தவர்கள் யார்?''

ஒரு அமெரிக்கச் சிறுவன், ''ஆபிரகாம் லிங்கன்'' என்றான்.

ஒரு முகம்மதியச் சிறுவன், ''ஹஸார்ட் முகம்மது,'' என்றான்.

ஒரு இந்து சிறுமி, ''பகவான் கிருஷ்ணன்,'' என்றாள்.

இப்படியாகப் பல பதில்கள். கடைசியில் ஒரு யூதச் சிறுவன் எழுந்து நின்று, ''இயேசு கிறிஸ்து,'' என்றான்.

ஆசிரியைக்குத் தன் காதுகளையே நம்ப முடியவில்லை. ஒரு யூதன் இயேசு கிறிஸ்து என்பதா? ''சரியாகத்தான் சொல்லியிருக்கிறாயா?'' என்று கேட்டாள்.



அவன், ''அது முக்கியமில்லை. என் நெஞ்சுக்கு மோஸஸ் என்பது நன்றாகத் தெரியும். ஆனாலும் காரியத்துக்கு எதைச் சொல்ல வேண்டுமென்பதும் எனக்குத் தெரியும்.'' என்றான்.

கிறிஸ்துவத் தொண்டர்களோடு இருபத்தைந்து வருடங்கள், அதுவும் இந்தியாவில் இருப்பதென்பதும் அவர்கள் என்னென்ன செய்வார்கள் என்பதைப் பார்ப்பதும் ஒருவனை மயக்கம் கொள்ள வைப்பதற்குப் போதும். இதற்கு முழுப் பொறுப்பும் இருபத்தைந்து வருடங்கள் இந்தியாவில் இருந்துவிட்ட உன் பெற்றோரைச் சார்ந்தது. எப்படியோ இங்கே கொண்டுவந்து சேர்த்துவிட்டார்கள். நன்றி சொல்லத்தான் வேண்டும்.

நான்காவது வினா

அன்புக்குரிய குருவே,

**எனக்கென்னவோ எனக்கென**
**ஒரு தனிச்சிறப்பு இருப்பதாகத் தெரிகிறது.**
**எந்த அளவுக்கு என்றால்**
**நான் ஒரு சாமானியனாக**
**இருக்க வேண்டும் என்று விரும்புமளவுக்கு.**
**இதைக் குறித்துத் தாங்கள் ஏதாவது செய்து**
**உதவ முடியுமா?'**

**ஆனந்த சங்கீதோ,** இங்கிருக்கும் எல்லோரும் இப்படியேதான் நினைக்கிறார்கள். இங்கு மட்டுமல்ல. எங்கெங்குமிருப்போரும்தான். ஒவ்வொருவருக்கும் தன்னளவு இருக்கும் சிறப்பு தெரிந்துதானிருக்கிறது. இது கடவுளின் வேடிக்கை விளையாட்டுத்தான். புதிதாக ஒருவனைப் படைத்து இந்த உலகத்துக்குள் அனுப்பும்போதே



அவன் காதுகளில் ''நீ பிரத்தியேகமானவன். உனக்கு எவரையும் ஒப்பிட்டுச் சொல்ல முடியாது. நீ ஒரு தனிப்பிறவி,'' என்று கிசுகிசுத்தே தள்ளிவிடுகிறார்.

இப்படி எல்லோரிடமும் சொல்லிச் சொல்லித் தள்ளிவிடுவதால் எல்லோருக்கும் இதே நினைப்புத்தான் இருக்கிறது. என்னதான் அடிமனதில் இந்தக் குரல் ஓங்கி ஒலித்துக் கொண்டே இருந்தாலும் உன்னைப் போல யாரும் வாய்விட்டுச் சொன்னதில்லை. அப்படிச் சொன்னால் பிறர் மனம் புண்பட்டுப் போய்விடுமோ என்று ஒரு பயம். யாருக்குமே தம்மைப் பற்றி அப்படி ஒரு நம்பிக்கையு மிருப்பதில்லை. என்ன பிரயோசனமென்கிறாய்? நீ யாரிடமாவது போய், ''நான் பிரத்தியேகமானவன்,'' என்று சொன்னால் யாரும் ஏற்றுக் கொள்ளப் போவதில்லை. அவரவருக்கு அவரவர் பிரத்தியேகமானவர் அல்லவா? ஏதாவது சில சமயங்களில் ஏதாவது ஒருவர் இப்படிச் சொல்வதை ஏற்றுக் கொள்ளலாம். உன்னால் அவனுக்குக் காரியம் ஆக வேண்டுமென்றால், ''ஆமாம், நீ பிரத்தியேக மானவன். நீ மிகச் சிறந்தவன்'' என்று சொல்லி வார்த்தைகளால் கையூட்டுத் தரலாம். என்றாலும் அடி ஆழத்தில் காரியம் காரியம்தான் என்பது பற்றித் தெளிவாகவே இருப்பான்.

ஒரு தற்பெருமைக்காரன் தன் நண்பனிடம் அளக்கிறான். மூன்று கார்கள், அது இதுவென்று எல்லாம் இருக்கிறதாம். நியூயார்க்கில் இரண்டு வைப்பாட்டிகளாம். அவர்கள் இருந்தும் கூடத் தன் கவர்ச்சிகரமான அழகிய இளம் காரியதரிசியைக் கர்ப்பிணியாக்கிவிட்டானாம். அதனால் பழுப்பு முடிக்காரியான அலங்காரக் காரியதரிசியைத் தன்னோடு ரியோடிஜனீரோவுக்குக் கூட்டிப் போக வேண்டும். அங்கே ஒரு கார்னிவல்லுக்காக அவளோடு போக



வேண்டுமாம். கேட்டுக் கொண்டிருந்தவன் பலமாக மூச்சிறைக்க கழுத்து டையை இறுக்கப் பிடித்துக் கொண்டு ஹார்ட் அட்டாக் வந்து விழுந்தானாம்.

அதுவரை கதைத்துக் கொண்டிருந்தவன் தன் கதையை நிறுத்திவிட்டு அவன் முதுகில் தட்டி குடிக்கத் தண்ணீர் கொடுத்து இது அதுவெல்லாம் செய்து கடைசியில், ''என்னப்பா ஆச்சு?'' என்றான்.

அவனோ, ''புல்ஷிட் என்றாலே எனக்கு அலர்ஜி'' என்றானாம்.

இந்த மாதிரிக் கதைப்புகளையெல்லாம் அவனவன் தனக்குள் வைத்துக் கொள்ள வேண்டும். மக்களுக்கு இதுவெல்லாம் ஒவ்வாது போகும். ஒரு வகையில் உன் சுயதம்பட்டம் உனக்கு நல்லதுதான்.

பிரத்தியேகமானவன் என்ற நினைப்பே உன் வேதனைக்கு வித்தாகிப் போகும். பிறரைவிட நீ உயர்ந்தவன் என்ற நினைப்பே ஆணவத்தைக் கொண்டு வந்துவிடும். ஆணவம் விஷம், சுத்தமான விஷம். ஆணவம் ஒரு புண். பெரிதாகப் பெரிதாக அதன் வலியும் அதிகமாகத்தான் இருக்கும்.

ஆணவம் அதிகரிக்க அதிகரிக்க உனக்கும் உன் வாழ்வுக்கும் இடையே இருக்கும் பாலம் தகர்ந்து போகிறது. வாழ்விலிருந்து உதிர்ந்துவிடுகிறாய். வாழ்வின் ஓட்டத்தோடு நீ மிதந்து போவதில்லை. ஆற்றுப் படுகையில் ஒரு பாறையாகிவிடுகிறாய்.

வெது வெதுப்பு குறைந்து போய் ஒரு பனிக்கட்டி போல ஜில்லித்துப் போகிறாய். அன்பை இழந்துவிடுகிறாய். பிரத்தியேகமானவனுக்கு இன்னொரு பிரத்தியேகமானவன்



இல்லாமல் போய்விடுவதால் அவனுக்கு அன்பென்பது இல்லாமல் போய்விடுகிறது.

90 வயதுவரை திருமணம் செய்து கொள்ளாமல் இருந்துவிட்ட ஒருவரைப் பற்றிக் கேள்விப்பட்டிருக்கிறேன். சாகும் தருவாயில் அவரிடம் ஒருவன், ''கல்யாணம் செய்து கொள்ளாமலேயே வாழ்க்கையை முழுக்கக் கழித்துவிட்டாய். காரணத்தைத்தான் சொல்ல வில்லை. இப்போது சாகப் போகிறாய். இப்போதாவது விளக்கம் சொல்லுவாயா? எப்படியும் இறக்கப் போகிறாய். ஏதாவது ரகசியக் காரணம் இருந்தாலும் அதைச் சொல்லிவிட்டுச் சாவதால் இனி எதுவும் கெட்டுவிடப் போவதில்லை. செத்துக் கொண்டிருக்கிறாய். இல்லாமல் போய்விடுவாய். சொல்லிவிட்டுச் சாகலாமே.'' என்றான்.

''ஆமாம், ஒரு ரகசியம் இருக்கிறது. நான் திருமணத்துக்கு எதிரானவன் அல்ல. என்றாலும் பரிபூரணமான ஒரு பெண்ணைத் தேடிக் கொண்டே இருந்துவிட்டேன். யாரும் கிடைக்கவில்லை. வாழ்வும் கழிந்து போய்விட்டது'' என்றான்.

கேட்டவனோ, ''அட, உலகத்தில் பாதிப் பேர் பெண்கள் தானே. அத்தனை கோடிப் பேரில் ஒருத்தி கூடக் கிடைக்கவில்லையா?'' என்றான்.

கண்ணிலிருந்து ஒரு துளி நீர் உருண்டோட, ''ஒருத்தியைக் கண்டேன்'' என்றான்.

கேட்டவனுக்கு அதிர்ச்சி. ''அப்புறமென்ன நடந்தது? அவளை ஏன் மணந்து கொள்ளவில்லை?'' என்றான்.

''அவளோ பரிபூரணமான ஒருவனை அல்லவா தேடிக் கொண்டிருந்தாள்?'' என்றான் அந்தக் கிழவன்.



இப்படியான எண்ணங்கள் உன் வாழ்வைச் சிரமமானதாக்கிவிடும். இந்த ஆணவம் சாதுரியமானது. தந்திரமானது. அது புதிய தொன்றை உனக்குக் கற்பித்துவிடும். ''நீ எந்த அளவுக்குப் பிரத்தியேக மானவன் என்றால் சாமானியனாக மாறுமளவுக்கு,'' என்று சொன்னாயல்லவா? சாமானியம் மிக அசாதாரணமான முறையில் சாமானியனாக இருப்பதைத் தெரிந்து கொள்வான். உன்னைவிட யாரும் சாமானியனாக இருக்க முடியாது. அதே விளையாட்டுத்தான், வேறொரு வடிவத்தில்.

இதைத்தான் எளிமையாக இருப்பவர்கள் செய்கிறார்கள். ''நானோ எளியேன். உன் அடியில் ஒரு துகள் நான்.'' என்கிறார்கள். அப்படிச் சொல்லும்போது அவர்களின் பொருள் வேறு. நீ அப்படிப்பட்டவன்தான் என்று சொல்லிவிடாதே. சொல்லிவிட்டாயோ உன்னை மன்னிக்கவே மாட்டார்கள். அதைத்தான் அவர்கள் எதிர்பார்க்கிறார்கள். ''நீயே மிக எளியன். நீயே மிகப் பெரும் பக்தன்.'' சொல்லிவிட்டால் போதும். திருப்தி வந்துவிடும். எளிமைக்குப் பின் மறைந்திருக்கும் ஆணவத்தின் வெளிப்பாடு. இப்படிப் போய் ஆணவத்தை ஒழிக்க முடியாது.

நீ கேட்டது, ''நான் பிரத்தியேகமானவன். எந்த அளவுக்குப் பிரத்தியேகமானவன் என்றால் சாமானியனாக வேண்டும் என்று விரும்புமளவுக்கு. இது குறித்துத் தாங்கள் ஏதாவது செய்ய முடியுமா?''

யாரும் பிரத்தியேகமானவர் அல்லர். ஒவ்வொரு வகையிலும் ஒவ்வொருவர் சிறப்புப் பெற்றவர். யாருமே சாமானியரில்லை. ஆனால் ஒவ்வொருவரும் சாமானியரே. உன்னைப் பற்றிய உன் நினைப்பு எதுவோ, அதுவே பிறரைப்



பற்றிய நினைப்பாக ஆகிவிடட்டும். பிரச்சினை தீர்ந்துவிடும். பிறகு தேர்வு செய்து கொள்ளலாம்.

பிரத்தியேகம் என்ற வார்த்தை தேவையெனும் போது நீ பிரத்தியேகமாகிவிடுகிறாய். ஆனால் ஒவ்வொரு வரும் அப்படிப் பிரத்தியேகமானவர்தானே. மனிதர்கள் மட்டுமல்ல. மரங்கள், பறவைகள், மிருகங்கள், பாறைகள் என்று எல்லாமும் பிரத்தியேகமானவைதான். வாழ்வு முழுக்கப் பிரத்தியேகமானது. இந்த வாழ்விலிருந்து வந்திருக்கும் அனைத்தும் பிரத்தியேகமானவைதான். ஆனால் சாதாரணம் என்ற வார்த்தையே உனக்குப் பிடித்துப் போனதாகும்போது, அழகான அந்த வார்த்தை உன் இறுக்கத்தை இல்லாமல் செய்து விடுகிறது. எல்லோரும் எல்லாமும் சாதாரணமே என்று தெரிந்து கொள்கிறாய். வாழ்வு மொத்தமாகச் சாதாரணமாகிப் போகிறது.

ஒன்றை நினைவில் வைத்துக் கொள்ள வேண்டும். உன்னைப் பற்றிய உன் நினைப்பே பிறரைப் பற்றிய உன் நினைப்பாகிப் போகும்போது ஆணவம் மறைந்து போகிறது. உன்னை ஒரு வகையிலும் பிறரை வேறு வகையிலும் இருப்பதாகப் பார்க்கும்போதே ஆணவம் என்ற மயக்கம் பிறக்கிறது. இது இருவழிச் சிந்தனை. இந்த இருவழிச் சிந்தனையைக் கைவிடும்போது, ஆணவம் தானாகவே இல்லாமல் போய்விடுகிறது.

ஐந்தாவது வினா 

அன்புக்குரிய குருவே,

இங்கே நான் வந்த புதிதில்
கடவுள் எனக்கு மிக அண்மையில்
இருப்பதாக உணர்ந்தேன்.
எந்தக் கணமும் அவரோடு இருப்பேன் என்று
நினைத்திருந்தேன்.
ஆனால் நாட்கள் போகப் போக
அது நடக்காது போலத் தோன்றுகிறது.
அவரை அக்கம் பக்கத்தில் காணோம்.
காண்பது சிரமமாகிவிட்டது.
இது ஏன் இப்படி?
இதைப் பற்றி கொஞ்சம் சொல்வீர்களா?

**வேதாந்த பாரதி**, கடவுளுக்கு உன் மனதில் ஓர் உருவத்தை நீ கற்பித்து வைத்துக் கொண்டிருந்திருக்க வேண்டும். அதனால்தான் அவரைக் காணோம் என்கிறாய். அந்த உருவத்தை விட்டுவிடும் வரை கடவுளை நீ காண முடியாது. உன்னுடைய கற்பிதங்களுக்குத் தகுந்தபடி வடிவமைத்துக் கொள்ளக் கடவுளுக்குக் கடப்பாடு எதுவும் கிடையாது. கடவுள் இப்படி இருக்க வேண்டும், இப்படி நடந்து கொள்ள வேண்டும் என்ற கற்பிதம் இருக்கும் வரை அவரைக் காண முடியாது. நீயே அதை முடியாததாக்கி விட்டாய்.

கடவுளைப் பற்றிய அனைத்துக் கற்பிதங்களையும் விட்டுவிடும்போதுதான் கடவுளைத் தெரிந்து கொள்ள முடிகிறது. உன்னுடைய அறியாமையால் உனக்கு நீயே கற்பித்துக் கொண்டவையே உனக்குப் பெரும் தடைகளாகிவிட்டன. கற்பிதங்களைக் கைவிடு. ஒரே



ஆச்சரியமும் அதிர்ச்சியுமாகத்தான் இருக்கும். உன் கண்களை உன்னாலேயே நம்ப முடியாது. காரணம் கடவுள் இருப்பவராக ஆகிப் போவதுதான். எங்கே கடவுள் என்ற கேள்வியை விட்டுவிட்டு கடவுள் இல்லாத இடம் எது? என்பாய்.

பிறகென்ன? சாதாரணத்தில் அசாதாரணத்தைக் காண்பாய். கூழாங்கற்கள் வைரங்களாகிவிடும். சாமானியர் கள் இனியும் சாமானியர்களாக இருக்கப் போவதில்லை. ஒவ்வொருவர் இதயத்திலும் ஒளி பிறக்கிறது. அப்போது மனிதன் இறவைனை நெருங்கிவிடுகிறான். இறைமை மனிதனைத் தேடி வந்து விடுகிறது. மனிதனும் இறைமையும் கலந்து போகிறார்கள். உலகமும் இறைமையும் ஒன்றாகிப் போன ஒன்றுக்குள் மறைந்து போகிறார்கள். பிறகென்ன? உன்னிடமிருந்து பிறிதாகிப் போய் மிக உயரத்தே, வெகு தூரத்தே, சொர்க்கத்தின் ஏழாவது அடுக்கில் இருக்கும் கடவுளைத் தேடிப் போக வேண்டியதில்லை. உனக்குப் பக்கத்தில் அண்டை வீட்டுக்காரன் ஒருவனாகிப் போகிறார். அவரே மனிதனும் மிருகமும் தாவரமும் கனிமமுமாகிப் போகிறார். அவரே எல்லாமுமாகிப் போகிறார்.

இப்படி உனக்கருகில் ஒரு குறிப்பிட்ட வடிவத்திலன்றி ஓர் இருப்பாக நிலைத்திருக்கும் இறைவனைக் கண்டு கொள்ளும் போதுதான் உன் தேட்டம் நிறைவுறுகிறது. கடவுள் உன்னிடமிருந்து தன்னை எப்போதும் மறைத்துக் கொள்வதில்லை. நீதான் உன்னுடைய கோபதாபங்களால் அவரைப் பார்க்க முடியாதபடி கண்களை மூடி வைத்துக்கொள்கிறாய்.

சிலருக்கு இந்துமத அடையாளங்களோடு கடவுள். வேறு சிலருக்கு கிறிஸ்துவ அடையாளங்களோடு. இன்னும் சிலருக்கு இஸ்லாத்தின் அடையாளங்களில். ஆனால் கடவுள் ஓர் இந்துவோ கிறிஸ்துவரோ முகம்மதியரோ அல்ல. எனவே



இந்த மதங்களின் பாற்பட்ட சிந்தனைகளைச் சுமந்து திரிவோர் இருட்டுக்குள்ளே தட்டுத் தடுமாறிக் கொண்டே இருக்க வேண்டியதுதான். சாவிலிருந்து இன்னொரு சாவுக்கு. என்றுமே ஒளியைக் காண முடியாதவர்களாக.

ஓர் இந்துவானவன் கடவுளை அறிந்து கொள்ள முடியாது. ஒரு முகம்மதியனும் கூடத்தான். இந்துத்துவம், முகம்மதியம், பௌத்தம் என்று அனைத்தையும் உன் மனதிலிருந்து முதலில் துடைத்தெறிய வேண்டும். சிந்தனைகளை நிறுத்திவிட்டு விழிப்போடு, பிரக்ஞையோடு, முனைப்போடு இருக்கும் போது கடவுள் வீயத் தோன்றுகிறார். எங்கெங்கும் வெடித்துக் கிளம்புகிறார்.

நீ இங்கே வந்து சேர்ந்த போது கடவுள் உனக்கு வெகு அருகில் இருப்பதாகச் சொன்னது உன்னுடைய கற்பனைதான், வேதாந்த பாரதி.

எந்தக் கணமும் அவரைச் சென்று சேர்ந்துவிடலாம் போல இருந்தது என்றாய். அது உன் ஆசை. காலம் போகப் போக முடியாது போலத் தெரிகிறதென்கிறாய். சரிதான். எந்தக் கற்பனையும் நிஜமாக முடியாது. உன் எந்தக் கனவும் நனவாக முடியாது. எதார்த்தத்தைக் கண்டுபிடிக்க வேண்டும். கற்பனை செய்து கொள்ளக் கூடாது.

கடவுளைக் காணோம். அவரைப் பார்க்க முடியாமல் போய்விட்டது என்கிறாய்.

அவர் இல்லாமல் போய்விடவில்லை. கோபதாபங்கள், கொள்கைகள், சிந்தனை முறைகள் என்று உன் கண்களில் புரை வளர்ந்துவிட்டது. குழந்தையாக இரு. கள்ளங் கபடமின்றி இரு. நெஞ்சில் கள்ளங்கபடமில்லாத போதே கடவுள் வந்து சேர்கிறார். எல்லாச் சிந்தனைகளையும் மனதிலிருந்து விரட்டியடிக்கும் போது வந்து சேர்கிறார். அவர்



எப்போதும் தயாராக இருக்கிறார். உன் வாசல்படியில் நிற்கும்போது உனக்குள்தான் கொந்தளிப்புகள். லட்சக்கணக்கான எண்ணங்களின் சுழித்தோடும் வெள்ளங்கள். உனக்குள் இருக்கும் இரைச்சலில் கதவைத் தட்டும் மெல்லிய ஒளி அடங்கிப்போய்விட்டது.

அமைதியாக இரு. கள்ளங்கபடமின்றி இரு.

கடவுள் இருக்கிறார். இருக்கிறார்தான்.

இன்றைக்கு இது போதுமே.





தம்மபதம் – ஓஷோவின் சொற்பொழிவுகள்

# விழித்திருப்பதே வாழ்வு

# 5





விழித்திருப்பதே வாழும் வகை.

ஏற்கனெவே இறந்து விட்டவன் போல
மூடன் தூங்கிக் கிடக்கிறான்.

குருவே விழித்திருக்கிறார்.
நிச்சயமாக நிலைத்திருக்கிறார்.

கவனித்து இருக்கும் அவர்
தெளிவோடு இருக்கிறார்.

என்ன ஆனந்தம்!
விழித்திருப்பதே வாழ்வென்பது
தெரிந்திருக்கிறது.
என்ன ஆனந்தம் அது.
விழிப்பின் வழிச் செல்வது.

தளர்வில்லாத தியானத்தில்
சுதந்திரத்தையும் ஆனந்தத்தையும்
தேடுகிறார்.



**நீயும் எழுந்து விடு. சிந்தி. கவனி.**
**கவனத்தோடும் அக்கரையோடும்**
**செயல்படு.**
**அவ்வழி வாழ்.**
**உனக்குள் சோதி வளரும்.**

**கவனிப்பிலும் செயலிலும்**
**வெள்ளத்தில் மூழ்காத தீவொன்றைத்**
**தனக்கென வகுக்கிறார்.**

**மனிதனைப்** பற்றி முக்கியமாகத் தெரிந்து கொள்ள வேண்டியது அவன் இன்னமும் விழிப்பு நிலைக்கு வந்து சேரவில்லை என்பதுதான்.

விழித்திருக்கிறேன் என்று நினைத்திருக்கும் போதும் விழிப்பின்றிக் கிடக்கிறான். அவ்னுடைய விழிப்பு தொட்டால் நொறுங்கி விடக் கூடியது. அது பொருட்டேயில்லை எனும் அளவுக்குச் சிறியது. விழிப்பு என்பது அழகிய பெயரளவில்தான். உள்ளே ஏதுமில்லை.

இரவில் தூக்குகிறாய். பகலில் தூங்குகிறாய். பிறந்ததிலிருந்து சாகும் வரை தூங்கும் விதத்தை மாற்றிக் கொண்டிருக்கிறாயே ஒழியத் தூக்கத்திலிருந்து மீள்வதே யில்லை. கண்களைத் திறந்து வைத்திருக்கிறேன் என்பதாலேயே விழித்திருக்கிறேன் என்று சொல்லி, உன்னையே ஏமாற்றிக் கொள்ளாதே.

**அக்கண்கள் திறக்கும்வரை, அகத்தில் ஒரு வெள்ளம் பாய்ந்து நிறைக்கும் வரை, நீ யாரென்பதை உணர்ந்து உன்னையே நீ பார்த்துக் கொள்ளும் வரை, விழித்திருக் கிறேன் என்று நினைப்புக் கொள்ளாதே.**



அந்த நினைப்பே மனிதனின் மிகப் பெரிய மயக்கம். விழித்திருக்கிறேனே என்ற நினப்பு இருக்கும் வரை, உன்னை விழிப்படையச் செய்ய நினைப்பது வியர்த்தம்.

உனக்குள்ளே அமிழ வேண்டிய முதல் கருத்தே நீ ஆழ்ந்த நித்திரையில் இருக்கிறாய் என்பதாகும். பகலும் இரவும் கானக் கண்டு கொண்டிருக்கிறாய். சில சமயம் கண்களைத் திறந்து கொண்டும் வேறு சமயங்களில் கண்களை மூடிக்கொண்டும், எப்படியானாலும் கனாக்கண்டு கொண்டு தான் இருக்கிறாய்.

நீயே ஒரு கனவாகிவிட்டாய். இன்னமும் எதார்த்தமான நிஜமாகிவிடவில்லை.

கனவில் நீ செய்வதெல்லாம் பொருளற்றது. நினைப்ப தெல்லாம் பயனற்றது. எதையெல்லாம் முன்னிறுத்துகிறாயோ அதுவெல்லாம் கனவில் ஒரு பகுதியாக இருந்துகொண்டு நிஜத்தைத் திரையிட்டு மறைக்கிறது. எனவே தான் புத்தர்கள் அனைவரும், கௌதம புத்தர் உட்பட, வலியுறுத்துவது விழித்திரு என்பதாகும்.

பல நூற்றாண்டுகளாகத் தொடர்ந்த அவர்களின் ஒரே போதனையை ஒரு வார்த்தைக்குள் அடக்கிவிடலாம் - விழித்திரு.

விழிப்புணர்வுக்குள் ஓர் அதிர்ச்சியோடு உன்னைத் தள்ளிவிடத்தான் அவர்கள் பல யுக்திகளை வகுத்தது. பல சூழல்களையும் களங்களையும் சக்திக் களங்களையும் அமைத்துக் கொடுத்தது.

ஆமாம். அதிர்ச்சிதான். உன்னுடைய அஸ்தி வாரத்தையே ஆட்டிக் கலகலக்க வைக்காத வரை, உன்னை அதிர்ச்சியடைய வைக்கும் வரை நீ விழிக்க மாட்டாய். உன்னுடைய மையத்தை நிறைக்கும் அளவுக்கு ஆழ்ந்தது உன்



தூக்கம். அதற்குள் நீ ஊறிக் கிடக்கிறாய். உடலின் ஒவ்வொரு திசுவும் மனதின் ஒவ்வோர் இழையும் தூக்கத்தால் நிரம்பிப் போய்விட்டது.

இது சாதாரணமான நிகழ்வல்ல. எனவே எச்சரிக்கை யோடு இருக்க, கவனத்தோடு இருக்க, சாட்சியாகிப் போக மிகப் பெரிய முயற்சி தேவைப்படுகிறது.

இந்த உலகத்துப் புத்தர்கள் அனைவரும் ஒரு விஷயம் பற்றி ஒத்த கருத்து கொண்டிருக்கிறார்கள் என்றால், அது இதில்தான். அதாவது மனிதன் இருக்கும் விதத்தில் தூக்கத்தில் இருக்கிறான் / இருக்க வேண்டிய விதத்தில் விழித்தவனாக இருக்க வேண்டும். விழிப்பே குறிக்கோளாக, விழிப்பே சுவையாக இருப்பதுதான் அவர்களுடைய போதனைகள் அனைத்தும். ஸாரதுஸ்ட்ரா, லாவோ சூ, இயேசு, புத்தர், பஹா உத்தீன், கபீர், நானக் என்று விழிப்படைந்தோர் அனைவரும் வெவ்வேறு மொழிகளில், வெவ்வேறு விதங்களில் போதித்தது ஒன்றே. அவர்களது பாடலும் ஒன்றே. கடல் எத்திசையில் இருந்தாலும் கடல் நீர் ீ ப்புக் கரிப்பது போல புத்த நிலையின் சுவை விழித்திருப்பதாகும்.

ஆனால் ஏற்கெனவே விழிப்பில்தான் இருக்கிறேன் என்று நம்பிக் கொண்டிருக்கும் வரை, எந்த முயற்சியும் உனக்குச் சாத்தியமில்லை. முயற்சிக்க வேண்டும் என்ற கேள்வியே இல்லை. எதற்குக் கவலைப்பட வேண்டும்? உன் கனவுகளிலிருந்து கடவுளரையும், மதங்களையும், பிரார்த்தனைகளையும், சடங்குகளையும் கற்பித்து வைத்திருக்கிறாயே. உன்னைப் பற்றிய பலவற்றைப் போலவே உன் கடவுளரும் உன் கனவின் கற்பிதங்களே. உன்னுடைய அரசியல், மதங்கள், கவிதை, ஓவியம், கலை என்று எல்லாமே கனவின் கற்பிதங்களே. தூக்கத்திலேயே



இருந்து கொண்டிருப்பதால் நீ செய்வதெல்லாம் உன் மனதின் அப்போதைய நிலை சார்ந்தே அமைகின்றன.

கடவுள் தன்னைப் போலவே மனிதனைப் படைத்ததாக பைபிள் சொல்கிறது. ஆனால் உண்மையோ தலைகீழாக இருக்கிறது. கடவுள் தன்னைப் போலவே இருப்பதாக மனிதன் கற்பிதம் செய்து வைத்திருக்கிறான்.

மனிதனே மாயை எனும்போது அவன் படைத்துக் கொண்ட கடவுளும் மாயைதான். மனிதனே போலி எனும்போது மதங்களும் போலியானவைதான். மனிதனுக்கே எந்த முக்கியத்துவமும் இல்லை எனும்போது அவனுடைய சாத்திரங்களுக்கும் எந்த மதிப்பும் இல்லை.

இரண்டு பாதிரியார்கள் கோல்ஃப் விளையாடிக் கொண்டிருக்கிறார்கள். ஒருவர் சுலபமாகப் பந்தைத் தட்டிக் குழிக்குள் விழச் செய்யும் முயற்சியில் தோற்றுப் போய், ''ஷிட்,'' என்று சடைந்து கொண்டார்.

வயதில் மூத்த இன்னொரு பாதிரியார் அப்படிப்பட்ட மொழியைப் பயன்படுத்தினால் கடவுள் அவரை இடி கொண்டு தாக்கித் தண்டிப்பார் என்கிறார். விளையாடிக் கொண்டிருக்கும்போது இன்னுமொரு பந்தைத் தவறவிட்ட இளையவர் மீண்டும், ''ஷிட்,'' என்கிறார்.

திடீரென வானம் பிளந்து கொண்டது. மின்னல் வெடித்துக் கிளம்பி மூத்த பாதிரியாரை அடித்துக் கொன்றது. சற்று மௌனம். பிறகு கடவுளின் குரலில் ஒரு முணுமுணுப்பு: ''ஷிட்!''

உன்னிடமிருந்து உன் கடவுளர் வேறுபட்டவராக இருக்க முடியாது. யார் அவர்களைப் படைப்பது? அவர்களுக்கு வடிவமும் வனப்பும் நிறமும் தருவது யார்?



மனிதன்தானே? மனிதனே கடவுளரைப் படைக்கிறான். சிலைகளாக வடிக்கிறான். தன்னைப் போலக் கண்களோடு மூக்கோடு - மனத்தோடும்தான். பழைய ஏற்பாட்டில் கடவுள், ''நான் வெகு பொறாமைக்காரன்,'' என்கிறார். பொறாமைக்காரக் கடவுளைப் படைத்து விட்டிருப்பது யாரென்கிறாய்? கடவுள் பொறாமை கொண்டவராக இருக்க முடியாது. அப்படிப் பொறாமைக்காரராக அவர் இருக்கலாம் என்றால், பொறாமை என்பது எப்படித் தவறாக முடியும்? கடவுளே பொறாமைப்படலாம் என்றால் நீ பொறாமைப்படுவதில் என்ன தவறிருக்க முடியும்? பொறாமை கூட ஒரு தெய்விகம்தானே.

பழைய ஏற்பாட்டில் கடவுள், ''நான் மகா கோபக்காரன். என்னுடைய நெறியைப் பின்பற்றாவிட்டால் உன்னை அழித்துவிடுவேன். நரகத்துக்குள் என்றென்றைக்குமாக வீசியடித்து விடுவேன். நான் பொறாமைக்காரன் என்பதால் வேறு யாரையும் நீ வணங்கக் கூடாது. என்னால் அதைப் பொறுத்துக் கொள்ள முடியாது!'' என்கிறார்.

யார் இப்படியொரு கடவுளைப் படைத்திருக்க முடியும்? நமது பொறாமை, நமது கோபமே இப்படி ஒரு கடவுளைப் படைத்திருக்கிறது.

ஒரு யூதர் வாழ்வில் பல சிரமங்களைச் சந்தித்த பின் காட்டுக்குப் போய் குரலை உயர்த்திப் பிரார்த்திக்கிறார் : ''ஓ கடவுளே!'' கண்களில் நீர் திரையிடத் தொடர்கிறார் : ''நான் என்றைக்குமே நல்லதொரு யூதனாக இருந்திருக்க வில்லையா? எந்தப் பாகுபாடும் இன்றித் தானங்கள் செய்யவில்லையா? என்னுடைய குடும்பத்தை கௌரவமான நிலையில் வைத்திருக்கவில்லையா? குடித்ததில்லை. வெஞ்சினம் உரைத்ததில்லை. சூதாடியதில்லை. பெண்



களுக்குப் பின்னால் அலைந்தது இல்லை. பிறகு ஏன் என்னை இப்படி நடத்துகிறாய்? ஏன்? ஏன்?'' என்று கூவுகிறார்.

திடீரென ஒரு கரிய மேகம் தலைக்கு மேல் தோன்ற இடி முழக்கம் போல ஒரு குரல் கேட்கிறது: ''நீ என்னைக் கேவலப்படுத்துகிறாய்!''

கடவுள் உன்னிடமிருந்து மாறுபட்டவராக நிச்சயம் இருக்க முடியாது. நீயே கற்பித்துக் கொண்டவராகத்தான் இருக்கிறாரே. உன் நிழல். உன் எதிரொலி. வேறு யாரும் அல்ல அவர்.

அதனால்தான் இத்தனை கடவுள்கள் இருக்கிறார்கள். இந்துக்கள் கடவுளைப் பற்றி ஒரு குறிப்பிட்ட எண்ணம் வைத்திருக்கிறார்கள். அதுவே இந்துக்களின் கடவுளாகிறது. இந்துவின் மனவோட்டத்தைப் பிரதிபலிக்கிறது.

இந்து சாத்திரங்களைப் புரட்டிப் பார்த்தால் ஆச்சரியப் பட்டுப் போவாய். என்ன மாதிரியான கடவுளரையெல்லாம் இந்துக்கள் கற்பித்து வைத்திருக்கிறார்கள் தெரியுமா?

காமம் வழியும் கடவுளர். கள்ள உறவுகள், கடவுளரின் உலகில் சர்வ சாதாரணம். மனிதர்களுடைய உலகத்தையும் விட்டு வைக்கவில்லை. இங்கேயும் இறங்கி வந்து கற்பழித்திருக்கிறார்கள். ஆமாம், அப்பாவிப் பெண்களைத் தான் மயக்கியிருக்கிறார்கள். பெரிய முனிவர்களின் மனைவியரைக் கூட விட்டு வைக்கவில்லை. தங்களுக்கு இருக்கும் சக்தியைக் கொண்டு அந்த மனைவியரின் கணவர்கள் வடிவிலேயே தோன்றியிருக்கிறார்கள். பாவம் அந்தப் பேதைப் பெண்களுக்கு முகமூடிக்குப் பின்னால் இருப்பது யாரென்பது தெரியும் வகையில்லை.

யார் இந்தக் கடவுளரையெல்லாம் படைத்திருக்க முடியும்? மனதில் காம வக்கிரங்கள் படர்ந்திருப்பவர்கள்தான்.



பிற மதங்களில் இருக்கும் பிற கடவுளரும் அப்படித்தான். அதனால்தான் புத்தர் கடவுளைப் பற்றியே பேசவில்லை. தூக்கத்திலிருப்பவனிடம் கடவுளைப் பற்றிப் பேசிப் பயனென்ன? தூங்கிக் கொண்டே கேட்டுக் கொண்டிருப்பார்கள். கேட்டதை வைத்துக் கொண்டு கனவு காண்பார்கள். கடவுளரைப் படைத்துக் கொள்வார்கள். அவர்களது கனவுகள், கடவுள்கள் எல்லாமுமே பொய்கள். முழுக்கக் கையாலாகாதவை. முழுக்க அர்த்தமற்றவை. அதைப் போன்ற கடவுளர் இல்லாமல் இருப்பதே நல்லது.

அதனால்தான் புத்தர் கடவுளைப் பற்றிய கவலை ஏதுமில்லாமல் இருந்திருக்கிறார். அவருடைய முழுக் கவனமும் பிறரை விழிப்படைய வைப்பதிலேயே இருந்திருக்கிறது.

ஒரு பௌத்தத் துறவி, ஞானம் கைவரப் பெற்றவர், சலசலத்து ஓடும் ஆற்றின் இசையை அனுபவித்துக் கொண்டு நதிக்கரையில் உட்கார்ந்திருந்தார், மரங்களைத் தழுவி வீசிக் கொண்டிருந்த காற்றின் நாதத்தையும் கேட்டுக்கொண்டு.

ஒருவர் அவரிடம் வந்து, ''ஒரே வார்த்தையில் உங்களுடைய மதத்தின் சாராம்சத்தைச் சொல்ல முடியுமா?'' என்று கேட்டார்.

ஞானி மௌனமாக இருந்தார். அந்தக் கேள்வியே அவர் காதில் விழவில்லையோ என்றுதான் நினைக்க வைக்கும் ஆழ்ந்த மௌனம். வந்தவர், ''நீங்களென்ன செவிடரா?'' என்று இரைந்தார்.

ஞானி, ''உன் கேள்வியைக் கேட்டுக் கொண்டுதான் இருக்கிறேன். பதிலைத்தான் சொல்லிவிட்டேனே. மௌனமே எனது பதில். மௌமாகக் கழிந்த அந்தக் கணங்களே உன் கேள்விக்கான பதில்,'' என்றார்.



வந்தவரோ, ''புதிரான பதில்களையெல்லாம் என்னால் புரிந்து கொள்ள முடியாது. இன்னும் கொஞ்சம் தெளிவாகச் சொல்லலாமே,'' என்றார்.

ஞானி மணலில், ''தியானம்'' என்று எழுதிக் காண்பித்தார்.

''ஓ...! படிக்க முடிகிறது. முன்னதை விடப் பரவாயில்லை. ஒன்றுமில்லாததற்கு ஒரு வார்த்தையாவது இருக்கிறதே. அதை வைத்துக் கொண்டு சிந்திக்கலாம்தான். ஆனால் இன்னமும் கொஞ்சம் வெளிப்படையாகச் சொல்லுங்களேன்,'' என்றார் வந்தவர்.

மீண்டும் தியானம் என்ற வார்த்தையையே பெரிய எழுத்துக்களில் எழுதிக் காண்பித்தார். கேட்டவருக்குக் கொஞ்சம் தர்மசங்கடமாகி விட்டது. கோபம் கூட வந்தது.

''மறுபடியும் தியானம் என்றுதானே எழுதியிருக்கிறீர்கள்? எனக்காக இன்னும் கொஞ்சம் விளக்கமாகச் சொல்லக்கூடாதா?'' என்றார்.

அவரோ மறுபடியும் இன்னும் பெரிய எழுத்துகளில் நன்றாக இடம் விட்டு தியானம் என்று எழுதிக் காண்பித்தார்.

வந்தவர், ''உங்களுக்குப் பைத்தியம்தான் பிடித்திருக்க வேண்டும்,'' என்றார்.

ஞானியோ, ''ஏற்கெனவே வெகு தூரம் இறங்கி வந்துவிட்டேன். முதல் பதில் சரியான பதில். இரண்டாவது பதில் அவ்வளவாகச் சரியான பதிலல்ல. மூன்றாவது பதில் தவறான பதில். நான்காவது பதில் மிகவும் தவறாகிப் போன பதில். ஏனென்கிறாயா? தியானம் என்று பெரிய எழுத்துகளில் எழுதும்போது அதையே கடவுளாக்கி விடுகிறாய்,' என்றார்.

அதனால்தான் கடவுள் என்ற வார்த்தையை ஆங்கிலத்தில் எழுதும்போது முன் எழுத்தைப் பெரிய



எழுத்தாக்குகிறாய். உயர்வைக் குறிக்கப் பெரிய எழுத்துகள்.

ஞானி, ''நான் ஏற்கெனவே பாவமிழைத்து விட்டேன்.'' என்றார். தான் எழுதிய வார்த்தைகளை அழித்துவிட்டு, ''என் முதல் பதிலை மட்டுமே வைத்துக் கொள்.'' என்றார்.

மௌனம் என்பது மனிதனின் விழிப்புக்கான களம். சலசலக்கும் மனம் மனிதன் தூங்கும் படுக்கை. மனம் சலசலத்துக்கு கொண்டிருந்தால் நீ தூங்கிக் கொண்டி ருக்கிறாய் என்று பொருள். மௌனத்தில் ஆழ்ந்திருக்க, மனம் இல்லாது போயிருக்க, பறவைகளின் பாடலையும் நதியின் நாதத்தையும் கேட்டுக் கொண்டிருக்கும் போது விழிப்புணர்வு உனக்குள் மெல்ல மெல்ல மலர்கிறது. வெளியேயிருந்து வருவதல்ல. உனக்குள்ளேயிருந்து எழுவது. உனக்குள்ளேயே வளர்வது. அப்படி எதுவும் நடக்கவில்லையென்றால் நீ தூக்கத்திலிருக்கிறாய் என்பதை நினைவில் கொள்.

ஒரு கணவனும் மனைவியும் தூங்கிக் கொண்டிருக் கிறார்கள். விடியற்காலை மூன்று மணியிருக்கும். இன்னொருவனை ரகசியமாகச் சந்திப்பதாக மனைவி கனவு காண்கிறாள். அப்போது தன் கணவன் அங்கே வருவதாகத் தெரிகிறது.

தூக்கத்தில், ''அய்யோ, என் புருஷன்,'' என்று கத்துகிறாள்.

அவள் கணவன் திடீரெனத் தூக்கம் கலைய ஜன்னல் வழியாக எட்டிக் குதித்து ஓடினான்.



இது ஒன்றும் சிரிப்பதற்காகச் சொன்னதல்ல. அதுதான் நிஜம். அப்படித்தான் வாழ்ந்து கொண்டிருக்கிறாய். அப்படித்தான் மனிதன் சாதாரண நிலையில் வாழ்ந்து கொண்டிருக்கிறான்.

ஒருத்தி தன் கணவனின் பிரியத்தைச் சம்பாதிக்க வேண்டும் என்று விரும்புகிறாள். இன்னொருத்தியின் ஆலோசனையின் பேரில் ஒரு நாள் இரவு அவனுக்குச் செருப்பெடுத்துப் போட்டுவிட்டுப் புகை பிடிப்பதற்குப் பைப் எடுத்துக் கொடுத்து, குடிப்பதற்கு நல்ல மது ஊற்றிக் கொடுத்து, மெல்லிய சில்க்கில் நைட் கவுன் மட்டும் போட்டுக் கொண்டு பூனைக்குட்டி போல அவன் மடியில் சுருண்டு படுத்துக் கடைசியாக, ''மாடிக்குப் போகலாமா? கண்ணாளா?'' என்கிறாள்.

அவனோ, ''போய்த்தான் ஆக வேண்டும். எப்படி யானாலும் வீட்டில் உதைதானே விழப்போகிறது,'' என்றான்.

நம்மைச் சுற்றி என்ன நடக்கிறது என்ற உணர்வில்லாமலேயே வாழ்ந்து கொண்டிருக்கிறோம். காரியமாற்றுவதில் திறமைகளை நன்றாகவே வளர்த்துக் கொண்டு, அதைச் செய்யும் உணர்வேயில்லாமல் செய்யுமளவுக்குத் திறமைசாலிகளாகி விட்டோம். இயந்திரத்தனமாகிவிட்டது, அனிச்சையாகச் செய்வதாகி விட்டது. இயந்திர மனிதர்களாகி விட்டோம். இன்னமும் மனிதர்களாகவில்லை. மனித இயந்திரங்களாகத்தான் இருக்கிறோம்.

ஜார்ஜ் குர்ட்ஜீஃப் அதைத்தான் திரும்பத் திரும்பச் சொன்னார். 'மனிதன் ஓர் இயந்திரமாகத்தான் இருக்கிறான்' அவர் சொன்னது பலரையும் புண்படுத்தியது. யார்தான் இயந்திரமென்று சொல்லப்படுவதை ஏற்றுக் கொள்வார்கள்?



இயந்திரங்களாக இருந்து கொண்டு தம்மைக் கடவுளென்று அழைக்க வேண்டுமென்கிறார்கள். அப்படியானால் மகிழ்வால் பூரித்துப் போகிறார்கள். குர்ட்ஜீஃப் மக்களை இயந்திரங்களென்றார். அவர் சொன்னது சரிதான். உன்னையே நீ நன்றாகக் கவனித்துப் பார்த்துக் கொண்டால், எவ்வளவு இயந்திரத்தனமாக நீ நடந்து கொள்கிறாய் என்பதைப் புரிந்து கொள்வாய்.

ரஷ்ய மனோதத்துவ அறிஞர் பாவ்லோவும் அமெரிக்க ஸ்கின்னரும் 95 சதவிகிதம் சரியாகத்தான் சொன்னார்கள். மனிதன் அருமையான ஓர் இயந்திரமேயன்றி வேறெதுவும் இல்லை என்றார்கள். அவனுக்குள் ஓர் ஆத்மா இல்லாமல் போய்விட்டது. 95 சதவிகிதம் எனும்போது மிக நெருக்கத்தில் உண்மையைக் கண்டு சொல்லிவிட்டார்கள் என்கிறேன். அந்த மிகுதி ஐந்து சதவிகிதத்தில்தான் புத்தர்கள் இருக்கிறார்கள். ஞானிகள் இருக்கிறார்கள். உன்னைப் போலக் கோடிக் கணக்கான மக்களைப் பார்த்திருந்தும் ஒரு புத்தரைக் கூடக் காணவில்லையெனில் பாவ்லோவையும் ஸ்கின்னரையும் மன்னித்துவிடலாம்.

ஸ்கின்னர் மனிதர்களையும் எலிகளையும் வைத்து ஆராய்ச்சி செய்ததில் இரண்டுக்குமிடையே வித்தியாசத்தைக் கண்டாரில்லை. எலிகள் சாதாரண உயிர்கள். மனிதனோ கொஞ்சம் சிக்கலான அமைப்புடையவன். மனிதன் சிக்கலான இயந்திரம். எலிகள் சாதாரண இயந்திரங்கள். எலிகளைப் பற்றி ஆராய்ச்சி செய்வது சுலபம். அதனால்தான் இந்த மனோதத்துவ வாதிகள் அவற்றைப் பிடித்துத் தொங்கிக் கொண்டிருக்கிறார்கள்.

எலிகளைக் கவனித்துப் பார்த்து மனிதர்களைப் பற்றி முடிவுக்கு வருகிறார்கள். சற்றே ஏறக்குறைய என்று சொன்னதைக் கவனியுங்கள். மிச்சமிருக்கும் அந்த ஐந்து



சதவிகிதத்தில்தான் எல்லா வித்தியாசங்களுக்கும் விளக்கமளிக்கிறார்கள்.

அந்தப் பகுதியில்தான் புத்தர்கள் இருக்கிறார்கள். ஒரு இயேசு இருக்கிறார். ஒரு முகம்மது இருக்கிறார். உண்மையாக விழிப்படைந்த இந்தச் சிலர்தான் உண்மையான மனிதர்கள். பாவம், ஒரு புத்தரைக் காண ஸ்கின்னர் எங்கே போவார்? கண்டிப்பாக அமெரிக்காவில் பார்க்க முடியாது.

ஒரு சம்பவம் பற்றிக் கேள்விப்பட்டிருக்கிறேன்.

''அது ஏன் இயேசு கிறிஸ்து இருபதாம் நூற்றாண்டு அமெரிக்காவில் பிறப்பதென்று முடிவெடுக்கவில்லை?'' என்று ஒருவர் ஒரு பாதிரியாரிடம் கேட்டார்.

தோள்களைக் குலுக்கிக் கொண்ட பாதிரியார், ''அமெரிக்காவிலா? அது நடக்கவே நடக்காது. கன்னிப் பெண்ணொருத்தியை அமெரிக்காவில் பார்க்க முடியுமா என்ன? அப்படியே ஒருத்தி இருக்கிறாள் என்றாலும் மூன்று ஞானியருக்கு எங்கே போவது?'' என்றார்.

கன்னித்தாயும் மூன்று ஞானிகளும் இல்லாமல் இயேசு பிறப்பதெப்படி?

இதையும்தான் ஒரு முறை கேட்டிருக்கிறேன்.

ஒரு தேவாலயத்தில் ஒரு பாதிரியார் ஒரு நாள், ''கன்னிப் பெண்களெல்லாம் எழுந்து நில்லுங்கள்,'' என்றார்.

ஒரே ஒருத்தி, அதுவும் கைக்குழந்தையுடன் எழுந்து நின்றாள். கண்டிப்பாக அவள் குழந்தை பெற்றுக் கொண்டவள். பாதிரியார் அவளிடம், ''நீ என்ன கன்னிப்



பெண்ணென்று நினைத்துக் கொண்டிருக்கிறாயா? நீ தான் ஏற்கெனவே தாயாகிவிட்டாயே,'' என்று கேட்டார்.

அவளோ, ''சரிதான். ஆனால் இந்தக் குழந்தை இன்னும் கன்னிதான். தானே எழுந்து நிற்க முடியாது. அதனால் அவளை ஏந்தி நிற்கிறேன்,'' என்றாள்.

ஸ்கின்னர் எங்கே போய் ஒரு புத்தரைப் பார்ப்பது? அப்படியே ஒரு புத்தரைக் கண்டுவிட்டாலும் ஏற்கெனவே ஆழப் பதிந்துவிட்ட அவருடைய எண்ணங்களும், அனுமானங்களும் அவரைப் புத்தரென்று ஏற்றுக் கொள்ள அவரை விடாது. தம் எலிகளே அவர் பார்வையில் தெரியும். அவரால் எலிகள் செய்வதைத் தவிர வேறு எதையும் புரிந்து கொள்ள முடியாது.

எலிகள் தீர்மானிப்பதில்லை. எலிகளுக்கு ஞானோதயம் ஏற்படுவதில்லை. ஸ்கின்னருக்கு மனிதர்கள் பெரிய எலிகள். அவ்வளவுதான். என்றாலும் மிகப் பெரும்பான்மையான மக்களைப் பற்றிய அவரது முடிவுகள் சரியென்றுதான் சொல்ல வேண்டும். புத்தர்கள் கூடச் சராசரி மனிதர்களைப் பற்றிய அவரது முடிவுகளை ஏற்றுக் கொள்வார்கள்.

சராசரி மானுடம் உறக்கத்தில் இருக்கிறது. விலங்குகள் கூட அந்த அளவுக்கு உறக்கத்தில் ஆழ்ந்திருப்பதில்லை.

காட்டில் திரியும் ஒரு மானைப் பார்த்திருக்கிறாயா? எவ்வளவு ஜாக்கிரதையாகவும் கவனத்தோடும் அது நடமாடுகிறது. மரத்தின் கிளையில் உட்கார்ந்திருக்கும் ஒரு பறவை தன்னைச் சுற்றி நடப்பதையெல்லாம் எவ்வளவு உயிர்த்துடிப்போடு கவனித்துக் கொண்டிருக்கிறது. பறவைக்கு அருகே போய்ப்பார். ஒரு குறிப்பிட்ட தூரம் வரைக்கும் சரிதான். இன்னும் ஓர் அடி எடுத்து வைத்துப்



பார். அது பறந்து போகிறது. தன்னுடைய பார்வைக்குட்பட்ட பிரதேசத்துக்குள் அது சர்வ ஜாக்கிரதையாக இருக்கிறது. யாராவது அதற்குள் நுழைந்துவிட்டால் அபாயம் என்று தெரிந்து கொள்கிறது.

உன்னைச் சுற்றியிருப்பவர்களைக் கவனித்துப் பார்த்தால், மனிதன் மட்டுமே உறக்கத்தில் இருக்கிறான் என்பதைத் தெரிந்து கொள்வாய்.

பெண்ணொருத்தி விபச்சார விடுதியில் இருந்த ஒரு கிளியை விலை கொடுத்து வாங்கி வீட்டுக்குக் கொண்டு வந்தாள். விடுதியில் கற்றுக் கொடுத்த அசிங்கமான வார்த்தைகளைக் கிளி மறக்க வேண்டும் என்று ஓரிரு நாட்கள் அதன் கூண்டைத் துணி போட்டு மூடி வைத்திருந்தாள்.

துணியை எடுத்தபின் அவளைக் கண்டு, ''புதிய வீடு. புதிய மேடம்'' என்றது. அவளுடைய மகள் அங்கே வந்தபோது கிறீச்சிட்டு, ''புதிய பெண்கள்.'' என்றது.

அன்றிரவு அவள் கணவன் வீடு வந்து சேர்ந்தான். கிளி கிறீச் கிறீச் என்று கத்தியது. ''அதே வாடிக்கையாளர்கள், ஹல்லோ ஜோ'' என்றதாம்.

மனிதன் நிலை தாழ்ந்த நிலையில்தான் இருக்கிறான். கிறிஸ்துவர் கதையில் வரும் ஆதாமின் வாழ்க்கையே அதற்கான விளக்கம்தான். கெட்டுப் போனவன் சொர்க்கத்துப் பிருந்தாவனத்திலிருந்து வெளியேற்றப் படுகிறான். ஆதாமும் ஏவாளும் ஏன் வெளியேற்றப் பட்டார்கள் தெரியுமா? அறிவுப் பழத்தைத் தின்றுவிட்ட தால்தான். அந்தப் பழத்தைத் தின்றவுடன் உணர்வுகளின் இடத்தில் மனத்தை வைத்துக் கொண்டார்கள். நீ ஒரு மனமாகிப் போகும்போது பிரக்ஞையை இழந்துவிடுகிறாய்.



மனம் என்றாலே துக்கம்தான். இரைச்சல்தான். இயந்திரத்தனம்தான்.

நீ மனம்தான் என்று ஆகிவிடும்போது உணர்வை இழந்து விடுகிறாய். எனவே செய்ய வேண்டிய காரியமெல்லாம் இந்த மனதைத் தொலைத்துவிட்டு மறுபடியும் பிரக்ஞையாவது எப்படி என்பதுதான். அறிவு என்ற பெயரில் எதையெதையெல்லாம் உனக்குள் குவித்து வைத்திருக்கிறாயோ அதையெல்லாம் வெளியே கொட்டிவிட வேண்டியதுதான். இந்த அறிவுதான் உன்னை உறக்கத்தில் வைத்திருக்கிறது. எனவே யாருக்கு அறிவு அதிகமோ அவன் ஆழ்ந்த உறக்கத்தில் இருக்கிறான் என்றாகிறது.

இதைத்தான் நானும் சொல்லிக் கொண்டிருக்கிறேன். பல்கலைக் கழகப் பேராசிரியர்களை விடவும், கோயில்களின் பண்டிதர்களை விடவும், கள்ளங்கபடமற்ற சாமானியர் அதிக விழிப்போடு இருக்கிறார்கள். பண்டிதர்கள் சொன்னதைச் சொல்லும் கிளிப் பிள்ளைகள். பேராசிரியர்களின் மனதிலோ சாணத்தைத் தவிர வேறு எதுவும் இல்லை. அர்த்தமற்ற இரைச்சல்தான் அவர்களுக்குள்ளே நிரம்பிக் கிடக்கிறது. வெறும் மனம். பிரக்ஞையே இல்லை.

இயற்கையின் சூழலில் பணிபுரியும் விவசாயிகள், தோட்டக்காரர்கள், மரம் வெட்டிகள், தச்சர்கள், ஓவியர்கள் இவர்களைப் பாருங்கள். பல்கலைக் கழகங்களில் துறைத் தலைவர்களாகவும் பேராசிரியர்களாகவும் இருப்போரை விட, விழிப்போடு இருக்கிறார்கள். காரணம் இயற்கை விழிப்போடு இருப்பதுதான். மரங்களை எடுத்துக் கொள்ளுங்கள். அவற்றின் விழிப்புணர்வு வேறு வகையானது என்றாலும், அவை விழிப்புணர்வோடுதான் இருக்கின்றன.

மரங்களின் விழிப்புணர்வுக்கு விஞ்ஞானத்தில் நிரூபணங்கள் இருக்கின்றன. மரத்தை வெட்ட வேண்டும்

என்ற எண்ணத்தோடு கையில் கோடரியோடு வருபவனைக் கண்டு மரங்கள் நடுங்குகின்றன.

இதைச் சொல்லும்போது கவிஞனின் பிதற்றல் என்று எடுத்துக் கொள்ளக்கூடாது. விஞ்ஞானத்தின்படிதான் சொல்கிறேன். மரங்கள் மகிழ்ச்சியாகவோ துயரமாகவோ இருப்பதையும், பயந்து கொண்டிருப்பது அல்லது பயமில்லாது இருப்பதையும், துக்கமாகவோ அல்லது பரவசப்பட்டோ இருப்பதையும் அளக்க இப்போது கருவிகள் இருக்கின்றன. விறகு வெட்டி வரும்போது பயந்து நடுங்குகின்றன. மரண பயம் வந்து விடுகிறது. இன்னமும் எந்த மரத்தையும் அவன் வெட்டவில்லை என்றாலும் அவன் வருவதே போதும் மரங்களைப் பயமுறுத்த.

இதில் ஒரு விநோதம். விறகு வெட்டி மனதில் மரத்தை வெட்டும் எண்ணமில்லாமல் போய்க் கொண்டிருந்தால் எந்த மரமும் நடுங்குவதில்லை. அதே விறகுவெட்டி அதே கோடரியோடு போகும்போதுதான் என்கிறேன். என்ன பொருள்? அவனுடைய உத்தேசங்களை மரங்கள் தெரிந்து கொள்கின்றன. அவனுடைய சிலிர்ப்புகள் அனைத்தையும் மரங்கள் புரிந்து கொள்கின்றன. இதுதான் பொருள்.

இன்னுமொரு முக்கியமான நிகழ்வையும் விஞ்ஞானம் கண்டிருக்கிறது. காட்டுக்குப் போய் ஒரு மிருகத்தைக் கொல்லும்போது பிற மிருகங்கள் மட்டுமின்றித் தாவரங்களும் கூடத்தான் அதிர்ச்சி அடைகின்றன. ஒரு மானைக் கொல்லும்போது பிற மான்கள் அந்தக் கொலையின் அதிர்வுகளால் பாதிக்கப்படுகின்றன. நடுங்குகின்றன. திடீரென ஓர் இனம் புரியாத நடுக்கம் அது. மானொன்று கொல்லப்படுவதைப் பார்க்காத மான் கூட அச்சத்தில் நடுங்குகிறது. அடிப்படை உணர்வுகளில் ஒரு தாக்கம் இருக்கிறது. மான்கள் மட்டுமா? மரங்களும் கூடத்தான் அப்படி நடுங்கின்றன. கிளிகள், புலிகள், பருந்துகள், புல்லின்



இதழ்கள் என்று அனைத்துமே பயந்து நடுங்குகின்றன. ஒரு கொலை, ஓர் அழிவு, ஓர் இறப்பு நடந்தேறிவிட்டது. எனவே அனைத்தும் பாதிக்கப்படுகின்றன.

மனிதனோ? அவன் மட்டுமே பிரக்ஞை மரத்துப் போன தூக்கத்தில் கிடக்கிறான்.

பின் வரும் புத்தரின் சூத்திரங்களை ஆழ்ந்து தியானிக்க வேண்டும். தனக்குள் செரித்துக் கொண்டு பின்பற்ற வேண்டும்.

## 'விழித்திருப்பதே வாழும்வகை'

எந்த அளவுக்கு விழித்திருக்கிறாயோ அந்த அளவுக்கே வாழ்கிறாய். விழிப்பே வாழ்வதையும் இறந்திருப்பதையும் வேறுபடுத்துகிறது. மூச்சு விட்டுக் கொண்டிருப்பதாலேயே வாழ்ந்து கொண்டிருக்கிறாய் என்பதில்லை. உணர்வுகள் ஏதுமில்லாமல் உடலளவில் உயிரைப் பிடித்து வைத்துக் கொண்டிருக்க மருத்துவமனைகள் இருக்கின்றன. இதயம் துடித்துக் கொண்டிருக்கும். மூச்சு விட்டு வாங்கிக் கொண்டுமிருப்பாய். இயந்திரத்தனமாக இதயம் அடித்துக் கொண்டிருக்க, இரத்தம் ஓடிக் கொண்டிருக்க, பல வருடங்கள் ஓர் உடலை உயிரோடு வைத்திருக்க முடியும். முன்னேறிய நாடுகளில் பலரும் இப்படி மருத்துவ மனைகளில் கிடக்கிறார்கள். மரணத்தை கால அவகாசமின்றித் தள்ளிப்போட இன்றைய மருத்துவத் தொழில் நுட்பத்தில் பல வழிவகைகள் இருக்கின்றன. பல வருடங்களுக்கு, பல நூறு ஆண்டுகளுக்குக் கூட உயிரோடு வைத்திருக்க முடியும். இதுதான் வாழ்வது என்றால் உன்னை உயிரோடு வைத்திருக்க முடியும். ஆனால் இதுவல்ல வாழ்வதென்பது. ஜடமாய்க் கிடப்பதல்ல வாழ்க்கை.



புத்தர்கள் வாழ்வுக்குப் புதிய இலக்கணம் வகுத்திருக்கிறார்கள். அந்த இலக்கணத்துக்கு அடிநாதம் விழிப்பு. மூச்சுவிட்டுக் கொண்டிருப்ப தாலல்ல, உயிரோடு இருப்பது. இரத்தம் ஓடிக் கொண்டிருப்பதாலல்ல, உயிரோடு இருப்பது. விழிப்போடு இருப்பதே உயிரோடிருப்பது என்கிறார்கள். எனவே விழிப்படைந்தோர் தவிரப் பிறர் உண்மையில் வாழ்பவரே அல்ல. நடந்து, பேசி, இதையும் அதையும் செய்யும் பிணங்கள். எந்திர மனிதர்கள்.

புத்தர், ''விழித்திருப்பதே வாழும் வகை,'' என்கிறார். இன்னமும் விழிப்படைந்தால் இன்னமும் அதிகம் வாழ்கிறாய். வாழ்வே கடவுள். வேறு கடவுள் இல்லை. அதனால்தான் புத்தர் வாழ்வைப் பற்றியும் விழித்திருத்தலைப் பற்றியுமே பேசிப் போனார். வாழ்வே குறிக்கோள். விழிப்பே உபாயம். குறிக்கோளை அடையும் வழியும் வகையும்.

**'மூடன் தூங்கிக் கிடக்கிறான்.'**

எல்லோரும் தூங்கிக் கொண்டிருப்பதால் எல்லோரும் முட்டாள்கள். உங்களை நான் நிந்திக்கவில்லை. உண்மையை அப்பட்டமாகச் சொல்ல வேண்டியிருக்கிறது. தூக்கத்திலேயே செயல்பட்டுக் கொண்டிருப்பதாலேயே இத்தனை இடறல்கள். விருப்பமில்லாததை எல்லாம் செய்து கொண்டிருக்கிறீர்கள். செய்வதில்லை என்று முடிவெடுத்து வைத்திருந்ததையெல்லாம் செய்கிறீர்கள். சரியல்ல என்று தெரிந்ததையெல்லாம் செய்கிறீர்கள். சரியானது என்று தெரிந்து கொண்டது எதையும் செய்வதில்லை.

இது எப்படிச் சாத்தியம்? ஏன் நிமிர்ந்து நடக்கலாகாது? எப்படிக் குறுக்கு சந்துகளின் பொறிகளில் மாட்டிக் கொள்கிறீர்கள்? ஏன் எப்போதும் பாதை மாறிப் போய்க் கொண்டிருக்கிறீர்கள்?



ஓர் இளைஞன் பிசிறில்லாத குரலுடையவன். அவனை ஒரு நாடகத்தில் நடிக்க அழைக்கிறார்கள். மேடையில் தோன்றுவது தனக்குத் தர்மசங்கடம் என்பதை அவன் சொல்லியும் விடுவதாயில்லை. ஒரே ஒரு வரி சொன்னால் போதும். சுலபம் என்றெல்லாம் சொல்லி வற்புறுத்துகிறார்கள். ஒரு முத்தம் கேட்டு வந்தேன். கூட்டத்தில் கலந்தேன். இதோ ஒரு துப்பாக்கி வெடி. அவ்வளவுதான் அவன் சொல்ல வேண்டியது.

நாடகத்தன்று பூட்டிவிட்ட இறுக்கமான கால்ச்சராய்க்குள் சங்கடப்பட்டு நெளிந்து கொண்டு மேடையேறுகிறான். வெள்ளாடையில் பூங்காவில் இவனை எதிர்பார்த்துப் படுத்துக் கிடந்த அழகிய கதாநாயகியைக் கண்டவுடன் உளறிக் கொட்டுகிறான். உன்னைக் கேட்டு வந்தேன். இல்லை இல்லை ஒரு முத்தம் கேட்டு... பாழாய்ப் போன இந்த நாடத்தில் நடிக்கவே நான் வந்திருக்கக் கூடாது.

இதுதான் நடந்து கொண்டிருப்பது. நன்றாகக் கவனித்துப் பார். நீ செய்வதையெல்லாம் குழப்பத்திலேயே செய்து கொண்டிருக்கிறாய். குழப்பமாகத்தானிருக்கிறது எல்லாமும். தெளிவில்லை. சரியான கண்ணோட்டம் இருப்பதில்லை. சுதாரித்து இருப்பதில்லை. பார்க்க முடிவதில்லை. கேட்க முடிவதில்லை. என்னதான் காதுகள் சப்தங்களைக் கேட்கின்றன என்றாலும், கேட்டதைப் புரிந்து கொள்ள உனக்குள்ளே யாரும் இல்லை. கண்கள் பார்த்துக் கொண்டேயிருக்க, காதுகள் கேட்டுக் கொண்டேயிருக்க புரிந்து கொண்டது எதுமில்லை.

உனக்கு உண்மையில் கண்கள் இருக்கின்றன என்றால் கடவுளை எங்கெங்கும் காண்பாய். கேட்க முடியுமென்றால் தெய்விக இசையைக் கேட்பாய். இருத்தலின் ஸ்வர ராகத்தைக் கேட்பாய்.



ஆனால் ஒவ்வோர் அடியிலும் இடறுகிறாய். ஒவ்வொர் அடியிலும் தவறு செய்கிறாய். இருந்தும் விழிப்படைந்தவன்தான் என்று நம்பிக் கொண்டிருக் கிறாய். அந்த எண்ணத்தைப் போக்கிவிடு. அது ஒரு மிகப் பெரிய தண்டனை. நான் விழிப்படைந்தவன் என்ற எண்ணத்தைப் போக்கிவிட்ட அதே கணம் விழிப்படைவதற் கான வழிவகைகளைத் தேட ஆரம்பித்துவிடுகிறாய். எனவே முதலில் நீ புரிந்து கொள்ள வேண்டியது, நீ இன்னமும் தூக்கத்தில் இருக்கிறாய் என்பது. ஆழந்த தூக்கத்தில் இருக்கிறாய் என்பதுதான்.

நவீன மனோதத்துவம் கண்டுபிடித்தவற்றில் சில முக்கியமானவை, என்னதான் அறிவார்த்தமாகக் கண்டு பிடித்தவை என்றாலும் முக்கியமானவையாகத்தான் இருக்கின்றன. நல்லதொரு ஆரம்பமும் கூட. அறிவுப் புலனில் கண்டு கொள்ளப்பட்டவை எனும்போது இருத்தல் புலனில் அனுபவிக்கவும் முடியுமென்றாகிறது.

ஃபிராய்டு இந்த வகையில் ஒரு பெரிய முன்னோடி. புத்தருடைய அளவுக்குப் பெரியவர் இல்லையென்றாலும் மிகவும் முக்கியமானவர்தான். மனிதனுக்குள் பெரியதோர் ஆழ்மனம் இருக்கிறதென்ற கொள்கையை மானுடத்தின் பெரும்பகுதியினரை முதல் முதலாக ஏற்றுக்கொள்ள வைத்தவர். உணர்வளவில் இருக்கும் மனம் மொத்த மனத்தில் பத்தில் ஒரு பகுதிதான். ஆழ்மனம் அதைப் போல ஒன்பது மடங்கு பெரியது என்கிறார்.

அவருடைய மாணவர் யங், இன்னும் ஒரு படி மேலே போனார். அனைவருக்கும் பொதுவான ஆழ்மனம் ஒன்றும் இருக்கிறதென்கிறார். தனிப்பட்டவரின் ஆழ்மனதுக்குப் பின் இந்தச் சமுதாய ஆழ்மனது இருக்கிறதென்கிறார். அதை அடுத்து இருக்கும் இன்னொன்றையும் கண்டு பிடிக்க ஒருவர் வேண்டுமே.



எப்போதைக்கோ ஒரு நாள் இரும்புத் திரைக்கு அப்புறமும் இப்புறமும் இருப்பவர்களுக்குப் பொதுவான அந்தப் பிரக்ஞையை மனோதத்துவ அடிப்படையில் கண்டுபிடிக்க ஒருவர் வரத்தான் போகிறார் என்று நம்புகிறேன். பிரபஞ்சத்தின் பிரக்ஞை. புத்தர் அதைப் பற்றிப் பேசியிருக்கிறார்.

எனவே உணர்வுகளின் பாற்பட்ட மனம் மிக மெல்லியது. உடைந்துவிடக்கூடியது. உன் இருத்தலின் வெகு சிறியதொரு பகுதி. அதைத் தாண்டி தெளிவாகத் தெரியாத ஆழ்மனம் இருக்கிறது. அதனுடைய கிசுகிசுத்த குரல் அவ்வப்போது கேட்கிறது. புரிந்து கொள்ளத்தான் முடியவில்லை. அது எப்போதும் இருந்து கொண்டே இருக்கிறது. உணர்வுகளைத் தாண்டி அந்த உணர்வுகளைச் சுண்டிக் கொண்டு இருக்கிறது.

மூன்றாவதாக இந்த ஆழ்மனதைக் கனவுகளிலோ போதையிலிருக்கும்போதோ மட்டும் உணர்கிறாய். அதற்கடுத்தது சமுதாயத்துக்குப் பொதுவான ஆழ்மனது. உன் ஆழ்மனதைத் துருவித் துருவிப் பார்க்கும்போதே இதைக் காண வருகிறாய். இன்னமும் ஆழ்ந்து அமிழ்ந்து போகும்போது பிரபஞ்சப் பிரக்ஞையைக் காண வருகிறாய்.

பிரபஞ்சப் பிரக்ஞையே இயற்கை. இன்றளவும் வாழ்ந்து கொண்டிருக்கும் சமூகப் பிரக்ஞையே உன்னுடைய ஒரு பகுதியாகிறது. உன்னுடைய ஆழ்மனது சமுதாயம் உனக்குள் அடக்கி வைத்திருக்கும் உன்னுடையதேயான ஆழ்மனதாகும். அதைத் தெரிவிக்க வருவதில்லை. அதனால்தான் அது புறக்கடைய வழியாக, இரவில் உன் கனவுகளில் வெளிப்படுகிறது.

உணர்வு சார்ந்த மனமா? அப்படித்தான் சொல்கிறார்கள் அதை. நானும் அதே பெயரிட்டுச் சொல்கிறேனே. அது மிகச்



சிறியதொரு பொறி. என்னதான் சிறியதென்றாலும் அது ஒரு விதை. விதைகள் எப்போதும் சிறியதாகத்தானே இருக்கின்றன. என்றாலும் அதில் அடங்கிக் கிடப்பததோ அனந்தம்.

இவ்வாறாக ஒரு புதிய பரிணாமம் உருக்கொள்கிறது. ஃபிராய்டு உணர்வு நிலைக்கு அடியில் இருந்ததற்கு ஓர் உருக் கொடுத்தார். ஃபிராய்டும் அரவிந்தரும் இந்த நூற்றாண்டின் தலை சிறந்த இருவர். இருவருமே அறிவு ஜீவிகள். ஞானிகளல்ல. என்றாலும் மானுடத்துக்குப் பெரும் சேவை செய்தவர்கள். அறிவார்த்தமாகவே அவர் காட்டிப் பேசுவதும் இதுதான். மேலோட்டமாகப் பார்ப்பதற்கு சின்னஞ் சிறியவர்களாய்த் தோன்றும் நமக்குப் பின்னே பெரும் ஆழங்களும் உயரங்களும் பொதிந்து கிடக்கின்றன.

ஃபிராய்டு ஆழங்காணக் குதித்தார். அரவிந்தர் உயரம் காணப் பறந்தார். உணர்வு சார்ந்த நமது மனதுக்கு மேல் உண்மையான உணர்வுகள் கொண்ட மனமிருக்கிறது. அதை உணரத் தியானமே வழி.

சாதாரண உணர்வும் தியானமும் சேர்ந்திணையும்போது உண்மையான உணர்வு பிறக்கிறது. இந்த உண்மையான உணர்வுப் புலத்துக்கு அப்பால் இருப்பது அதீத உணர்வுப் புலம்.

தியானத்தின்போது தோன்றி மறையும் காட்சிகளைத் தான் பார்க்கிறாய். தியானம் என்பதே இருட்டில் தப்படி வைத்து நடப்பது போலத்தான். சில சன்னல்கள் திறந்து கொள்கின்றன. ஆனாலும் திரும்பத் திரும்ப இருட்டுக்குள் தான் விழுகிறாய். அதீத உணர்வுப் புலம் என்பது சமாதி நிலை. தெள்ளத் தெளிவான நோக்கைப் பெற்று விடுகிறாய். ஒருங்கிணைந்த விழிப்புணர்வில் இருக்கிறாய். இனி அதிலிருந்து பிரிந்து விடுவதென்பதில்லை. அது



உன்னுடையதோயாகிப் போகிறது. தூங்கும்போதும் இணைபிரியாது நிலைத்திருக்கிறது.

இந்த அதீத உணர்வுப் புலனைத் தாண்டி யிருப்பது சமூக உணர்வுப் புலன். இதைத்தான் மதங்கள் கடவுள்களாக உருவகிக்கின்றன. இந்தச் சமூக உணர்வும் புலனைத் தாண்டியது.

பிரபஞ்சப் பிரக்ஞை கடவுளரைத் தாண்டிய நிலை. புத்தர் அதை நிர்வாணம் என்றார். மகாவீரர் அதைக் கைவல்யம்-வீடுபேறு என்கிறார். இந்துக்கள் அதை மோட்சம் என்கிறார்கள். நீ வேண்டுமானால் அதைச் சத்தியம் என்று சொல்லிக் கொள்ளலாம்.

இவையே உன்னுடைய நவ நிலைகள். நீயோ உன்னுடைய இருப்பின் ஒரு சிறு மூலையில் முடங்கிக் கிடக்கிறாய், உணர்வுப் புலனுக்குக்குள். இது எப்படி யிருக்கிதென்கிறாயா?

பெரியதொரு மாளிகைக்குச் சொந்தக்காரன் மாளிகையை மறந்துவிட்டு வாசலே தன் வீடு என்று நினைத்துக் கொண்டு அங்கேயே ஒதுங்கி நின்று விடுவதைப் போலத்தான்.

ஃபிராய்டும், அரவிந்தரும் சிறந்த மேதைகள். முன்னோடிகள். தத்துவவாதிகள். ஆனால் இரண்டு பேருமே யூகங்களைக் கைக்கொண்டிருந்து விட்டார்கள்.

பெர்ட்ரண்ட் ரஸ்ஸல், ஆல்பிரட் நார்த் வைட்ஹெட், மார்டின் ஹெய்டெக்கர், ஜீன் பால் சாத்ரே ஆகியோருடைய சிந்தனைகளைச் சொல்லித் தருவதை விட்டு, அரவிந்தருடைய கருத்துக்களைச் சொல்லித் தரலாம். அரவிந்தர் இந்த யுகத்தின் மிகச் சிறந்த தத்துவவாதி. என்றாலும் அவரை இந்தக் கல்வியாளர்கள் முழுக்கப் புறக்கணித்துவிட்டார்கள். ஒரு குறிப்பிட்ட காரணத்தினால் தான்.



அரவிந்தருடைய எழுத்தைப் படித்தாலே போதும். இன்னமும் விழிப்பு வரவில்லை என்பது தெரிந்து விடும். அவர் புத்தராகவில்லை, என்றாலும் அவருக்கெதிரில் தர்மசங்கடப்பட்டு நெளியும் அளவுக்குத்தான் பலரும் இருக்கிறார்கள். அவர் சொல்வது சரிதானென்றால் நீ என்ன செய்து கொண்டிருக்கிறாய்? உன்னுடைய இருப்பின் உயரங்களை அளக்க ஏன் இறக்கை விரிக்க மாட்டேனென்கிறாய்?

கடுமையான எதிர்ப்புக்குப் பின்னரே ஃபிராய்டை ஏற்றுக் கொண்டார்கள். அரவிந்தரையோ இன்னும் ஏற்றுக் கொள்ளவேயில்லை. பார்க்கப் போனால் அவருக்கு எதிர்ப்பும் இல்லை. உதாசீனப்படுத்தி வைத்திருக்கிறார்கள். காரணமோ தெளிவாகத்தான் இருக்கிறது.

ஃபிராய்ட் உணர்வுக்கு அடியில் இருப்பதைப் பற்றிப் பேசுகிறார். அது அவ்வளவாகச் சங்கடப்படுத்துவதில்லை. உணர்வுகள் இருப்பவன்தான் நீ என்பதும், அந்த உணர்வுகளுக்குக் கீழ் ஆழ்மனம் இருக்கிறது என்பதும் தெரிந்து கொள்வதற்கு நன்றாகத்தான் இருக்கிறது. ஆனால் அந்த நிலைகள் யாவும் ஆழ்ந்த நிலைகள், நீ அவற்றுக்கு மேல் இருக்கிறாய். உயர இருப்பது என்பது உணர்வதற்கு நன்றாகத்தான் இருக்கிறது.

அரவிந்தரைப் படித்துப் பார்க்கும்போதோ சங்கடத்தில் நெளிகிறாய். நீ இருக்கும் நிலையை விட உயர்ந்த நிலை இருக்கிறதென்கிறாரே. குத்திக் காண்பிப்பதைப் போல இருக்கிறது. ஆணவம் உனக்கு மேலும் ஒன்று இருக்கிறது என்பதை ஏற்றுக் கொள்ளத் தயாராக இல்லை. தான்தான் உச்சியில் இருப்பதாக நினைக்கத்தான் மனிதமனம் விரும்புகிறது. தானே உச்சகட்டம், தானே கௌரிசங்கர், தானே எவரெஸ்ட் என்ற நினைப்பு. தன்னை விட உயர்ந்தது எதுவுமில்லை என்ற நினைப்பு.



அதனால் இன்றைய மனிதன் கடவுளை மறுக்க விரும்புகிறான். கடவுளை ஏற்றுக் கொள்வதென்பது தன்னைவிடவும் உயர்ந்தவரொருவர் இருப்பதாக ஏற்றுக் கொள்வதாகிவிடுமல்லவா? இன்றைய மனிதனின் ஆணவம் கொழுத்துத் திரிகிறது. அதனால்தான் அவன் மனம் கடவுள் இல்லையென்கிறது. அவனுக்குத் தெரிந்ததைத் தாண்டியது எதுவும் இல்லை என்கிறது. பிறிதொரு வாழ்வு இல்லையென்கிறது.

உன்னுடைய ராச்சியத்தை உனக்கே மறுத்துக் கொள்வதும் உன்னுடைய உயர்வுகளை மறுத்துக் கொள்வதும் சௌகரியமாக இருக்கிறது. என்ன முட்டாள்தனம் பார்.

புத்தர் சொன்னது சரிதான்.

**'ஏற்கெனவே இறந்துவிட்டவன் போல
மூடன் தூங்கிக் கிடக்கிறான்.**

**குருவோ விழித்திருக்கிறார்
நித்தியமாக நிலைத்திருக்கிறார்.'**

விழிப்புணர்வு நித்தியமானது. அதற்கு இறப்பில்லை. விழிப்பின்மைதான் மரணிக்கிறது. எனவே தூங்கிக் கொண்டு விழிப்பின்றி இருந்தால் நீ மறுபடியும் சாக வேண்டியிருக்கிறது.

மறுபடி மறுபடி பிறப்பெடுப்பதன் துயரத்தைத் தவிர்க்க வேண்டுமானால், பிறப்பு இறப்பெனும் சுழற்சிலிருந்து விடுபட வேண்டுமானல், விழிப்புணர்வு பெற்றாக வேண்டும். உன்னுடைய உணர்வுகள் உயர, உயர எழ வேண்டும்.

இவற்றை அறிவு பூர்வமாக ஏற்றுக் கொள்ளலாகாது. இவற்றை நாம் அனுபவ பூர்வமாக அறிந்து கொள்ள



வேண்டும். அவை இருத்தலின் ஓர் அங்கமாகிவிட வேண்டும். தத்துவார்த்தமாகப் புரிந்துகொள்ள வேண்டும் என்று சொல்லவில்லை. ஏனென்றால் தத்துவார்த்தமாகப் பிறக்கும் நம்பிக்கை கொண்டுவருவது ஒன்றுமில்லை. விழிப்படைய வேண்டும் என்ற முயற்சியில்தான் உன் சாகுபடி அனைத்தும் இருக்கிறது.

என்றாலும் அறிவின் வரைபடங்கள் ஓர் ஆசையை, ஓர் ஏக்கத்தைத் தோற்றுவிக்கும். சாத்தியமானதை இனம் காண வைக்கும். எப்படித் தோன்றுகிறாயா-அதுவல்ல நீ என்ற உணர்வைத் தருவது. அதைவிட மிக மிக அதிகமானவன் நீ என்ற உணர்வைத் தரும்.

**'ஏற்கெனவே இறந்துவிட்டவன் போல**
**மூடன் தூங்கிக் கிடக்கிறான்.**

**குருவோ விழித்திருக்கிறார்.**
**நித்தியமாக நிலைத்திருக்கிறார்.**
**அவர் கவனித்திருக்கிறார்.**
**தெளிவாக இருக்கிறார்.'**

எளிமையான அழகான கூற்றுகள். உண்மை என்றுமே எளியதும் அழகானதும்தான். இந்தக் கூற்றுகளின் எளிமையையும் அழகையும் பார்த்தாலே போதும். உலகங்களைத் தாண்டிய உலகங்களாகக் காட்சி விரிகிறது. எண்ணற்ற உலகங்கள். அவர் கவனித்திருக்கிறார். அவர் தெளிவாக இருக்கிறார்.

கற்றுக் கொள்ள வேண்டியது ஒன்றேதான். கவனித்திருப்பது. கவனி. உன் ஒவ்வொரு செயலையும் கவனித்துப் பார். உன் மனதில் ஓடும் ஒவ்வொர் எண்ணத்தையும் கூர்ந்து கவனி. நடக்கும் போதும், பேசும் போதும், சாப்பிடும் போதும், குளிக்கும் போதும், உன்



**ஒவ்வொரு அசைவையும் கவனி. அனைத்தையும் கவனித்துக் கொண்டே இரு. ஒவ்வொன்றும் கவனிப்பதற்கான ஒரு சந்தர்ப்பமாக அமையட்டும்.**

இயந்திரத்தனமாகச் சாப்பிடாதே. வயிற்றை நிரப்பிக் கொள்ளாதே. நல்ல கவனத்தோடு இரு. கவனமாக நன்றாக மென்று விழுங்கு. பிறகுதான் உனக்குத் தெரியும், எத்தனை விஷயங்களைத் தெரிந்து கொள்ளாமல் இருந்துவிட்டாய் என்பது.

ஒவ்வொரு கடியும் ஒரு திருப்தியைத் தரும். கவனித்துச் சாப்பிட்டால் சுவை கூடும். சாதாரண உணவிலும் அபாரமான சுவை கூடிவிடும். கவனித்துச் சாப்பிடவில்லையென்றால் மிகப் பிரமாதமான விருந்தும் சுவையற்றுப் போய்விடும். சாப்பிடுவதைக் கவனிக்க யாரும் இல்லை, அதனால்தான், சும்மா நிரப்பிக் கொள்கிறாய், அவ்வளவுதான்.

மெதுவாகச் சாப்பிடு. சாப்பிடுவதைக் கவனித்துக் கொண்டே சாப்பிடு. ஒவ்வொரு கவளத்தையும் மென்று விழுங்கு. சுவைத்து விழுங்கு. தென்றலையும் சூரியனின் கதிர்களையும் முகர்ந்து தொட்டு உணர்ந்து பார். நிலவைப் பார்க்கும்போது கவனித்துப் பார்க்கும் குளமாகிவிடு. நீ பிரதிபலிக்கும் நிலவுக்கு அழகு பலமடங்கு கூடிப் போகும். வாழ்க்கைக்குள் நகர்ந்து போய்க் கொண்டிருக்கும் ஒவ்வொரு கணத்தையும் நீங்காது கவனித்திரு.

மறுபடி மறுபடி மறந்து போவாய். மறதி மிக இயல்பானது. வருந்த வேண்டாம். பல கோடிப் பிறப்புகளில் கவனித்திருக்க நீ முயன்றதேயில்லை. அதனால் மறந்துவிடுவதென்பது சுலபமான காரியமாகிவிட்டது. ஆனால் நினைத்துக் கொண்ட அதே கணத்தில் மறுபடி கவனி.



ஒன்றை நினைவில் கொள். நினைத்திருப்பதை மறந்திருக்கிறேன் என்று தெரியும்போது வருந்தாதே. வருத்தத்தில் நேரத்தைத்தான் விரயம் செய்வாய். அடேடே மறுபடி விட்டுவிட்டேனே என்றும், ஐயோ நான் பாவி என்றும் உன்னையே நிந்தித்துக் கொள்ளாதே.

கடந்து போனதைப் பற்றி வருந்திக் கொண்டிருப்பதை விட்டுவிடு. நடப்புக் கணத்தை வாழ்ந்து பார். மறந்துவிட்டதால் கெட்டுப் போனது ஒன்றுமில்லை. மறப்பது வாழ்க்கையாகிப் போனது. பழக்கங்கள் சீக்கிரம் மாறுவதில்லை.

அதுவும் மறப்பு என்பது ஒரு பிறப்பில் நேர்ந்து கொண்ட பழக்கமல்ல. பலகோடி வருடங்களாகக் கைக்கொண்டிருந்த பழக்கம். எனவே ஒரு சில கணங்களுக்காவது விழிப்போடு இருக்க முடியுமானால் அதற்காகக் கடவுளுக்கு நன்றி சொல். சில கணங்களென் றாலும் அவை எதிர்பார்ப்பதை விட அதிகம்தான்.

**'அவர் கவனித்திருக்கிறார்.**
**தெளிவாக இருக்கிறார்.'**

கவனித்திருக்கும் போது தெளிவு பிறக்கிறது. எப்படி என்கிறாயா? எந்த அளவுக்குக் கவனிக்கிறாயோ அந்த அளவுக்கு உன்னுடைய அவசரகதி நிதானமாகிறது. உன்னிடம் ஒரு பொலிவு ஏற்படுகிறது. சளசளத்துக் கொண்டிருந்த மனம் சளசளப்பைக் குறைத்துக் கொள்கிறது. சளசளப்பாகிக் கொண்டிருந்த சக்தி கவனிக்கும் சக்தியாகிவிடுகிறது. மேலும், மேலும் சக்தியைக் கவனிப்பதற்கு மடைமாற்றம் செய்யும்போது மனம் ஊதிப்போவதற்கான ஊட்டத்தை இழக்கிறது.

எண்ணங்கள் மெலிந்து போய் எடை குறைந்து போகின்றன. மெதுவாக, மிக மெதுவாக எண்ணங்கள் சாகச்



சாகத் தெளிவு பிறக்கிறது. உன் மனம் பிரதிபலிக்கும் ஒரு கண்ணாடியாகிப் போகிறது.

**'என்ன ஆனந்தம்.'**

தெளிவு உதிக்கும் போது ஆனந்தம் மலர்கிறது. குழப்பமே துயரத்துக்குக் காரணம். தெளிவே பேரானந்தத்துக்கு அடித்தளம்.

**'என்ன ஆனந்தம்.'**

விழித்திருப்பதே வாழ்வு என்று தெரிந்து கொண்டவர் அல்லவா?

விழிப்பை அழித்துவிட முடியாது என்பதால் இனி இறப்பில்லை என்பது தெரிந்து விடுகிறது. இறப்பு அணுகும்போது அதையும் கவனிக்கத்தான் செய்வாய். இறப்பதைக் கவனித்துக் கொண்டே இறப்பாய். கவனிப்பது இறப்பதில்லை. மண்ணோடு மண்ணாக உன் உடல் மறைந்து போகும். உன்னுடைய கவனிப்போ நிலைத்திருக்கும். பிரபஞ்சப் பிரக்ஞையாகிப் போகும்.

அப்படிப்பட்ட கணங்களில் இருந்து கொண்டுதான் உபநிடதத்து முனிவர்கள் 'அஹம் பிரம்மஸ்மி' என்று சொன்னார்கள்-நானே பிரபஞ்சப் பிரக்ஞை. அப்படிப்பட்ட ஒரு நிலையில்தான் அல் ஹில்லாஜ் மன்சூர் 'அனா-ல்ஹக்' 'நானே - சத்தியம்' என்று அறிவித்தார்.

இந்த உயர்வு உன் பிறப்புரிமை. உனக்குச் சித்திக்கவில்லையா? வேறு யாருமல்ல. நீயேதான் அதற்குப் பொறுப்பு.

**'என்ன ஆனந்தம்.**
**விழித்திருப்பதே வாழ்வென்பது**
**தெரிந்திருக்கிறது.**



**என்ன ஆனந்தம் அது.**
**விழிப்பின் வழிச் செல்வது.**

**தளர்வில்லாத தியானத்தில்**
**சுதந்திரத்தையும் ஆனந்தத்தையும்**
**தேடுகிறார்.'**

முனைப்பாகத் தியானித்து என்ற வார்த்தைகளை நன்கு கவனி. முழுமுயற்சியின்றி உன்னை விழிப்படையச் செய்யமுடியாது. அரைகுறையான முயற்சிகள் வீண். ஓரளவுக்கு என்பது இதில் பயனளிக்காது. வெதுவெதுப்பான நீர் ஆவியாகாது. அரையும் குறையுமான முயற்சிகள் தோற்றுத்தான் போகும்.

உன்னுடைய மொத்தச் சக்தியையும் பயன்படுத்தும் போதே நிலைமாற்றம் சாத்தியம். நூறு டிகிரி வெப்பத்திலேயே கொதித்து ஆவியாக முடியும். அப்போதுதான் ரசவாதம் நிகழும். அப்போதுதான் உயர எழும்பத் துவங்குவாய்.

நீர் பள்ளத்தை நோக்கி ஓடுகிறது. நீராவியோ உயர எழுகிறது. கவனித்திருக்கிறாயா? அப்படியேதான் விழிப்பற்றது கீழே அமிழ்கிறது. விழிப்படைந்தது மேலே எழுகிறது. இன்னுமொன்று. உயர எழுவதென்பது அகத்திருப்பல். அமிழ்ந்து போவதென்பதோ புறத்தே திரும்புவது.

விழிப்படைந்த மனது உள்நோக்கி நகர்கிறது. விழிப்படையாத மனது வெளியே இருப்பதை நோக்கிப் பாய்கிறது. பொருட்கள், பிறர் என எதைப் பார்த்து நீ திரும்பினாலும், அவை, உன்னையன்றிப் பிற என்பதைத் தெரிந்து கொள். அந்நிலையில் இருட்டில்தான் இருக்கப் போகிறாய். பிறரை நோக்கியே உன் கண்கள் குவிகின்றன. புறண்மை தோன்றிவிட நீ வெளிநோக்கு கொண்டவனாகி



விடுகிறாய். பிரக்ஞையோ அகநோக்குக் கொண்டவனாக்குகிறது. உள்ளேயிருக்கும் மையத்தை நோக்கி உன்னைச் செலுத்துகிறது.

உள்ளே எனும்போது உயரவும் கூடத்தான். ஒரு மரம் வளர்வதைப் போல இரண்டும் ஒரே சமயத்தில் நடக்கிறது. உயர வளரும் கிளைகளைப் பார்க்கும் நீ, ஆழப் போகும் வேர்களைப் பார்ப்பதில்லை.

முதலில் வேர்கள் உள் நோக்கி வளர வேண்டும். அப்போதுதான் கிளைகள் மேல்நோக்கி வளர முடியும். கிளைகள் வானத்தைக் கிழித்துக் கொண்டு உயர வேண்டுமானால், வேர்கள் நிலத்தை வகிர்ந்து கொண்டு கீழே வெகு கீழே போக வேண்டும். மரம் இருபுறமும் ஒரு சேர வளர்கிறது. அப்படியேதான் பிரக்ஞையும் உயரவும் ஆழவும் ஒரு சேர வளர்கிறது. உன்னுடைய இருத்தலுக்குள் தன் வேர்களைப் பதிக்கிறது.

ஒன்பது பிரக்ஞை நிலைகள் பற்றிச் சொன்னேன். உன்னுடைய உணர்வுகள் கிளை பரப்பி மேலே வளர்ந்து உண்மையான உணர்வுகளை நோக்கி வளர்கின்றன. அங்கிருந்து அதீத உணர்வுநிலைக்குப் போகின்றன. பிறகு சமுதாய உணர்வுகளாக மாறுகின்றன. அதற்கும் பின் பிரபஞ்சப் பிரக்ஞையாக மாறுகின்றன.

உன் வேர்கள் மனதிலிருந்து ஆழ் மனதுக்கும் அங்கிருந்து மனமற்ற நிலைக்கும் பிறகு சமுதாய மனமாகவும் கடைசியாகப் பிரபஞ்சப் பிரக்ஞையாகவும் பதிகின்றன. உன்னுடைய வேர்கள் உன்னுடைய இயல்பைச் சென்று சேர்ந்த அதே கணம் உன் தெய்விக மலர்கள் மலர ஆரம்பிக்கின்றன. எனவே இயல்பும் கடவுளும் இருவேறல்ல. விழித்துக் கொண்டவரிடம் அவை இணைந்து கொள்கின்றன.



உண்மையில் விழித்துக் கொண்டவர் இயல்புக்கு எதிரானவர் அல்ல. அப்படி இருக்கவும் அவரால் முடியாது. அவர் இயல்பின் கட்சிக்காரர். பார்க்கப் போனால் ஒரு புறம் உன் இயல்பை நோக்கியும் மறுபுறம் கடவுளை நோக்கியும் நீ வளர அவர் உரமூட்டுகிறார்.

அதுதான் என்னுடைய முயல்வும். உங்களை இயல்பில் வைத்திருக்கச் செய்யும் முயல்வு. உங்களுடைய வேர்கள் உங்களுடைய வேர்களை நோக்கிப் பதிய ஓட வைக்கும் முயல்வு.

அப்படி ஆழப்பதியும் போதுதான் நீங்கள் உயர்ந்து வளர முடியும். வேர்கள் ஆழ ஆழப் போகும்போதுதான் மரம் உயர உயரப் போக முடியும். நூற்றுக்கணக்கான அடிகள் உயரப் போக வேண்டுமா? அதற்கு ஏற்ப வேர்கள் ஆழமாகப் போக வேண்டும். இப்படிச் சொல்வதாலேயே என்னை உலகின் பலபகுதிகளிலும் தவறாகப் புரிந்து கொள்கிறார்கள். குறிப்பாக இந்த நாட்டில் மிகத் தவறாகவே புரிந்து வைத்திருக்கிறார்கள்.

வேர்கள் மோகத்தின் சக்திக்குள் பாய்ந்துவிட வேண்டும். அதுதான் உன்னுடைய அடியாழம். வேர்கள் அங்கே பாய்ந்துவிடும்போதுதான் சமாதி நிலையில் மலர்கள் அரும்பி மலர ஆரம்பிக்கும். குளத்தின் ஆழத்துச் சேற்றில் வேரிருந்தால்தானே தாமரை மலரும்? இதற்கு இடைவிடாத முயற்சி தேவை. முனைப்பு தேவை. மனிதன் ஒரு சோம்பேறி. தூங்கிக் கிடப்பதாலேயே சோம்பிக் கிடக்கிறான்.

ஒரு கணவன் மனைவி கதை. யார் முதலில் பேசுகிறாரோ அவர் காற்றின் போக்கில் திறந்து கொண்ட கதவை மூடி வைக்க வேண்டுமென்று ஒரு பந்தயம். திறந்து



கிடந்த கதவு திருடர்களைக் கைகாட்டி அழைத்தது. கணவனும் மனைவியும் ஒன்றும் பேசாமல் இருக்கவும், அவர்கள் வயிறு புடைக்கச் சாப்பிட்டுவிட்டு இருந்ததை எல்லாம் சுருட்டிக் கொண்டு, அவளைக் கற்பழித்து அவன் தாடியை மழிக்க வந்தார்கள். அதுவரை சும்மாயிருந்த கணவன், ''சரி சரி, பாழாய்ப் போன கதவை நானே மூடிவிடுகிறேன்.'' என்றானாம்.

மக்கள் சோம்பேறிகள். சோம்பேறித்தனம் தூக்கத்தின் ஒரு பகுதி. எனவே விடாமுயற்சியும் முனைப்பும் இடைவிடாச் செயலும் தேவையாகின்றன. அளவு தெரியாமல் குடித்துவிட்டவன் விழுந்து விழுந்து எழுவதைப் போலத்தான். எனவே குப்புற விழுவதை மன்னித்து விடலாம்.

ஆனால் தெளிவு பிறக்கும் அந்தக் கணத்தில், ஒளிக்கீற்று ஒன்று பாயும் கணத்தில், நினைப்பு திரும்பிய அந்தக் கணத்தில் உன் சக்தியையெல்லாம் ஒரு முனைப்படுத்தி, அதற்குள் பாய விடு. மூடனாக இருந்துவிடாதே. தூங்கிக் கொண்டே இருந்துவிடாதே. குடிகாரனாகவே இருந்துவிடாதே.

மூன்று குடிகாரர்கள் ஒரு தெரு வழியே போய்க் கொண்டிருந்தார்கள். ஒருவன் கையில் ஒரு ரொட்டித் துண்டு. மற்றவன் கையில் ஒரு மதுப்புட்டி. இன்னொருவன் கையில் ஒரு காரின் கதவு. போலீஸ்காரர் ஒருவர் அவர்களை நிறுத்தி, ''எங்கே போய்க் கொண்டிருக்கிறீர்கள்?'' என்று கேட்டார்.

ரொட்டித் துண்டுக்காரன், ''பிக்னிக்,'' என்றான்.



போலீஸ்காரர், ''பிக்னிக்கா? சரிதான். பசிக்கு ரொட்டி. தாகத்துக்கு மது. கார்க்கதவு எதற்கு? புரியவில்லையே!'' என்றார்.

மூன்றாமவன், ''அதுவா? குளிரடித்தால் கண்ணாடியை ஏற்றிவிடுவதற்கு,'' என்றான்.

குடிபோதையின் பல நிலைகளிலிருந்து நீங்கள் விடுபட வேண்டும்.

பேராசை ஒரு போதை. எல்லோருக்கும்தான் ஆசை. மிக அதிகமாக வைத்திருப்பவனுக்கும் இன்னும் வேண்டுமென்ற பேராசை. இந்த மனம் இன்னும் இன்னும் என்கிறது. இதற்கு முடிவேயில்லை. பணமா, இன்னும் பணம் வேண்டும். கௌவரமா, இன்னும் கௌவரம் வேண்டும். எளிமையானவனா, இன்னும் எளிமையான வனாக இருக்க வேண்டும். உலகத்திலேயே மிக எளிமையானவன் என்று பெயரெடுக்க வேண்டும். துறந்து விடுவது என்று முடிவெடுத்து விட்டாயா? இன்னமும் இதை அல்லது அதை என்று துறந்து கொண்டே இருக்க வேண்டும். மனதின் இந்தக் கட்டாயத்துக்கு எந்த முடிவும் இருப்பதில்லை.

போரசை ஒரு போதை. ஒரு தூக்கம். கோபமும் அப்படியே. சாதாரணமாக இருக்கும்போது நீ செய்யத் துணியாததை யெல்லாம் கோபத்தில் செய்வதை நீ கவனித்ததில்லையா? இப்படிச் சொல்லிவிட்டோமே என்று வருந்துமளவுக்குப் பேசிவிடுகிறாய். அப்படியெல்லாம் முட்டாள்தனமாகப் பேசக் கூடியவனா நான் என்று பிறகு ஆச்சரியப்படும் அளவுக்குப் வார்த்தைகளைக் கொட்டி விடுகிறாய். கோபப்படும் போது என்ன நடக்கிறதென்கிறாய்? நீ ஒரு போதைக்கு அடிமையாகிப் போகிறாய்.



கவனத்தோடு இருந்து பார். கோபம் குறையும். பேராசை குறையும். பொறமை குறையும்.

கோபமே படாதே என்று சொல்லமாட்டேன். பலகாலம் பலரும் அப்படிச் சொல்லிக் கொண்டிருந்து விட்டார்கள். மகான்கள் என்கிறாயே அவர்கள் அப்படிச் சொல்லிக் கொண்டிருந்தார்கள். அதனால் கோபத்தை அடக்கி வைத்துப் பழகிவிட்டாய். கோபத்தை அடக்க அடக்க உணர்வு மழுங்கிப் போய்க் கொண்டேயிருக்கும். பரணுக்குள் இதையும் அதையும் தூக்கிப் போட்டுக் கொண்டே இருக்கிறாய்.

உன் கோபம், உன் தாபம், உன் காமம் என்று இப்படி. எனவே அந்தப் பரணுக்குள் எட்டிப் பார்க்கக் கூட உனக்குப் பயம். அங்கே தூக்கிக் கடாசி வைத்திருக்கிறாயே எல்லாமும் குப்பையும், கூழமும்தான். பயங்கரமான விஷங்கள். உள்ளே போய்ப் பார்க்க தைரியம் இருப்பதில்லை.

அதனால்தான் யாரும் உள்ளே போக விரும்புவதில்லை. உள்ளே போவதென்றால் அவை அத்தனையையும் எதிர் கொள்வது என்பதால், யாருக்குமே அதை எதிர்கொள்ள விருப்பம் இருப்பதில்லை. தவிர்க்கவே விரும்புகிறார்கள். ஆயிரக்கணக்கான ஆண்டுகளாக அடக்கி வைக்கச் சொல்லி யிருக்க, அதைக் கேட்டு நீயும் அப்படியே செய்திருக்க, உன் உணர்வுகள் மழுங்கிப் போய்விட்டன.

நான் அடக்கி வைக்கச் சொல்லவில்லை. அதற்கு நேர்மாறாகத்தான் பேசுகிறேன். அவற்றைக் கவனி. அவற்றின் துடிப்பைக் கவனி. கோபம் மீறும்போது அறைக்குள் உட்கார்ந்து கோபத்தின் போக்கைக் கவனி.

உனக்குத் தெரிந்ததெல்லாம் இது அல்லது அதுதான். கோபப்பட்டு வெடிப்பது, அடிப்பது, உதைப்பது, அல்லது கோபத்தை அடக்கி வைப்பது. மூன்றாவது வழி உனக்குத் தெரியவில்லை.



அந்த மூன்றாவது வழியே புத்தர்களுடையது. கோபத்தைக் கைக்கொள்ளவும் வேண்டாம். அதை அடக்கி வைக்கவும் வேண்டாம். கவனி. முன்னது பழக்கமாகிப் போகிறது. இன்றைக்குக் கோபப்பட்டால் நாளைக்கும் நாளை மறுநாளைக்கும் கோபப்படத்தான் போகிறாய். ஒரு பழக்கத்தை ஏற்படுத்திக் கொள்கிறாய். இன்னமும் இன்னமும் என்று கோபத்தின் வேகத்தை அதிகப்படுத்திக் கொள்ளவே உன்னைப் பழக்கப்படுத்திக் கொள்கிறாய்.

எனவே கோபத்தை வெளிப்படுத்துவது கோபத்தைக் கைவிடுவதற்கான வழியாகாது. அதில்தான் நவீன மானுடம் மாட்டிக் கொண்டு விழி பிதுங்கி நிற்கிறது. Encounter Groups, primal therapy, gestalt, bioenergetics என்று பல பிரமாதமான இயக்கங்கள் இன்றைய உலகில் செயல்பட்டுக் கொண்டிருக்கின்றன. ஆனால் அவை அனைத்துமே ஓரிடத்தில் சிக்கிச் செயலிழந்து போகின்றன.

அவற்றின் பிரச்சினையே எதையும் வெளிப்படுத்தி விடுவதில்தான் இருக்கிறது. வெளிப்படுத்திவிடுவது அடக்கி வைப்பதை விடச் சிறந்ததுதான். அந்த இரண்டு வழிகள் மட்டும்தான் இருக்கின்றன என்றால் வெளிப்படுத்திவிடு என்று நானும் சொல்லி விடுவேன். அவை இரண்டுக்குமிடையே இருப்பதல்ல நாம் உண்மையாகத் தேர்வு செய்ய வேண்டியது. இரண்டையும் விட அதிக முக்கியமான மூன்றாவதொரு மாற்று இருக்கிறது. வெளிப்படுத்துவது என்றாகிப் போனால் மறுபடி மறுபடி வெளிப்படுத்தி அதை ஒரு பழக்கமாக்கிக் கொள்கிறாய். அதிலிருந்து விடுபடுவதில்லை.

இந்தக் கம்யூனில் குறைந்தது ஐம்பது ஆலோசனைக் குழுக்கள் இருக்கின்றன. அதற்கு ஒரு குறிப்பிட்ட காரணம் இருக்கிறது. ஆயிரக்கணக்கான ஆண்டுகளாக அடக்கி



வைத்திருந்ததை வெளிக் கொணர்ந்து சமன்படுத்த வேண்டியிருக்கிறது. கிறிஸ்துவர்களாக, இந்துகளாக, முகம்மதியர்களாக, சமணர்களாக, பௌத்தர்களாக இருந்து அடக்கி அடக்கி வைத்ததை எல்லாம் வெளிச்சத்துக்குக் கொண்டுவர வேண்டியிருக்கிறது. நூற்றுக் கணக்கான ஆண்டுகளின் பாதக விளைவுகளைக் கழித்துக் கட்ட வேண்டியிருக்கிறது.

ஒன்றை மனதில் வை. இந்தக் குழுக்களே எல்லாமும் என்றிருந்துவிடாதே. அவை தியானத்துக்கு உன்னைப் பக்குவப்படுத்துகின்றன. அவையே உங்கள் குறிக்கோள்கள் அல்ல. அவை கருவிகள். கடந்த காலத்தின் பாதகங்களைக் கழத்துவிட உதவும் கருவிகள். உனக்குள் அடக்கி வைத்திருந்ததை யெல்லாம் எடுத்து வீசியெறிந்து விடும்போது, உன்னை விழிப்புக்குள் நான் அழைத்துப் போக வேண்டும். அப்போது க்வனித்திருப்பதென்பது எளிதாகிவிடும்.

ஆனால் ஒரு குழுவைச் சார்ந்தவனாக, குழுப் போதை யில் ஆழ்ந்துவிட்டவனாக நீ ஆகிவிடக் கூடாது. அப்படிப் பட்டவர்கள் நிறைய இருக்கிறார்கள். ஒரு குழுவிலிருந்து இன்னொன்றுக்குப் போய்க் கொண்டேயிருக்கிறார்கள். ஒரு சந்திப்பு முடிந்து இன்னொன்று. முடிவில்லாத மாரத்தான் ஓட்டம்தான். இது அது என்று எப்படியோ உன்னை வெளிப்படுத்திக் கொள்ள வேண்டும் என்ற அரிப்பு தோன்றிவிடுகிறது. அன்றாடச் சூழலில் வெளிப்படுத்த முடிவதில்லை. அடக்கி வைக்க வேண்டியிருக்கிறது.

எனவே குழு என்பது ஒரு வெளிப்பாடுதான். சாதாரண சமூகம் உன்னை அடக்கி வைக்கவே தூண்டுகிறது. குழுக்களில் நீ வெளிப்படுத்துகிறாய். ஆனால் அதில் எந்த 'வளர்ச்சியும் இருப்பதில்லை. மீண்டும் அன்றாடச்



சூழ்நிலைகளில் அத்தனையையும் அடக்கி வைத்துக் கொள்ள வேண்டியிருக்கிறது.

அன்றாடச் சூழல்களில் அவிழ்த்துக் கொட்டி விட்டாலோ பேரும் ஆபத்துத்தான். கொலை செய்து விடலாம் எனுமளவுக்கு ஆத்திரம் இருக்கிறது. சிறைக்குள் ஆயுளுக்குப் போட்டுப் பூட்டி வைத்து விடலாம். எல்லோருக்கும் அறைதான், அடிதான் என்று உன் மேலதிகாரியை, மனைவியை, மக்களை, கணவனை என்ற போக்கில் போனால், தறிகெட்டுப் போய் வாழ்க்கையே இயலாததாகிவிடும். எனவே சில நாட்கள் அடக்கி வைத்த பின் எங்கேயோ எப்படியோ கொட்டிவிட வேண்டி யிருக்கிறது.

அதற்கென மனநல ஆலோசனை தேடுகிறாய். அங்கே கொட்டிவிட்டுப் போகிறாய். திரும்பிப் போனபின் மறுபடி பாரத்தைச் சேர்த்துக் கொள்கிறாய்.

இது எப்படி உதவப் போகிறது? இது ஒரு தற்காலிக நிவாரணம். மனநல ஆலோசனைகள் குழுவில் நீ வாய்விட்டுக் கத்தலாம். வீதியில் கத்தினால் போலீஸ் ஸ்டேஷனுக்குப் போக வேண்டியதுதான். குழுவுக்குள் ஒருவராக இருக்கும்போது கத்தலாம். கத்தச் சொல்லி உன்னைத் தூண்டுவார்கள். சிறுவயதிலிருந்தே அடக்கி வைத்திருந்ததை வெளியே கொட்ட வேண்டுமே.

அது ஒரு காயம். காயத்தைக் கீறிவிட வேண்டி யிருக்கிறது. சீழை வெளியேற்றிக் காற்றாடக் காயத்தை வைத்திருந்தால் காயம் தானாக ஆறிப் போகும். ஆற்றிவிடும் வல்லமைதான் உனக்குள்ளேயே இருக்கிறதே. ஆனால், திரும்ப திரும்ப அன்றாடச் சூழலுக்கு வரும்போதோ... எத்தனை நாளைக்குத்தான் நீ அந்த நிவாரணக் குழுவில் இருக்க முடியும்? அப்படித் திரும்பும்போது மறுபடியும்



அடக்கி வைக்க வேண்டியிருக்கிறது. அங்கே கத்த முடியாது.

கத்தல் எல்லாம் ஒன்றாகச் சேர்ந்து திரள்கிறது. மறுபடியும் குழுவுக்குப் போக வேண்டியிருக்கிறது. குழுக்கள் நிரந்தரமான நிவாரணம் தருவதில்லை. உன்னைப் புத்தனாக்குவதில்லை. அதில்தான் இந்தக் கம்யூன் பிறவற்றிலிருந்து வேறுபடுகிறது. எங்கே அவை முடிகின்றனவோ அங்கே நாம் ஆரம்பிக்கிறோம். அவர்கள் குழுக்களோடு நின்று போகிறார்கள். நாம் குழுக்களோடு ஆரம்பிக்கிறோம்.

ஆயிரக்கணக்கான மனநல ஆலோசகர்கள் என்னைத் தேடி வருவதென்பது ஏதோ தற்செயலான நிகழ்ச்சியல்ல. பலரும் இருக்கிறார்கள். என்னுடைய சன்னியாசிகளில் அதிகமானோர் இந்த மனநல ஆலோசகர்கள்தான். எல்லோருக்கும் தெரிந்திருக்கிறது-பலவிதமான மனநல ஆலோசனைகள் பலருக்கும் மிகவும் தேவை என்பது பலருக்கும் தெரிந்துதான் இருக்கிறது. அப்படித் தெரிந்தவர்களுக்கு எப்படி என்பது தெரியவில்லை.

வெளிப்படுத்தும்போது பழக்கமாகிவிடுகிறது. அடக்கி வைக்கும் போது விஷமாகி விடுகிறது. அவர்கள் பொறுத்துக் கொள்ளவா போகிறார்கள்? திருப்பித் தம் விஷத்தை வாரியிறைக்கப் போகிறார்கள். பிறகென்ன -உங்களுக் கிடையே ஒரு போட்டிதான். நீ உன் கோபத்தை வீசியடிக் கிறாய். அவர்கள் அவர்களுடையதை வீசியடிக்கிறார்கள். எல்லோரும் காயப்படுவது தவிர வேறென்ன நடக்கப் போகிறது? எந்த உதவியாவது யாருக்காவது கிடைக்கப் போகிறதா?

அடக்கி வைத்தாலோ... வெளிப்படுத்துவதன் வியர்த்தத்தைத் தெரிந்து கொண்ட பூசாரிகள் அடக்கி



வைத்திருப்பதைக் கண்டுபிடித்தார்கள். குறைந்தது அதில் அபாயமில்லை. அடக்கி வைக்கும்போது நல்ல குடிமகனாகிறாய். கனவானாகிறாய். சட்டமோ பிறரது வெறுப்போ உன்னைப் பிடித்துத் தண்டிப்பதிலிருந்து தப்ப முடிகிறது. வாழ்க்கை சிக்கலின்றிக் கழிகிறது.

அடக்கி வைப்பதால் நீ சமுகத்தில் நல்லவனாகிறாய். உண்மைதரன். ஆனால் உனக்குள்ளே காயப்பட்டுப் போகிறாய். அந்தப் புண்ணில் சீழ் பிடித்துக் கட்டிக் கொண்டே போகிறது. வெளியே அது ஓர் உயர்வு எண்ணெயாக இருக்கிறது. உள்ளேயோ நீ மேலும் மேலும் ஆக்ரோஷமானவனாகி விடுகிறாய்.

இந்த நூற்றண்டு முந்தையவற்றை விட ஆக்ரோஷத்தோடு இருக்கிற தென்றால் அதற்கு முந்தையவையே காரணம். ஐயாயிரம் ஆண்டுகள் மகான்களின் போதனைகளுக்குப் பின்னும் மக்களின் ஆக்ரோஷம் அதிகமாகித்தானிருக்கிறது. பைத்தியம் பிடித்துப் போகிறவர்கள் இருக்கிறார்கள். தற்கொலை செய்து கொள்கிறவர்கள் இருக்கிறார்கள். கொலை பாதகர்கள் இருக்கிறார்கள். இத்தனைக்கும் பொறுப்பானவர்கள் இந்த மகான்கள்தான். இந்தப் பூசாரிகள், மதபோதகர்கள், தலைவர்கள்தான்.

இந்தக் கம்யூனில் ஒருவர் தற்கொலை செய்து கொண்டார். இன்னொரு அமெரிக்கச் சன்னியாசிக்குப் பைத்தியம் பிடித்துவிட்டது. அதனால் கனடிய அரசாங்கம் இந்தக் கம்யூனைப் பற்றி விசாரணை நடத்த வேண்டும் என்கிறது. இதைப் பற்றி ஏற்கெனவே உங்களுக்குச் சொல்லியிருக்கிறேன்.



தற்கொலை செய்துகொண்டவருக்கு வயது அறுபது. அறுபது வருடம் கிறிஸ்துவராக இருந்திருக்கிறார். ஆனால் கிறிஸ்துவத்தைப் பற்றி எந்த விசாரணையும் இல்லை. அறுபது நாட்கள் கூட அவர் சன்னியாசியாக இருக்கவில்லை. எனவே அவரது தற்கொலைக்குக் கிறிஸ்துவமே பொறுப்பு. நானல்ல.

பைத்தியமாகிப் போனாரே அவர் ஒரு ப்ராடெஸ்டண்டு. என்னை நிந்திக்கிறார்கள். ஆனால் கிறிஸ்துவத்தை விட்டு விட்டார்கள். ப்ராடெஸ்டண்டாக வளர்ந்தவன், முப்பத்தைந்து வருடம் ப்ராடெஸ்டண்டாக இருந்தவன், சில நாட்களுக்கே சன்னியாசியாக இருந்தவன். அமெரிக்கச் சமுதாயத்தைக் குறை சொல்லுகிறார்களா என்ன?

விநோதம்தான். நான் மக்களுக்கு உதவ வந்திருக்கிறேன். இங்கே வந்த போதே அவனுக்குப் பைத்தியம் பிடித்திருந்தது. ஆறு வருட மனோதத்துவச் சிகிச்சைக்குப் பின் இங்கே வந்திருக்கிறான். மனோதத்துவம் பயனளிக்கவில்லையென்பதால் இங்கே வந்து சன்னியாசியானான். ஆனால் அவர்கள் ஏற்கெனவே செய்துவிட்டுப் போயிருந்தது அவ்வளவு பிரமாதமானதாயிருந்துவிட்டதால் அவனுடைய பைத்தியத்தை தெளிவிக்க முடியவில்லை.

அதுவுமில்லாமல் அவன் இங்கே இருந்ததும் சொற்ப நாட்களே. மூன்று வாரங்கள். எனவே நான் பொறுப்பில்லை. அவன் பைத்தியக்காரனாகிப் போனதற்கு என்னைப் பொறுப்பாக்க முடியாது. என்றாலும் விநோதமாகத்தான் இருக்கிறது இந்த அரசாங்க விசாரணை.

ஒரு சன்னியாசி தவறாக நடந்து கொண்டால் என்னைத் திட்டுகிறார்கள். எத்தனை இந்துக்கள் தினமும் சிறைக்குப் போகிறார்கள். இந்துமதத்தைக் குறை சொல்கிறார்களா? எத்தனை முகம்மதியர்கள் தவறாக நடந்து கொள்கிறார்கள்.



இஸ்லாத்தைக் குறை சொல்கிறார்களா? ஒரு சீக்கியர் இன்னொரு சீக்கியரைக் கொன்றால் சீக்கிய மதத்தைக் குறை சொல்கிறார்களா? இந்த உலகம் முட்டாள்தனமான உலகம்தான்.

என்னிடம் உதவி கேட்டு வருகிறார்கள். பலர் உதவி பெறுகிறார்கள். 99 சதவிகிதம் பேருக்கு உதவி கிடைக்கிறது. மீதமிருக்கும் ஒரு சதவிகிதம் உதவி செய்து காப்பாற்ற முடியாத அளவுக்கு ஏற்கெனவே பாதிக்கப்பட்டு வருகிறார்கள். அவர்களுக்கும் உதவலாம்தான். ஆனால் எனக்கு அனுமதியில்லை.

உதாரணமாக தன்னை நிர்வாணமாக்கிப் பிறருக்குக் காண்பிக்கிறவன் ஒருவன் இங்கே வருகிறான். அவனுக்கு எளிதாக உதவ முடியும். சரிதான், நிர்வாணமாகவே எப்போதும் இருந்துவிடு என்று விட்டுவிட்டால் போதும். அவன் அபாயமானவனல்ல. யாருக்கும் எந்தத் தொந்திரவும் செய்வதில்லை. இது ஒரு குறைதான். உன்னை அதிர்ச்சியடைய வைத்து அதை அனுபவிப்பது. தன்னைப் பிறர் பார்க்க வைப்பது. நிர்வாணமாகவே சுற்றித் திரிய விட்டுவிட்டால், யாரும் கண்டு கொள்ளாமல் விட்டு விட்டால் அவன் சரியாகிப் போய்விடுவான்.

எவ்வளவு சுலபம் பார்த்தாயா? அதிர்ச்சியடைய வேண்டாம். அவனைக் கண்டு கொள்ள வேண்டாம். உன்னை அதிர்ச்சியடைய வைக்கவும் கவனத்தைக் கவரவுமே அவன் தன் நிர்வாணத்தைக் காட்டுகிறான். யாரும் அவன் நிர்வாணத்தைக் கண்டு கொள்ளாமல் அவனோடு சகஜமாகப் பேசினால் அவனுக்குக் குழப்பமே மிஞ்சும். அவனால் நம்பவே முடியாது. நிர்வாணமாகத்தான் இருக்கிறோமா என்று கண்ணாடியில் பார்த்துக் கொள்வான். சரிதான், யாரும் கண்டுகொள்ளவில்லை என்பது தெரிந்தால் உடுத்திக் கொள்ள ஆரம்பித்துவிடுவான். என்றாலும்



உடுத்தியவர்களைக் கண்டு அதிர்ச்சியுறும் மக்களும் இருக்கலாம்தான்.

என்னால் உதவ முடியும். ஆனால் என்னை விடமாட்டேன் என்கிறார்கள். அந்த ஒரு சதவிகிதத்தினருக்கும் உதவி செய்யலாம். யாருமே சரியாக்கப்பட முடியாதவர்கள் அல்ல. அதிக நேரம் தேவைப்படலாம். முயற்சி தேவைப்படலாம். அவ்வளவுதான்.

புத்தர் சொல்கிறார், ''தளர்வில்லாத தியானத்தில் சுதந்திரத்தையும் ஆனந்தத்தையும் தேடுகிறார்.''

தியானி. தியானிப்பது என்றாலே விழித்திருப்பது. சுதந்திரமும் ஆனந்தமும் அடையத்தான் செய்வாய்.

**'எனவே நீயும் எழுந்துவிடு. சிந்தி. கவனி.**
**கவனத்தோடும் அக்கறையோடும்**
**செயல்படு.**
**அவ்வழி வாழ்.**
**உனக்குள் சோதி வளரும்.'**

பொலிவு தரும் அந்தச் சோதி தானாக உனக்குள் வளரும். நீ இன்னமும் மௌனித்துவிடுகிறாய். அதிகக் கவனிப்புடையவனாகி விடுகிறாய். அதிகமாகத் தியானிக்க ஆரம்பித்து விடுகிறாய். சோதி உனக்குள் தானாகவே படர்ந்து விடுகிறது. நீ எங்கேயும் போக வேண்டியிருப்பதில்லை.

**'கவனிப்பிலும் செயலிலும்**
**வெள்ளத்தில் மூழ்காத தீவொன்றைத்**
**தனக்கென வகுக்கிறார்.'**

உன் கவனிப்பே ஒரு தீவாகி விடுகிறது. உணர்ச்சிகளின் தடுமாற்றமில்லாத, காமமில்லாத, பேராசையில்லாத ஒரு



மாளிகை உன்னுடையதாகி விடுகிறது. அந்தத் தீவு உன்னுடையதாகும் போது, முதல் முதலாக நீ ஓர் ஒருங்கிணைந்த மனிதனாகிப் போகிறாய். முதல் முதலாக மானிடனாகிப் போகிறாய்.

இந்த வகையான மானுடனே இன்றைய முழுத்தேவை, இந்தப் புது மானுடன்.

இன்றைக்கு இது போதுமே!





முதல் வினா

அன்புக்குரிய குருவே,

**பதில்கள் தெரியுமென்றுதான் தோன்றுகிறது.**
**என்றாலும் ஏன் கேள்விகளே**
**எனக்குப் பிரச்சினையாகிப் போக**
**விட்டிருக்கிறேன்?**

**சவிதா,** பதில்கள் என்பதே தவறு. ஒரே பதில்தான் இருக்கிறது. அந்தப் பதில் சிந்தனைகள் சார்ந்தல்ல. மனத்தினுடையது அல்ல. மனம் என்பதே பல தரப்பட்டது. மனத்தில் பதில்கள், பதில்கள் என்று பலவும் இருக்கின்றன. குறிப்பான பதில்தான் இருப்பதில்லை.

அந்தப் பதில் மனமற்றதைச் சார்ந்தது. வார்த்தைகளால் ஆனதல்ல. உனக்குத் தெரிந்ததுதான். என்றாலும் அதை அறிவெல்லைக்குள் குறுக்கி விட முடியாது. தெரிந்து கொள்ள முடியும். சொல்ல முடியாது. உன்னுடைய அகத்தில் ஒளியேற்றும் தீபம் அது.



எந்தக் குறிப்பிட்ட கேள்விக்குமான பதில் அல்ல. கேள்விகளின் முடிவு. எந்தக் கேள்வியையும் குறிப்பதல்ல. எல்லாக் கேள்விகளையும் அது கரைத்துவிட கேள்விகளே இல்லாததொரு நிலை வந்து சேர்கிறது. அதுதான் பதில். அதைத் தெரிந்து கொண்டாலொழிய எதையும் தெரிந்து கொண்டதாக ஆகாது.

எனவே பதில்கள் தெரியுமென்று உனக்குத் தோன்றலாம். என்றாலும் கேள்விகள் அவ்வப்போது கிளம்பிக் கொண்டேதான் இருக்கும். கேள்விகளின் சித்திரவதை இருந்து கொண்டேதான் இருக்கும். வேரை வெட்டி விடவில்லை யென்பதால் கேள்விகள் கிளைக்கத்தான் செய்யும். புதிய தளிர்கள் அரும்பும். புதிய கிளைகள் வளரும்.

மனதின் பிணைப்பை அறுக்கும் போதுதான் வேர்களை வெட்டிவிடுகிறாய். மனது உன்னிடமிருந்து வேறுபட்டது என்று தெரிந்து கொள்ளுமளவுக்கு விழிப்பைப் பெறும் போதுதான், கவனித்திருக்கும் போதுதான் வேர்கள் அறுந்து போகின்றன.

மனத்தோடான அடையாளங்களை விட்டொதுக்கும் போது, மனதைப் பள்ளத்தாக்கின் இருட்டுக்குள் கிடத்தி விட்டு, மலை உச்சியில் நின்று விழிப்புடன் கவனித்துப் பார்க்கும் போது, சூரியனின் பிரகாசத்தில் ஒளிரும் மலையுச்சியில் இருக்கும் போது, எதனோடும் அடையாளப்படுத்திக் கொள்ளாமல் பரிசுத்தமான ஒரு சாட்சியாகப் பார்த்துக் கொண்டு, கவனித்துக் கொண்டு இருக்கும் போது, நல்லவனோ, கெட்டவனோ, பாவியோ, மகானோ, இதுவோ, அதுவோ, எப்படியானாலும் சரி, சாட்சியாக நிற்கும் போது கேள்விகள் கரைந்து போகின்றன.

மனம் கரைகிறது. ஆவியாகிப் போகிறது. பரிசுத்தமான இருத்தலைப் போலப் பரிசுத்தமான



இருப்பவனாக உன்னை மாற்றுகிறது. கடந்த காலத்திலோ எதிர்காலத்திலோ துடிக்காத இதயமாக, வாங்காத மூச்சாக இந்தக் கணத்தில் இருக்கிறாய். இந்தக் கணம் என்பது கூட இல்லாத ஒன்றுதான். கழிந்து போனதும் வரவிருப்பதும் இல்லை எனும்போது, இப்போது என்பதும் இல்லாமல் போகிறது.

அப்படிப்பட்ட ஒரு நிலை வரவில்லையென்றால் பதில்கள் தெரிந்திருப்பதைப் போலத்தான் இருக்கும். ஆனால் ஒவ்வொரு பதிலும் ஒரு புதிய கேள்வியை எழுப்பவும்தான் செய்யும்.

ஒவ்வொரு பதிலும் கேள்விகளின் புதிய சங்கிலித் தொடரை ஏற்படுத்தும். வாசிப்பது, படிப்பது, நினைப்பது என்று என்ன செய்தாலும் மனமெனும் புதைச் சேற்றுக்குள் புதைந்து போய்க் கொண்டேதானிருக்கிறாய். சிக்கிக் கொண்டு, சிறைப்பட்டுச் சீரழியப் போகிறாய். மனதிலிருந்து நழுவி விடு.

அதனால்தான் நான் பதில்களைத் தருவதில்லை. பதிலை நோக்கிக் கை காட்டுவதோடு சரி. பன்மையில் பதில்கள் என்ற சொல்வது கூடத் தவறு. இருப்பது ஒரே பதில்தான். ஆழ்ந்த நிச்சலனம். அமைதி. எண்ணங்களில்லா மல் இருத்தல். மேலும் சரியான மனநிலைப்பட்டோர், எதையும் எதிர்நோக்கும் தயார் நிலையில் இருப்பவர், விழித்திருப்பவர் ஆகியோரைத் தேடி வந்து சத்தியம் சேரும்.

நீ எங்கும் போக வேண்டியதில்லை. அதுவே உன்னைத் தேடி வந்து சேரும். தேடிப் பிடிக்க வேண்டியதில்லை. எப்படித் தேடிப் பிடிக்க முடியும் என்கிறாய்? அறியாமையில் நீ எது செய்தாலும் அது மேலும் அறியாமையைத்தான் கொண்டு வந்து சேர்க்கும்.



அறியாதவனாக நீ எங்கு போனாலும் பாதை தவறித்தான் அலைந்திருப்பாய். குழப்பத்தில் தெளிவைக் காண்பதெப்படி? தெளிவைக் குழப்பத்துக்குள் தேடும் போது மேலும் மேலும் குழம்பித்தான் போவாய்.

அதனால்தான் புத்தர், குருவானவர் கவனிக்கிறார் என்றும் அவர் தெளிவானவர் என்றும் சொல்கிறார். 'ஏஸ் தம்மோ ஸனந்தனோ.' இதுதான் விதி. அனைத்தையும் கடந்தது, நித்தியமான வற்றாத விதி.

சலனமின்றி இருப்பது என்பது பதிலைப் பெறுவது. சலனமின்றி இருப்பது கேள்விகள் இல்லாமல் இருப்பது. வேரை வேட்டியாயிற்று. இலைகள் துளிர்க்க முடியாது.

சவிதா, பதில்கள் தெரியும் போலத் தெரிகிறது என்கிறாய்.

அது ஒரு பிரமை. இந்த மனம் பிரமைகளைத் தோற்றுவிப்பதில் வெகு சமர்த்து. இந்த மனம் பசப்பக் கூடியது. அறிவு என்ற பெயரில் கூட உன்னை ஏமாற்றிவிடும். எல்லாவற்றிலும் உன்னை ஏமாற்றக் கூடியது. ஏற்கெனவே ஞானியாகிவிட்டாய், புத்தனாகிவிட்டாய் என்று கூட உன்னை நம்ப வைத்து ஏமாற்றிவிடும். ஜாக்கிரதை, மனம்தான் ஒரே விரோதி. வேறு எந்த விரோதியும் இல்லை.

பழைய சாத்திரங்கள் மனதைப் பற்றிப் பேசுகின்றன. அதற்கு ஒரு பெயர் கூட வைத்திருக்கின்றன. பேய். பேயென்பது உனக்குப் புறமான ஒன்றல்ல. உன்னுடைய மனமே ஆசைகாட்டி மோசம் செய்கின்றது. ஏமாற்றிக் கொண்டே இருக்கிறது. புதிய புதிய மாயைகளைத் தோற்றுவிக்கிறது.



ஜாக்கிரதை. மனதைக் கூர்ந்து கவனி. அப்படிக் கவனிப்பதில் கேள்விகள் மறைந்து போகின்றன. பதில்கள் கிடைத்துவிடுகின்றன என்று சொல்ல வில்லை. கவனத்தில் கொள்.

புத்தருக்கு எந்தப் பதிலும் தெரியாது. அப்படி யென்றால் அவர் எல்லாக் கேள்விகளுக்கும் விடை கண்டு விட்டார் என்று பொருளில்லை. இல்லவே இல்லை.

இனியும் கேட்பதற்குக் கேள்விகள் இல்லை. அவ்வளவுதான். இனிக் கேள்விகள் இல்லையென்று ஆகி விட்டதால், அவராக இருப்பவரே பதிலாகிப் போனார்.

சவிதா, அந்தக் கணம் மிகவும் முக்கியம்.

அதுதான் இங்கே என்னுடைய முழுப்பணியும். கூடக் கொஞ்சம் தகவல்கள் தருவதல்ல. தகவல்களை எங்கிருந்து வேண்டுமானாலும் பெற்றுக் கொள்ளலாம். ஆயிரக் கணக்கான பல்கலைக் கழகங்கள் இருக்கின்றன. ஆயிரக்கணக்கில் நூலகங்கள் இருக்கின்றன.

தகவல்களை எங்கிருந்து வேண்டுமானாலும் பொறுக்கிக் கொள்ளலாம். எங்கிருந்தாலும் விவரம் தெரிந்தவனாக ஆகி விடலாம். என்னுடைய பணியே நீ கற்றுக் கொண்டதை விட்டு விட வைப்பதுதான். அப்படி விட்டு விடும் போது நிஷ்களங்கனாகிப் போகிறாய். ஒன்றும் தெரியாதவனாக இருந்து செயல்பட ஆரம்பிக்கிறாய்.

அப்போது உன்னிடம் பதில்கள் இருப்பதில்லை. இயல்பாகச் செயல்படுகிறாய். ஏற்கெனவே செய்து கொண்ட முடிவுகளைச் சார்ந்தோ, கடந்த காலத்தைச் சார்ந்தோ இல்லாமல், இயல்பாக ஊற்று கிளம்புவதைப் போல உன் செயல்கள் அமைகின்றன. எதற்கும் ஆயத்த



வாய்ப்பாடுகள் இல்லாமல்... எதார்த்தத்தைப் பிரதி பலிக்கும் ஒரு சிறு குழந்தையாகிப் போகிறாய்.

நிச்சலனத்தில் உனக்குள் எந்த அறிவும் இதைத்தா அதைத்தா என்றோ, இதை எடுத்துக் கொள் அதை எடுத்துக் கொள் என்றோ கூவுவதில்லை. உன்னுடைய நோக்கு தெளிவாக இருக்கிறது. தூசு படியாத கண்ணாடி... இருப்பதை அப்படியே பிரதிபலிக்கிறாய். அந்தப் பிரதிபலிப்பின் விளைவான எந்தச் செயலும் நற்குணம்தான். நல்லியல்புதான்.

இரண்டாவது வினா

அன்புக்குரிய குருவே,

நாங்கள் ஒவ்வொருவரும்
அவரவராக இருக்க வேண்டும் என்கிறீர்கள்.
ஆனால் ஆசிரமத்தில் கட்டுபாடுகளுக்குட்பட்டு
நடந்து கொள்ள வேண்டியிருக்கிறது.
ஒழுக்கக் கட்டுப்பாடும் தனித்துவமும்
ஒன்றுக்கொன்று நேர் எதிரானவையல்லவா?

**சுதர்ஸன்,** நீங்கள் ஒவ்வொருவரும் அவரவராக இருக்க வேண்டும்தான். ஆனால் அவரவரே எல்லாமும் என்றிருக்கச் சொல்லவில்லை. பெரிய வித்தியாசம் இருப்பதைப் பார். அப்படி நினைப்பவன் இன்னும் அவனாகவே ஆகவில்லை என்றுதான் பொருள். அப்படி நம்புபவன் தான் என்ற அகந்தை உடையவன். அகந்தையோடு இருப்பது அவனாக இருப்பதாகாது.

முழுக்க முரண்பாடானதே சரியானது. தனியொருவனுக்குத் தான் என்பதில்லை. தான் என்பது தனியொருவன் ஆவதுமில்லை.



தான் என்ற உணர்வு எல்லோரிடமும்தான் இருக்கிறது. ஒரு சாதாரணச் சமாச்சாரம். அதற்கெனத் தனித்துவம் ஏதுமில்லை. ஒவ்வொருவரிடமும் ஒரு தான் இருக்கிறான். வெகு சாதாரணமான சமாச்சாரம்தான். எது அசாதராணம்? தானில்லாமல் போவது.

தானில்லாத உணர்வு தன் நிலையடைகிறது. தன்நிலை என்பதற்கு வேறு பொருள் தேட வேண்டியதில்லை. தனியனே தான் என்றால் பகுக்க முடியாதவன் என்றாகிறது. தனியன் என்ற தான் ஓர் ஒருங்கிணைவு. பலரற்ற ஒருவன் தான். அவன் ஒரு கூட்டமல்ல. அவன் பல மனத்தனல்ல. ஓர் ஒருங்கிணைவாகிப் போனவன். ஒரு ஸ்படிகமாகிப் போனவன்.

குர்ட்ஜீஃப் ஸ்படிகம் என்ற வார்த்தையைக் கொண்டு தான் தானாகிப் போவதைக் குறிப்பார். தானாகிப் போவதற்கு அடிப்படைத் தேவை தான் என்ற உணர்வை விட்டு விடுவது. அந்த உணர்வு ஒரு போலித்தனமான தானைக் கற்பித்துவிடுகிறது. உன்னை நீயாக, அசலான நீயாக இருக்க அது விடாது. அது ஓர் ஏமாற்று. ஒரு மயக்கம். ஒரு மாயை. இருத்தலினிருந்தும் பிரிந்து நிற்பவனல்ல நீ. ஆனால் உன்னுடைய தான் அந்தப் பிரிவைக் கற்பித்துக் கொண்டே இருக்கிறது.

உன் கேள்வியில் இருக்கும் இன்னொரு வார்த்தையையும் சரியாகப் புரிந்து கொள்ள வேண்டும். கட்டுப்பாடு. கட்டுபாடு உன் மீது திணிக்கப்படும் எதுவுமல்ல. இந்தக் கம்யூனில் எதுவும் திணிக்கப்படுவதில்லை. இங்கே வந்து சேர்வதென்பது உன்னுடைய தனிப்பட்ட முடிவு. கதவுகள் எப்போதும் திறந்தேயிருக்கின்றன. எப்போது வேண்டுமானாலும் நீ போய்க் கொள்ளலாம்.



பார்க்கப் போனால் நுழைவதுதான் சிரமம். விட்டுப் போய்விடுவதற்கு எவ்வளவுக்கு உதவி செய்ய முடியுமோ அவ்வளவும் செய்கிறோம். நுழைவதற்கு எதிராக முடிந்த அளவு தடைகள் வைத்துப் பார்க்கிறோம். விட்டுப் போவதற்கோ எந்தத் தடையும் இல்லை. நுழைவதுதான் மிகச் சிரமம்.

இந்தக் கம்யூனில் ஒருவராக இருப்பதென்பது உன்னுடைய முடிவு. கடப்பாடு கொண்டிருக்கவும் ஈடுபாட்டோடு இருக்கவும் தயாராக இருக்க வேண்டியிருக்கிறது.

இந்தத் தீர்மானத்தைச் சார்ந்து ஒரு கட்டுபாடு வருகிறது. எப்போது வேண்டுமானாலும் போய்விடலாம். ஆனால் இருப்பது என்றாகிப் போனால் சில பொறுப்புகளை ஏற்றுக் கொண்டாக வேண்டியிருக்கிறது. பொறுப்புகள் வழியாகத்தான் ஒருவர் வளர முடியும். பொறுப்புகளை முழுக்க நிறைவேற்றும் போது வளர்ச்சி சாத்தியமாகிறது.

இங்கும் சிலர், வெகு சிலர் இருக்கத்தான் செய்கிறார்கள். கம்யூனை ஏமாற்றுகிறவர்கள். அவர்கள் தங்களையே முட்டாள்களாக்கிக் கொள்கிறார்கள். வேறு யாரும் முட்டாளாவதில்லை. பணி செய்யாமல் முடங்கிக் கிடக்க நினைக்கிறார்கள். ஏதாவது ஒரு காரணம் சொல்கிறார்கள். இதற்காகவே ஆரோக்கியத்தைக் கெடுத்துக் கொள்கிறவர்கள் கூட உண்டு.

இது பெரிய முட்டாள்தனம். உனக்கெனப் பணி செய்யவே இந்தக் கம்யூனுக்கு வந்திருக்கிறாய். ஒருங்கிணைந்த ஒருவனாவதற்கு வேண்டிய முயற்சிகள் அத்தனையும் செய்வதற்கே இங்கே வந்து சேர்ந்திருக்கிறாய். உன்னுடைய ஆன்மிக வளர்ச்சிக்காக, உன்னுடைய ஞானத்துக்காக இங்கே வந்து சேர்ந்திருக்கிறாய்.



தவிர்த்தாலோ... அதுதான் உன்னுடைய கேள்விக்குப் பின் ஒளிந்திருக்கும் உண்மையான கேள்வி.

தனித்துவமும் கட்டுப்பாடும் ஒன்றுக்கொன்று எதிரிடையானவை அல்லவா என்று கேட்கிறாய் சுதர்ஷன். இல்லை, தனியொருவன் எவனும் ஓர் ஒழுங்குக்கு உட்பட்ட நிகழ்வு. ஒழுங்கற்றவன் தனியொருவனில்லை. பல துண்டுகளாகச் சிதறியிருக்க அந்தத் துண்டுகள் அவனுக்குள் மோதிக் கொண்டிருக்கும் அலங்கோலம். அந்தத் துண்டுகள் திசைக்கொன்றாகச் செயல்பட்டு ஒன்றுக்கொன்று மோதிக் கொள்ளவும் செய்கின்றன. அப்படித்தான் சாதாரண நிலையில் எல்லோரும் இருக்கிறார்கள். மனதின் ஒரு பகுதி வட துருவத்துக்கும் இன்னொரு பகுதி தென் துருவத்துக்குமாக நகர்ந்து கொண்டிருக்கின்றன. ஒரு பகுதி ஒன்றைச் சொல்கிறது. மறுபகுதி இன்னொன்றைச் சொல்கிறது. உனக்கே தெரியும். அதைத்தானே நானும் சொல்கிறேன்.

ஒரு பகுதி இதைச் செய் என்கிறது. உடனே இன்னொரு பகுதி வேண்டாம் என்கிறது. ஏதோ ஒன்று ஆமாம் என்கிறது. உடனே இன்னொன்று இல்லை என்று சொல்லி அதைச் சிதைக்கிறது.

இதுதான் உன் சூழல். மனமா, ஆம் என்றோ இல்லையேன்றோ சொல்ல முடியாத நிலையில் இருக்கும் ஒருவன்தான் நீ. இரண்டுமே அரைகுறை மனத்தோடு சொல்வது. அப்படிப்பட்ட நீ, உன்னை ஒரு தனி மனிதன் என்று நம்புகிறாயா என்ன?

தனியொருவன் என்பவன் ஒருங்கிணைந்து செயல் படுகிறவன். எல்லா உறுப்பும் ஒருங்கிணைந்த ஒருவன். எப்படி ஒருங்கிணைந்து கொண்டு ஒருவனாவது?



உணர்வோடு உன்னை ஒரு நியமத்துக்கு ஆட்படுத்திக் கொண்டுதான்.

அதைத்தான் புத்தர் பல சொற்களாலும் குறிக்கிறார். விடாமுயற்சி, முயல்வு, வளர்வதற்காக நன்கு தெரிந்தே மேற்கொள்ளும் முயற்சி. ஆனால் என்ன, முழுமனத்தோடு செய்ய வேண்டும். அரைகுறை மனத்தோடு அல்ல.

நூறு டிகிரி வெப்பத்தில் கொதிக்க வேண்டும். ஆமாம், சமயத்துக்கு அதில் வலியிருக்கத்தான் செய்யும். ஆனால் அதுவும் உன்னைப் பொறுத்தது. அதற்கு என்ன விளக்கம் தருகிறாய் என்பதைப் பொறுத்தது. உண்மையில் வளர வேண்டும் என நினைத்தால் அதில் வலியில்லை. பிரமாத மான சுகம்தான் இருக்கிறது என்பதைத் தெரிந்து கொள்வாய்.

நியமத்துக்குள் வைக்கும் ஒவ்வொர் அடியிலும் அதிகமான ஆனந்தம் பெறுகிறாய். ஆத்மப் பெருக்கம் காண்கிறாய். அசலான இருத்தலை அனுபவிக்கிறாய்.

நியமம் என்றாலே கற்றுக் கொள்ளத் தயாரயிருப்பது என்று பொருள். அதனால்தான் நியமம், சீடன், என்ற பொருள் தரும் ஆங்கில வார்த்தைகள் discipline, disciple என்றாகின்றன.

சீடன் என்பவன் யார்? வணங்குபவன், சரணடைபவன், கற்றுக் கொள்ளத் தயாராக இருப்பவன். நியமம் என்பது என்ன? கற்றுக் கொள்வதற்குத் தயாராக, திறந்த மனத்தனாக, ஏற்றவனாக இருத்தல்.

இந்தக் கம்யூனுக்குள் நுழையும் போது புத்த தளத்துக்குள் நுழைகிறாய். இது ஒரு சரணாகதி. ஓர் ஒப்படைத்தல். உங்கள் ஒவ்வொருவரையும் தனியொரு வனாக இருக்கச் செய்வேன். ஆனால் அதற்கெனப் பலவகை உபாயங்கள் இருக்கின்றன.



பல அக்னிக் குண்டங்களைக் கடக்க வேண்டும். பல சோதனைகளைத் தாண்டி வர வேண்டும். பிறகுதான் மெல்ல, மெல்ல ஓர் ஒருங்கிணைந்த ஒருவனாக உங்களைப் பூட்ட முடியும்.

பல நூறு ஆண்டுகளாக, பல பிறப்புகளில் இருந்து தொலைத்துவிட்டீர்கள். முனைப்பான முயற்சி தேவைப் படுகிறது. ஒவ்வொரு மூலை முடுக்கிலிருந்தும் தாக்கம் பெற வேண்டியிருக்கிறது. முடிந்த எல்லா வகையிலும் உங்கள் தூக்கத்தைக் கலைக்க வேண்டியிருக்கிறது. குலுக்கி அதிர்ச்சியடைய வைத்துத்தான் ஒவ்வொருவரையும் அவரவராகப் பிறக்கச் செய்ய வேண்டியிருக்கிறது.

மேம்போக்கில் தெரிவதல்ல இந்தக் கம்யூனின் உண்மையான பணி. அது வேறு. அதுவெல்லாம் கருவிகள். கருவிகளையும் பயன்படுத்த வேண்டியிருக்கிறது.

என்னிடம் யாராவது வந்து இந்தக் கம்யூனில் சேர வேண்டும் என்று சொன்னால், தீக்ஷாவைப் பார்க்க அனுப்பி வைக்கிறேன். தீக்ஷா என்னுடைய கருவி. அவளுக்கு முழு அதிகாரம் கொடுத்திருக்கிறேன். அந்த அளவுக்கு அன்பானவள். மென்மையானவள். அக்கறை கொண்டவள். புண்படுத்தும் அவளே புண்களை ஆற்றுகிறவள். ஒரு கையால் சம்மட்டி அடி கொடுத்து, மறு கையால் அணைத்து ஆறுதல் அளிப்பவள். அவள் ஒரு கருவி.

தீக்ஷாவிடம் போய் அவள் கொடுக்கும் வேலையைச் செய் என்று உன்னை அனுப்பி வைக்கிறேன். அவள் உன்னைப் பார்த்துச் சத்தம் போடுகிறாள். எல்லா வகையிலும் கிள்ளிக் கிளறிப் பார்க்கிறாள். உன்னுடைய பழைய பழக்க வழக்கங்கள் இன்னும் உன்னிடம் இருக்கின்றனவா என்று பார்க்க அது ஒரு சோதனை.



தாயைப் போல அவள். அவளிடம் இருப்பது தாய் மடியில் இருப்பதைப் போல இயல்பானது. உனது தாய் தரும் அரவணைப்பைத் தருகிறாள். தாய் இருக்கிறாளே, அவளைப் பொறுத்துக் கொள்வது சிரமம்தான்.

தீக்ஷா ஒரு பரிபூரணத் தாய்.

சிரமம்தான். தெரியும் சுதர்ஷன். ஆனால் வளர்வது சிரமம்தானே. இன்னும் பல நெறிகளும் காண வேண்டியிருக்கிறது. பல பரிமாணங்களுக்கு உன்னை அனுப்ப வேண்டியிருக்கிறது. உன்னுடைய எந்த மூலை முடுக்கையும் விடாமல் கவனித்து அபிவிருத்தி செய்ய வேண்டியிருக்கிறது. இல்லையென்றால் ஒரு பக்கம் வீங்கிப் போய் மறுபக்கம் மெலிந்து போய்விடுவாய்.

நியமத்தின் முதல் நெறியே சரணாகதிதான். முரணாகத் தெரிகிறதா? இதுவரை நீ கேட்டுக் கொண்டிருந்ததெல்லாம் அப்படித்தான் உன்னை நினைக்க வைக்கும். சரணாகதி அடைந்து விட்டால், நீ நீயாக இருப்பதில்லை என்கிறார்கள்.

நான் சொல்வதெல்லாம் சரணடையாத வரைக்கும் நீ நீயாக முடியாது என்பதுதான். சரணடைவது என்பது மிகப் பெரிய சமாச்சாரம். தீர்மானமான மனதுடையவனே சரணடைய முடியும். தீர்மானத்தைத் தீர்மானமாக விட்டு விடுவதே சரணாகதி. உன்னை ஒரு புறம் ஒதுக்கி வைத்து விடுவது. முழுக்க ஒதுக்கி வைத்து விட்டு முழுக்க ஆமாம் என்று சொல்வது. ஆனால் மனம் எதிர்க்கிறது. பழைய பழக்கங்கள் இதை எதிர்க்கின்றன. சில சமயம் அந்த எதிர்ப்புகளும் சரியென்று தோன்றுகின்றன. அதில்தான் ஓர் அழகு இருக்கிறது. சரிதான் என்றாலும் தர்க்க பூர்வமாகச் சரியென்று தோன்றாத ஒன்றிடம் நீ சரணடைய வேண்டியிருக்கிறது.



தீக்ஷா ஒரு பைத்தியக்காரி. என்னதான் அறிவு ஜீவியாக இருந்தாலும், என்னதான் தீர்க்கமானவனாக இருந்தாலும் அவளிடம் போய்ச் சரணடைய வேண்டியிருக்கிறது. அந்தப் பைத்தியக்காரத்தனமே அவளுடைய சிறப்பு. அதனால்தான் அவளைத் தேர்ந்தெடுத்தேன்.

அவளை விட அறிவு ஜீவிகள் பலர் இருக்கிறார்கள். டாக்டர் பட்டம் வாங்கிய ஒருவரைத் தேர்ந்தெடுத்திருக்கலாம். அவர் சொல்வதை ஏற்றுக் கொள்வது சுலபமாக இருந்திருக்கும்.

ஆனால் ஒருவர் சொல்வதை ஏற்றுக் கொண்டு பின்பற்றுவது என்பது சரணாகதியாகாது. ஏற்றுக் கொள்ளாதவரை ஏற்றுக் கொள்வதில் இருக்கும் முட்டாள்தனம் தெரிகிறது. அப்படியும் சரணடைவதுதான் பெரியது. உன்னுடைய கடந்த காலத்தை விட்டுப் போய் விட ஒரு ராட்சசத் தாண்டல்.

இந்தக் கம்யூன் ஒரு சோதனைக் கூடம். இங்கே ஒரு ரசவாதம் நடக்கிறது. ஒரு கூட்டமாக வந்து சேர்கிறீர்கள். உங்களை ஓர் ஒருங்கிணைவாக இணைக்க வேண்டியிருக்கிறது. பல சம்மட்டி அடிகள் விழத்தான் போகின்றன. இதை விட்டு வெளியே வரும் போது பரிசுத்தமான தனி மனிதர்களாக வரப் போகிறீர்கள்.

நியதி என்பதே தனித்துவத்தைக் கொணர்வதற்குதான். மறந்து விடாதே. தனித்துவம் என்பது வேறு. தனியொருவன் என்பது வேறு. தனியொருவன் எனும் போது தானெனும் மயக்கத்துக்குள் பயணிக்கிறாய். நன்றாக நினைவில் வைத்துக் கொள். தனியொருவனாக இருக்கும் வரை தனித்துவம் சாத்தியமே இல்லை. அடி ஆழத்தில் தமக்கெனத் தனித்துவம் இல்லை என்பது தெரிந்தே



இருக்கிறது. அதனால்தான் தத்துவம், தர்க்கம், வாதம் என்று முகப்புகளை வைத்துக் கொள்கிறார்கள். வெளியே தனித்தவர் என்று திரிகிறார்கள். உள்ளேயோ தனியொருவர் மட்டுமே என்பதைத் தெரிந்தே வைத்திருக்கிறார்கள். தனியொருவர் என்ற அடையாளத்தை நம்புவதே தனித்துவம் ஆகிவிடாது. நம்பிக்கைகள் வழக்கமாகவே தவறாகத்தான் இருக்கின்றன.

உனக்குத் தனித்துவம் இருக்கிறது என்றால் உன்னைத் தனியொருவன் என்று நம்ப வேண்டிய அவசியமே இல்லை. உன்னுடைய இருப்பின் உண்மை அதுவெனும் போது நம்பிக்கை எதுவும் தேவையேயில்லையே. மறைத்து மூடி வைக்கவே நம்பிக்கை தேவைப்படுகிறது. கடவுளைப் பற்றி ஒன்றும் தெரியாது. ஆனால் கடவுளை நம்புகிறாய். கடவுளை நம்புகிறவன் நாத்திகன். கிறிஸ்துவனானாலும் இந்துவானாலும் முகம்மதியனானாலும் அவன் நாத்திகனே. நம்புகிறவன் நாத்திகன்தான்.

கடவுளைப் பற்றி ஒன்றும் தெரியாது. என்றாலும் கடவுளை நம்புகிறான். அப்படியானால் கடவுளைக் கூட ஏமாற்றுகிறான் என்றுதான் பொருள். ஒரு பாசாங்குகாரன். சொன்னதைச் சொல்லும் கிளிப்பிள்ளை. சாத்திரங்கள் சொல்வதை, பிறர் சொல்வதை அப்படியே செய்கிறவன். கிளப்பிள்ளைகள் ஆழகாகத்தான் பேசும். ஒரு வார்த்தையைக் கூடப் புரிந்து கொள்ளாமல் மிக அழகாகப் பேசும். இயந்திரத்தனமாக.

நீக்ரோ ஒருவன் ஒரு பேசும் கிளி வாங்க ஹேர்லெம் போனான். பல வகைக் கிளிகள் தன்னிடம் இருப்பதாகச் சொன்ன கடைக்காரன் எந்த வகை வேண்டுமென்றான்.



ஐம்பது டாலர் விலைக்கு இருக்கும் வகை வேண்டுமென்றான். கிளியைக் கொண்டு வந்தவுடன், ''பாலி, வான்ன கிராக்கர்? பாலி வான்ன கிராக்கர்?'' என்றான். கிளி ஒன்றும் சொல்லவில்லை.

''நல்லாப் பேசற கிளிதான் எனக்கு வேணும். வேறொண்ணைக் காட்டு.'' என்றான்.

இருநூறு டாலர் கிளியைக் கடைக்காரன் கொண்டு வந்தான். இவன், ''பாலி, வான்ன கிராக்கர்? பாலி வான்ன கிராக்கர்?'' என்றான். பதிலில்லை.

''இதை விட நல்ல கிளி இருக்குதா?'' என்றான்.

''இருக்குது,'' என்று சொன்ன கடைக்காரன் அவனை உள்ளே அழைத்துப் போய் ஆயிரம் டாலர் கிளி ஒன்றைக் காட்டினான். மிகப் பளபளக்கும் கண்களோடு அழகாக, பல நிறங்களில் ஜொலிக்கிற, பெருமையோடு தலையாட்டுகிற பிரமாதமான கிளி அது. கூண்டும் கூடப் பிரமாதமாகத்தான் இருந்தது.

''பாலி, வான்ன கிராக்கர்? பாலி வான்ன கிராக்கர்?'' என்றான். கிளி இவன் பக்கம் திரும்பக் கூட இல்லை.

''இதான் உன்கிட்டே இருக்கறதுலேயே பிரமாத மானதா? ஊமையாகத் தெரிகிறதே!'' என்று கேட்டான்.

அவனை இன்னுமோர் உள்ளறைக்குக் கூட்டிப் போய் ஐந்தாயிரம் டாலர் கிளியைக் காட்டினான். அந்தக் கிளி பட்டு உடையில் ஜொலித்தது. சிறகுப் படுக்கையில் உல்லாசமாகக் கிடந்தது. வாயில் புகைக்க ஒரு பைப். படிக்க 'பைனான்ஸியல் டைம்ஸ்.'

''பாலி, வான்ன கிராக்கர்? பாலி வான்ன கிராக்கர்?'' என்றான்.



தங்கப் பிரேமிட்ட கண்ணாடி வழியாக ராஜ பார்வையில் ஏழையைப் பார்ப்பது போல அவனைப் பார்த்து அந்தக் கிளி.

''பாலி, வான்ன கிராக்கர்? பாலி வான்ன கிராக்கர்?'' என்று மறுபடி கத்தினான்.

''பாலி, வான்ன கிராக்கர்?'' என்று ஆக்ஸ்போர்டு ஆங்கிலத்தில் திருப்பிச் சொன்ன கிளி அதே மூச்சில், ''நிக்கர், வான்ன வாட்டர் மெலான்?'' என்றது.

நம்புகிறவன் ஒரு கிளிப்பிள்ளை. நம்புகிறவனுக்கு ஒன்றுமே தெரியாது. நம்புகிறவன் ஆத்திக வேடத்தில் ஒரு நாத்திகன். தன்னையும் உலகத்தையும் கடவுளையும் கூட முட்டாளாகப் பார்க்கிறான்.

தனியொருவன் என்று நம்புகிறவன் தனித்துவம் கொண்டவனல்ல. தனித்துவம் கொண்டவன் நம்ப வேண்டியதில்லை. அவனுக்குத் தெரியும் என்பதைப் பற்றி நம்பிக்கை மட்டும் எதற்கு?

அறியாமையில் இருப்பவன்தான் நம்பவேண்டும். தான் தனியொருவன் என்பது ஒரு நம்பிக்கை மட்டுமே. தனித்துவம் பெற்றவனாக இருப்பது ஓர் அனுபவம். தனியொருவனாக இருப்பது மலிவானது. தனித்துவத்தோடு இருப்பதற்கோ கடுமையான நெறிமுறைகள் தேவைப் படுகின்றன. சிறந்த விடாமுயற்சி, உழைப்பு, விழிப்பு தேவை. பல வருடங்களாக விழித்திருப்பவனுக்கும் தியானிப்பவனுக்குமே அது சாத்தியம். இந்தக் கம்யூனில் செய்வதெல்லாம் அந்தத் தியானத்துக்கு உன்னைப் பக்குவப்படுத்த மேற்கொள்ளும் பல வழிகள்தான். சமையலறையில், தச்சுப் பட்டறையில், சோப் தயாரிப்பில், பூச்செண்டு செய்வதில் என்று எல்லாவற்றிலும்



மேம்போக்காகச் சாதாரணமாக இருப்பதாகத்தான் தெரியும்.

ஆனால் அப்படி இல்லை. தச்சுப் பட்டறையில் வேலை செய்கிறவர்களைப் போய்ப் பார். பிற தச்சர்கள் செய்வதைத்தான் செய்கிறார்கள். ஆனால் வேலையின் முறையில் தரம் வேறு.

அந்தத் தரத்தைக் கண்டு தெரிந்து கொள்ள முடியாது. நீயும் அதில் பங்கெடுத்துக் கொள்ள வேண்டும். அப்போதுதான் மெல்ல மெல்ல அதைத் தெரிந்து கொள்வாய். அந்தத் தரம் விசுவாசத்தில் இருக்கிறது. பாசத்தில் இருக்கிறது.

என் மேல் அன்பிருப்பதால்தான் என் சன்னியாசிகள் இங்கே இருக்கிறார்கள். வேறெந்தக் காரணமும் இல்லை. இங்கே என்னோடு இருக்க வேண்டுமென்பதற்காகவே இருக்கிறார்கள். அதற்காக எதுவும் செய்ய அவர்கள் தயார்.

அவர்கள் செய்வதெல்லாம் வெளியே உழைப்பாகத் தான் தெரியும். உழைப்பைப் பார்க்கும் உனக்கு அதன் பின்னே இருக்கும் உணர்வைத் தெரிந்து கொள்ள முடிவதில்லை. தெரிந்து கொள்ள வேண்டுமானால் அவர்களில் ஒருவனாகி விட வேண்டும்.

இன்னமும் நீ வேடிக்கை பார்த்துக் கொண்டி ருப்பதாகத்தான் தெரிகிறது. கம்யூனில் நீயும் ஏதாவது வேலை செய்து கொண்டிருக்கலாம். என்றாலும் கம்யூனின் பணிகளில் நீ இன்னும் பங்கேற்றாகவில்லை. அப்படி இல்லையென்றால் இப்படி ஒரு கேள்வியைக் கேட்டே யிருக்க மாட்டாய்.

மூன்றாவது வினா 

அன்புக்குரிய குருவே,

அது ஏன் எதையோ இழந்துவிட்டதைப்
போல
ஓர் உணர்வு எனக்கு?
நான் வேறொன்றாக
இருக்க வேண்டுமென்ற வெட்கை?
இந்தக் குப்பையைக்
கழித்துவிடுவதற்கு உதவுகிறீர்களா?

**தியான யோகி**, அது குப்பைதான் என்றால், அதைக் குப்பை என்று தெரிந்து வைத்திருக்கிறாய் என்றால் அதைக் கழித்துவிடுவது என்ற பிரச்சினையே இல்லை. குப்பை என்று தெரிந்திருப்பதே அதை வீசி எறிந்துவிட்டதற்குச் சமம்.

ஆனால் அதைக் குப்பை என்று நான் சொல்லக் கேட்டிருக்கிறாய். அது உனக்குள் ஒரு நம்பிக்கையாகி விட்டது. அது நீயாகத் தெரிந்து கொண்டதாகாது. இன்னமும் அது உன் அனுபவமாகவில்லை. இன்னும் அதைப் பிடித்துத் தொங்கிக் கொண்டுதானிருக்கிறாய்.

அடி ஆழத்தில் உனக்கு இன்னமும் மதிப்புடைய தாகத்தான் தெரிகிறது. அங்கே குப்பை என்று ஆகிவிட வில்லை. இன்னமும் அவை வைரங்கள்தான், கூழாங்கற்கள் அல்ல என்று நினைக்கிறாய். பாதுகாத்து வைத்திருக்க வேண்டிய பொக்கிஷம் என்றுதான் நினைத்திருக்கிறாய்.

என்னை நம்ப ஆரம்பித்துவிடாதே. அந்த நம்பிக்கையில் எந்த வித்தியாசமும் இருப்பதில்லை.



முகம்மதுவையோ, கிறிஸ்துவையோ,புத்தரையோ நம்பிக் கொண்டிருந்த நீ என்னையும் நம்ப ஆரம்பிக்கிறாய். இதில் எந்தப் புரட்சியும் இல்லை. எந்த நிலை மாற்றமும் இல்லை.

எதன் மீது நம்பிக்கை வைக்கிறாயோ அது மாறுகிறது. நம்பிக்கை அப்படியேதான் இருக்கிறது. நம்புகிற அந்த மனது அப்படியே இருக்கிறது.

இயேசுவை நம்புகிறாய். ஆனால் அவர் பேசும் மொழியோ இரண்டாயிரம் வருடத்துக்கு முந்தியது. அதில் இருப்பது பலவும் புரியாது. எந்தச் சூழலில் பொருத்தமாக இருந்ததோ அந்தச் சூழல் மாறிப் போய்விட்டது. நான் இருபதாம் நூற்றாண்டு மொழியில் பேசுகிறேன். அதனால் இயேசுவிடமிருந்து விலகி என்னை நம்புகிறாய். இது மிகவும் எளியது. இதற்கெனப் பெரும் செலவும் செய்ய வேண்டியதில்லை.

என் மேல் நம்பிக்கை வை என்று நான் சொல்ல வில்லை. எல்லா நம்பிக்கைகளையும் ஓரம் கட்டி வைத்துவிட்டு நீயாகப் பார் என்கிறேன். எல்லா நம்பிக்கைகளும் கண்மூடித்தனமானவை. கண்களைத் திறந்து வைத்துக் கொண்டு பார்.

குப்பையைத்தான் சுமந்து கொண்டிருக்கிறாயா என்று பார். அல்லது நீ அதைக் குப்பை என்று புரிந்து வைத்திருக்கிறாயா? அப்படியானால் அதை எப்படி விட்டு வீசியெறிவது என்று கேட்க மாட்டாய். குப்பையை எப்படிக் கொட்டிவிட்டுப் போவது என்று யாரும் யாரையும் கேட்டுக் கொண்டிருப்பதில்லையே.

பிரச்சினை என்னவென்றால் உன் ஆழ்மனதில் அதை இன்னமும் தங்கம் என்று நம்பிக் கொண்டிருப்பதுதான். யாரோ ஒருவர் அதைக் குப்பை என்கிறார். சொல்வதை



அவ்வளவு விவரமாகவும் அழகாகவும் சொல்கிறார்கள். அவரோடு வாதிட உன்னால் முடியவில்லை. அவர் உன்னைப் பேச விடாமல் செய்து விடுகிறார். அவரிடம் அப்படி ஒரு அதிகாரம், ஓர் ஒருங்கிணைப்பு-அவர் இருக்கும்போது உனக்குள் பாய்ந்து நிரப்பிவிடுவதைப் போல ஓர் உணர்வு. நீயும், ''ஆமாம், இது குப்பைதான்.'' என்று வெறுமனே சொல்லிக் கொள்ள ஆரம்பித்து விடுகிறாய். என்றாலும் உன் ஆழ்மனதோ அது தங்கம், குப்பையல்ல என்று நினைத்திருக்கிறது. அதனால்தான் இந்தக் குப்பையை எப்படிக் கொட்டுவது என்ற பிரச்சினையே வருகிறது.

நீயாக இது குப்பைதான் என்று புரிந்து கொள்ளும் போது, அதை, எப்படிக் கொட்டிவிட்டுப் போவது என்று கேட்கவே மாட்டாய். அதைக் குப்பையென்று பார்ப்பதே அதைக் கொட்டிவிடுவதுதான். அதைக் குப்பையென்று தெரிந்து கொள்ள வருவதே அதைக் கொட்டிவிடுவதுதான். குப்பை உன்னைப் பிடித்துத் தொங்கிக் கொண்டிருக்க வில்லை. நீதான் அதைப் பிடித்துத் தொங்கிக் கொண்டிருக்கிறாய்.

குப்பைக்கு உன்னைப் பற்றி எந்தக் கவலையும் இல்லை. எந்த அக்கறையும் இல்லை அதைக் கொட்டி விடுவாயானால், ''என்னை ஏன் கொட்டுகிறாய்?'' என்று கேட்கப் போவதில்லை. கொட்டிவிடுவதைப் பற்றி எதுவும் அலட்டிக் கொள்ளப் போவதில்லை. கோர்ட்டுக்குப் போகப் போவதில்லை.

குப்பையை விவாகரத்துச் செய்துவிட வேண்டிய தில்லை. நீ கொட்டிவிட்டுப் போனால் இப்போதிருப்பதை விடக் குப்பை மகிழ்ச்சியாகத்தான் இருக்கப் போகிறது. உன்னை விட்டுவிட்டு, உன்னிடமிருந்து சுதந்திரமாக



இருக்குமல்லவா? சலித்துப் போயிருக்க வேண்டும் நீ அதற்கு. நீதான் அதைப் பிடித்துத் தொங்கிக் கொண்டிருக்கிறாய்.

ஏன் அதைப் பிடித்து தொங்கிக் கொண்டிருக்க வேண்டும்? எதையாவது ஒன்றைப் பிடித்துக் கொண்டு ஏன் தொங்கிக் கொண்டிருக்க வேண்டும்? ஆழ்மனதில் அது மதிப்புள்ளது என்று நம்பிக் கொண்டே இருக்கிறாய் என்பதால்தான்.

தியான யோகி, நான் ஏன் எதையோ இழந்துவிட்டதைப் போல உணர வேண்டும் என்று கேட்கிறாய்.

குழந்தையாயிருந்த போதிருந்து உன்னளவில் உனக்கு எந்த மதிப்பும் இல்லை என்று திரும்பத் திரும்பச் சொல்லி வந்திருக்கிறார்கள். நீ எப்படியிருக்கிறாயோ அப்படி இருப்பதில் எந்த மதிப்பும் இல்லை என்கிறார்கள்.

மதிப்பைத் தேடிக் கொள்ள வேண்டும். மதிப்பை நிரூபணப்படுத்த வேண்டும். இதைக் கோடிக்கணக்கான தடவை உன்னிடம் சொல்லியிருக்கிறார்கள். பெற்றோர், ஆசிரியர்கள், பூசாரிகள், அரசியல்வாதிகள் என்று எல்லோருமே ஒரு சதிகாரக் கும்பலாக இயங்கிக் குழந்தைமையைச் சிதைக்கிறார்கள். ஒரு குழந்தையைச் சிதைப்பதற்கு மிகச் சிறந்த வழி அந்தக் குழந்தையின் தன்னம்பிக்கையை அழித்துவிடுவதுதான்.

எப்படி அந்த நம்பிக்கையைச் சிதைப்பது? மதிப்பு அவரவரளவில் இருக்கும் ஒன்றல்ல என்று சொல்வது. மதிப்பைப் தேடிப் பெற வேண்டும் என்பது. அதை இழந்து விடலாம் என்று பயமுறுத்துவது. உழைத்தாக வேண்டும். இலக்குகளைக் கைகொள்ள வேண்டும். பிறரோடு போராட வேண்டும். பல்லுக்கு பல், நகத்துக்கு நகம் என்று ஒருவர்



குரல்வளையை மற்றவர் கடித்து ரத்தம் குடிக்க வேண்டும்.

வன்முறைக்கு உன்னைத் தயார்படுத்தி விடுகிறார்கள். பணம் வேண்டும், அதிகாரம் வேண்டும், கௌவரம் வேண்டும் என்ற பேராசையும் ஏக்கமும் நிறைந்தவனாக ஆக்கிவிட்டார்கள். இத்தனைக்கும் காரணம் உன்னளவில் உனக்கு எந்த மதிப்பும் இல்லை என்று சொல்லி வைத்திருப்பதுதான்.

ஆனால் நானோ உன்னளவில் உனக்கென ஒரு மதிப்பு இருக்கிறதென்கிறேன். பிறக்கும் போதே புத்தனாகப் பிறக்கிறாய் என்கிறேன். உனக்கு உன்னுடைய உண்மைச் சொரூபம் தெரியவில்லை. உன் இருத்தலின் எதார்த்தம் புரியவில்லை. என்றாலும் நீங்கள் ஒவ்வொருவரும் மறைந்திருக்கும் கடவுளரின் வடிவங்களே. பிரச்சினையே நான் இதுவரை யாரும் சொல்லாததை உங்களிடம் சொல்வதுதான். நீங்கள் புத்தர்கள் என்கிறேன். இந்தக் கணம் நீங்கள் ஒவ்வொருவரும் ஒரு புத்தர் என்கிறேன்.

ஆனால் இதுவரை உனக்குச் சொல்லிக் கொடுத்துத் தட்டி உருட்டி நம்ப வைத்திருப்பதோ வேறு. ‘‘இந்தக் கணம் எப்படி ஒருவர் புத்தனாக முடியும்? நாளைக்கு ஆகலாம். ஏதாவது ஒரு நாள் ஆகலாம். எதிர்காலத்தில் ஒரு நாள். ஆனால் இந்தக் கணத்திலா? முடியவே முடியாது.’’ இதைத்தானே திரும்பத் திரும்பக் கேட்டுக் கொண்டிருந்து விட்டாய்.

உன் பெற்றோரை, உன் ஆசிரியர்களை, இந்தப் பூசாரிகளை, அரசியல்வாதிகளை வெகுவாகத்தான் நம்பிக் கொண்டிருந்து விட்டாய். அவர்கள் சொன்னதையெல்லாம் மூட்டை கட்டி அடுக்கி வைத்துக் கொண்டிருந்துவிட்டாய்.



அதுதான் உன் குப்பை மூட்டை. பலகாலம் சேர்த்துச் சேர்த்து வைத்து எப்போதும் முதுகில் தூக்கி வைத்துச் சுமந்து கொண்டேயிருந்து விட்டாய். அதன் மீது ஒரு பற்று. அது அழகு என்ற மயக்கம். அதில் மதிப்பிருக்கிறது என்ற நம்பிக்கை. அது உனக்கு ஊட்டமாகும் என்ற நினைப்பு.

சொல்வதைக் கேள். அதுவெல்லாம் வடிகட்டின முட்டாள்தனம். அதைக் கொட்டிக் கழித்துவிட்டு இந்தக் கணம் முதல் ஒரு புத்தராகி விடு. தேடிக் கண்டு பிடித்துப் போய்ச் சேர்வதல்ல இது. விழிப்பாக இருந்து உணர்ந்து கொள்வது. அவ்வளவுதான். சாதனை ஏதுமில்லை இதில். சுயானுபவமாக்கிக் கொண்டு விழிப்போடு கவனமாக இருப்பது, அவ்வளவுதான்.

எனவே நான் சொல்வதைக் கேட்டுக் கொண்டிருக்கும் போது என்ன நடக்கிறதென்கிறாய்? உன்னில் ஒரு பகுதி, ''இவர் சொல்வது சரியாகத்தான் இருக்க வேண்டும்,'' என்கிறது. சொல்லப்படுவது வாழ்வைப் பற்றிய அப்பட்டமான உண்மை என்பதால், உன்னில் ஒரு பகுதி அதை ஏற்றுக் கொண்டு தலையாட்டுகிறது. ஆனால் இதுவரை நீ பெற்ற பயிற்சி அதற்கு எதிராகத் திரும்புகிறது. எனக்குப் பக்கத்தில் இருக்கும் வரை உண்மைதான் என்கிறாய். கொஞ்சம் தள்ளிப் போய்விட்டால் உன் மனம் திரும்பக் குதித்து உனக்குள் புகுந்து கொள்கிறது. இருமடங்கு சக்தியோடுதான். ஆமாம். ஆமாம், அதன் சக்தி அதிகம்தான். மனம் அவ்வளவு சக்தியுடையதாக இருப்பதால்தான் உன் அறிவை அழித்துவிடுகிறது.

அறிவுக்கும் மனதுக்கும் எந்தத் தொடர்பும் இல்லை. அறிவு நெஞ்சத்தைச் சார்ந்தது. அது நெஞ்சத்தின் இயல்பு. பகுத்தறிந்து பேசுவது மூளையின் வேலை. பகுத்தறியத்



தெரிந்தவரெல்லாம் அறிவார்த்தமானவராயிருக்க வேண்டும் என்பதில்லை. அப்படியே அறிவார்த்த மான ஒருவருக்கு விஷயஞானம் இருக்க வேண்டும் என்பதில்லை.

உன்னுடைய அறிவில் நிறையக் குப்பை சேர்ந்து விட்டது. நான் அந்த அறிவை எழுப்ப முயல்கிறேன். சமூகம் ஒட்டுமொத்தமாகச் சேர்ந்து கொண்டு உன் அறிவே உனக்குப் புலப்படாது போக வைத்திருக்கிறது. சமூகம் உன் அறிவுக்கு எதிரானது. சராசரி மனிதனாகவே உன்னை இருக்க வைக்கச் செய்கிறது. சராசரி மனிதர்கள் நல்ல அடிமைகளாக இருக்கக் கூடியவர்கள். அறிவற்று முட்டாள்தனமாக இருப்பவர்களைத்தானே அடக்கி வைத்திருக்க முடியும்.

முட்டாள்தனமானவர்கள் மிகக் கீழ்படிதலுள்ளவர்கள். எதையும் எதிர்க்க மாட்டார்கள். முட்டாள்தனமானவர்கள் ஜடமாகத் திரிகிறவர்கள். வாழ்வின் சிறப்பை வாழ்ந்து பார்க்க முயற்சி செய்ய மாட்டார்கள். தம் வாழ்வெனும் பந்தத்தின் இருபுறத்தையும் கொளுத்தி வைத்திருப்பார்கள். அவர்களிடம் தீவிரமிருப்பதில்லை. முட்டாள்தனம் கீழ்ப்படிதலுள்ளது. கீழ்ப்படிந்து போகிறவர்கள் முட்டாள் களாகித்தான் போகிறார்கள்.

ஒரு நாள் கௌபாய் ஒருவன் நிர்வாணமாகத் தன் குதிரை மீது சவாரி செய்து கொண்டு நகரத்துக்குள் வந்தான். போலீஸ்காரர் ஒருவர், ''இதென்னப்பா?'' என்று கேட்டார்.

''ஷெரிப், அதை ஏன் கேக்கறீங்க...'' என்று சொல்லி விட்டு, ''எங்க அப்பாவுக்குக் கொஞ்சம் மளிகைச் சாமான் வாங்க வந்துக்கிட்டிருந்தேன். வழியில் ரோட்டோரமாக ஒரு பொம்பிளை. எங்கப்பா எப்பவுமே பொம்பளைகளுக்கு



உதவி செய்யணும்னு சொல்லியிருக்கறார். நானும் குதிரையை விட்டு இறங்கினேன். அவளோட பிக்னிக் கூடையை ஆத்தோரத்துக்குத் தூக்கிக் கிட்டுப் போனேன். ஜமக்காளத்தை விரிக்கச் சொன்னாள். செஞ்சேன். அவள் சொன்னதையெல்லாம் தப்பாமச் செஞ்சேன். பூட்ஸைக் கழட்டச் சொன்னா. கழட்டிப் போட்டேன். துணியைக் கழட்டிப் போடலாமேன்னாள். கழட்டிப் போட்டேன். அப்படியே செய்கிறேன் மேடம் என்றேன். அவள் அப்படியே கிடந்தாள். பிறந்த மேனியோடு அந்த ஜமக்காளத்தில். ஒய்யாரமாகப் படுத்துக் கொண்டு நீ போகலாம், கௌபாய், என்றாள். நானும் வந்துவிட்டேன், ஷெரிப்.'' என்றான்.

கீழ்ப்படிதல் முட்டாள்தனத்தின் ஒரு வடிவம். சமூகம் நீ முட்டாளாக இருக்க வேண்டும் என்றுதான் விரும்புகிறது. முட்டாள்தனமானவர்கள் மிக நல்லவர்கள். இருப்பதை அப்படியே வைத்துக் கொண்டிருப்பவர்கள். எதையும் எதிர்க்க மாட்டார்கள். புழுத்துப் போய்க் கிடக்கிறது என்று தெரிந்தாலும் கண்களை மூடிக் கொள்வார்கள். அல்லது எந்த முட்டாள்தனமான விளக்கத்தையும் ஏற்றுக் கொள்ளத் தயாராக இருப்பார்கள்.

உதாரணமாக இந்த நாடு பல நூறு வருடங்களாக ஏழ்மையிலும் பட்டினிலும் கிடக்கிறது. இந்த மக்கள் கடவுள் நம்பிக்கை கொண்டவர்களாயிற்றே. கீழப்படிகிற வர்களாயிற்றே. முட்டாள்களாயிற்றே. அதனால் இந்தப் பஞ்சத்துக்கும் பட்டினிக்கும் எந்த வியாக்கியானமும் தந்து அவர்களை ஏற்றுக் கொள்ள வைக்கவும் முடிகிறது.

சிலர் கடவுளே தம்மை ஏழையாக்கி வைத்திருக்கிறார் என்று சொல்லித் திரிகிறார்கள். அப்போதுதான் பக்தியோடு இருக்க முடியுமாம். ஏழ்மையை வணங்குகிறார்களே.



ஏழ்மைக்கு இந்தியாவில் கடவுள் அந்தஸ்து. சொத்து சுகத்தை விட்டுச் சாமியாராகிப் போனான் என்றால் பல்லாயிரம் பேர் அவனைப் பெரிய ஞானி என்பார்கள். அடிமுட்டாளாக இருக்கலாம். என்றாலும் சொத்து சுகத்தைத் துறந்துவிட்டால் உடனே பெரிய ஞானியாகிவிடுவான். முட்டாள் ஞானிகள் பலரையும்தான் பார்த்துவிட்டேன்.

என்ன முரண்பாடு பார்த்தாயா? முட்டாள் எப்படி ஞானியாக முடியும்? ஞானிக்கு ஞானம் இருக்க வேண்டுமல்லவா? ஆனால் ஞானமும் இருந்து மதிக்கப் படவும் வேண்டும் என்பது இந்த உலகத்தில் மிகச் சிரமமான விஷயம். ஞானமுள்ளவர்கள் கொல்லப்பட வேண்டியவர்கள். சிலுவையில் அறையப்பட வேண்டிய வர்கள். விஷம் வைத்துக் கொல்லப்பட வேண்டியவர்கள்.

காந்தி ஏழைகளைத் தரித்திர நாராயணர்கள் என்றார். ஏழைகள் கடவுள்களாம். ஏழ்மை தெய்விகமாம். இது உண்மையென்றால் ஏழையாக இருக்க யார்தான் விரும்ப மாட்டார்கள் என்கிறாய்? ஏழையாக இருப்பது கடவுளாக இருப்பது என்றால் யார்தான் அப்படி இருக்க மாட்டேனென்பார்கள்?

வறுமைக்கு வேறு வியாக்கியானங்களும்தான் தருகிறார்கள். உன்னுடைய முற்பிறவிகளில் பாவங்கள் செய்து விட்டாயாம். அதனால் இந்தப் பிறவியில் ஏழையாக இருக்கிறாயாம். இதைப் போன்ற விளக்கங்கள் கடவுளை நம்பாதவர்களுக்காகக் கண்டுபிடித்தார்கள். சமணர்கள், பௌத்தர்கள் போன்றோர் கடவுளை நம்பாதவர்கள் என்பதால், முதல் வகை விளக்கத்தை அவர்களுக்குத் தர முடியாதல்லவா? அவர்களுக்கென கர்மா பற்றிய கோட்பாடு வந்தது. ஆனால் நோக்கம் ஒன்றுதான்.



முற்பிறவிகளில் பாவங்கள் செய்திருந்தால் அதை இந்தப் பிறவியில் கழித்துவிட வேண்டும் என்கிறார்கள். அதனால் வறுமையை அனுபவி. எந்த எதிர்ப்பையும் காட்டாமல் வறுமையை அனுபவி. எதிர்த்தாயோ இன்னும் கர்மவினைகளைப் புரிந்து அடுத்த பிறவியில் துன்பப்பட வழி வகுக்கிறாய். போதும் போதும், இத்தனை பிறவிகள் போதும். மனதார இப்போது துன்பப்பட்டுக் கர்மாவைக் கழித்து விடு. இப்படிச் சொல்லிச் சொல்லி மனிதர்களை மாடுகளாகவும் எருமைகளாகவும் ஆக்கிவிட்டார்கள். எந்த எதிர்ப்பு மில்லாமல் துயரமும் துன்பமும் திருப்தியோடு பட்டுக் கொள்கிறார்கள்.

நீ முட்டாளாக இருக்க வேண்டும் என்றுதான் சமூகம் விரும்புகிறது. அறிவா? அது ஆபத்து. அறிவுடையவன் என்றால் நீ உனக்காகச் சிந்திக்க ஆரம்பித்து விடுவாய். உன்னைச் சுற்றியிருப்பதை உன் நோக்கில் புரிந்து கொள்ள முயற்சி செய்துவிடுவாய். சாத்திரங்களை நம்பாமல் உன்னுடைய அனுபவங்களை நம்ப ஆரம்பித்து விடுவாய்.

தியான யோகி, நான் சொல்வதை வெறுமனே நம்பாதே.

பரிசோதனைகள் மேற்கொள். தியானி, அனுபவங் களை உணர்ந்து பார். உன்னுடையதேயாகும் வரைக்கும் எந்தப் புரிதலாலும் எந்தப் பயனும் இல்லை.

அது ஏன் எதையோ இழந்துவிட்டதைப்போல ஓர் உணர்வு எனக்கு என்று கேட்கிறாய்.

எப்போதும் நீ எதையாவது கண்டு பிடிக்க வேண்டும் என்று சொல்லிக் கொண்டேயிருந்து விட்டதுதான் காரணம். எதையும் கண்டு பிடிக்கவில்லை எனும்போது எதையோ இழந்துவிட்டது போலத் தோன்றுகிறது. நான்



சொல்வதைக் கேள். முதலில் நீ எதையும் இழந்து விட வில்லை என்பதை நம்பு. எனவே அதைத் தேடுவதை நிறுத்திவிடு. உன்னிடம் தான் அது ஏற்கெனவே இருக்கிறதே. உனக்கு எதுவெல்லாம் தேவையோ அதுவெல்லாம் உன்னிடம் ஏற்கெனவே இருக்கிறது. உள்ளே திரும்பிப் பார்க்க வேண்டியதுதான். ஆனந்தம், அன்பு, பரவசம் என்று வற்றாத பொக்கிஷங்கள் இருக்கக் காண்பாய்.

உள்ளே திரும்பிப் பார்க்கும்போது இழப்பதற்கு ஏதுமில்லை. வெளியே தேடிக் கொண்டே இருக்கும் வரைக்கும் விரக்தி அதிகமாகிக் கொண்டே தானிருக்கும். வயதாக வயதாக, வாழ்க்கை கை நழுவிப் போய்க் கொண்டிருப்பதை உணர உணர, இன்னும் காணவில்லையே என்ற விரக்தி அதிகரிக்கத்தான் செய்யும்.

இதில் வேடிக்கை என்னவென்றால் நீ எதையும் இழக்கவில்லை என்ற உண்மைதான். அது உன்னோடு எப்போதும் இருந்து கொண்டே இருக்கிறது. இந்தக் கணத்தில் கூடத்தான்.

ஆனால் நான் சொல்கிறேன் என்பதற்காக நம்பாதே. நம்புகிறவர்களை ஆக்கி வைப்பதல்ல என் வேலை. அனுபவித்துப் பார் என்கிறேன். உன்னுடைய அனுபவம் என்றாகிய அதே கணம் அதில் ஒரு விடுதலை உணர்வைக் காண்பாய். இயேசு கூட சத்தியமே ஈடேற்றம் என்கிறார். நம்பிக்கை அல்ல. சத்தியத்தை அனுபவிப்பதே ஈடேற்றத்துக்கான வழி.

ஆனால் எனக்கு எது சத்தியமோ அது உனக்கும் சத்தியமாக இருக்க வேண்டும் என்பதில்லை. என்னுடைய சத்தியம் உன்னுடைய நம்பிக்கையாக முடியாது. சத்தியம் நிச்சயம் ஈடேற்றும். ஆனால் அது உன்னுடைய சத்தியமாக



இருக்க வேண்டும். வேறு யாருடைய சத்தியமும் உன்னை ஈடேற்ற முடியாது. பிறருடைய சத்தியத்தை நம்ப ஆரம்பிக்கும்போது நீ சிறைப்பட்டுத்தான் போகிறாய்.

தியான யோகி, நீ இழந்து விட்டது ஏதுமில்லை. யாரும் எதையும் இழந்து விடவில்லை. வாழ்வின் இயல்பு அப்படிப்பட்டது. அதில் இழப்பேயிருப்பதில்லை.

நாம் கடவுளின் ஒரு பகுதி. கடவுள் நம்முடைய ஒரு பகுதி. இதை அறியாமல் போவதற்கு எந்த வழியும் சாத்தியமில்லை. அது எப்படி உன்னிடமிருந்தே நீ பிரிந்து போய்விடுவது சாத்தியம் என்கிறாய்? அப்படிப் பிரிந்து எங்கே போக முடியும் என்கிறாய்? நீ எங்கே போனாலும் உன்னோடேயேதான் இருக்க போகிறாய். நரகத்தில் கூட நீ உன்னோடுதான் இருக்க வேண்டும். நீ உன்னிடமிருந்தும் கடவுளிடமிருந்தும் நழுவித் தப்பித்துப் போக முடியாதல்லவா?

நீ உள்ளே திரும்பிக் கவனிக்க வேண்டுமென்பதற்காகவே அது காத்திருக்கிறது. பொறுமையாகக் காத்திருக்கிறது.

நான் வேறொன்றாக இருக்க வேண்டும் போல இருக்கிறது என்கிறாய்.

அதைத்தானே திரும்பத் திரும்பத் சொல்லிக் கொண்டிருந்து விட்டார்கள். வேறு ஒருவராக இரு. கௌதம புத்தரைப் பார். கிருஷ்ணரைப் பார். இயேசுவைப் பார். ஒரு புத்தனாக இரு. ஒரு கிருஷ்ணனாக இரு. ஒரு இயேசுவாக இரு. அப்படி இருக்க வேண்டும் என்று நீயும் முயன்று கொண்டிருந்தால் விரக்திதான் மிஞ்சும். நீ புத்தனாக முடியாது என்பதால்தான். ஒரு புத்தராக இருக்கவல்ல நீ வந்திருப்பது. நீ ஒரு கிருஷ்ணராக முடியாது. இயேசுவாக முடியாது. நீ நீயாகத்தான் இருக்க முடியும்.



சூசியா என்ற ஹசித் மகான் ஒருவர் இறந்து கொண்டிருந்தார். சீடர்கள், பரிவுடையவர்கள், என்று எல்லோரும் பெரும் திரளாகக் கூடி விட்டார்கள். முதியவர் ஒருவர், ''சூசியா, இறந்து கொண்டிருக்கிறாய். இன்னும் கொஞ்ச நேரத்தில் கடவுளுக்கு எதிரில் நிற்கப் போகிறாய். அப்போது மோசஸின் வழியில் மிக விசுவாசமாக வாழ்ந்து கழித்திருக்கிறாய் என்று உன்னால் சொல்ல முடியுமா?'' என்று கேட்டார்.

சூசியா கண்களைத் திறந்து சொன்ன கடைசி வார்த்தைகள் என்ன தெரியுமா? ''முட்டாள்தனமாகப் பேசாதே. கடவுள் என்னிடம் நீ ஏன் மோசஸாக இருக்கவில்லை என்று கேட்கப் போவதில்லை. சூசியா, நீ ஏன் சூசியாவாக இருந்திருக்கவில்லை என்றுதான் கேட்கப் போகிறார்.''

நீ நீயாக இருக்க வேண்டும். வேறு யாராகவும் இருக்க வேண்டியதில்லை. அதுதான் புத்தத்தனம் என்பது. நீ நீயாக இருப்பது. அதுதான் கிறிஸ்துவ உணர்வென்பது. நீ நீயாக இருப்பது. புத்தர் பிற யாராவதுடைய நகலா என்ன? அவருக்கு முன் மிகப் பெரிய மகான்கள் பலர் இருந்திருக்கிறார்கள் என்பது உனக்குத் தெரியுமே. அவரிடம் கூட, நீ கிருஷ்ணனாக இருக்க வேண்டும். நீ பர்ஷவநாத்தாக இருக்க வேண்டும், ஆதிநாதராக இருக்க வேண்டும். என்றெல்லாம் சொல்லியிருப்பார்கள்.

அழகான புராண இதிகாசக் கதைகளைக் கேட்டிருந்திருப்பார். ராமர், கிருஷ்ணர், பரசுராமர் என்று எல்லோருடைய கதைகளையும்தான். பாரம்பரியம் என்பது அவருக்கும் இருந்தது. ஆனால் பிறராக இருக்க வேண்டும்



என்று அவர் எப்போதும் முயன்றதேயில்லை. தான் யார் என்பதைத் தெரிந்து கொள்ள விரும்பினார். தான் தானாக இருக்க வேண்டும் என்று விரும்பினார். யாருடைய நகலாகவும் தன்னை அவர் ஆக்க முயலவில்லை. அதனால்தான் அவர் ஒரு நாள் ஞானியாக முடிந்தது.

ஆபிரகாமாகவோ, மோசஸாகவோ, எஸகியலாகவோ தான் இருக்க வேண்டும் என்று இயேசு நினைத்ததில்லை. இயேசு தானாக இருக்க முயற்சித்தார். அதுதான் அவருடைய குற்றமாகிப் போனது. அதனால்தான் அவரைச் சிலுவையில் அறைந்தார்கள்.

இயேசு மட்டும் மோசஸைப் போல இருந்திருந்தால் அவரைச் சிலுவையில் அறைந்தவர்களே அவருக்கு முன் மண்டியிட்டு வணங்கியிருப்பார்கள். பத்துக் கட்டளை களைப் பதிவு செய்து திரும்பத் திரும்பச் சொல்லும் ஒரு இசைத்தட்டாக இருந்திருந்தால், யூதர்கள் அவரை வணங்கியிருப்பார்கள். ஆனால் அவர் தானாக இருக்க முயன்றதால் வேறு வழியில்லாமல் அவரைச் சிலுவையில் அறைய வேண்டியதாகவிட்டது.

உளுத்துப் போன இந்தச் சமுதாயத்துக்கு, இந்தக் கூட்டத்துக்கு, இந்த மந்தைக்கு, தனித்தவனாக இருப்பவனைப் பொறுத்துக் கொள்ள முடிவதில்லை.

ஒரு சாக்ரெட்டிஸை ஏற்றுக் கொள்வதென்பது அவர்களுக்கு முடியாத காரியம். சாக்ரெட்டிஸ் மீது என்ன குற்றம் சுமத்தினார்கள் தெரியுமா?

என்னைப் பற்றி இப்போது சொல்கிறார்களே அதேதான். இளைஞர்களது மனதைக் கெடுத்தாராம். என்னுடைய விரோதிகளும் அதைத்தானே சொல்கிறார்கள்?



நான் மக்கள் மனதைக் கெடுக்கிறேன். குறிப்பாக இளைஞர்கள் மனத்தை.

சாக்ரெட்டிஸ் என்ன இளைஞர்களது மனத்தைக் கெடுத்தாரா? இல்லை இல்லை, அங்கே அறிவு கிளர்ந்தெழ வேண்டுமென்றார். சமுதாயமோ பயந்து போனது. பலரும் அறிவுடையவர்களாகிப் போனால் ஆளும் வர்க்கத்தினருக்கு ஆபத்து. மக்களை மந்தை ஆடுகளாக நடத்த முடியாமல் போய்விடும். பூசாரிகளும் அரசியல்வாதிகளும் அதைத்தானே செய்து கொண்டிருக்கிறார்கள்.

மக்களைச் சுரண்டுவதற்கென்று, அவர்கள் மேல் ஆதிக்கம் செலுத்துவதற்கென்று, அவர்களைக் கொடுமைப் படுத்தி அடக்கி வைத்திருக்க வேண்டுமென்று அரசியல் வாதிகளும் பூசாரிகளும் சதித்திட்டம் போட்டிருக்கிறார்கள்.

அந்தச் சதியின் அடிப்படைக் கொள்கை மக்கள் அறிவுடையவர்களாக ஆவதை எப்போதும் அனுமதித்து விடாதே. அதற்கு மாற்றுக்களைத் தந்து மயக்கத்தில் வைத்திரு. அறிவுக்கு மாற்று என்ன? தகவல் களஞ்சியம், அவ்வளவுதான். கல்வி கொடு. பள்ளி, கல்லூரி என்று அனுப்பி வை. பல்கலைக் கழகங்கள் அறிவு ஜீவிகளைப் படைக்கலாம். அறிஞர்களைப் படைக்கலாம். சாத்திர விற்பன்னர்களைப் படைக்கலாம். வார்த்தைக்கு வார்த்தை சாத்திரங்களை ஒப்புவிப்பவர்களைப் படைக்கலாம். ஆனால் அங்கிருந்து அறிவார்ந்தவர்கள் வருவதில்லை.

அவர்கள் சமூகத்துக்கு தொண்டாற்றுகிறார்கள்தான். கல்வி முறையே உளுத்துப் போன இந்தச் சமுதாயம் தன்னுடைய நலனுக்காக வகுத்து வைத்திருப்பதுதான். உன்னை ஈடேற்ற அல்ல. உன்னைப் பிணைத்து வைத்திருப்பதே அதன் நோக்கம்.



தியான யோகி, இந்தக் குப்பையைக் கழித்துக் கொட்ட நான் எதுவும் செய்வதற்கில்லை. இன்னமும் உணர்வுடையவனாக உனக்கு நான் உதவ முடியும். அப்படி உணர்ந்தவனாகிப் போனால் குப்பை தானாகக் கழன்று விழுந்துவிடும்.

திடீரென ஒரு நாள் உன்னை விட்டுப் போய் விட்டதைத் தெரிந்து கொள்வாய். உணர்வு ஆழப்போகப் போக குப்பை மறைந்து விடும். வெளிச்சத்தைக் கொண்டு வந்தால் இருட்டு தானாக விலகிவிடுவதைப் போல.

புத்தர், உணர்வோடிருந்தால் வெளிச்சம் தானாகப் கொட்டிப் பரவும் என்கிறார்.

ஏஸ் தம்மோ ஸனந்தனோ...

நான்காவது வினா

அன்புக்குரிய குருவே,

புதிய ஏற்பாட்டில் இருக்கும்
'அன்பே போற்றி' என்ற பாடலை
நான் அடிக்கடி படிப்பதுண்டு.
எனக்கென்னவோ அதில் சொல்லியிருப்பது
உங்களுடைய உபதேசம் போலவே
இருப்பதாகத்தான் தெரிகிறது.
மேலும் அதில்
கடவுள் என்ற வார்த்தையே இல்லை.
உங்களுடைய போதனையின்
அடிப்படைக்கு எந்த விதத்திலும்
முரண்படாத அருமையான பாடலாகத்தான்
அது இருக்கிறது.
நீங்கள் பேசும் போது சொல்வது
அப்படியே அதில் இருக்கக் காண்கிறேன்.



நான் சொல்வது சரிதானா?

உங்களுடைய குரல்
அவ்வளவு இனிமையாக இருக்கிறது.
கேட்பவனை
அப்படியே கட்டிப் போட்டுவிடுகிறது.
உங்களுடைய குரலில்
அந்தப் பாடலைக் கேட்க விரும்புகிறேன்.
அதிலும் நீங்கள் சீக்கிரத்தில்
மேடையில் பேசுவதை
நிறுத்திக் கொள்ளப் போவதாகச் சொல்கிறீர்கள்.
எனவே அதை உங்களுடைய குரலில்
கேட்க வேண்டும் என்ற என் ஆசை
அதிகமாகத்தான் இருக்கிறது.
இதோ அந்தப் பாடலின் ஒரு பிரதி.

**பிரேமார்த்தா,** புத்தர்கள் அனைவரும் சொல்ல வருவது ஒன்றேதான். ஏனென்றால் சத்தியம் ஒன்றுதான். சொல்லும் விதம் மாறுபடலாம். ஆனால் எதைக் குறிக்கின்றனவோ அது ஒன்றேதான்.

கோடிக்கணக்கான விரல்கள் சுட்டிக் காட்டினாலும் நிலவு ஒன்றுதான். விரல்கள் ஒன்று போல இருக்காதுதான். என்னுடைய விரல்கள் இயேசுவினுடையதைப் போலவோ, புத்தருடையதைப் போலவோ, மோசஸுடையதைப் போலவோ, ஆபிரகாமினுடையதைப் போலவோ இல்லைதான். ஆனால் நிலவு ஒன்றேதான். இந்தப் பாட்டு நிலவைச் சுட்டிக் காட்டும் ஓர் அழகிய விரல். அது எல்லாக் காலத்தையும் சேர்ந்த எல்லாப் புத்தர்களுடைய போதனைகளின் அடிப்படை. முன்பிருந்த புத்தர்கள், இப்போதிருக்கும் புத்தர்கள், இனி இருக்கப் போகும்



புத்தர்கள் என்று எல்லாப் புத்தர்களும் எப்போதும் சொல்வதன் அடிப்படை.

**என்னதான் மனிதர்கள் தேவதைகள் குரலில்**
**நான் பேசினாலும்**
**அன்புடையவனில்லை யானால்,**
**வெண்கலம் போலவோ**
**ஜால்ராக்கள் போலவோ**
**வறட்டுச் சப்தம் எழுப்புகிறவன்தான்.**

**என்னதான் தீர்க்க தரிசனத்தோடு**
**நான் மறைபொருளையும்**
**அனைத்தறிவையும்**
**புரிந்து கொண்டவனாயிருந்தாலும்**
**அன்புடையவனில்லை யானால்,**
என்னதான் என் நம்பிக்கை
மலைகளையே புரட்டிப் போடுமானாலும்
அன்புடையவனில்லை யானால்,
என்னதான் என் செல்வம் முழுவதையும்
ஏழைகளுக்குச் சோறிடக் கொடுத்தாலும்
என்னதான் என் உடலைத்
தகனம் செய்ய ஒப்புக் கொடுத்தாலும்
அன்புடையவனில்லை யானால்,
எனக்கு எந்த லாபமும் இல்லை.

நெடுங்காலம் வருந்துகிறது அன்பு;
ஆனால் கருணையாகவே இருக்கிறது.
அன்பு பொறாமைப்படுவதில்லை.
அன்பு தம்பட்டம் அடித்துக்
கொள்வதில்லை.
அன்புக்குக் கர்வத்தின் பூரிப்பிருப்பதில்லை.



அன்பு கண்ணியம் தவறி
நடப்பதில்லை.
அன்பு தனக்கென எதையும்
தேடுவதில்லை.
அன்பு அற்ப சொற்பத்தில்
ஆத்திரபப்படுவதில்லை.
அன்பு வஞ்சகம் நினைப்பதில்லை.
அன்பு ஒழுக்கம் கெட்ட இன்பத்தை
நாடுவதில்லை.
அன்பு சத்தியத்தில் இன்பம் காண்கிறது.
அன்பு அனைத்திலும் நலனையே
காண்கிறது.
அன்பு எல்லாவற்றையும் தாண்டி
நிலைத்திருக்கிறது.

அன்பு எப்போதும் தவறாதது.
தீர்க்க தரிசனம் தவறாகிப் போகலாம்.
நாக்குகள் மௌனித்து விடலாம்.
அறிவு மறைந்து போகலாம்.
ஆனால் பரிபூரணமானது வந்து
சேரும்போது
பின்னத்திலிருப்பதை விட்டுவிட
வேண்டியதுதானே?
குழந்தையா யிருந்தபோது
குழந்தையாகப் பேசினேன்.
குழந்தையாகப் புரிந்து கொண்டேன்.
குழந்தையாக நினைத்துப் பார்த்திருந்தேன்.
வளர்ந்த பின்னரோ
குழந்தைத்தனமானதை விட்டுவிட்டேனே.
இப்போது



புகை மூடிய கண்ணாடி வழியே
தெளிவில்லாமல் பார்த்து இருக்கிறோம்.
இனியோ
நேருக்கு நேர் பார்க்கப் போகிறோம்.
இப்போது
எனக்கு பகுதி பகுதியாகத்
தெரிந்திருக்கிறது,
இனியோ
என்னை நான் அறிந்திருப்பதைப் போல
அறிந்து கொள்ளப் போகிறேன்.
இப்போது நிலைத்திருப்பது
விசுவாசமும் நம்பிக்கையும்
அன்பும் ஆகிய மூன்றும்.
அதிலும் மிகப் பெரியது அன்பே.

இவைதான் சமயச் சார்புடையவருடைய அடிப்படைக் குணங்கள். இதுதான் என்னுடைய சேதி. இதுதான் சேதியே.

ஒரு மொழி எவ்வளவுக்குப் பழையதாக இருக்கிறதோ அந்த அளவுக்கு அதில் கவித்துவம் இருக்கிறது. இப்பாடலின் மொழியும் பழைய மொழி. நாம் எந்த அளவுக்கு விஞ்ஞான பூர்வமாகிவிட்டோமோ அந்த அளவுக்கு நமது மொழியும் விஞ்ஞான வசப்பட்டுவிட்டது.

இரண்டாயிரம் வருடத்துக்கு முந்தைய பாடலாக இருப்பதால் இதில் ஆதி மனதின் விகல்பமில்லாத் தன்மை இருக்கிறது. குழந்தைமையின் ஆச்சரியம். புரிந்து கொள்ள முடியாததைப் பற்றி நினைக்கும்போது உணரும் ஆச்சரியம்.

ஆனால் பிரேமார்த்தா, நீ சொல்வது மிகச் சரியாகத்தான் இருக்கிறது. அதில் என் மொழிகளுக்கு முரணாக ஒன்றுமே இல்லை. இதில் சொல்லியிருப்பதற்கு



முரணாக நான் சொல்வதற்கும் ஒன்றுமில்லை. இதை யார் பாடியிருந்தாலும் அவர் ஒரு ஞானியாகத்தான் இருக்க வேண்டும்.

ஆனால் வெறுமனே அதைத் திருப்பித் திருப்பிச் சொல்லிக் கொண்டிருந்து விடாதே. திருப்பிச் சொல்லச் சொல்ல அழகாக இருக்கிறது. பாடும்போது இனிமையாக இருக்கிறது. அதை அனுபவபூர்வமாக்கு. உன்னுடைய வாழ்வின் சுவையாகிப் போகட்டும். உன்னுடைய ரத்தத்திலும் எலும்புகளிலும் எலும்பு மஜ்ஜையிலும் கரைந்து விடட்டும். கண்ணுக்குத் தெரியாத ஒளியாக உன்னை அது சூழ்ந்திருக்கட்டும்.

சும்மா அதைத் திருப்பித் திருப்பிச் சொல்லிக் கொண்டிருந்து விடாதே. அது பிரமாதமாக இருப்பதே அதனுடைய ஆபத்து. உன்னை மயக்கி, மனமயக்கத்துக்கு ஆளாக்கி, வாழ்க்கை முழுக்க அதைத் திருப்பித் திருப்பிச் சொல்லிக் கொண்டே இருக்க வைத்துவிடும். எவ்வளவு முறை திருப்பித் திருப்பிச் சொல்கிறாயோ அந்த அளவுக்கு அதன் அழகு கூடிக் கொண்டே இருக்கும். பழைய பாடல் அல்லவா? அதற்கு சக்தி அதிகம். பல நிலைகளில் அதற்குப் பொருள் இருக்கிறது.

அதனுடைய மொழியையோ அதிலிருக்கும் தத்துவத்தையோ ஆராயப் புகுந்து விடாதே. அது ஒரு பிரார்த்தனை. பிரார்த்தனை சொல்லப்படுவதன்று. அனுபவிக்க வேண்டியது. பிரார்த்தனை படிக்கப்படுவதன்று. வாழப்பட வேண்டியது. அதை வாழ்ந்து பார்.

உண்மைதான். ''இப்போது நிலைத்திருப்பது விசுவாசமும் நம்பிக்கையும் அன்பும் ஆகிய மூன்றும், அதிலும் மிகப் பெரியது அன்பே.''



அன்பைப் பற்றி நினைத்துப் பார்க்கலாம். அன்பைப் பற்றிப் பிரமாதமான கனவுகள் காணலாம். ஆனால் அதனால் எந்தப் பயனும் இருப்பதில்லை. எது பயனுள்ளது என்கிறாயா? நீயே அன்பாகிப் போவதுதான். அன்பு உன்னுடைய அடிப்படையாகி விட வேண்டும். பிறவற்றையெல்லாம் அன்புக்காகத் தியாகம் செய்து விட வேண்டும். மற்றவை எல்லாம் உன்னுடைய அன்புடை வாழ்வின் பாகங்களாகிவிட வேண்டும். அப்போதுதான் உன்னுடைய பிரார்த்தனை உண்மையான பிரார்த்தனையாகும். அது கிறிஸ்துவப் பிரார்த்தனையாக மட்டும் இருக்காது. புதிய ஏற்பாட்டில் இருப்பதாக இருக்காது. உன்னுடைய இதயத்தின் ஒரு பகுதியாகிவிடும். நீ அதை மூச்சுக் காற்றாக உள்ளே வாங்கிக் கொள்வாய். உனக்கு அருகில் யார் வந்தாலும் அதனைக் காண முடியும். ஒவ்வொருவர் வாழ்விலும் சிறிது ஒளியைத் தருவதாக இருக்கும். நீ அதை வாழ வேண்டும். அவ்வளவுதான்.

சாத்திரங்களைச் சாதகம் செய்தால்தான் அவற்றைப் புரிந்து கொள்ள முடியும். ஆனால் எல்லோரும் அதற்கு நேர்மாறாகத்தான் நடந்து கொள்கிறார்கள். சாத்திரங்களைப் படித்துப் புரிந்து கொள்ள முயல்கிறார்கள். அறிவார்த்த மாகப் புரிந்து கொள்வதில் பெரிய சிரமம் ஏதும் இல்லை. அவற்றைத் திருப்பித் திருப்பிச் சொல்வதில் மக்கள் சமர்த்தர்களாகி விடுகிறார்கள். அதோடு நின்று விடுகிறார்கள். கிளிப்பிள்ளைகளாக இருந்து விடுகிறார்கள்.

எதைப் புரிந்து கொள்ள முடியுமென்கிறாய்? அறிவார்த்தமாக நீ எதைப் புரிந்து கொண்டாலும் சரியாக இருக்காது. ஏனெனில் அப்போது உன்னுடைய மனதின் பிரதிபலிப்பாகத்தான் உன்னுடைய புரிதல் இருக்கும். அந்த



வார்த்தைகளைச் சொன்னவர் சொன்னபோது இருந்த நிலையில் உன் மனம் இருக்காது.

ஓய்வு பெற்ற ஒரு பண்ணைக்காரர் தன் பண்ணையை விற்றுவிட்டு நியூயார்க் நகருக்கு வந்தார். மகிழ்ச்சியாகத் தன் நேரத்தைக் கழிக்க, சுற்றிப் பார்க்க என்று வந்தவர் ஓர் ஓட்டலில் அறை எடுத்துக் தங்கினார்.

மாடிக்குப் போன பின் சௌகரியமாகப் படுக்கையில் சாய்ந்து கொண்டார். சாவகாசமாக இருந்த போது அறைக் கதவு மிக மெல்லத் திறக்கக் கண்டார். உள்ளே வந்தது மெல்லிய ஆடை உடுத்திய வளைவு நெளிவு மிக்க அழகு கொண்ட பெண்ணொருத்தி.

வயதானவரைப் பார்த்தவுடன், ''மன்னிக்க வேண்டும். தவறான அறைக்குள் நுழைந்து விட்டேன் போலிருக்கிறது,'' என்றாள்.

''இல்லை,'' என்று அவளைத் திருத்தினார் அந்த வயதானவர். ''சரியான அறைக்குள்தான் வந்திருக்கிறாய். ஆனால் நாற்பது வருடங்கள் தாமதித்து வந்திருக்கிறாய்,'' என்றார்.

வியாக்கியானம் எப்போதும் உன்னுடையதாகத்தான் இருக்கும். இயேசுவைப் படி. புத்தரைப் படி. வியாக்கியானம் தருவது யார்? நீதானே. உன்னுடைய புரிதல் என்பது என்ன? என்ன விளக்கத்தைக் காண்கிறாய்? அந்தப் பிரமாதமான வார்த்தைகள் பிரமாதமாகத்தான் இருந்து விடும். பிரமாதம், ஆனால் ஒன்றும் இல்லாதவையாக.

நல்ல கவிதைதான். ஆனால் கவிதை உன்னை விடுவிக்க முடியாது. உன்னுடைய அனுபவமாக மாறிப் போகும் வரை பயனில்லாததாகத்தான் இருக்கும். நீ



சாத்திரங்களுக்கு ஒரு சாட்சியாகும் வரைக்கும் அப்படித்தான் இருக்கும்.

தன் கணவரை ஏழாவது முறையாக எவளோ ஒருத்தியோடு இருக்கும்போது கையும் களவுமாகப் பிடித்து விட்ட மனைவி இரைகிறாள்: ''திரும்ப திரும்பத் துரோகம் செய்து நீ எத்தனை அயோக்கியன் என்பதைக் காட்டுகிறாய்.''

அவனோ, ''இல்லை இல்லை. அதற்கு முற்றிலும் எதிராக விசுவாசத்தோடு இருக்க முடியாத அளவுக்கு நல்லவனாக இருப்பதைத்தான் இது காட்டுகிறது,'' என்றான்.

உன்னுடைய வியாக்கியானங்கள் உன்னைத்தான் எப்போதும் பிரதிபலிக்கும். கண்ணாடியில் உன் முகம்தானே உனக்குத் தெரியப் போகிறது? உன்னைத்தானே நீ பார்த்துக் கொள்ளப் போகிறாய்? கண்ணாடியைப் பார்க்க முடியாமல் உன் முகத்தைக் தானே பார்க்க முடிகிறது?

உன்னுடைய முகத்தை, உன்னுடைய தலையை இழந்து விடும்போதுதான் கண்ணாடியைப் பார்க்க முடியும். எதுவும் யாரும் இல்லாமல் போய்விடும்போது கண்ணாடியைப் பார்ப்பாய். கண்ணாடி பிரதிபலிப்பதைப் பார்ப்பாய். உன்னுடைய பிரதிபலிப்பாகக் கண்ணாடி இருக்காது. அதிலே நீயிருக்க மாட்டாய். நீ இல்லாத வனாகிப் போகுமுன் கண்ணாடிக்கு முன் நின்று பார்த்துக் கொள்வதில் எந்தப் பயனும் இல்லை. அதைத்தான் எல்லோரும் செய்து கொண்டேயிருக்கிறார்கள். பைபிளைப் படிக்கிறார்கள். குரானைப் படிக்கிறார்கள். தம்மபதத்தைப் படிக்கிறார்கள். பார்ப்பது என்னவோ அவரவர்களைத்தான்.

கவலையோடு ஒரு தாய் வாலிபப் பெண்ணிடம் பாலியல் ஒழுக்கம் பற்றிப் பேசிக் கொண்டிருந்தாள்.



''சரிதான், ஒருவன் உன்னை அழைத்துப் போகும்போது உனக்கும் ஆசை வரும்தான். அப்படி ஆசைப்படும்போது இந்த முக்கியமான கேள்வியை உன்னிடமே நீ கேட்டுக் கொள். ஒரு மணி நேரத்துச் சுகத்துக்காக வாழ்க்கை முழுக்கத் தலைகுனிய வேண்டுமா?''

''ஆனால் அம்மா. எப்படி ஒரு மணி நேரத்துக்குத் தாக்குப் பிடிப்பது?'' என்று மகள் கேட்டாளாம்.

ஒன்றை எப்போதும் நினைவில் வைத்துக் கொள். இயேசு, மோசஸ், ஸாரதூஸ்ட்ரா என்று யாரையும் புரிந்து கொள்ள முடியாது. உன்னுடைய முகம் அதில் முந்தி வந்து தெரியும்.

புதிதாய்க் கல்யாணம் செய்து கொண்டவன் ஒருவன் தன் டாக்டரிடம் மணவாழ்க்கை பற்றிச் சொல்லிக் கொண்டிருந்தான். முதல் முறை தன் மனைவியிடம் போகும்போது பிரமாதமாக இருக்கிறதாம். அதுவே இரண்டாம் தடவை எனும்போது வியர்த்து வெல வெலத்துப் போகிறானாம்.

டாக்டர் அவன் மனைவியை பார்த்துப் பேச வேண்டும் என்றார், ''முதல் முறை பிரமாதம். அடுத்த தடவை எனும்போது வியர்த்து வெலவெலத்துப் போவது விநோதமாயில்லையா?'' என்று அவளிடம் கேட்டார்.

''இதிலென்ன விநோதம்? முதல் முறை ஜனவரியில். இரண்டாவது தடவை ஜூலையில் தானே?'' என்றாளாம்.

புத்தர்களது வார்த்தைகளுக்கு நீங்கள் நேராகப் போய்ச் சேர்ந்துவிடமுடியாது. முதலில் உங்களுக்குள்ளே போக



வேண்டும். உன்னையே நீ எதிர்கொண்டு புரிந்து கொள்ளும் போது புத்தர்கள் அனைவரையும் புரிந்து கொள்ளச் சித்தமாகி விடுகிறாய்.

இன்னொன்றும் நடக்க ஆரம்பித்துவிடுகிறது. இயேசு, புத்தர், மோசஸ், முகம்மது என்று எல்லோருமே ஒன்றையே சொல்கிறார்கள்.

முடிவான சத்தியத்துக்குச் சாட்சியாக மாறும் வரை புத்தர் சொல்வது ஒன்றாகவும் இயேசு சொல்வது இன்னொன்றாகவும் ஒன்றுக்கொன்று முரணாகவும் தெரியும். இந்து மதம் சமணமதத்துக்கு விரோதமானதாகத் தெரியும். சமணம் இஸ்லாத்துக்கு எதிரானதாகத் தெரியும். சத்தியத்துக்குச் சாட்சியாகும் வரை நீங்கள் இந்த முன்னூறு மதங்களை நம்புகிறவர்களாக, எப்போதும் சச்சரவிடுகிறவர் களாக, வெறுத்துச் சண்டையிடுபவர்களாகத் தான் இருப்பீர்கள். உன்னுடைய சத்தியத்தை நீ பார்க்கும் அந்த நாள், இந்த முன்னூறு மதங்கள் மறைந்து போகும். அப்படியே ஆவியாகப் போய்விடும்.

ஒரு முறை ஓர் கிறிஸ்துவத் தொண்டர் ஒரு ஸென் குருவைப் பார்க்கப் போனார். பிரேமார்த்தாவைப் போன்றவராகத்தான் அந்தக் கிறிஸ்துவர் இருந்தார். ஸென் குருவை கிறிஸ்துவராக்க வேண்டும் என்பதற்காக மலைப் பிரசங்கத்தைக் கொண்டு போயிருந்தார்.

முதல் ஓரிரு வாக்கியங்களைப் படித்தவுடனே, ''நிறுத்து, நிறுத்து. அதை சொன்னவர் யாராக இருந்தாலும் அவர் பெரிய ஞானியாகத்தான் இருக்க வேண்டும்,'' என்றார் அந்த ஸென் குரு.

ஆச்சரியப்பட்டுப் போன கிறிஸ்துவர், ''இதைச் சொன்னது இயேசுவாயிற்றே,'' என்றார்.



''புத்தருடைய பெயர் என்னவாகவோ இருந்து விட்டுப் போகட்டும். இதைச் சொன்னவர் ஒரு புத்தர். அவர் முக்தியடைந்தவர்,'' என்றார்.

இதை எதற்கு உங்களிடம் சொல்கிறேன் என்றால் எனக்கும்தான் தெரியும். சுவைத்துப் பார்த்தால் உனக்கும் தெரிந்து விடும். எந்த வடிவத்தில் சத்தியம் உன்னிடம் வந்து சேர்ந்தாலும் அதைத் தெரிந்து கொள்வாய். ஆனால் முதலில் சத்தியத்துக்குச் சாட்சியாகிவிட வேண்டும்.

ஐந்தாவது வினா

அன்புக்குரிய குருவே,

ஒரே ஓர் அடிதானா?

**திகம்பரா,** ஆமாம், உண்மையில் ஒரு முழு அடி கூட எடுத்து வைக்க வேண்டியதில்லை. ஏனென்றால் நாம் எங்கேயும் போகப் போவதில்லையே. நாம் ஏற்கெனவே கடவுளோடு இருக்கிறோம். ஓர் அடி என்று நான் சொல்வது கூட உனக்காகத்தான். ஓரடி கூட எடுத்து வைக்க வேண்டியதில்லை என்று நான் சொன்னால் குழம்பித்தான் போய்விடுவாய்.

ஒரே ஓர் அடி என்று சொல்லும்போது செய்வதற்கு ஒரு காரியம் இருக்கிறது என்ற நினைப்பு வருமல்லவா? உனக்குத்தான் செயல் பாற்பட்ட மொழி மட்டுமே புரிகிறதே. நீ செய்கிறவன். ஒன்றும் செய்ய வேண்டிய தில்லை. ஓரடி கூட எடுத்து வைக்க வேண்டியதில்லை என்று சொன்னால் உனக்குத் தலையும் புரியாது வாலும் புரியாது.



உண்மை என்னவென்றால் ஓர் அடி கூட எடுத்து வைக்க வேண்டியதில்லை. ஒன்றும் செய்யாமல் சும்மா உட்கார்ந்திருந்தாலே வசந்தம் வரும். புல் தானாகத் துளிர்விடும். ஆனால் அது மிக அதிகமாக உனக்குத் தோன்றலாம். செயல்களின் பாற்பட்ட உன் மனது அதை அலட்சியப்படுத்தலாம். அல்லது அதை முட்டாள்தனம் என்று எடுத்துக் கொள்ளலாம். அது எப்படி, ஒன்றும் செய்யாமலேயே கடவுளை அடைவது? மனம் புரிந்து கொள்ளக் கூடிய வகையில் ஒரு குறுக்கு வழி பற்றிச் சொல்ல வேண்டியிருக்கிறது. அதனால்தான் ஓரடி என்கிறேன். அதுதான் மிகவும் குறைந்த தூரம். அது கூட இல்லாமல் ஒன்றும் செய்ய முடியாது.

ஒரே ஓர் அடி எதையும் செய்வதென்பது அத்தியாவசியமானது அல்ல என்று புரிய வைக்கத்தான் அதைச் சொன்னது. இருத்தலை அடையச் செயலைச் செய்வது அவசியமே இல்லை. ஒரே ஓர் அடிதான் என்று நிச்சயமாக நீ நம்ப ஆரம்பிக்கும் போது, உன் காதுகளில் ஓர் அடி கூடத் தேவையில்லை என்று கிசுகிசுத்துச் சொல்லிவிடுவேன். ஏற்கெனவே அங்கிருப்பதாகச் சொல்லிவிடுவேன்.

ரபியா என்ற ஒரு பெண் ஸூஃபி சித்தர் வழக்கமாக சந்தைக்குப் போகும் வழியில் போய்க் கொண்டிருந்தார். ஒவ்வொரு நாளும் சந்தைக்குப் போய் தான் தெரிந்து கொண்ட சத்தியத்தை உரத்துச் சொல்லிக் கொண்டிருப்பார்.

வெகு நாட்களாக மசூதிக்கு முன் ஹாசன் என்ற ஒரு ஞானி உட்கார்ந்து கொண்டு பிரார்த்தித்துக் கொண்டு இருப்பதை ரபியா பார்த்திருக்கிறார். ''கடவுளே, கதவைத் திறந்து விடு. கதவைத் திறந்தென்னை உள்ளே விடு,'' என்று மட்டுமே சொல்லிக் கொண்டிருப்பார்.



ஒரு நாள் அதை மேலும் பொறுத்துக் கொள்ள ரபியாவுக்கு முடியவில்லை. ஹாசன் கண்களில் நீர் வழிய, ''கதவைத் திறந்து விடு. உள்ளே வரவிடு. ஏன் என் வார்த்தைகளைக் கேட்டுக் கொள்ள மறுக்கிறாய்? ஏன் என்னுடைய பிரார்த்தனையைக் கேட்டு கொள்ள மறுக்கிறாய்?'' என்று கதறிக் கொண்டிருந்தார்.

அவரைப் பார்த்துத் தினமும் ஏளனமாகச் சிரிப்பதோடு நிறுத்திக் கொண்டிருந்த ரபியாவுக்கு அன்று தாள முடியாமல் போய்விட்டது. அவருக்கு அருகில் போய்த் தோளைப் பிடித்துக் குலுக்கி, ''கதவு திறந்துதான் இருக்கிறது. இந்த முட்டாள்தனமாக கதறலை நிறுத்து. உண்மையில் நீ உள்ளேதான் இருக்கிறாய்.'' என்றார்.

ரபியாவை அவர் பார்த்த அந்தக் கணத்தில் சத்தியம் வெளிப்பட்டது. அவருடைய கண்களைப் பார்த்துக் கொண்டே கால்களில் விழுந்தார். ''சரியான சமயத்துக்கு வந்து சேர்ந்தீர்கள். இல்லையானால் வாழ்க்கை முழுக்கக் கதறிக் கொண்டே இருந்திருப்பேன். பல வருடங்களாக நானும் கதறிக் கொண்டிருந்துவிட்டேன். நீங்களும் தினமும் பார்த்தும் போய்க் கொண்டேயிருந்து விட்டீர்களே,'' என்றார்.

ரபியாவோ, ''சரிதான். ஆனால் சத்தியத்தைச் சரியான கால இடத்தில்தான் சொல்ல முடியும். சரியாக முதிர்ந்த ஒரு தருணத்துக்காகக் காத்திருந்தேன். இன்று அத்தருணம் வந்து விட்டது. நேற்று நான் சொல்லியிருந்தால் எரிச்சல்தான் பட்டிருப்பாய். கோபம் கூட வந்திருக்கும். என்னுடைய பிரார்த்தனையைக் கெடுத்துவிட்டாய் என்று குற்றம் சாட்டியிருப்பாய். பிரார்த்தனை செய்யும் போது குறுக்கிடுவது சரியல்லதான்,'' என்றார்.



ஓர் அரசனுக்குக் கூட ஒரு பிச்சைக்காரனின் பிரார்த்தனையில் குறுக்கிட அனுமதியில்லை. ஒரு கிரிமினல் அல்லது ஒரு கொலைகாரன் பிரார்த்தித்துக் கொண்டிருந்தால், அரேபிய நாடுகளில் அவனைக் கைது செய்யப் போலீஸ்காரர் பிரார்த்தனை முடியும் வரை காத்திருக்க வேண்டும்.

ரபியா ஹாசனிடம், ''உன்னிடம் சொல்ல வேண்டும் என்றுதான் இருந்தேன். ஹாசன், முட்டாள்தானமாக இருக்காதே. பார், கதவு திறந்துதானிருக்கிறது. உண்மையில் நீ ஏற்கெனவே உள்ளேதான் இருக்கிறாய் என்று சொல்லத் தான் இருந்தேன். ஆனால் சரியான தருணத்துக்காகக் காத்திருக்க வேண்டியிருந்தது.''

திகம்பரா, ஒரே ஓர் அடி என்கிறேன். அதைக் கூட நம்ப முடியவில்லை உன்னால். அதனால்தான் இந்தக் கேள்வி.

''அன்புக்குரிய குருவே, ஒரே ஓர் அடிதானா?'' என்று கேட்கிறாய்.

ஓரடி கூட இல்லை திகம்பரா. ஆனால் உனக்கு இன்னும் அதற்கான தருணம் வரவில்லை. வரும்போது உன் காதுக்குள், ''நீ ஏற்கெனவே உள்ளேதான் இருக்கிறாய். ஓரடி கூடத் தேவையில்லை,'' என்று கிசுகிசுத்துச் சொல்லக் கேட்பாய். நாமென்ன வெளியே போகிறோமா என்ன? வெளியே போகத்தான் அடியெடுத்து வைக்க வேண்டும்.

வெகு தூரத்துக்குப் போய்விட்டதாகக் கனவு காண்பவனைப் போலத்தான் இதுவும். திரும்பி வர வெகு தூரம் பயணம் செய்ய வேண்டுமா என்ன? ஏற்கெனவே வீட்டுக்குள்தான் இருக்கிறான். தன்னுடைய



வீட்டுக்குள்ளேதான் தூங்கிக் கொண்டிருக்கிறான். ஆனால் கனவில் டிம்பக்டுவில் இருக்கலாம். தேவையானதெல்லாம் அவனை உசுப்பி எழுப்பிவிட வேண்டியதுதான்.

ரபியா ஹாசனைக் குலுக்கி உணர வைத்ததைப் போல நானும் ஒரு நாள் உன்னை உலுக்கிப் பார்க்க வைக்கப் போகிறேன். கடுகடுவென்று குளிர்ந்த நீரை உன்மேல் கொட்ட வேண்டியிருக்கிறது. ஜில்லிப்பின் அதிர்ச்சியில் விழித்துக் கொள்ளப் போகிறாய். டிம்பக்டுவில் இருக்கிறேனே. எப்படி வீட்டுக்குப் போவது என்று என்னைக் கேட்கப் போகிறாயா என்ன? வேண்டியதில்லை. உன்னுடைய வீட்டில் நீ தூங்கிப் போனாய். டிம்பக்டு பற்றிக் கனவு கண்டிருந்திருக்கிறாய். அங்கே நீ போகவே இல்லை.

கடவுளை விட்டு விட்டு நீ எங்கேயும் போகவில்லை. அப்படிப் போவதும் முடியாத காரியம்தான். கடவுள்தான் எங்கேயும் இருக்கிறாரே. அவரை விட்டு நீங்கிப் போவதென்பது எப்படி முடியுமென்கிறாய்? கடவுள் இல்லாத இடம் ஏது? நாம் எப்போதும் அவருள்ளும் அவர் எப்போதும் நம்முள்ளும் இருப்பதுதான் மெய். ஆனால் அதற்கு ஒரு விழிப்பு வேண்டும்.

ஓர் அடி கூடத் தேவையில்லை. சத்தியத்துக்கு அருகில் போகத்தான் அது. மெல்ல, மெல்ல உன்னைத் தயார்படுத்த வேண்டியிருக்கிறது. ஆயிரம் அடிகளை ஓர் அடியாகக் குறைக்க வேண்டியிருக்கிறது. கடைசியில் அந்த ஓர் அடியைக் கூட உன்னிடமிருந்து பிரித்துவிடுவேன்.

ஆனால் அதற்குச் சரியான தருணம் தேவைப்படுகிறது. முடிந்த சத்தியத்தைச் சரியான தருணத்தில்தான் வெளிப்படுத்த முடியும்.



அந்தக் கணமும் வரத்தான் போகிறது.

அதை வரவேற்கத் தயாராக மட்டும் இருந்து விடு, போதும்.

இன்றைக்கு இது போதுமே.





மூடன் அக்கறையின்றி இருக்கிறான்.
சித்தருக்கோ தன் கவனிப்பின் மீது கவனம்.
அதுவே அவருடைய உயர்ந்த பொக்கிஷம்.

ஆசைக்கு அவர் ஆட்படுவதில்லை.
தியானிக்கிறார்.
தன் வைராக்கியத்தின் பலத்தால்
உண்மையான மகிழ்வைக் காண்கிறார்.

ஆசையை அவர் வென்றெடுக்கிறார்.
ஞானக் கோபுரத்தின் உயரத்திலிருந்து
உணர்வு கலவாத பார்வையோடு
துயருறும் கூட்டத்தைப் பார்க்கிறார்.
மலையுச்சியிலிருந்து
கீழே வசித்திருப்போரைக் காண்கிறார்.

பிரக்ஞையற்றோரிடையே பிரக்ஞையோடு,
பிறர் கனவில் ஆழ்ந்திருக்கத் தான்
விழிப்போடு,
களத்தில் முன் நிற்கிறார்,
பந்தயக் குதிரையின் வேகத்தோடு.



கவனித்திருந்தே இந்திரன்
தேவர்களின் அரசனானான்.
கவனித்திருப்பதுதான் எவ்வளவு
பிரமாதம்.
தூங்கிக் கிடப்பதுதான் எவ்வளவு
முட்டாள்தனம்.

தன்பிரக்ஞைக்குக் காவலாயிருக்கும்,
தன் எண்ணங்கள் அலைப்புறுவதைக்
கண்டு பயக்கும் பிக்குவே
தன் எச்சரிக்கையெனும் நெருப்பில்
ஒவ்வொரு தளையினூடும்
புடம் போட்டுத் தேர்கிறார்.

தன் பிரக்ஞைக்குக் காவலாயிருந்தது,
தன் குழப்பம் பற்றிய பயத்தோடிருக்கும்
பிக்குவுக்குத் தோல்வியில்லை.
அவரே நிம்மதிக்கான பாதையைக்
கண்டுகொண்டவர்.

**வாழ்க்கைக்கு** முப்பரிமாணம். எதையும் தேர்ந்து எடுத்துக் கொள்ள மனிதனுக்குச் சுதந்திரம் உண்டு. மனிதனின் இச்சுதந்திரமே ஒரு பெரும் வரமும் மோசமான ஒரு சாபமும்தான். உயர்வடைய இருக்கும் சுதந்திரம் அதே அளவுக்கு நிலைதாழவும் இருக்கிறதே. அறியாமையின் இருட்டா அல்லது அறிவின் ஒளியா என்பதை அவனே தேர்ந்தெடுத்துக் கொள்ளலாம்.

மனிதனுக்கு மட்டுமே இந்தச் சுதந்திரம் இருக்கிறது. பிறவற்றின் வாழ்க்கை ஏற்கெனவே நிர்ணயிக்கப்பட்டது. ஏற்கெனவே நிர்ணயிக்கப்பட்ட வாழ்வு என்பதாலேயே



அதில் நெறிதவறிப்போக வழியிருப்பதில்லை. ஒரு வகையில் அதுவே ஒரு அழகு. ஆனால் ஏற்கெனவே நிர்ணயிக்கப்பட்டது என்பதால் அது இயந்திரத்தனமாகப் போய்விடுகிறது. அதுவே அதன் அசிங்கம்.

சரியாகச் சொல்லப்போனால் மனிதன் இன்னும் ஓர் உயிருரு ஆகவில்லை. அவன் ஆகிக் கொண்டிருக்கிறான், அவ்வளவே. உயிருரு ஆவதற்கான பாதையில் இருக்கிறான். தேடிக் கொண்டிருக்கிறான். தட்டுத் தடுமாறித் துழாவிக் கொண்டிருக்கிறான். அவன் இன்னும் ஸ்படிகமாகவில்லை.

அதனால் தான் யார் என்பது அவனுக்கு இன்னும் தெரிந்தபாடில்லை. இன்னும் அவன் அவனாக ஆகவில்லையே, அதனால்தான். இன்னும் தானாகாத ஒருவன் தன்னைப் புரிந்து கொள்வது எப்படி? தெரிந்து கொள்வதற்கு முன் அவன் ஓர் உயிருரு ஆகவேண்டியிருக்கிறது. உயிருரு ஆவதென்பது சரியாகத் தேர்வு செய்யும்போதுதான் சாத்தியமாகும். அப்படித் தேர்வு செய்வதும் தான் தேர்வு செய்கிறோம் என்பதை நன்கு உணர்ந்து தேர்வு செய்வதாக இருக்க வேண்டும்.

மனிதன் ஒரு செயல்முறையாக இருக்கிறான் என்று சாத்ரே சொன்னது சரிதான். அவன் தன்னைத் தன் உழைப்பின் பேரில்தான் ஆக்கிக் கொள்ள முடியும். பிறக்கும் போது ஒரு சந்தர்ப்பமாக, ஒரு சாத்தியமாக அன்றி ஓர் முடிந்த உயிருருவாக அவன் இருப்பதில்லை என்றும் சாத்ரே சொல்வார். அதுவும் சரிதான்.

மனிதன் ஒரு நடப்பு மெய்ம்மை ஆக வேண்டும். அப்படி ஆவதற்கான சந்தர்ப்பத்தைத் தவறவிடுவதற்குச் சாத்தியங்கள் அதிகம். லட்சக் கணக்கானோர் அப்படித்



தமது சந்தர்ப்பங்களை இழந்துவிட்டவர்கள். வெகு சிலரே தம் உயிருருவைக் காண வருகிறார்கள். அப்படித் தன் உயிருருவைக் கண்டு கொண்டவரே புத்தர். இதற்கு அடிப்படைத் தேவை வாழ்வை பிரக்ஞையோடு தேர்வு செய்து கொள்வது. எப்படியும் தேர்வுகளைச் செய்ய வேண்டியிருக்கிறது. தெரிந்தோ தெரியாமலோ வாழ்வை ஒவ்வொருவரும் தேர்வு செய்து கொள்ள வேண்டியிருக்கிறது.

மனிதனுக்கு அடிப்படைச் சுதந்திரம் என்பது இப்படிப் பார்த்தால் இல்லை என்றுதான் சொல்லவேண்டும். தேர்வு செய்யமாட்டேன் என்று விட்டேற்றியாக இருக்கச் சுதந்திரம் இல்லை. தேர்வு செய்வதில்லை என்றிருப்பதும் ஒரு வகைத் தேர்வாகத்தான் ஆகிவிடுகிறது.

தேர்வு செய்யாமல் போய்விடுவதாலேயே லட்சக் கணக்கானோர் தம் உயிருருவைத் தெரிந்து கொள்ளாமல் போய்விடுகிறார்கள்.

லட்சக்கணக்கானோர் தம் உயிருருவைக் கண்டு பிடிக்கத் தவறிப் போவதற்குக் காரணம் தெரிவு செய்ய முடியாமல் போய்விடுவதுதான். வெறுமனே காத்துக் கிடக்கிறார்கள். ஏதோ ஒன்று நடக்கப் போகிறது என்று நம்பிக் கொண்டு இருந்துவிடுகிறார்கள். எதுவும் தானாக நடக்கப்போதில்லை. உனக்கென உயர்ந்த ஒன்று நடக்க வேண்டுமென்றால் ஒரு நிகழிடத்தை ஆக்கித் தர வேண்டும். ஒரு சூழலை உருவாக்கித் தர வேண்டும்.

உலகில் இருவகைத் தத்துவார்த்த வாதிகள் இருக்கிறார்கள். ஒரு வகையினர் மனிதர் ஒரு சாராம்சமாகப் பிறக்கிறார்கள் என்று நம்புகிறவர்கள். இவர்களை எஸ்ஸென்ஷியலிஸ்டுகள் என்பார்கள். மனிதன் ஏற்கெனவே ஆயத்தமானவனாகப் பிறந்திருக்கிறான் என்று



,இந்தத் தத்துவம் எடுத்துக் கொள்கிறது. இப்படியாக எண்ணம் விதி வழி நம்பிக்கை கொண்டது.

அடுத்த வகையினர் இருத்தலியலாளர்கள். இவர்கள் மனிதன் ஒரு சாராம்சமாகப் பிறப்பதில்லை என்பார்கள். ஓர் உயிருருவாகவே பிறக்கிறான் என்பார்கள்.

என்ன வித்தியாசம் என்கிறாயா?

சாராம்சம் ஏற்கெனவே நிர்ணயித்து நிச்சயமாக்கப் பட்டதாகிவிடும். அதைஒரு ப்ளூபிரிண்டாக உன்னோடு வாழ்வுக்குக் கொண்டு வருகிறாய் என்றாகிவிடும். நீ ஏற்கெனவே இப்படியிப்படித்தான் என்று நிர்ணயிக்கப் பட்டிருக்கிறாய் என்றால், அதை அப்படியப்படி விரித்துப் பார்த்துக் கொள்ள வேண்டியது தான். உன்னை நீயாக ஆக்கிக் கொள்ள அதில் வழியிருப்பதில்லை. இதில் என்ன ஆக்கம் இருக்கிறதென்கிறாய்? மனிதன் ஒரு இயந்திரமாகக் குறைந்து போய்விடுவதுதான் நடக்கும்.

இருத்தலியலிலோ மனிதன் ஓர் இருப்பாக, ஓர் உயிருருவாகப் பிறக்கிறான் என்ற நம்பிக்கை இருக்கிறது. அவரவருடைய சாராம்சத்தை அவரவரே ஆக்கிக் கொள்ள வேண்டியிருக்கிறது. உனக்கு நீயே ஓர் உயிருருத் தர வேண்டியிருக்கிறது. உன்னுடைய இருப்புக்கு நீயே கர்ப்பப் பையாக இருக்க வேண்டியிருக்கிறது. உன்னை நீயே பிரசவித்துக் கொள்ள வேண்டியிருக்கிறது. உடலெடுத்துப் பிறப்பது உண்மையான பிறப்பல்ல. நீ மறுபடி பிறப்பெடுக்க வேண்டியிருக்கிறது.

இயேசு நிகோடெமெஸிடம், ''நீ மறுபடி பிறந்து வரவில்லையெனில் என் கடவுளின் ராச்சியத்துக்குள் நுழைய முடியாது,'' என்கிறார். என்ன அர்த்தத்தில் சொல்கிறார்? நிகோடெமெஸ் உடலளவில் சாக



வேண்டுமா? இல்லை. இயேசு சொல்வது வேறொன்று. சுயம் இல்லாமல் போகச் சாகவேண்டும். தனக்கென ஒரு குணாதிசயம் பாற்பட்டிருப்பதிலிருந்து செத்துப் போக வேண்டும். கடந்தகாலமாக இருப்பதிலிருந்து நீங்கிப் போக வேண்டும். தன் புத்தியை விட்டு விலகிப் போக வேண்டும். மனம் இறக்கும்போதுதான் இருக்கும் ஒருவராகப் பிறப்பெடுக்க முடியும்.

கீழ்த்திசையில் புத்தர்களை இருமுறை பிறந்தவர்கள், 'த்விஜ்,' என்கிறோம். பிறரெல்லாம் ஒரு பிறப்பினர். புத்தர் இருமுறை பிறந்தவர். முதல் பிறவி பெற்றோரின் வெகுமதி. இரண்டாவது வெகுமதி நீ உனக்கே கொடுத்துக் கொள்வது.

இந்த முப்பரிமாணங்களில் ஒன்றை நீயே தேர்ந் தெடுத்துக் கொள்ளலாம். ஒன்றைத் தேர்ந்தெடுக்கும்போது ஒரு விதமான ஒருங்கிணைவைப் பெறுகிறாய். ஒன்றை மட்டுமே தேர்ந்தெடுக்கும் போது அது முழுமையானதல்ல என்பதால் நீயும் முழுமையடைய முடியாது.

முதல் பரிமாணம் அறிவியல் பரிமாணம். புறநிலைப் பொருள் வயப்பட்டது. உன்னிடமிருந்து பிறதானது. இரண்டாவது பரிமாணம் அழகியல் பரிமாணம். கவிதை, இசை, ஓவியம், சிற்பம் என்று கற்பனை வடிக்கும் உலகைச் சார்ந்தது.

மூன்றாவது பரிமாணம் சமயப் பரிமாணம். தன்னிலைப்பாடுடையது. அகவயப்பட்டது.

அறிவியலும் சமயமும் இரு துருவங்கள். அறிவியல் புறநோக்குடையது. சமயம் அகநோக்குடையது. இவை இரண்டுக்கும் இடைப்பட்டதே அழகியல் உலகம். இதுவுமில்லாமல் அதுவுமில்லாமல் இரண்டுமாக



இருப்பது. கலைஞனின் உலகமான அறிவியல் உலகம் ஒரு வகையில் புறவயப்பட்டது. ஒரு வகையில் தான். ஓவியன் வரைகிறான். ஓவியம் என்ற பொருள் இருக்க வருகிறது. என்றாலும் ஒரு பொருளாக ஆவதற்கு முன் அது அவனுடைய அகம் பற்றியதாயிருந்தது. ஓர் ஓவியத்தை வரையுமுன் அந்த ஓவியத்தைத் தனக்குள் அவன் படைக்க வேண்டியிருக்கிறது.

ஒரு பாடலைப் பாடுமுன் கவிஞன் தன் உள்ளிருப்பின் உள்ளறைகளில் அதைப் பாடிப் பார்த்துக் கொள்கிறான். உள்ளே பாடிப் பார்த்துக் கொண்டானபின் வெளியே சப்த அலைகளாக வடிவம் தருகிறான்.

பொருள்களைப் படைப்பது கலை என்ற அளவில் அது அறிவியலாகிறது. எதைக் கலை படைக்கிறதோ அதை முதலில் கலைஞன் தனக்குள் தரிசித்துக் கொள்ள வேண்டியிருக்கிறது. கலையானது சமயத்துக்கும் அறிவியலுக்கும் இடையே ஒரு பாலம். சமயப் பரிபூரணமான அகத்திருப்பல். உனக்குற்றே நடுநாயகமாக இருப்பதை நோக்கித் திருப்புவது.

இவைதான் முப்பரிமாணங்கள்.

விஞ்ஞானியாகி அழகியலையும் சமயத்தையும் விட்டு விடும்போது, நீ ஒற்றைப் பரிமாணம் கொண்டவனாகி விடுகிறாய். மூன்றில் ஒன்று முழுமையானதில்லை. ஆல்பர்ட் ஐன்ஸ்டீன் அளவுக்கு ஓரளவுக்கு ஒருங்கிணைப்பு உடையவனாகலாம். ஓரளவுக்குத் தனித்துவம், அழகு, மெய்ம்மை, என்றாலும் அது பின்னப்பட்டதுதான்.

கலைஞனாக மாறிவிடலாம். ஒரு பிக்காஸோவாக, ஒரு வான் கோவோவாக, ஒரு பீத்தோவனாக, ஒரு ரவீந்திரநாத் தாகூராக ஆகிவிடலாம்.



அப்படியேயானாலும் கொஞ்சம்தான், பரவாயில்லை. கலை இரண்டுக்கும் இடைப்பட்ட தல்லவா? அந்திக் கருங்கலில் ஒளியும் இருட்டும் சந்தித்துக் கொள்வதைப் போல.

உனக்குள் சமயம் கொஞ்சமிருக்கும். ஒவ்வொரு கவிஞனிடமும் சிறிது சமயமிருக்கிறது. அவனுக்கு அது தெரிந்திருக்கலாம். தெரியாமலுமிருக்கலாம். ஆனால் யாரும் சமய வாசனை கொஞ்சமாவது இல்லாமல் கவிஞனாக முடியாது. சாத்தியமேயில்லை. நாத்திகத்தில் பழுத்த கலைஞனிடமும் ஒரு விதமான சமயம் இருந்தேயாக வேண்டும். அது இல்லாமல் அவன் மேதையாக முடியாது. அது இல்லாமல் அவன் தொழிலில் சாமர்த்தியசாலியாக மட்டுமே இருக்க முடியும். தொழில் வினைஞனாக அன்றிக் கலைஞனாக இருக்க முடியாது.

சாத்ரே தீர்மானமான நாத்திகர். தனக்கும் சமயத்துக்கும் தொடர்பிருக்கிறது என்று ஒப்புக் கொள்ளவே மாட்டார். அவரும் கூட ஒரு வகையில் சமயவாதிதான்.

சிறந்த நாவல்களைப் படைத்திருக்கிறார். அவற்றில் வரும் பாத்திரங்களுக்கு உள்முகம் ஒன்று உண்டு. அந்த உள் முகத்தை இவர் வாழ்ந்திருக்க வேண்டும். இல்லை யெனில் அவர்களைப் பற்றி எழுதியிருக்க முடியாது. அந்த உள்முகம் அனுபவிக்கப்பட்டது.

அழகியலில் இயங்கும் எவரும் ஓரளவுக்காவது அறிவியல் குணங்கள் கொண்டிருக்க வேண்டும். சமயவாதியை விடத் தர்க்க பூர்வமாக இருப்பான். சமயவாதியை விடப் பொருள் நிலைப்பாடுடையவனாக இருப்பான். விஞ்ஞானியளவுக்குப் பொருள் நிலைப் பாடுடையவனாக இல்லாமல் இருந்தாலும், சமயவாதியை விடத் தர்க்க பூர்வமாக இருப்பான். அவனிடம் ஒரு சமநிலை காணப்படும்.



அழகியலுக்குள் புகுவது நல்லதுதான். அதில் மூன்று பரிமாணங்கள் உண்டல்லவா? என்றாலும் ஒவ்வொன்றிலும் கொஞ்சம் கொஞ்சம்தான். எனவே கலைஞனாக இருப்பதும் பின்னப்பட்டு இருப்பதுதான். முழுமையிருப்பதில்லை.

விஞ்ஞானியைப் போலவே சமயவாதியும் ஒரு முனைப்பட்டவர்தான். ஆல்பர்ட் ஐன்ஸ்டீன் ஒற்றைப் பரிமாணம் உள்ளவர் என்றால் கௌதம புத்தரும் அப்படித்தான். கீழ்த்திசையில் இந்த ஒற்றைப் பரிமாணமே இருந்துவிட்டதால் மிகவும்தான் சிரமங்கள் வந்தேறி விட்டன.

தற்போது மேற்றிசையும் இந்த ஒற்றைப் பரிமாணத் தால் சிரமப்பட்டுக் கொண்டிருக்கிறது. திவாலாகிப் போன அகம் மேற்றிசையில் என்றால் திவாலாகிப் போன புறவயப்பாடு கீழ்த்திசையில்.

என்னமோ சந்தர்ப்ப வசமாகக் கீழ்த்திசையில் பஞ்சமும் பட்டினியும் இருக்கிறது என்று கொள்ளாதே. அப்படியிருக்க அவர்களே தேர்வு செய்துவிட்டார்கள்.

விஞ்ஞானத்தை மறுத்தாயிற்று. புறப்பொருள் சார்ந்த உலகையே மாயை என்று மறுத்து நிற்கிறார்கள். உலகே மாயம் என்றால் விஞ்ஞானம் எப்படி வரும்? முதற் காரணியே இல்லாமல் போய்விட்டது. மாயையிலிருந்து விஞ்ஞானம் பிறக்காது. இல்லாமல் போய்விட்ட ஒன்றிலிருந்து எப்படி விஞ்ஞானத்தைக் காண்பது? உலகத்தை மறுத்துவிடும்போது விஞ்ஞானம் என்ற பரிமாணத்தை மொத்தமாக மறுக்கிறாய்.

இதுதான் கீழ்த்திசை நாடுகளின் ஏழ்மைக்கும் பட்டினிக்கும் காரணம். கீழ்த்திசையின் மேதைமை இதை உணர்ந்து கொள்ள வேண்டும். இல்லையென்றால்



என்னதான் மேற்கிலிருந்த விஞ்ஞானத்தை இறக்குமதி செய்து கொண்டாலும் அது நமது அடி ஆழத்துக்குப் போய்ச் சேராது. ஐயாயிரம் வருடங்களாக மாறாது நிலைத்துப் போய்விட்ட மனப்பாங்கு இது. இதற்கு விஞ்ஞானம் அயலாகித்தான் நிற்கும்.

உலகம் முழுக்கத் தெரிந்த இந்திய விஞ்ஞானி கைரேகை பார்ப்பார். ஜோசியம் பார்ப்பார். என்ன விஞ்ஞானி அவர்? கங்கையில் முங்கி எழுந்தால் பல பிறப்பின் பாவங்கள் கரைந்து போகும் என்பார். இப்படி மூட்டை மூட்டையாக மூட நம்பிக்கையை வைத்துக் கொண்டும் பெரிய விஞ்ஞானி என்று தன்னை நினைத்துக் கொண்டிருப்பார்.

விஞ்ஞானம் அவருடைய விளிம்புகளில்தான் இருக்கிறது அவருடைய ஆத்மாவோ விஞ்ஞான அடிப்படையில்லாத பழமையான கீழ்த்திசை மனப்பாங்கில் வேர் பதித்து நிற்கிறது.

கீழ்த்திசை நாடுகள் இந்த ஒற்றைப் பரிமாணத் தால்தான் பெரிய சிரமங்களைப் பட்டுக் கொள்ள வேண்டி வந்துவிட்டது. இப்போது மேற்றிசை நாடுகளும் அப்படிச் சிரமப்படுகின்றன. சமயத்தை முழுக்கக் கைவிட்டுவிட்டு விஞ்ஞானத்தை மட்டும் பிடித்துக் கொண்டு தொங்குகின்றன.

கடவுளை மறுக்கிறார்கள். ஆன்மாவை மறுக்கிறார் கள். முன்பு விலங்காகச் சிறுத்துவிட்ட மனிதன் இப்போது இயந்திரத்தனமாக நிலைமாறிப் போனான். அவனுடைய கம்பீரம் போய்விட்டது. நம்பிக்கையை இழந்தாயிற்று. எதிர்காலத்தை விட்டுப் போக்கியாகி விட்டது.



தன் அகவுணர்வை இழந்த அதே கணம் மனிதன் மேம்போக்கானவனாகி விடுகிறான். மேற்கத்திய மனிதன் பொருள்வயப்பட்ட பணக்காரன். ஆத்ம அளவிலோ மிக வறியன். உள்ளே வறுமை. வெளியே செல்வம். இதுதான் இன்றைய நிலைமை.

இவை இரண்டுக்குமிடையே இரண்டு பரிமாணங் களையும் கொண்ட சில கலைஞர்களும் இருக்கிறார்கள் தான். ஆனால் கலைஞனுக்குக் கூடத் திருப்தியிருப்ப தில்லை. கொஞ்சம் விஞ்ஞானியாக, கொஞ்சம் சமயவாதியாக இருக்கும் அவன் விஞ்ஞானியாவது மில்லை, சமயவாதியாவதுமில்லை. தூரப்பார்வையில் இரண்டையும் பார்க்கிறவன்.

இரண்டுக்குமிடையே அலைந்து கொண்டிருக்கும் கலைஞன் எதிலும் நிலைக்க முடிவதில்லை. இரண்டுக்கு மிடையே அடித்துத் தள்ளப்பட்டுக் கொண்டிருக்கும் பந்தாகவே இருக்கிறான்.

விஞ்ஞானத்துக்கோ சமயத்துக்கோ அவன் எதுவும் தர முடிவதில்லை. அவன்தான் விஞ்ஞானியுமில்லை ஆன்மிகவாதியுமில்லையே. அவனுடைய கலை அதன் பிரமாதமான வடிவில் ஓர் அலங்காரமாகவே இருக்கிறது. வாழ்வைக் கொஞ்சம் சௌகரியமாக்குகிறது. கொஞ்சம் அழகானதாக்குகிறது. ஆனால் அதுவொன்றும் அவ்வளவு பிரமாதமான சமாச்சாரமல்ல.

நான் சொல்வது நான்காவது வழிமுறை. உண்மையான மனிதன் மூன்றாகவும் ஒரே சமயத்தில் இருக்கக் கூடியவன். ஒரு விஞ்ஞானியாக, ஒரு சமயவாதியாக, ஒரு கலைஞனாக இந்த நான்காவது மனிதனைத்தான் நான் சமயாதீதி என்கிறேன். இதில்தான் ஆல்பர்ட் ஐன்ஸ்டீன், கௌதம



புத்தர், பிக்காஸோ ஆகியோரிடமிருந்து நான் வேறுபடுகிறேன். இப்படி வித்தியாசமாக நானிருப்பதை நீங்கள் நினைவில் கொள்ள வேண்டும்.

புத்தர் ஒற்றைப் பரிமாணம் கொண்டவர். பிரமாதமான அழகு அதில் இருக்கிறதென்றாலும் கூட, அகவுலகைப் பொறுத்தவரை அவரை மிஞ்சுதவற்கு யாரும் கிடையாது. அகத்தின் நாயகர். என்றாலும் ஒற்றைப் பரிமாணம்தான். ஆழ்ந்த மௌனம், நிம்மதி, பரவசம் என்று எல்லாவற்றையும் சாதிக்க முடிகிறதென்றாலும், பொருள் வயப்பட்டு இந்த உலகுக்கு அவர் அளிக்க ஒன்றுமே இல்லாமல் போய்விட்டது.

ஆல்பர்ட் ஐன்ஸ்டீன் பொருள் வயப்பட்ட பலவற்றையும் தர முடிந்தது. ஆனால் அகத்தளவிலோ ஏதுமில்லை. எனவேதான் அவருடைய சாதனைகள் பலவும் பெரும் சாபங்களாகிப் போய்விட்டன.

அணுகுண்டுகளைச் செய்ய வேண்டும் என்று சொன்னவரே அவர்தான். அப்படிச் சொல்லி விட்டதாலேயே வாழ்நாள் முழுக்க நிம்மதியிழந்து கிடந்தார். அமெரிக்க அதிபருக்கு ஒரு கடிதம் அனுப்பினார். அதில் அணுகுண்டு செய்ய வேண்டிய நேரம் வந்துவிட்டது. செய்யாமல் போனால் இந்தப் போர் முடியவே முடியாது. பெரும் நாசம் செய்துவிடும். அணுகுண்டு நம்மிடம் இருக்கிறது என்பதே போதும் அவர்களைப் பயமுறுத்திப் போரை முடிவுக்குக் கொண்டு வர... என்று எழுதியிருந்தார்.

ஆனால் அதிகாரம் - அது எப்படிப்பட்ட அதிகாரமாக இருந்தாலும் சரிதான் - அரசியல்வாதிகளின் கைகளுக்குப்



போய்ச் சேர்ந்தபின் கட்டுப்பாட்டுக்கு அப்பாற் பட்டுப் போய்விட்டது. அதைப் பயன்படுத்து வதில் அவர்களுக்குக் கட்டுப்பாடுகள் விதிக்க முடிவதில்லை. அரசியல் வாதிகளைப் போல மடையன் வேறு யாரும் இல்லை.

அமெரிக்கர்கள் கையில் அணுகுண்டு போய்ச் சேர்ந்தபின் அதை எங்காவது போட்டே ஆக வேண்டும் என்ற நிலைமை வந்தது. ஹிரோஷிமாவும் நாகசாகியும் தவிர்க்க முடியாதவையாகிப் போயின. அங்கே அணுகுண்டுகள் விழுந்த போது ஐன்ஸ்டீன் உள்ளத்தில் பெரும் விரிசல் தோன்றியது. தான் சொன்னதை நினைத்து வாழ்நாள் முழுக்க மறுகிக் கிடந்தார்.

அவருடைய கடைசி நாட்களில், ''கடவுள் இன்னு மொரு முறை இந்த உலகில் பிறக்கச் சந்தர்ப்பம் கொடுத்தால் விஞ்ஞானியாக வேண்டுமென்று விரும்புவீர்களா?'' என்று ஒருவர் கேட்டாராம்.

அவரோ, ''இல்லை, இல்லை. ஒரு பௌதிக விஞ்ஞானியாவதைவிட பிளம்பராவது எவ்வளவோ மேல். போதுமப்பா போதும். நான் இந்த உலகத்துக்கு ஒரு சாபமாகிப் போய்விட்டவன்,'' என்றாராம்.

புறவுலகை அவர் செழுமைப்படுத்தினார். ஆனால் அகத்தைக் கவனிக்காமல் புறத்தை மட்டுமே பார்த்திருப்பது அலங்கோலமான வளர்ச்சியாகிவிடுகிறது. எல்லாமும் உன்னுடையதாகிப் போகிறது. ஆனால் நீ உன்னுடைய வனாவதில்லை. மகிழ்வைத் தரும் அத்தனையும் உன்னிடமிருந்தும் உனக்கு மகிழ்ச்சியிருப்பதில்லை.

மகிழ்ச்சி உன்னிடமிருப்பதில் இருந்து பெற்றுக் கொள்ளப்படுலதல்ல. மகிழ்ச்சி உள்ளூறப் பொங்குவது. உன்னுடைய சக்திகள் விழித்துக் கொள்வது.



புத்தர் அகப்பரிமாணத்துக்குப் பிரமாதமான வளம் சேர்த்தார். அவரைப் போலச் சாதனையாளர் பிறர் எவருமில்லை. அவர் சொன்னதெல்லாம் சத்தியம். என்றாலும் ஒற்றைப் பரிமாணம் கொண்டது. மறந்துவிடாதே.

என்னுடைய முயற்சி நான்காவது வழியை வகுப்பதில் இருக்கிறது. தனக்குள் முப்பரிமாணத்தையும் ஒருங்கிணைப்பதில் இருக்கிறது. தானே ஒரு மும்மூர்த்தியாவதில் இருக்கிறது. கடவுளின் மூன்று முகங்களையும் தன்னிடம் கொள்வதில் இருக்கிறது. விஞ்ஞானத்துக்குத் தேவையான அளவு தர்க்கம், அழகியலுக்குத் தேவையான அளவு கவித்துவம், புத்தர்கள் சொன்ன அளவுக்கு தியானமும் விழிப்புணர்வும் என்று மூன்றையும் ஒன்றாக்கிக் கொள்வதில் இருக்கிறது.

இந்த நான்காவது மனிதனே உலகுக்கு நம்பிக்கை நட்சத்திரமாகிறான். மனிதன் உயிர்த்திருக்க ஒரே வழி இந்த நான்காவது வழிதான். மனிதன் உலகில் ஜீவித்திருக்க வேண்டுமானால் இந்த மூன்று பரிமாணங்களையும் ஒருங்கிணைத்துத்தானாக வேண்டும். இவை மூன்றும் சந்தித்துக் கொண்டு, சங்கமித்து, ஒன்றாகக் கரைந்து போவதுதான் நான்காவதன் ஆக்கம்.

புத்தர், மகாவீரர், இயேசு, பதஞ்சலி, லாவோட்சூ, என்று பலரைப் பற்றியும் பேசுகிறேன். ஆனால் இவர்கள் எல்லோருமே ஒற்றைப் பரிமாணக்காரர்கள்தான் என்பதை நினைவில் வைத்திரு. உங்கள் வாழ்வை அவர்களுடைய போதனைகள் கொண்டு வளப்படுத்த விரும்புகிறேன். ஆனால் அந்தப் போதனைகளே முடிந்த முடிவல்ல. பிற பரிமாணங்களிலும் கொஞ்சம் ஆழங்காட்பட வேண்டுமென்கிறேன்.



எனவே இந்தப் புதிய கம்யூனில் மேற்கும் கிழக்கும் சந்திக்கும். புறவுலகும் அகவுலகும் சந்தித்துக் கொள்ளும். இங்கே விஞ்ஞானிகள், கலைஞர்கள், கவிஞர்கள், ஓவியர்கள், பாடகர்கள், இசைக் கலைஞர்கள், தியானிப்பவர்கள், யோகிகள் என்று எல்லோருமே இருப்பார்கள். அப்படியே ஆக வேண்டும் இந்த மொத்த உலகமும் என்பதுதான் என் விருப்பம்.

அந்த உலகில் புத்தருக்கென இடம் வேண்டும். அதனால்தான் அவரைப் பற்றிப் பேசுகிறேன். சமயம் என்ற அந்த அதிமுக்கியமான பகுதி இல்லையெனில் எல்லாமுமே ஆன்ம வறட்சி கொண்டதாகிப் போகும்.

இன்றைய சூத்திரங்கள்.

> **'மூடன் அக்கறையின்றி இருக்கிறான்.**
> **சித்தருக்கோ தன் கவனிப்பின் மீது கவனம்.**
> **அதுவே அவருடைய உயர்ந்த பொக்கிஷம்.'**

ஒருவனுக்கு விஷய ஞானம் இல்லாதிருப்பதால் அவன் மூடன் என்று புத்தர் சொல்லவில்லை. அவரைப் பொறுத்த அளவில் பிரக்ஞையின்றி வாழ்வதும் செயல்படுவதும் மூடத்தனம். தூக்கத்தில் வாழும் தூங்குமூஞ்சி மூடன். என்ன செய்கிறோம் என்ற பிரக்ஞையின்றிச் செயல்படுகிறவன் மூடன்.

மூடன் என்ற வார்த்தைக்குச் சிறப்புப் பொருள் தருகிறார். உணர்வின்றி இருத்தல், பிரக்ஞையின்றி இருத்தல், சிந்தனையின்றி இருத்தல்.

காற்றில் அலைப்புறும் சருகைப் போல வாழ்வெனும் வெளியில் அலைப்புற்று இருப்பவன் மூடன். தான் யாரென்பது தெரியாது. எங்கிருந்து வந்திருக்கிறோம்



என்பது தெரியாது. எதை நோக்கிப் போய்க் கொண்டிருக்கிறோம் என்பது தெரியாது.

சந்தர்ப்ப வசமாக வந்து பிறந்துவிட்டு சந்தர்ப்ப வசமாக இருந்து கொண்டிருக்கிறவன். பிரக்ஞையற்றவன். இருத்தலையோ சத்தியத்தையோ எதார்த்தத்தையோ உளமாறத் தேடாதவன்.

கூட்டம் போகின்ற போக்கில் போகிறவன். மந்தைப் புத்தி கொண்டவன். தனித்துவம் இல்லாதவன். தன்னுடையது என்று இனங்காண முடியாத அளவுக்கு அறிவு இல்லாதவன். பிறரை அப்படியே பின்பற்றுகிறவன். பெற்றோர் கொஞ்சம் சொல்லி வைத்திருக்கிறார்கள். ஆசிரியர்கள் கொஞ்சம், அரசியல்வாதிகள் கொஞ்சம், பூசாரிகள் கொஞ்சம். அவர்கள் சொன்னதை அப்படியே பின்பற்றுகிறான்.

தான் ஏன் இங்கிருப்பது? எதற்காக? என்ன செய்கிறோம்? எதற்காக அப்படிச் செய்கிறோம்? இப்படியாக கேள்விகளை அவன் எழுப்புவதேயில்லை.

இத்தகைய கேள்விகள் அவனை அசௌகரியப்பட வைக்கின்றன. அவனுள் இறுக்கத்தை ஏற்படுத்துகின்றன. அவற்றை அவன் தவிர்க்கிறான். தரப்பட்ட பதில்களை அவன் அப்படியே நம்பி ஏற்றுக் கொள்கிறான். அவற்றைப் பற்றிய எந்தச் சந்தேகமும் அவனுக்கு இருப்பதில்லை. நம்பிக்கை வைக்கிறான் என்பதில்லை. அவனுக்கு நம்பிக்கை என்று ஏதும் இல்லை. தன்னுடை சந்தேகங்களை அவன் அடக்கி வைத்திருக்கக் காரணம் சந்தேகப்படும் போது அசௌகரியமாக உணர்கிறான் என்பது தான்.

ஒரு முகம்மதியனாக அல்லது கிறிஸ்துவனாக அல்லது இந்துவாக இருக்கிறான். ஆனால் தன் மதத்திலிருந்து எதையும் தேடிப் பெற முயல்வதில்லை. தேடுதலில்



எதையும் பணயம் வைக்க அவன் தயாராக இருப்பதில்லை. அவன் சாகசம் செய்பவனல்ல. அவன் வாழ்வில் சாதிக்க ஒன்றும் இருப்பதில்லை.

சிக்கிக் கொண்டவனாகி தேங்கிப் போய் செயலூக்கம் இழந்தவனாகிப் போகிறான். அவன் மந்தையிலிருந்து பிரிக்க முடியாத ஒரு செம்மறியாடு. புத்தர் அத்தகையவனைத்தான் மூடன் என்கிறார்.

மூடனுக்கு விஷயஞானம் இருக்கலாம். வழக்கமாக அதில் கொஞ்சம் தூக்கலாகத்தான் இருக்கிறான். ஒரு பண்டிதனாக, ஓர் அறிஞனாக, ஒரு பேராசிரியராக அவன் தன் மூடத்தனத்துக்குத் திரையிட்டுக் கொள்கிறான். விளிம்புகளில் விஷயஞானம் பெற்ற நடுமத்தில் அறிவிலியாக இருக்கிறான்.

இரண்டு விதமானவர்கள் இருக்கிறார்கள். விஷய ஞானம் அதிகம் வைத்துக் கொண்டு ஒன்றுமே தெரியாமல் இருக்கிறவர்கள் ஒரு வகை. அவர்களுக்கு அறிவற்றதொரு ஞானம் இருக்கிறது.

பிறிதொரு வகையினருக்கோ விஷயஞானம் இருப்பதில்லை. ஆனால் அவர்கள் விளங்கியவர்களாக இருக்கிறார்கள். இவர்களிடம் விளங்கிக் கொண்ட அறியாமை இருக்கிறது.

மூடர்கள் எனும்போது புத்தர் இந்த இரண்டாவது வகையினரைப் பற்றிப் பேசவில்லை. புத்தருக்கு விஷய ஞானம் அதிகமில்லை என்பதால்தான். அப்படியேதான் இயேசு கிறிஸ்துவும் முகம்மதுவும். களங்கமேதுமில்லாத சாமானியர்கள் அவர்கள்.

அவர்களுடைய களங்கமற்ற தன்மை, குழந்தைமை எப்படிப்பட்டது என்கிறாய்? அவர்களுடைய உயிருருவின்

உட்புரியைத் துளைத்துப் போகும் தன்மை யுடையவை.



அவர்கள் தத்தம் சத்தியத்தைத் தெரிந்து கொள்ள முடிந்தவர்களாக இருந்திருக்கிறார்கள். தம் உயிருருவின் உட்புரிக்குச் சென்று சேர முடிந்தவர்களாக இருந்திருக்கிறார்கள்.

அவர்களுக்கு விளங்கியிருக்கிறது. ஆனால் விஷய ஞானம் அல்ல அது. அவர்கள் விளங்கிக் கொண்டிருப்பது சாத்திரங்களல்ல. அவர்களுடைய விளக்கம் கவனிப்பின் அடிப் பிறந்தது.

மூலத்தை மனதில் வை. தியானம், விழிப்பு, பிரக்ஞை, உணர்ந்திருத்தல், கவனித்திருத்தல், சாட்சியா யிருத்தல் இவை மூலமே விளங்கியவர்களாகிறார்கள். சாத்திரங்களிடமிருந்து பெற்றுக் கொள்வது உண்மை அறிவல்ல.

உண்மையற்ற அறிவை வெகு விரைவில் சேர்த்துக் கொள்ளலாம். வெகு சுலபமாகவும் கூடத்தான். அதைப் பற்றிப் பெருமையடித்துக் கொள்ளலாம். அத்தனைக்கும் மூடனாகவே இருப்பாய். படித்த மூடன். என்றாலும் மூடன்தான்.

உண்மையிலேயே தெரிந்து கொண்டவராக இருக்க வேண்டுமென்றால் கற்றுக் கொண்ட அறிவை எல்லாம் தூக்கிப் போட்டுவிட வேண்டும். கற்றதை மறந்தொழித்து விட வேண்டும். மீண்டும் நிர்விகல்பமான சிறு குழந்தையாகிவிட வேண்டும். வியப்பால் விரிந்த கண்களோடும் துறுதுறுப்போடும் மீண்டும் ஒரு குழந்தையாகி விட வேண்டும்.

அப்போது உன்னுடைய உயிருருவை மட்டுமன்றி இந்த உலகில் உயிர்த்திருக்கும் உயிருருவையும் தெரிந்து



கொள்வாய். மரங்களிலும் பறவைகளிலும் மிருகங்களிலும் பாறைகளிலும் நட்சத்திரங்களிலும் உயிர்த்திருக்கும் அந்த உயிருருவைத் தெரிந்து கொள்வாய். உன்னைத் தெரிந்து கொள்ள முடியுமென்கிற போது இவற்றையெல்லாம் தெரிந்து கொள்வாய்.

இவை அனைத்துக்கும் மறு பெயர்தான் கடவுள்.

**'மூடன் அக்கறையின்றி இருக்கிறான்.'**

அக்கறையின்றி என்று சொல்லும்போது உணர்ந்து வாழ்வதில்லை என்றே பொருள்படப் புத்தர் பேசுகிறார். என்ன செய்கிறோம் என்பது தெரியாமலேயே செய்து கொண்டிருப்பது. சும்மாயிருக்க முடியாது என்பதால் எதையாவது செய்து கொண்டிருப்பது. ஏதோ ஒன்று செய்து கொண்டிருக்க வேண்டியிருக்கிறது.

தனியாக இருக்க முடியாது என்பதால் பிறரோடு இருப்பது. ஏதாவது ஒன்றில் ஈடுபாடு கொள்ளாமல் இருக்க முடிவதில்லை. ஏனெனில் அப்படிச் சும்மாயிருப்ப தென்பது, ஒன்றும் செய்யாமல் இருப்பது, தனியாக இருப்பது என்பதெல்லாம் தன்னை எதிர்கொள்வதாகும். தன்னை நேரிடையாக எதிர்கொள்ள அவனுக்குப் பயம்.

தன்னுடைய உயிருருவின் ஆழங்காணப் பிடிப்ப தில்லை. அவன் தெரிந்து வைத்திருப்பதெல்லாம் அங்கே அர்த்தமற்றுப் போய்விடுகின்றன. தனக்குத் தெரிந்தததை யெல்லாம் அவன் அங்கே கொண்டுபோக முடியாது. அவனுக்குத் தெரிந்தது, அவனுடைய திறன்கள், அவனுடைய சாத்திரங்கள், கொள்கை கோட்பாடுகள் அனைத்துமே அகவுலகில் வியர்த்ததானாகிப் போகின்றன.

புறவுலகில் தான் ஏதோ ஒருவனாக இருப்பதால்தான் அதைப் பிடித்துத் தொங்கிக் கொண்டிருக்கிறான். அகவுலகிலோ அவன் யாருமில்லாது போகிறான்.



நன்கு கவனித்துப் பார். பிறரை வேடிக்கை பார்ப்பது போலப் பொழுது போக்கு வேறு எதுவும் கிடையாது. சாலையோரம் நின்று பிறரை வேடிக்கை பார். என்ன செய்கிறார்கள்? ஏன் அதைச் செய்கிறார்கள்? அதைக் கவனித்துப் பார்.

பிறகு உன்னையே வேடிக்கை பார். என்ன செய்கிறாய்? ஏன் அதைச் செய்கிறாய்?

ஒருவன் இளம்பெண்ணொருத்தியை ஓர் ஓட்டல் வராந்தாவில் சிநேகம் பிடித்து அவளுடைய அபார்ட்மெண்டுக்குப் போகிறான். இருவரும் உடைகளைக் களைகிறார்கள். அவள், ''முதலில் என்னை விரட்டிப் பிடி. அப்போதுதான் எனக்கு உணர்ச்சி கிளம்பி வெடிக்கும்,'' என்கிறாள்.

இரண்டு மணிநேரமாக அவளை விரட்டியும் அவனால் அவளைப் பிடிக்க முடியவில்லை. வெறுத்துப் போன அவன் அங்கிருந்து போய்விடுகிறான்.

அடுத்த நாள் அதே ஓட்டல் வராந்தாவில் இன்னொருவனை அவள் தன்னோடு கூட்டிக் கொண்டு போவதைப் பார்க்கிறான். புகை போக்கி வழியாக புதியவன் படும் பாட்டைக் காண எட்டிப் பார்க்கிறான். பாதி திறந்திருந்த சன்னலின் இடைவெளியில் வந்த வெளிச்சத்தில் ஓடி மறையும் கால்களைப் பார்த்துக் கொண்டிருந்தான். ஒரு கணம் தன்னை மறந்து, ''தம்பி அப்படி வாங்கிக்கோ,'' என்று கத்தி விட்டான்.

அவனோ, ''சரிதான். நேத்து வந்தவனை நீ பார்த்திருக்க வேண்டும்,'' என்று மூச்சிரைப்போடு சொன்னான்.



பிறரை வேடிக்கை பார். என்ன செய்கிறார்கள் என்று பார். நிழல்களை விரட்டிக் கொண்டிருக் கிறார்கள். தமக்குத் தேவையேயில்லாதவற்றை விரட்டிப் பிடிக்க முயற்சி செய்கிறார்கள். வெகு பிரயத்தனப்பட்டு ஒன்றை அடைய முயல்கிறார்கள். அப்படியே அதை அடைந்துவிட்டால் அதை வைத்துக் கொண்டு என்ன செய்வது என்பது அவர்களுக்குத் தெரிவதில்லை. அப்படியாக ஒன்றைத் தேடித்தான் அவர்களுடைய அத்தனை ஓட்டமும். அப்படித்தான் பணத்தைத் தேடி, அரசியல் அதிகாரத்தைத் தேடி ஓடிக் கொண்டிருக்கிறார்கள். கைக்குக் கிடைத்தால் அதை வைத்துக் கொண்டு என்ன செய்வது என்பது தெரியாமல் போய்விடுகிறது.

ஒருத்தி இன்னொருத்தியிடம், ''உன் வீட்டுக்காரரைப் பத்தி உனக்கு அக்கறையே இல்லையா? பொம்பளை களுக்குப் பின்னாலேயே சுத்திக்கிட்டு இருக்கிறாரே. எந்தப் பொம்பளையானாலும் சரிதான். உனக்கும்தான் தெரியுமே'' என்றாள்.

அவளோ சிரித்துக் கொண்டாள். ''இதிலென்ன இருக்குது? நாய்கள் காருக்குப் பின்னால் குரைச்சுக்கிட்டு ஓடறாப்படித்தான் அவர் பொம்பளைகளுக்குப் பின்னாலே சுத்தறது,'' என்றாள்.

முதலாமவள், ''நீ என்ன சொல்றேன்னு எனக்குப் புரியல்லே. நாய்கள் காரைத் துரத்தறாப்படியா?'' என்றாள்.

அவள், 'ஆமாமா. நாய்க்குக் கார் கிடைச்சுட்டுதுன்னு வெச்சுக்கோ. அதெ வெச்சுக்கிட்டு அது என்ன செய்ய முடியும்? அப்படித்தான் அவரும். பொம்பளைக்குப் பின்னாடியே போய் அவளைப் புடிச்சுக்குவார். அப்புறம்



அவளெ வெச்சுக்கிட்டு என்ன பண்றதுன்னு அவருக்குத் தெரியாது. அவரைப் பத்தி எனக்குத் தெரியும். அதனாலத்தான் கவலையே படாம இருக்கேன்,'' என்றாள்.

அப்படித்தான். புகழ் பெற்ற ஒருவனாக வேண்டும் என்று வாழ்நாள் முழுக்க அதற்கே செலவு செய்வது. புகழ் வந்தபின் அதை வைத்துக் கொண்டு என்ன செய்வது என்பது தெரிவதில்லை. புகழ் பெற்றவனாக ஆகிவிட்ட எவனும் அந்தப் புகழை எப்படியாவது கெட்டுப் போக்கிவிடத்தான் விரும்புகிறான். புகழ் அப்படி ஒரு சுமையாகிப் போகிறது.

சாவகாசமாக இருக்க முடியாது. கூட்டம் உன்னைக் கவனிக்காமல் எங்கேயும் போக முடியாது. தனிமையே இருக்காது. தனிப்பட்ட வாழ்வை வாழவே முடியாது. எல்லோரும் பார்த்துக் கொண்டிருக்கிறார்களே. உன்னுடைய வாழ்வை அலசிப் பார்க்கிறார்களே. சிரிக்க முடியாது. இயல்பாகப் பேச முடியாது. எல்லாமும் சிரமமாகிப் போகிறது.

புகழ் பெற்றவனாகும்போது சொந்த வாழ்வென்பது இல்லாமல் போய் விடுகிறது. ஒரு நாட்டின் ஜனாதிபதி அல்லது நோபல் பரிசு வாங்கியவர் எனும்போது தனி மனிதன் இல்லாமல் போய்விடுகிறாய். அலங்காரப் பொம்மையாகிப் போகிறாய். எப்போதும் அலங்காரமாகவே இருந்து தொலைக்க வேண்டியிருக்கிறது. சுதந்திரமாகச் சிறு அசைவும் சாத்தியமில்லை.

நிறையப் பணம் வந்து சேர்ந்துவிடுகிறது. பிறகு பணத்தை வைத்துக்கொண்டு என்ன செய்வது என்பது தெரிவதில்லை.



சந்தர்ப்பவசம் பாற்பட்டவனே மூடன். அறிவாளி ஒவ்வொரு அசைவையும் தெரிந்தே மேற்கொள்கிறான். ஒவ்வோர் அடியையும் முழு உணர்வோடேயே எடுத்து வைக்கிறான்.

அவனுடைய வாழ்க்கை சத்தியத்தைத் தேடி முடிவில்லாது போய்க் கொண்டேயிருக்கிறது. வழி தவறிப் போகவே மாட்டான். தன்னுடைய ஒவ்வொரு செயலிலும் சர்வ ஜாக்கிரதையாக இருக்கிறான். பிறர் பார்த்துக் கொண்டிருக்கிறார்கள் என்பதனால் அல்ல.

சர்வஜாக்கிரதையாக இருந்தால் ஒருங்கிணைந்தவனாக இருக்கமுடியும் என்பதால் அப்படி இருக்கிறான். அப்போதுதான் அவனால் ஒரு ஸ்படிகமாக முடியும்.

**'மூடன் அக்கறையின்றி இருக்கிறான்.'**

ஞானிக்கு அக்கறை உண்டு. தன்னைப் பற்றிய அக்கறை. வாழ்வைப் பற்றிய அக்கறை. பிறரைப் பற்றிய அக்கறை. தன் வாழ்வை அவர் மதிப்பதால் அவர் அனைத்திலும் அக்கறை கொண்டவராக இருக்கிறார். தன் வாழ்க்கை அரியது என்பது அவருக்குத் தெரியும். வளர்வதற்குக் கடவுள் தந்த ஒரு சந்தர்ப்பம்தான் அது என்பது அவருக்குத் தெரியும். ஒரு விதமான கிறக்கத்தில் அதைக் கெட்டுப் போக்கிவிடக் கூடாது என்பது அவருக்குத் தெரியும்.

பிறரைச் சும்மா வேடிக்கை பார். உன்னையே வேடிக்கை பார். எப்படி உணர்விழந்தவனாகக் கிறங்கிப் போய்க் கிடக்கிறோம் என்பது தெரியும். எவ்வளவு கவனக்குறைவாக இருக்கிறோம் என்பது புரியும்.

சொல்வதைக் கவனித்துக் கேட்டுக் கொள்வதில்லை. கண்கள் பார்ப்பதை உண்மையில் பார்த்துக் கொள்வ



தில்லை. மேகமூட்டத்தில் நம் பார்வை. குழப்பத்தில் நம் மனது. நம் உயிருருவில் தெளி வின்மை. எதையும் உணர்ந்து கொள்வதில்லை. நம் புலன்கள் கூர்மையற்றுப் போய்விட்டன.

எந்த அர்த்தத்தில் சொல்ல விரும்புகிறோமோ அதை நம் பேச்சில் வெளிப்படுத்தாது பேசிக் கொண்டே இருக்கிறோம். இதைச் செய்ய வேண்டும் அதைச் செய்ய வேண்டும் என்ற விருப்பமில்லாது பலதையும் செய்து கொண்டிருக்கிறோம். அப்படிச் செய்து கொண்டிருக்கும் போதே நமது விருப்பமின்மை தெரிந்திருந்தும் விடாது செய்து கொண்டிருக்கிறோம்.

ஏதோ ஓர் அனிச்சையான சக்தி நம்மை இயக்கிக் கொண்டேயிருக்கிறது. சில சமயம் சிலவற்றைச் செய்யக் கூடாது என்று நினைக்கிறோம். சிலவற்றைப் பேசக் கூடாது என்று நினைக்கிறோம். என்றாலும் அதையே செய்கிறோம், சொல்கிறோம். நமது தீர்மானத்துக்கு நேர் எதிரிடையாகத் தான். நமது தீர்மானங்கள் தீர்மானவையாக இருப்பதில்லை.

> **'மூடன் அக்கறையின்றி இருக்கிறான்.**
> **சித்தருக்கோ தன் கவனிப்பின் மீது கவனம்.**
> **அதுவே அவருடைய உயர்ந்த பொக்கிஷம்.'**

மூடன் ஓர் அடிமையாகவே இருக்கிறான். அடிப்படை உணர்ச்சிகளுக்கு அடிமை. அனிச்சையாகத் தோன்றும் ஆசைகளுக்கு அடிமை. விருப்பு வெறுப்புகளுக்கு அடிமை. தான் பிறந்த சமுதாயத்துக்கு அடிமை. நாகரிகத்துக்கு அடிமை. தன்னைச் சுற்றி நடக்கும் அனைத்துக்கும் அடிமை.

போகிற போக்கில் இதையும் அதையும் செய்கிறவன். பக்கத்து வீட்டுக்காரன் புதிய கார் வாங்கினால் இவனும்



வாங்குகிறான். இவனுக்கு அது தேவையே இல்லை என்றாலும் கூடத்தான். அவன் மலைப்பாங்கான இடத்தில் வீடு ஒன்று வாங்கினால் இவனும் வாங்குகிறான். பணத்தைச் சரிசெய்யச் சிரமமென்றாலும் அதையும் இதையும் வாங்குகிறான். பல வருடங்களுக்குக் கடன்காரனாக இருப்பதென்றாலும் சரிதான். இல்லையென்றால் தன்மானத்துக்கு ஓர் அடி என்று நினைக்கிறான். பிறரைப் பார்த்து அப்படியே இருக்க முயல்கிறான். கவனிப்போ எள்ளளவும் இருப்பதில்லை.

எஸ்கிமோக்களிடம் ஒரு பழக்கம். ஒவ்வொரு வருடமும் முதல் நாளன்று வீட்டில் இருக்கும் வேண்டாததை யெல்லாம் கழித்துக் கட்டிவிடுவது. அருமையான பழக்கம். அதனால்தான் எஸ்கிமோக்களின் வீடுகள் அடைசல் இல்லாமல் வெகு நேர்த்தியாக இருக்கின்றன. கண்டிப்பாகத் தேவை என்பது மட்டும் வைத்திருப்பார்கள். வேண்டாததைப் பிறருக்குப் பரிசளித்து விடுவார்கள்.

எஸ்கிமோக்களின் வீடுகள்தான் உலகத்திலேயே சுத்தமான வீடுகள் என்பது உனக்கு ஆச்சரியமாகக் கூட இருக்கலாம், அதற்கென ஒரு தூய்மை இருக்கிறது. குப்பை கூளம் எதுவும் கிடையாது. சிறிய வீடுகள் தான். என்றாலும் தாராளமானவை. எது தேவையோ அது மட்டுமே இருப்பதால்.

எதையெதையெல்லாம் சேர்த்து வைத்துக் கொண்டிருக்கிறாய் என்று கொஞ்சம் நினைத்துப் பாரேன். அதுவெல்லாம் நிஜமாகவே அவசியம்தானா? அல்லது பிறர் அதையெல்லாம் சேர்த்துக் கொள்கிறார்கள் என்பதற்காகவே நீயும் சேர்த்து வைத்துக் கொள்கிறாயா?



கவனித்திருப்பவன் வாழ்க்கை அவனுடைய கட்டுப்பாட்டுக்குள் இருக்கிறது. தன் அறிவு வெளிச்சத்தில் அதை அவன் வாழ்கிறான். பிறருடையதைப் போன்றதொரு வாழ்வை அவன் வாழ்வதில்லை. தன்னுடைய தேவைகளுக்கு ஏற்ப வாழ்கிறான்.

ஒன்றைத் தெரிந்து கொள். தேவைகள் எண்ணிக்கையில் மிகக் குறைந்தவைதான். புத்திசாலியாக இருந்தால், கவனிப்புடையவனாக இருந்தால் மிகவும் திருப்தியான வாழ்க்கை உன்னுடையதாகும். மிகச் சாதாரணமானவற்றோடு மிக எளிய வாழ்க்கையாகும்.

ஆனால் மற்றவரைப் போல இருக்க வேண்டும் என்றால் உன் வாழ்வு சிக்கலாகிப் போகும். தேவையற்ற சிக்கல் தான். இதையெல்லாம் வைத்திருக்க வேண்டும் அல்லது இதுவெல்லாம் கூடாது என்று குறிப்பாக நான் எதையும் சொல்லவில்லை.

நான் சொல்வதெல்லாம் கவனத்தோடு இருந்து எது உனக்குத் தேவையோ அதைமட்டுமே வைத்துக் கொண்டு வாழ வேண்டும் என்பதுதான். எது தேவையில்லையோ அதை மறந்துவிடு. இது தான் சன்னியாசியின் நெறி. எல்லாவற்றையும் துறந்துவிடு என்று சொல்லவில்லை. தேவையற்ற குப்பை கூளத்தை விட்டுவிடு என்கிறேன். அதையெல்லாம் சேர்த்துக் கொள்கிறாய் என்பது மட்டுமல்ல. தேவையற்றதற்கெல்லாம் ஏங்குகிறாய். அவை உண்மையாகவே உனக்குத் தேவைதானா என்று நினைத்துப் பார்ப்பது கூட இல்லை. உன் மகிழ்வை அதிகப்படுத்தப் போகிறதா? உனக்குப் பரவசம் தரப் போகிறதா? நினைத்துப் பார்ப்பதே இல்லை.



எதையும் உனக்கு வேண்டுமென்று ஆசைப்படுமுன் மும்முறை நினைத்துப் பார். உனக்கே ஆச்சரியமாக இருக்கும். நூற்றுக்குத் தொண்ணூற்றொன்பது அவசியமற்றதாய் இருக்கும்.

அவை உன்னைச் சும்மா பிடித்து ஆட்டிக் கொண்டிருக்கின்றன. அவ்வளவுதான் அவற்றின் வேலை. உன்னை உன்னிடமிருந்து பிரித்து வைக்கின்றன. அதுதான் அவற்றின் ஒரே பயன்பாடு. உனக்குள்ளேயே நீயிருக்க அவை நேரமோ இடமோ தருவதில்லை.

ஆபத்தானவை அவை. இந்தத் தேவையில்லாத வற்றால்தான் நீ உன் வாழ்வை வீணடித்துக் கொள்ளப் போகிறாய். திவாலாகிப் போய் சாகப் போகிறாய்.

**சித்தருக்கோ தன் கவனிப்பின் மீது கவனம்.**

ஒரு நிகழ்ச்சி. ஒரு கணவன் மனைவி. மனைவியின் தம்பி. விருந்தாட வந்தவன் போவதாகவே காணோம். இருவருக்கும் பைத்தியமே பிடித்துப் போய்விடும் போலாகிவிட்டது. சனி ஞாயிறு இருந்து விட்டுப் போகிறேன் என்று வந்தவன் ஆறுமாதமாக அங்கேயே இருக்கிறான்.

ஒரு திட்டம் போடுகிறார்கள். அவள் கோழிக்கறி சமைக்க வேண்டியது. அவன் அதிகம் வெந்து போய்க் கருகிவிட்டது என்று குற்றம் சொல்ல வேண்டியது. அவள் சரியாகத்தான் இருக்கிறது என்று எதிர்வாதம் செய்ய வேண்டியது. கடைசியில் தீர்மானிக்க மைத்துனனிடம் விட வேண்டியது. நன்றாகத்தான் இருக்கிறது என்று சொல்லி விட்டால் கணவன் கோபித்துக் கொண்டு அவனை விரட்டிவிட வேண்டியது. சரியில்லை என்றால் அக்காள் தம்பியோடு சண்டையிட்டுத் துரத்திவிட வேண்டியது. சரியான திட்டம்தான்.



அரங்கேற்றம். கணவனும் மனைவியும் சரியானபடி சண்டை போட்டுக் கொள்கிறார்கள். அவனோ மௌனமாகத் தன் சாப்பாட்டை மென்று கொண்டிருக்கிறான். சட்டென்று சண்டையை நிறுத்தி விட்டு, ''ஹேரி, நீ என்ன சொல்கிறாய்?'' என்று மைத்துனனிடம் கேட்கிறான் கணவன்.

''நானா?'', கோழிக்காலைக் கடித்துக் கொண்டே அவன், ''இன்னுமொரு மூணு மாசத்துக்கு இங்கேயே இருக்கலாம் என்று நினைத்துக் கொண்டிருக்கிறேன்,'' என்றான்.

சரியான ஆள்தான். நன்றாகக் கவனித்துத் தெரிந்து கொண்டவன். ஜாக்கிரதையானவன். பொறிக்குள் மாட்டிக் கொள்ளவில்லை. சரியான பொறிதான். அவன் ஜாக்கிரதை யாக இருக்காமல் இருந்திருந்தால் மாட்டியிருப்பான். எந்த அபிப்பிராயமும் சொல்லவில்லையே. உண்மையைச் சொல்லிவிட்டான். ''இன்னுமொரு மூணு மாசத்துக்கு இங்கேயே இருக்கலாம் என்று நினைத்துக் கொண்டி ருக்கிறேன்,'' என்று.

கவனித்து வாழ்ந்தால் சிக்கிக் கொள்ள மாட்டாய். கவனிக்காமல் இருந்தாலோ ஒவ்வொரு அடி வைக்கும் போதும் ஒரு பொறிக்குள் சிக்கிக் கொள்வாய். உன்னுடைய வாழ்க்கை மேலும் மேலும் தடைப்பட்டதாகிப் போகும். உன்னைத் தவிர வேறு யாரையும் அதற்குப் பொறுப்பாக்க முடியாது.

**'சித்தருக்கோ தன் கவனிப்பின் மீது கவனம்.**
**அதுவே அவருடைய உயர்ந்த பொக்கிஷம்.'**

அவர் எதைச் செய்தாலும் முழுப் பிரக்ஞையோடேயே செய்கிறார். நீயோ எதைச் செய்தாலும் இயந்திரத்தனமாகச்



செய்கிறாய். உன்னுடைய இயந்திரத்தை விட்டொழிக்க வேண்டியிருக்கிறது. தியானம் அதைப் பற்றியதுதான். தானியங்கித் தனத்திலிருந்து விடுபடுதல்.

நீ தானியங்கி இயந்திரமாகி விட்டாய். கார் ஓட்டுகிறாய். சிகரெட் பிடிக்கிறாய். நண்பனோடு பேசிக் கொண்டிருக்கிறாய். ஆயிரத்தொரு எண்ணங்களை நினைத்துப் பார்த்துக் கொள்கிறாய். அநேகம் விபத்துகள் இதனால்தான் நடக்கின்றன. போர்களில் சாவதை விட அதிகம்போர் விபத்துக்களில் இறக்கிறார்கள். சாலை விபத்து, விமான விபத்து, ரயில் விபத்து என்ற பல விபத்துக்கள். இயந்திரத்தனமாக இயங்கிக் கொண்டிருக்கும் மனிதர்கள் கொல்பவர்களை விட அதிகம் பேரை ஹிட்லர் போரில் கொன்றிருக்க மாட்டான்.

நீ என்ன செய்வாய் பாவம். அதுதான் உன்னுடைய வாழ்க்கையாகிப் போய்விட்டது. அப்படித்தான் நீ வாழ்கிறாய். சாப்பிடுகிறேன் பேர்வழி என்று வயிற்றுக்குள் எதையோ திணித்துக் கொள்கிறாய். எதைச் சாப்பிடுகிறோம் என்பதைப் பற்றிக் கவனத்தில் கொள்வதில்லை. மனைவியிடமோ கணவனிடமோ சுகம் துய்க்கிறாய். ஆனால் ஒருவரை ஒருவர் முகம் பார்த்துக் கொள்வதில்லை. மரத்துப் போனவனாகிவிட்டாய். வறட்டுச் சமிக்ஞை களுக்குள் புகுந்து வந்து கொண்டிருக்கிறாய். எந்தப் பொருளும் இருப்பதில்லை.

பிரக்ஞையின் ஒளியில்தான் எதுவும் மதிப்புப் பெறுகிறது. அசாதாரணமானதாகிறது. சாதாரணமானவை சாதாரணமானவையாகவே இருந்து விடுவதில்லை. பிரக்ஞையோடு இருக்கும் ஒருவன், உணர்வு மரத்துப் போகாத ஒருவன், அன்புடைய ஒருவன் ஒரு கூழாங்



கல்லைத் தொடும்போது அது கோஹினூர் வைரமாகிவிடுகிறது.

பிரக்ஞையில்லாத போது ஒரு கோஹினூர் வைரத்தைத் தொட்டாலும் அது சாதாரணக் கூழாங்கல்தான் ஆகிவிடுகிறது. அது கூட இல்லை. எந்த அளவுக்குப் பிரக்ஞையோடு இருக்கிறாயோ அந்த அளவுக்கு உன் வாழ்க்கை ஆழ்ந்ததாகிப் போகிறது.

''வாழ்க்கைக்கு என்ன பொருள்?'' என்று இப்போது உலகம் முழுக்கக் கேட்கிறார்கள். வாழ்க்கை பொருளிழந்துதான் விட்டது. பொருளைக் கண்டுபிடிக்கும் வழியைத் தொலைத்துவிட்டாய் என்பதால், வாழ்க்கை தன் பொருளை இழந்து விட்டது. அந்த வழி எது என்கிறாயா? பிரக்ஞையோடு இருப்பதுதான்.

**'அதுவே அவருடைய உயர்ந்த பொக்கிஷம்.**
**ஆசைக்கு அவர் ஆட்படுவதில்லை.'**

ஆசை என்பதற்குப் புத்தர் என்ன பொருள் கொள்கிறார்? ஆசை என்பது உன்னுடைய மனது முழுவதும்தான். இங்கே இப்போது என்பதைத் தாண்டிப் போவதுதான் ஆசை. இன்னும் வந்திருக்காத எதிர் காலத்துக்குப் போவதுதான் ஆசை. நிகழ்காலத்திலிருந்து தப்பித்துக் கொள்வதற்கான ஆயிரத்தொரு வழி வகைதான் ஆசை. ஆசையும் மனதும் ஒன்று. புத்தருடைய மொழியில் மனமே ஆசை.

ஆசை என்பது காலமும் கூடத்தான். காலம் எனும் போது கடிகாரம் காட்டும் காலத்தைச் சொல்லவில்லை. மனத்தளவிலான காலத்தைச் சொல்கிறேன்.

எப்படி எதிர்காலத்தை உனக்குள் நீயே ஆக்கிக் கொள்கிறாய் தெரியுமா? ஆசைப்படுவதன் மூலமாகத்தான்.



நாளைக்கு ஒரு காரியம் செய்ய வேண்டுமென்று விரும்புகிறாய். அப்போதே நாளையைப் படைத்து விடுகிறாய். இல்லாவிட்டால் நாளை என்பதே இல்லாமல் போய்விடுகிறது. இன்னமும் வரவில்லையே. நாளைக்கு ஒரு காரியம் செய்ய வேண்டும் என்று விரும்புவதாலேயே மனத்தளவில் நாளையைப் படைத்து விடுகிறாய்.

வருடங்களை இப்படி எதிர்காலத்தில் படைத்து விடுகிறார்கள். பல ஜன்மங்களைக் கூடப் படைத்து விடுகிறார்கள். வாழ்க்கை முடிந்தபின், இறப்புக்கு அப்பால் என்ன செய்வது என்று கூடத் திட்டமிடுகிறார்கள். அதற்கான முஸ்தீபுகளைச் செய்கிறார்கள். இவர்களைத்தான் சமயாதீதிகள் என்கிறார்கள். இவர்களிடம் சமயம் என்பதே இல்லை.

இங்கே இப்போது என்பதிலிருந்து ஆசையே உன்னை எங்கே எப்போதைக்கோ கொண்டு போய்விடுகிறது. இங்கே இப்போது என்பதே நிஜம்.

அதனால்தான் அவர் எப்போதும் ஆசைக்கு ஆட்படுவ தில்லை என்று புத்தர் சொல்கிறார். எதிர்காலத்துக்கு அவர் போவதேயில்லை. நிகழ்காலத்தில் வாழ்கிறார். எதிர் காலத்தில் வாழ்வதென்பது பொய்யான வாழ்வை வாழ்வது. ஒரு பொய்த் தோற்றம் தரும் வாழ்வு அது.

ஓர் அழகான நடிகை. அவளிடம் வந்த ஒருவனுக்கு அவள் இடம் கொடுக்க மறுத்தாள், அவன் யூதன் என்பதால். அவளோடு சல்லாபிக்க ஒரு லட்சம் ஃபிராங்குகள் கொடுக்கிறேன் என்று அவன் சொன்னபோது அவள் வாய்விட்டுச் சிரித்தாள். பணம் தனக்கு ஒரு பொருட்டேயில்லை என்பதை அவனுக்குக் காட்ட



வேண்டும் என்று நினைத்தாள் அவள். அவனிடம் ஒரு லட்சம் ஃபிராங்குகள் நோட்டு எரியும் வரை தன்னை அவன் அனுபவிக்கலாம் என்று சொன்னாள்.

அடுத்த நாள் அவன் பணத்தோடு வந்தான். பத்து நோட்டுகளை வரிசையாக வைத்து முதல் நோட்டைப் பற்ற வைத்துவிட்டு படுக்கைக்குத் தாவினான். நோட்டுகள் எரிந்து தீர்ந்தவுடன் அவள் அவனைத் தன்னிடமிருந்து தள்ளிவிட்டாள்.

அவன் வெற்றிக் களிப்போடு, ''நான் உன்னை அனுபவித்துவிட்டேன்,'' என்றான்.

அவளோ, ''ஆமாம். ஆனால் ஒரு லட்சம் பிராங்குள் எரிந்து தீர்ந்துவிட்டது பார்,'' என்றாள்.

அவன் சிகரெட் ஒன்றைப் பற்ற வைத்துக் கொண்டே, ''அதனாலென்ன? அத்தனையும் கள்ள நோட்டுகள்,'' என்றான்.

எதிர்காலத்தில் வாழும் எவனும் கள்ள வாழ்க்கையைத்தான் வாழ்கிறான். அவன் உண்மையில் வாழ்வதில்லை. வாழ்வதாகப் பாசாங்கு செய்கிறான். வாழத்தான் நம்புகிறான். வாழத்தான் விரும்கிறான். ஆனால் வாழ்வதுதான் இல்லை. நாளை என்பது வருவதே இல்லை. எப்போதும் இன்றுதான் இருக்கிறது. எது இருக்க வருகிறதோ அது அப்போதே இங்கே இப்போது என்று ஆகிவிடுகிறது. அவனுக்கோ இங்கே இப்போது வாழ்வது எப்படி என்பது தெரிவதேயில்லை. அதிலிருந்து தப்பித்துக் கொள்வது மட்டுமே தெரிந்திருக்கிறது. அப்படித் தப்பித்துக் கொள்ளும் பாதையைத்தான் புத்தர் ஆசை என்கிறார். 'டன்ஹ' என்பது அவர் பயன்படுத்தும் வார்த்தை.



நிகழ்காலத்திலிருந்து தப்பித்துக் கொள்வதற்கு, அசலானதிலிருந்து போலியானதற்குப் போகும் முயற்சிக்கு அவர் தந்த வார்த்தை.

ஆசைப்படுகிறவனே தப்பித்துக் கொள்ள முயல்கிறவன்.

தியானிப்பவர்களைத் தப்பித்துக் கொள்ள முயல்கிறவர்கள் என்று சொல்வதுதான் விந்தை. முட்டாள்தனமாக அப்படிச் சொல்கிறார்கள். பிறர் எல்லோருமே தப்பித்துக் கொள்ள முயல்கிறவர்கள் எனும்போது, தியானிப்பவர் மட்டுமே அப்படிப்பட்டவர் அல்ல என்பதுதான் உண்மை.

தியானம் என்பது எண்ணங்களுக்கு அப்பால் போவது. மனதிலிருந்து விடுபட்டுப் போவது. அந்தந்தக் கணத்தில் இயல்பாக இருப்பதுதான் தியானம். தியானம்தான் தப்பித்துப் போவதற்குச் சிறந்த வழி என்று உலகம் நினைத்துக் கொண்டிருக்கையில், தியானம்தான் தப்பித்துக் கொள்ளாமல் இருக்கச் செய்யும் ஒரே வழி என்பதைச் சொல்லித்தானாக வேண்டும். வாழ்விலிருந்து தப்பித்துக் கொள்வது தியானம் என்று குற்றம் சொல்கிறார்கள். அவர்கள் முட்டாள்கள். என்ன சொல்கிறோம் என்பது அவர்களுக்குத் தெரிந்திருப்பதில்லை. தியானம் வாழ்விலிருந்து தப்பித்துக் கொள்வதல்ல. தப்பித்துக் கொண்டு வாழ்வுக்குள் போய்விடுவது. மனம் தான் தம் சிந்தனைகள் மூலம் வாழ்விலிருந்து தப்பிக்க வைக்கிறது. ஆசைதான் வாழ்விலிருந்து தப்பிக்க வைக்கிறது.

'ஆசைக்கு அவர் ஆட்படுவதில்லை.
தியானிக்கிறார்.'

திரும்பத் திரும்ப அவர் நிகழ்காலத்துக்கு வருகிறார். மனம் அப்போதைக்கப்போது தன் ஜாலத்தைக் காட்ட



அதைத் திரும்பத் திரும்ப நிகழ்காலத்துக்குக் கொண்டு வருகிறார். மெதுவாக அந்த விந்தை நடக்கிறது. ஒரு சன்னல் திறந்து கொள்ள ஆகாயத்தை அது ஆகாயமாக இருக்கக் காண்கிறாய். முதல் முறையாக காற்றையும் மழையையும் வெய்யிலையும் அவற்றின் அணுக்கத்தில் காண்கிறாய். முதல்முறையாக தியானிக்க ஆரம்பித்துவிட்டாய் அல்லவா...

வாழ்வை உணர்ந்து விடுகிறாய். வாழ்க்கை என்பது வெறும் வார்த்தையாக இல்லாமல் உணரத்தக்க வடிவம் கொள்கிறது. அன்பு என்பது வெறும் வார்த்தையாக இல்லாமல் சக்திப் பிரவாகமாக ஆகிவிடுகிறது. அனுக்கிரகம் என்பது வெறும் நம்பிக்கையாக இல்லாமல், வெறும் ஆசையாக இல்லாமல் நீ உணர்ந்ததாகி விடுகிறது. உன்னிடம் இருப்பதாகி விடுகிறது. நீயேயாக ஆகிவிடுகிறது.

**தியானிக்கிறார்.**

புத்தர் பிரார்த்திக்கச் சொல்லவில்லை. தியானிக்கச் சொல்கிறார். பிரார்த்தனை என்பது கூட ஒரு வகையில் ஆசையின் வெளிப்பாடுதான். பிரார்த்திக்கும் போது நீ ஆசைப்படுகிறாய்.

பிரார்த்தனை எப்போதும் எதிர்காலத்தில் ஒன்றை வேண்டுவது. பணம் வேண்டுமென்கிறாய். அல்லது கடவுளே வேண்டுமென்கிறாய். இரண்டும் ஒன்றேதான். ஏதாவது ஒன்றைக் கேட்கும்போது உன்னிடமிருந்து நீ நகர்ந்து விடுகிறாய்.

தியானம் என்பது ஒரு வகையில் எதையும் கேட்காதது. எந்தக் கேள்வியும் எழுப்பாதது. எந்தச் சிந்தனையும் இல்லாதது. பிரார்த்தனை சிந்தனையின் ஒரு பகுதி தான்.



அருமையானதுதான் என்றாலும் அது சிந்தனையின் பாற்பட்டது. அழகான ஒரு சிறையும் சிறைதானே.

பிரார்த்திக்கும் மனது பேராசை பிடித்தது. பிரார்த்திக்கும் மனது எந்த நிலை மாறுபாட்டையும் அடைவதில்லை. அது அதுவாகவே இருக்கிறது. பிரார்த்தனை அந்த மனதில் இருந்துதான் பிறக்கிறது. பிறகு மனதிலிருந்து பிறிதாக அது எப்படி இருக்க முடியும்?

உன்னிடமிருந்து வேறான ஒன்றுக்காக நீ எப்படிப் பிரார்த்திக்க முடியும்? உன்னுடைய பிரார்த்தனைதானே அது... அது உன் மனதைப் பிரதிபலிக்கும். உன் மனதிலிருந்து வெளிவருவது அது. உன்னுடைய மனதின் கிளைபரப்புதல் தானே உன் பிரார்த்தனை. அது எப்படி உன்னை உன் மனதிலிருந்து தூரக் கொண்டு போக முடியும்? பிரார்த்தனை உன்னை உன் மனதிலிருந்து பிரித்து எடுத்துக் கொண்டு போக முடியாது. தியானம் மட்டுமே உன்னை மனதைத் தாண்டிக் கொண்டு போக முடியும்.

தியானம் என்பது மனமற்ற ஒரு நிலை. பிரார்த்தனை என்பது சமயம் பாற்பட்ட ஒரு மனதின் வெளிப்பாடு. என்றாலும் அங்கே மனமிருக்கிறது. சமயம் என்ற அருமையான உடை உடுத்தி வரும்போது அது மிக ஆபத்தானதும் ஆகிவிடுகிறது.

உன்னுடைய பிரார்த்தனை உன்னுடைய பிரார்த்தனையே அல்ல. அது உன்னுடைய ஒரு பகுதி. உன்னைக் கொஞ்சம் நீட்டிவிட்டுக் கொள்வது. உன்னை விடச் சிறந்தவனாக உன்னை உன் பிரார்த்தனை ஆக்க முடியாது. தியானம் மட்டுமே உன்னை விட உன்னைச் சிறந்தவனாக்க முடியும். அதுதான் உன்னைக் கடந்து போவதற்கான ஒரே வழி.



தியானம் என்பது என்னவென்கிறாயா? ஏதாவது ஒன்றைப் பற்றித் தியானிப்பது தியானம் அல்ல. Meditation என்ற ஆங்கில வார்த்தை தவறாகப் புரிந்து கொள்ள வைத்துவிடுகிறது. தியானம் என்ற வார்த்தை எதைக் குறிக்கிறதோ அதைக் குறிக்க ஆங்கிலத்தில் சரியான வார்த்தை இல்லை. புத்தர் பயன்படுத்தும் வார்த்தை 'சம்மசதி.' இதைத்தான் தியானம் என்று மொழி பெயர்க்கிறார்கள். சரியான மனப்பாங்குடையவனாக இருத்தல். விழித்திருத்தல். உணர்வோடிருத்தல். ஜாக்கிரதையாக இருத்தல். கவனித்திருத்தல். சாட்சியாக இருத்தல். சம்மசதியைக் குறிக்கச் சரியான வார்த்தை என்று எதுவும் இல்லை.

சம்மசதி என்றால் உள்ளடக்கம் ஏதுமில்லாத உணர்வு இருத்தல் என்று பொருள். சிந்தனை ஏதும் இருப்பதில்லை. ஆசை ஏதும் இருப்பதில்லை. மனதுக்குள் எந்தச் சலனமும் இருப்பதில்லை. கடவுளைப் பற்றியோ வேறு எந்த உயர்ந்த எதைப் பற்றியோ எந்தச் சிந்தனையும் இல்லாத நிலை. இயற்கை, அதன் அழகு, பைபிள், குரான், வேதங்கள், அவற்றில் இருக்கும் பிரமாதமான சிந்தனைகள் என்று எதுவும் தியானத்தின் போது இருப்பதில்லை. சிந்தனையே இருப்பதில்லையே.

எந்தக் குறிப்பிட்ட வடிவத்தையும் உருவகப்படுத்திக் கொள்வதில்லை. மந்திரங்களைச் சொல்வதெல்லாம் மனத்தளவிலான விஷயங்கள். தியானத்துக்கு எந்த மந்திரமும் இல்லை. எதுவும் செய்யலாமல் இருப்பதுதான் தியானம். மனம் முற்ற முழுக்கக் வெறுமையாகிவிடுகிறது. வெறுமையாகிப் போன அந்த வெளியில் நீ இருக்கிறாய். போவதற்கு என்று எந்த இடமும் இல்லாத ஒரு வகையான உயிர்ப்பு, பரிசுத்தமான இருப்புத்தான் அது. தனக்குள் சாவகாசமாக இருக்கும் ஓர் இருப்பு. நிச்சலனமாக உனக்கே



சொந்தமான வீட்டுக்குள் இருப்பது. அதுதான் புத்தருடைய தியானத்தின் பொருள்.

புத்தரைப் போல யாரும் தியானத்துக்கு அவ்வளவு அருமையாக விளக்கம் தந்ததில்லை. பலரும் அந்நிலையைச் சாதித்திருக்கிறார்கள். ஆனால் வேறு யாரும் அந்த அளவுக்கு விளக்கிச் சொன்னதில்லை.

**'ஆசைக்கு அவர் ஆட்படுவதில்லை.**
**தியானிக்கிறார்.**

**தன் வைராக்கியத்தின் பலத்தால்**
**உண்மையான மகிழ்வைக் காண்கிறார்.'**

பரவசமே உண்மையான மகிழ்வு. எதை நீ மகிழ்ச்சி என்கிறாயோ அது மாறுவேடம் பூண்ட துயரம்தான். பொழுதுபோக்கு நிகழ்ச்சிகள் மகிழ்ச்சி தருகின்றன என்கிறாய். அந்த மகிழ்ச்சி நிலையில்லாதது. அது அசலான மகிழ்ச்சியாக முடியாது.

மகிழ்ச்சி என்பது மாறாத நிலைப்பாடுடையதாக இருக்க வேண்டும். மெய்யான எதுவும் நித்தியமானது. பொய்யானதுதான் நிலையில்லாது போகும்.

உண்மையான மகிழ்ச்சியைக் காண மனம் தன் துடிப்பை நிறுத்திவிட வேண்டும். உண்மையான மகிழ்ச்சி வெளியே இருந்து வருவதல்ல. உனக்குள்ளேயிருந்து கிளம்பிப் பீறிட்டு உன்னை மூழ்கடிப்பதுதான் உண்மை யான மகிழ்ச்சி. அப்போது நீ பரவசத்தில் ஜொலிக்கிறாய். பரவசத்தின் ஊற்றுக் கண்ணாகி விடுகிறாய்.

**'ஆசையை அவர் வென்றெடுக்கிறார்.**
**ஞானக் கோபுரத்தின் உயரத்திலிருந்து**
**உணர்வு கலவாத பார்வையோடு**



**துயருறும் கூட்டத்தைப் பார்க்கிறார்.**
**மலையுச்சியிலிருந்து**
**கீழே வசித்திருப்போரைக்**
**காண்கிறார்.'**

ஆசையை வென்றெடுத்துவிட்டு, மனதை வென்றெடுத்துவிட்டு, காலத்தை வென்றெடுத்துவிட்டு, ஆணவத்தை வென்றுவிட்டு ஒருவர் புத்தராகும் போது அவர் இந்த உலகத்தவராகவே இருப்பதில்லை. அவர் இந்த உலகில் இருக்கிறார்தான். என்றாலும் அவருடைய ஆத்மா உயர எழுந்து தன் உயிருருவின் வெய்யிலில் தகதகக்கும் உச்சியில் இருந்து, வாழ்வின் இருண்ட பள்ளத்தாக்குகளில் துயரில் உழல்பவர்களைக் காண முடிகிறது. அவர்கள் தட்டுத் தடுமாறிக் கொண்டிருப்பதை, கிறக்கத்தில் தள்ளாடுவதை, கண்டையிட்டுக் கொள்வதை, பேராசை பிடித்து அலைவதை, கோபத்தில் வெடிப்பதை, வன்முறையைக் கைக்கொண்டிருப்பதைக் காண முடிகிறது. அவருக்குள் மிகப் பிரமாதமான கருணை ஊற்றெடுக்கிறது. அவருடைய உணர்வுகள் உணர்ச்சிகள் சார்ந்திருப்பதில்லை. அவருடைய உணர்வுகள் எல்லாமும் சேர்ந்து கருணை மட்டுமே ஆகிவிடுகிறது.

உணர்ச்சி வசப்பட்டு இருப்பது என்றால் பிறரைப் பயன்படுத்திக் கொள்வது என்று பொருளாகிறது. அதுதான் ஒழுக்கக் கேட்டுக்கு அடிப்படையானதாகிறது. ஒவ்வொருவரும் தத்தம் அளவில் ஓர் இலடசியம் என்பதால் எவரொருவரையும் தனக்காக உபயோகப்படுத்திக் கொள்வதென்பது, மிக மோசமான ஒழுக்கக் கேடு என்றுதான் சொல்ல வேண்டும். தனக்காக அவனைப் பயன்படுத்திக் கொள்வது என்பது ஒரு சுரண்டல். இதைத்தான் நாம் காதல் அல்லது அன்பு அல்லது பாசம்



என்கிறோம். கணவன் மனைவியைப் பயன்படுத்திக் கொள்ளுதல். மனைவி கணவனைப் பயன்படுத்திக் கொள்ளுதல். குழந்தைகள் பெற்றோரைப் பயன்படுத்திக் கொள்ளுதல். பெற்றோர் குழந்தைகளைப் பயன்படுத்திக் கொள்ளுதல். இதைத்தானே நாம் அன்பு, பாசம், காதல் என்கிறோம்?

இது அன்பல்ல, பாசமல்ல, காதலல்ல. அது மனதின் ஒரு தந்திரம். சர்க்கரை பூசிய விஷம். இந்தக் காதலும் அன்பும் பாசமும் அருவருக்கத்தான் வைக்கின்றன. அதனால்தான் இந்த உலகம் முழுக்க அருவருப்பில் கிடக்கிறது. இவையெல்லாம் நோய்களாகிவிட்டன. இவற்றின் பெயர் குறிக்கும் அவையாக இவை இல்லாததால் உலகின் ஆத்மாவைப் பீடிக்கும் நோய்களாகிவிட்டன. இது உணர்ச்சிப் பீடிப்பு. காமம். பிறரைத் தனக்காகப் பயன்படுத்திக் கொள்வது.

உணர்ச்சிகளைக் கடந்துவிட்ட அந்த இடைக்காலத்தில் புத்த நிலையை நோக்கிப் போகும் ஒருவர் உணர்ச்சிகள் ஏதும் இல்லாதவராக இருக்கிறார்.

அதற்கடுத்து மூன்றாவது நிலைமைக்குப் போய்ச் சேருகிறார். புத்தமையை அடைந்தாயிற்று. அப்போது பரவசம்தான். முடிவில்லாத பரவச ஊற்றுத்தான். ஏஸ் தம்மோ ஸனந்தனோ. நித்தியத்தின் கோட்பாட்டைக் கண்டு கொண்டானபின், வாழ்வின் வற்றாத கருவூலத்தைக் கண்டானபின் அவர் பொங்கிப் பிரவாகிக்கிறார். அன்பும் பாசமும் திரும்ப வந்து சேர்கின்றன. பார்க்கப் போனால் அப்போது வருவதுதான் உண்மையான அன்பு, பாசம், காருண்யம். எல்லோர் மீதும் அதைச் சொரிகிறார். அவரிடம் போய்ச் சேருகிறவர்கள் யாராக இருந்தாலும் அந்தப் பரவசத்தில் பங்கு கொள்கிறார்கள். தன் பரவசத்தை



அவர்களோடு பங்கிட்டுக் கொள்கிறார். தன் நெறியை, தன் ஞானத்தைப் பங்கிட்டுக் கொள்கிறார்.

**‘பிரக்ஞை யற்றோரிடையே**
**பிரக்ஞையோடு,**
**பிறர் கனவில் ஆழ்ந்திருக்கத் தான்**
**விழிப்போடு,**
**களத்தில் முன்நிற்கிறார்,**
**பந்தயக் குதிரையின் வேகத்தோடு.’**

தியானத்திலும் கருணையிலும் நிலைத்தவனாகிவிடும் போது, தூக்கத்துக்கும் கனவுக்கும் இரையாக மாட்டாய். தூங்கும்போதும் பிரக்ஞையோடு இருப்பாய். அப்போது உன் வாழ்வு பாயும் ஓர் அம்பாகிவிடுகிறது. வெகு வேகமாகப் பாயும் ஓர் அம்பு. இலக்கை நோக்கி ஒளியின் வேகத்தில் பாயும் ஓர் அம்பு. முதன் முதலாக ஓர் உயிருருவாகிறாய்.

பந்தயக் குதிரையின் வேகத்தோடு களத்தில் முன்நிற்கிறார். பிறர் கனவில் ஆழ்ந்திருக்க தான் விழிப்போடு, பிரக்ஞையற்றவர்களிடையே பிரக்ஞையோடு இருக்கிறார்.

அதுதான் புத்தருக்கும் பிறருக்குமிடையே உள்ள வேறுபாடு. பிறர் உண்மையில் வாழாதவர்களாக வெறுமனே கனவு கண்டு கொண்டிருக்கிறார்கள். ஏதோ ஒரு காலத்தில் வாழப் போகிறோம் என்ற நம்பிக்கை மட்டுமே அவர்களுடையது. வாழத் தயாராகிக் கொண்டிருக்கிறார் கள். வாழ்வதில்லை. அந்த நாளும் வருவதேயில்லை. அந்த நாள் வருமுன் இறப்பு வந்து விடுகிறது.

புத்தர் எப்போதும் விழித்திருக்கிறார். தூங்கும்போதும் அவர் கனவு காண்பதில்லை. ஆசைகள் மறைந்து



போகும்போது கனவுகளும் மறைந்துதான் போகின்றன. கனவுகளே தூக்கத்தின் மொழியில் பெயர்க்கப்பட்ட ஆசைகள்தானே. புத்தர் பூரணமான விழிப்பிலேயே தூங்குகிறார். உள்ளே விளக்கு எரிந்து கொண்டே இருக்கிறது. உடலுக்கு ஓய்வு. உடல் தூங்குகிறது. அவருக்கு ஓய்வு தேவையே இல்லை. அவருடைய சக்திக்குக் களைப்பென்பதே இல்லை. அவருடைய நடுமத்தில் விளக்கு எரிந்து கொண்டே இருக்கிறது. விளிம்புகளில் ஆழ்ந்த தூக்கம். ஆனால் அந்த விளக்கோ விழித்திருக்கிறது. ஜாக்கிரதையாக இருக்கிறது. நாம் விழித்திருக்கும் போதும் தூங்கிக் கொண்டிருக்கிறோம். அவரோ தூங்கும் போதும் விழித்துக் கொண்டுதானிருக்கிறார்.

கவனித்திருந்தே இந்திரன்
தேவர்களின் அரசனானான்.
கவனித்திருப்பதுதான் எவ்வளவு பிரமாதம்.
தூங்கிக் கிடப்பதுதான் எவ்வளவு
முட்டாள்தனம்.

தன் பிரக்ஞைக்குக் காவலாயிருக்கும்,
தன் எண்ணங்கள் அலைப்புறுவதைக்
கண்டு பயக்கும் பிக்குவே
தன் எச்சரிக்கையெனும் நெருப்பில்
ஒவ்வொரு தளையினூடும்
புடம்போட்டுத் தேர்கிறார்.

சன்னியாசிக்கு புத்தரின் வார்த்தை பிக்கு. பிக்குவுக்கு என் வார்த்தை சன்னியாசி. புத்தரின் வார்தையை நான் அப்படியே எடுத்துக் கொள்ளவில்லை. அதற்குக் காரணம்



இருக்கிறது. பிக்கு என்றால் பிச்சைக்காரன் என்று பொருள்.

புத்தர் தன் ராஜ்ஜியத்தைத் துறந்து பிச்சைக்காரர் ஆனார். பிச்சைக்காரராக இருந்த போதும் அரசனைப் போலத்தான் நடந்தார். முன்பிருந்ததை விடக் கம்பீரமாக, கண்ணியமாக, செல்வந்தராக நடந்தார். ஆனால் ராஜ்ஜியத்தைத் துறந்துவிட்டதாலேயே அவரைப் பிக்கு என்றார்கள். பிறகு அவருடைய சீடர்களும் அந்த வார்த்தையால் தம்மை அழைத்துக் கொள்ளத் தொடங்கினார்கள்.

நீங்கள் பிச்சைக்காரர் ஆக வேண்டும் என்று சொல்ல மாட்டேன். நீங்கள் சாதகர்களாக வேண்டும். அதனால்தான் சன்னியாசி என்ற வார்த்தையைத் தேர்ந்தெடுத்தேன். சன்னியாசி என்பவர் சரியாக வாழ்வது எப்படி என்று தெரிந்து வைத்திருப்பவர். அதில் துறப்பது என்பது எதுவும் இல்லை. அதில் ஆனந்தம் இருக்கிறது. கொண்டாட்டம் இருக்கிறது.

**தன் பிரக்ஞைக்குக் காவலாயிருக்கும்,**
**தன் எண்ணங்கள் அலைப்புறுவதைக்**
**கண்டு பயக்கும் பிக்குவே**
**தன் எச்சரிக்கையெனும் நெருப்பில்**
**ஒவ்வொரு தளையினூடும்**
**புடம்போட்டுத் தேர்கிறார்.**

ஆம், தியானம் என்பது தீ. அது உன் எண்ணங்களை எரித்துவிடுகிறது. உன் ஆசைகளை எரித்துவிடுகிறது. உன் நினைவுகளை எரித்து விடுகிறது. கடந்த காலத்தையும் எதிர்காலத்தையும் எரித்து விடுகிறது. உன்னுடைய மனதையும் அகங்காரத்தையும் எரித்து விடுகிறது. நீ



உன்னை இன்னாரெனக் காட்டுவது இன்னின்ன என்று எதை நினைத்துக் கொண்டிருக்கிறாயோ அதை எல்லாம் எரித்து விடுகிறது.

ஓர் இறப்பும் ஒரு பிறப்புமாக, ஒரு சிலுவை அறைதலாக, பின் உயிர்த்தெழுவதாக, நீ புதிதாகப் பிறந்தவனாகிறாய். உன்னுடைய அடையாளங்கள் முழுக்க இழந்தாகி விடுகிறது. வாழ்வைக் காணப் புதியதொரு பார்வை உனக்குக் கிடைத்து விடுகிறது.

வாழ்வின் அந்தப் பார்வைதான் கடவுள். தம்மா. தாவோ. லோகோ. தனக்கென ஏதும் அதற்குப் பெயரில்லாததால் உனக்குப் பிடித்த பெயரை வைத்துக் கொள்ளலாம். பார்க்கப் போனால் அதை வார்த்தைகளால் வெளிப்படுத்தவே முடியாது. குறிப்புக் காட்டலாம். அவ்வளவே.

தன் பிரக்ஞைக்குக் காவலாயிருந்து,
தன் குழப்பம் பற்றிய பயத்தோடிருக்கும்
பிக்குவுக்குத் தோல்வியில்லை.
அவரே நிம்மதிக்கான பாதையைக்
கண்டுகொண்டவர்.

மனம் என்றாலே குழப்பம்தான். ஆயிரக்கணக்கான எண்ணங்கள் ஒன்றோடு ஒன்றாகப் பின்னிப் பிணைந்து, உன்னுடைய கவனத்தைக் கவரத் தமக்குள் போட்டி போட்டுக் கொண்டு கிடக்கின்றன. ஆயிரக்கணக்கில் எண்ணங்கள் ஆயிரக்கணக்கான திசைகளில் உன்னை இழுத்தடிக்கின்றன.

இத்தனைக்கும் நீ எப்படி ஓர் உருவமாக இருந்து வாழ்கிறாய் என்பதே பெரிய ஆச்சரியம்தான். எப்படியோ ஒன்றாக இருந்து சமாளிக்கிறாய். எப்படியோதான். அது ஒரு



முகப்பு. அதற்குப் பின்னால் அலைப்புறும் கூட்டம்தான் இருக்கிறது. ஓர் உள்நாட்டுப் போரே நடந்து கொண்டிருக்கிறது. முடிவே இல்லாத உள்நாட்டுப் போர் அது. தமக்குள் போரிட்டுக் கொண்டிருக்கும் எண்ணங்கள். நீ அவற்றைப் பூர்த்தி செய்ய வேண்டும் என்று கோரும் எண்ணங்கள். ஒரே களேபரம்தான். அதைத்தான் நீ மனம் என்கிறாய்.

ஆனால் மனம் என்றாலே குழப்பம்தான் என்று தெரிந்து கொள்ளும்போது, உன்னை உன் மனத்தோடு அடையாளப் படுத்திப் பார்த்துக்கொள்ளாத போது உனக்கு எப்போதும் தோல்வியிருக்காது. மனம் மலடாகிப் போகும். எப்போதும் கவனித்துக் கொண்டே இருப்பதால் உன்னுடைய சக்தி அனைத்தும் உள்ளிழுக்கப்பட மனத்தை விட்டு விலகி விலகிப் போய்க் கொண்டிருக்க, அதற்கு ஊட்டம் கிடைக்காமல் போகிறது.

மனம் இறந்துவிடும்போது மனமல்லாதவனாகப் பிறந்து விடுகிறாய். அந்தப் பிறப்பே ஞானோதயம். அந்தப் பிறப்பு முதல் முதலாக உன்னை நிம்மதியின் உலகுக்கு, தாமரைக் கண்ணான் உலகுக்குக் கொண்டு போகிறது. பரவசம், கருணை, காருண்யம் நிறைந்த உலகில் பிறப்பெடுத்து விடுகிறாய்.

இல்லையோ நீ நரகத்தில் வீழ்ந்து கிடக்கிறாய். இந்தக் கணம் நீயிருப்பது நரகத்தில்தான். ஆனால் தீர்மானித்து விடுவாய் என்றால், இந்தக் கணம் தாண்டிக் குதித்துப் போய்விட ·வேண்டும் என்று தீர்மானித்துவிட்டால், நரகத்திலிருந்து சொர்க்கத்திற்கு ஒரே தாவல்தான்.

இது உன்னைப் பொறுத்தது. நரகத்தைத் தேர்ந்தெடுத்துக் கொள். அல்லது சொர்க்கத்தைத்



தேர்ந்தெடுத்துக் கொள். நரகம் மலிவானது. சொர்க்கமோ மிக அரிய முயற்சியை விலையாகக் கேட்கிறது. விடாமுயற்சியும் தீர்மானமும் தேவையாக இருக்கிறது.

நரகத்தைத் தேர்ந்தெடுத்துக் கொண்டாயென்றால் நீ எப்படியிருக்கிறாயோ அப்படியே இருந்துவிடலாம், பிரக்ஞையில்லாதவனாக.

சொர்க்கத்தைத் தேர்ந்தெடுத்துக் கொண்டால் நீ உயர வேண்டும். உன்னை மீறிக் கொண்டு உயர வேண்டும். தாண்டிப் போக வேண்டும். பள்ளத்தாக்கிலிருந்து சிகரத்துக்கு ஏறிப் போக வேண்டும்.

சிகரங்கள் உனதாகிப் போகும். ஆனால் அதற்கென்று ஒரு விலை கொடுக்க வேண்டியிருக்கிறது. அந்த மலை யேற்றம் சிரமமான முயற்சிதான். சர்வ ஜாக்கிரதையாக இருக்க வேண்டும். தியானித்திருக்க வேண்டும். அப்படி இருந்தால் ஒரு நாள் இல்லாவிட்டால் ஒரு நாள் வெய்யிலில் பளபளக்கும் உச்சியைச் சென்று சேர்வாய். அதுதான் விடுதலை. மோட்சம். அதுதான் நிர்வாணம். ஆணவம் கழிந்து போய் இறைவன் பிறப்பெடுப்பது.

நீங்கள் கடவுளராவதற்கு உரிமை பெற்றவர்கள். அப்படி ஆகவில்லையென்றால் நீங்களன்றி வேறு யாரும் அதற்குப் பொறுப்பாக முடியாது.

புத்தரின் வார்த்தைகளைக் காதுகொடுத்துக் கேள். கேட்பதோடு நிறுத்திக் கொள்ளாதே. அதன்படி நடந்து கொள். பிரக்ஞையின் பாற்பட்ட வாழ்வுக்கு உன்னை அர்ப்பணித்து விடு. தீர்மானமாக இரு.

ஆனால் மறுபடியும் நினைவுறுத்தத்தான் வேண்டும். இதுவும் வாழ்வின் ஒரு பரிமாணம்தான். பிரமாதமானது.



என்றாலும் ஒரு பரிமாணம்தான். இன்னும் அதிகம் செய்ய வேண்டியிருக்கிறது. புத்தர் உனக்குத் தந்துவிட்டுப் போன காரியத்தை விடச் சிரமமான காரியத்தை உன்னிடம் ஒப்படைக்கிறேன்.

புத்தர் ஒரு பரிமாணத்தை அளித்துவிட்டுப் போனார். நானோ உங்களுக்கு முப்பரிமாணம் இருக்க வேண்டும் என்கிறேன். ஒரு வகைத் திரட்சியிருக்க வேண்டும் என்கிறேன்.

இந்த உலகத்துக்குப் புதியதொரு மானுடம் தேவைப்படுகிறான். பழையவன் உளுத்துப் போய் முடிந்து போய்விட்டான். அவனுக்கு எதிர்காலமில்லை. அவன் பிழைக்க வழியில்லாதவன். தன்னுடைய அந்தத்துக்கு வந்து சேர்ந்துவிட்டான். மரணப்படுக்கையில் கிடக்கிறான்.

புதியவன் பிறக்கவில்லை யென்றால், கிழக்கும் மேற்கும் சந்திக்கவில்லை யென்றால் மானுடத்தின் கதி அதோகதிதான்.

இங்கு நான் நடத்திக் கொண்டிருக்கும் பரிசோதனை அந்த வகையான மனிதனின் பிறப்புக்கு வழி காண்பதுதான். மிகப் பிரமாதமானதொரு பரிசோதனையில் நீங்கள் பங்கெடுத்துக் கொண்டிருக்கிறீர்கள். ஆசீர்வதிக்கப் பட்டவர்கள் என்பதை உணருங்கள். பாக்கியசாலிகள் என்பதை உணருங்கள். எதில் ஈடுபட்டுக் கொண்டி ருக்கிறீர்கள் என்பது உங்களுக்கே தெரியாமல் இருக்கலாம். ஆனால் புதியதொரு சகாப்தத்தைத் தோற்றுவித்துக் கொண்டிருக்கிறீர்கள். எந்த அளவுக்கு இந்தப் பரிசோதனையிலும் என்னோடும் ஈடுபாடுடையவர்களாக இருக்கிறீர்கள் என்பதைப் பொறுத்தது எல்லாமும்.



இதுவரை முயன்ற பரிசோதனைகளிலேயே மிகப் பெரிய திரட்சி காணும் பரிசோதனை இதுதான்.

இன்றைக்கு இது போதுமே...





தம்மபதம் – ஓஷோவின் சொற்பொழிவுகள்

# புதியதொரு படிநிலையின் ஆரம்பம்

# 8





முதல் வினா

அன்பிற்குரிய குருவே,

**சாஸ்திரிய சங்கீதத்தைக் கேட்க**
**எனக்குக் காதுகள் இல்லை.**
**கலைக் கூடங்கள் முட்டாள்தனமாகத்**
**தோன்றி அலுப்பைத் தான் தருகின்றன.**
**எனவே முதல் கட்டத்திலிருந்து**
**மூன்றாவது கட்டத்துக்கு**
**எண்ணங்களிலிருந்து நேராக**
**நடுமத்துக்குப் போவது சாத்தியமா?**
**இந்தக் கலை, அழகு குப்பையையெல்லாம்**
**ஒதுக்கித் தாண்டிப் போவது சாத்தியமா?**

**நிர்குண்,** *சரியாகவே சொன்னாய். கலை என்ற பெயரில் நிறையத்தான் குப்பை கூளம் சேர்ந்து விட்டிருக்கிறது. ஆனால் அழகியல் என்று நான் சொன்னபோது கலைக்கூடங்களிலும் மியூசியங்களிலும் சேர்ந்து கிடக்கும் குப்பையைக் குறிக்கவில்லை.*



அழகியல் எனும்போது உன்னுடைய ஒரு குணத்தைக் குறித்தேன். ஓவியம், இசை, கவிதை என்று பொருள் வயப்பட்டதையல்ல. உன் உயிருருவில் இருக்கும் ஒரு குணம் சார்ந்தது. அழகைக் கண்டுகொள்ளும் ஓர் உணர்வு, அழகின் மேல் வைத்த காதல், பொருட்களில் ஊடும் பாவுமாகப் பரவியிருக்கும் ஓர் அழகு, நித்தியமாக எங்கும் நடந்து கொண்டிருக்கும் ஒரு நடனம், அதைப் பற்றிய பிரக்ஞை, தூரத்திலிருந்து கூட இனிய பாடலைக் கேட்கக் காதுகள்...

இதுவெல்லாம் குப்பையில்லை. உயிருருவின் உட்புரியில் இருப்பவை.

என்றாலும் சாஸ்திரிய சங்கீதம், கலைக் கூடத்தின் ஓவியங்கள் என்ற இவை உனக்குச் சலிப்பூட்டுகின்றன என்பதை என்னால் புரிந்து கொள்ள முடிகிறது. ஏன் எல்லோரும் அதைப் பற்றி இவ்வளவு பேசித் திரிகிறார்கள் என்பது உனக்கு விநோதமாகப் படுவதும் சரிதான்.

அழகியல் என்பது வாழ்வை ஒரு கலையுணர்வோடு அணுகிப் பார்ப்பது. நிறங்கள் எல்லாவற்றையும் ஒருங் கிணைத்துப் பார்க்கும்போது ஒவ்வொரு மரமும் ஓர் ஓவியமாகிறது. ஒவ்வொரு மேகமும் இறைவனின் இருப்பிட மாகிறது. நிறங்களின் ஒளிப் பிரகாசத்தால் தவிர்க்க முடியாது போய், விழிப்பாக, பிரக்ஞையோடு, அன்போடு, அவற்றுக்காகக் கண்களைத் திறந்து வைத்துக் கொண்டிருப்பது. இதைத்தான் நான் கலைக் கண்ணோட்டம் என்கிறேன்.

இசை உன் ஆத்மாவில் இருக்க வேண்டும். உன் உயிருரு இசை மயமாக இருக்க வேண்டும். அதில் ஒரு லயம் இருக்க வேண்டும். மனிதன் நெறிவழிப்பட்ட பிரபஞ்சமாக இருக்கலாம். அல்லது தறிகெட்டுப் போய்த் திரியலாம்.



இசையானது நெறி கெட்ட அலங்கோலத்திலிருந்து நெறிப்பட்ட பிரபஞ்சத்துக்குப் போகும் பாதை. ஒழுங்கிழந்தவனாக, லயமில்லாதவனாக, அபஸ்வரமான ஒலியாக, சந்தைக் கடை இரைச்சலாக ஒருவன் இருக்கலாம். அல்லது ஒரு கோயிலாக, புனிதமானதோர் அமைதியாக இருக்கலாம். பிரபஞ்ச கானம் அங்கே கேட்க இருக்கலாம். தோற்றுவாய் காண முடியாத இசை தானாக ஒலிக்கக் கேட்கலாம்.

ஜென் தத்துவத்தில் இதை ஒரு கை ஓசை என்பார்கள். எழுப்பாத ஒலி - 'அநாஹத் நாட்' என்ற பெயரில் பல நூறு ஆண்டுகளாக இந்திய ஞானிகள் அதை இனங்கண்டிருக்கிறார்கள்.

அது உன் உயிருருவில் இருக்கிறது. அதைக் கேட்க எங்கேயும் போக வேண்டியதில்லை. அது அநாதி இசை. அதுவே மிகச் சமீபத்திய இசையும் கூட. உயிருருவின் இசை. உன் இருப்பின் ஓசை. அதைக் கேட்க முடியவில்லை என்றால் நீ செவிடு என்றுதான் பொருள்.

அதைத் தவிர்க்க எந்த வழியும் இல்லை நிர்குண். மியூசியம், கலைக்கூடங்களைத் தவிர்த்துவிடலாம். தவிர்ப்பது நல்லதும் கூட. கலையைப் பற்றியோ கலை விமரிசனங்கள் பற்றியோ நீ கவலைப்பட வேண்டியதில்லை. அதையெல்லாம் மறந்து விடு. நீ வாழ்வையே படைக்கும் கலைஞனாக வேண்டும்.

ஒரு வரி கூட எழுதாவிட்டாலும் புத்தரை நான் கவிஞரென்பேன். இதுவரை இருந்துவிட்டுப் போன மிகப்பெரிய கவிஞர்களில் அவர் ஒருவர் என்பேன்.

அவர் ஒரு ஷேக்ஸ்பியர் அல்ல. மில்டனல்ல. காளிதாசனில்லை. ரவீந்திரநாத் தாகூர் அல்ல. என்றாலும் அவருடைய கவிதையோடு ஒப்பிடும்போது ஷேக்ஸ்



பியரும், மில்டனும், காளிதாசனும், ரவீந்திர நாத்தும் ஒன்றுமே இல்லாமல் போகிறார்கள்.

அவருடைய வாழ்வே கவிதை. அவருடைய பார்வை, அவருடைய நடை எல்லாமே கவிதை.

சில நாட்களுக்கு முன் ஸெயிண்ட் தெரசாவின் அருமையானதொரு வாசகத்தைப் படித்தேன். "நீ செய்ய வேண்டியதெல்லாம் பார்க்க வேண்டியதுதான்." அவர் சொல்ல வந்ததையெல்லாம் இந்த எளிய வாசகத்தில் சொல்லிவிட்டார். தேவைப்படுவதெல்லாம் பார்வைதான். பார்ப்பதற்கான திறன் இருந்தால் போதும், கடவுளைக் கண்டுவிடலாம். கேட்பதற்கான திறன் இருந்தால் கடவுளைக் கேட்டுவிடலாம். தொட்டு உணரும் திறன் இருந்தால் அனைத்தின் ஊடும் பாவும் அவருடைய தாகிவிடும். பாறையைத் தொட்டும் கடவுளை உணர்வாய்.

கலைப் பொருட்களைப் பற்றிய விஷயமல்ல இது. ஒவ்வொன்றையும் கலைப் பார்வையோடு பார்க்கும் கண்ணோட்டம் பற்றியதுதான். நிர்குண், உனக்கு அந்தக் குணம் இருக்கிறது. அதனால்தான் சாஸ்திரிய சங்கீதத்திலும் கலைக் கூடங்களிலும் அலுப்படைந்து விட்டாய். உனக்கே தெரியாமல் உனக்குள் அவற்றை மீறியதொன்றைக் கண்டு கொண்டதால்தான் இந்த அலுப்பும் சலிப்பும். ஆனால் இன்னமும் நீ அதை முழுவதுமாகத் தெரிந்து கொள்ளவில்லை. கலைக் கூடங்களை ஒதுக்கி விட்டுப் போகும்போது நீ எதையும் இழந்துவிட மாட்டாய். ஆனால் அழகியல் தளத்தை ஒதுக்கிவிட்டுப் போக முடியாது. அதன் வழியாகப் போயே ஆக வேண்டும்.

அப்படிப் போகவில்லையென்றால் வறியவனாகத்தான் இருப்பாய். மிக மதிப்பு வாய்ந்த ஏதோ ஒன்றை இழந்தி ருப்பாய். உன்னுடைய ஞானோதயம் பூர்த்தியாகாது.



உன் ஒரு பகுதி இருண்டே கிடக்கும். உன் ஆத்மாவின் ஒரு மூலையில் இருட்டுத் தானிருக்கும். அந்த இருண்ட பகுதி ஒரு பாரமாகிவிடும்.

முழுக்க ஞானமடைய வேண்டும். எதையும் ஒதுக்கி விட்டுப் போகக் கூடாது. குறுக்கு வழிகள் எதையும் கண்டுபிடிக்கக் கூடாது. எல்லாத் தளங்களும் வளர்ச்சிக்கான படிநிலைகள் என்பதால், இயல்பாக அத்தனையையும் கடந்தாக வேண்டும்.

ஒன்றை மறந்துவிடாதே. இசை, கவிதை, ஓவியம், சிற்பம் என்று சொல்லும் போது சிறப்பானதொரு பொருள்படவே நான் பேசுகிறேன்.

ஹெலன் கெல்லர் இந்தியாவுக்கு வந்தபோது ஜவாஹர்லால் நேருவைப் பார்க்கப் போனாள். அவளுக்குப் பார்வையில்லை. காதும் கேட்காது. நேருவின் முகத்தைத் தொட்டு உணர்ந்தாள். இரண்டு கைகளாலும் அவர் முகத்தைத் தொட்டுப் பார்த்து மிகவும் மகிழ்ச்சி கொண்டாள். தன் மகிழ்வை வெளிப்படுத்தத் தவற வில்லை. ''அழகான ரோமானிய சிலைகளைத் தொட்டுப் பார்த்த போது எப்படியிருந்ததோ அப்படியே இருந்தது இவர் முகத்தைத் தொட்டுப் பார்த்த போது. அதே குளுமையும் வடிவும் கட்டமைப்பும்,'' என்றாள்.

இந்தப் பெண்ணிடம் ஒரு சிற்பியின் இதயம் இருந்தது. குருடுதான். செவிடுதான். என்றாலும் ஒரு பெரிய கலைஞனின் மேதைமை அவளிடம் இருந்தது.

குருடாகவும் செவிடாகவும் இருந்ததால் வாழ்வை உணர அவளுக்குப் புதிய முறைகள் தேவைப்பட்டன. சில சமயங்களில் சாபங்கள் கூட வரங்களாகி விடுகின்றன.



நீரைத் தொட்டுப் பார்த்து அதன் குளுமையையும், ஓட்டத்தையும் ஜீவனையும் அதிர்வுகளையும் உணர முடிகிறது. கண்ணால் பார்த்துவிடுவதால் நீ அவற்றை உணர முடியாமல் போகிறது. ''இதிலென்ன இருக்கிறது?'' என்று அலட்சியப்படுத்தி விடுகிறாய்.

அவளால் பார்க்க முடியவில்லை என்பதால் பாறையின் கட்டமைப்பை உணர முடிகிறது. கண்ணால் பார்க்கும் நீ அதை உணரத் தவறிவிடுகிறாய். பாறையின் கட்டமைப்பை உன்னால் உணர முடிவதில்லை.

சில சமயம் கண்களை மூடிக் கொண்டு பாறையைத் தொட்டுப் பார்ப்பது வெகுவாக முக்கியத்துவம் கொண்டதாகிறது. பார்ப்பதில்லை என்பதால் தொடும் கைகள் மூலமே உணர வேண்டியிருக்கிறது. கைகளைக் கண்களாக்கிக் கொள்ள வேண்டியிருக்கிறது.

ஆச்சரியப்பட்டுத்தான் போவாய். முதல் முறையாகப் பாறையின் கட்டமைப்பிலும் ஒரு பரிமாணம் இருப்பதைத் தெரிந்து கொள்வாய்.

பார்வையும் செவிப்புலனும் இல்லாமல் போய்விட்ட தால், அவளுடைய வாசனை உணர்வு சரியாச் செயல் பட்டுக் கொண்டிருந்தது. பொருட்களின், மனிதர்களின் வாசனையை அவள் உணர முடிந்தது. ஒரு மரத்துக்கும் இன்னொரு மரத்துக்குமான வித்தியாசத்தை வாசனை கொண்டே தெரிந்து கொள்ள முடிந்தது. மனிதர்களுக் கிடையே கூட அவளால் வித்தியாசம் காண முடிந்தது.

அவள் பிக்காஸோவைப் போல, டாலியைப் போல, வான்கோவைப் போல அழகுணர்ச்சி கொண்டவள்தான்.

நிர்குண், அழகியல் குப்பை கூளம் இருக்கத்தான் செய்கிறது. மனிதன் பிரக்ஞையின்றிப் படைப்பதெல்லாம்



குப்பையும் கூளமும்தானே. பிக்காஸோவின் ஓவியங்கள் பிக்காஸோவின் மனதுக்குச் சாட்சியாகின்றன. எங்கோ அடி ஆழத்தில் பிக்காஸோவுக்குப் பைத்தியம் பிடித்திருக்க வேண்டும். அவருடைய ஓவியங்கள் அப்பைத்தியத்திலிருந்து தப்பிக்கும் வழிகள்.

அந்த ஓவியங்கள் துயரம் மூலம் நிவாரணம் தருபவை. உன்னுடைய இயக்கத் தியானத்தில் எதைச் செய்கிறாயோ அதை அவர் ஓவியத்தின் மூலம் செய்கிறார். மனதின் இறுக்கத்தை, மனதிலிருக்கும் அசிங்கங்களை, பயங்கரக் கனவுகளை வீசி எறிகிறார். எறிந்தே ஆக வேண்டி யிருக்கிறது. ஓவியங்கள் மூலமாகச் சுலபமாக எறிந்து விடவும் முடிகிறது.

கார்ல் கஸ்டாவ் யங் தன்னிடம் வரும் நோயாளிகளை ஓவியம் வரையச் சொல்வதுண்டு. மனோவியாதிக்காரர்கள் பலரும் பிரமாதமான ஓவியங்களை வரைவார்கள். என்றாலும் அவை நிச்சயமாகப் பைத்தியக்காரத்தன மானவைதான். பைத்தியம் பிடித்தவன் எப்படிப் புத்தியோடு வரைய முடியும்? அதில் அழகிருக்கலாம். வடிவிருக்கலாம். வண்ணக்கலவை சரியான விகிதத்தில் இருக்கலாம். தீர்க்க தரிசனம் கூட இருக்கலாம். என்றாலும் அதைச் சுற்றி அவனுடைய பைத்தியம் படர்ந்துதானிருக்க வேண்டும்.

யங் மெதுவாக ஓர் உண்மையைத் தெரிந்து கொண் டார். ஓவியங்களை வரையச் செய்து பைத்தியத்தைக் குணமாக்க முடியும் என்று தெரிந்து கொண்டார். சரியான முடிவுக்குத்தான் வந்திருக்கிறார்.

பயங்கரக் கனவுகளைப் படமாக வெளிப்படுத்த முடிந்தால் நீ அவற்றை நீக்கிவிடலாம். அது ஒரு வகை



வெளிப்பாடு. வெளிப்படுத்திவிடும்போது விடுதலை கிடைத்து விடுகிறது. வெளிப்படுத்து வது விடுதலை தருகிறது. ஓவியம் அழகிய விதங்களில் வெளிப்படுத்தும் ஒரு வகை.

இறப்பைப் பற்றிய பயமா? இறப்பு என்ற எண்ணம் உன்னைச் சித்திரவதைப் படுத்துகிறதா? இறப்பைப் பற்றிப் பயங்கரக் கனவுகளா? இறப்பைப் பல வகையிலும் படமாக வரைந்து பார். அப்படிப்பட்ட எண்ணங்கள் மறைந்து போகும்.

அடி மனதிலிருந்து மேலே கொண்டு வந்து விடுகிறாய். எதை அப்படி உன் உணர்தலுக்குள் கொண்டு வந்து விடுகிறாயோ அதிலிருந்து விடுபட்டு விடுகிறாய்.

ஆனால் மனித இனமோ இதற்கு எதிரிடையானதைத் தான் செய்து கொண்டிருந்துவிட்டது. உணர்ந்ததை உணர்வுகளின் ஆழத்துக்குள் தள்ளிவிட்டுத் தெரியாததாக ஆக்கிக் கொள்ளத்தான், பலநூறு ஆண்டுகளாக நம்மைப் பழக்கப்படுத்தி வைத்திருக்கிறார்கள். அதுதான் அடக்கி வைப்பதென்பது.

ஒரு வகையில் அதுவும் விடுதலைதான். ஆனால் நிஜமான விடுதலை அல்ல. உனக்குள் ஆழப் போய் விடுகின்றன. ஆழப் புதைந்து விடுகின்றன. உன்னை மேலும் அலைக்கழிக்கத்தான் செய்யும். உன்னுடைய ஆழ்மனதிலிருந்து உன்னைக் கட்டுப்படுத்தும். உனக்குத் தெரியாமலேயே அது நடக்கும்.

மனப்பகுப்பாய்வியல் அடக்கி வைப்பதற்கு எதி ரானது. ஆழ்மனதில் அடக்கி வைத்திருப்பதையெல்லாம் தெரிந்துணரும் நினைக்குக் கொண்டு வருவது. இதைப் பல வகையிலும் சாதிக்கலாம். மனப்பகுப்பாய்வியல் மிக



நீண்ட வழி. மூன்று அல்லது ஆறு வருடங்களாகலாம். சில சமயங்களில் பத்து வருடங்கள் கூட ஆகலாம். அப்படியும் முழுமையானதாக இருப்பதில்லை. எந்த ஒரு மனிதரையும் பூரணமாக மனப்பகுப்பாய்வுக்கு ஆட்பட்டுவிட்டவர் என்று சொல்லவே முடியாது.

முடிக்க முடியாது தான். அவ்வளவு மெதுவான காரியம். வாரத்துக்கு இரண்டு அல்லது மூன்று முறை வைத்தியரைப் பார்க்க வேண்டும். அவருடைய அறையில் சாய்வுப் படுக்கையில் ஒரு மணி நேரத்துக்கு உனக்குள்ளிருக்கும் குப்பையை எடுத்துக் கொட்டுகிறாய்.

பொறுமையாகக் கேட்கிறாரோ இல்லையோ கேட்பதாகப் பாவனையாவது செய்கிறார். கேட்டுக் கொண்டிருக்கிறார் என்பதாலேயே மேலும் வெளியே கொட்டுகிறாய். ஊக்கம் தருகிறார் என்பதால் நீயும் ஆழ்மனத்தை தோண்டிப் பார்க்கிறாய். உணர்வுகளின் ஆழத்திலிருந்து உணரும் நிலைக்குப் பலதையும் கொண்டு வருகிறாய்.

அவர் அங்கே இருப்பது, அவருடைய திறமை, பெயர், அதிகாரம் என்று இவை உனக்குத் தைரியம் தருகின்றன. தனிமையில் இருக்கும்போது வெளியே கொண்டுவர முடியாததையெல்லாம் வெளியே கொட்டுகிறாய். அப்படித் தனியாக இருக்கும்போது வெளியே கொண்டு வந்தால் பைத்தியம் பிடித்துவிடுமோ என்ற பயம்தான் உன்னை அடக்கி வைத்திருந்திருக்கிறது.

அவருடைய அதிகாரமும் அவர் உன்னோடு இருப்பதும் ஒரு விதமான மயக்கம்தான். பார்க்கப்போனால் உன்னை விட அவருக்கு பைத்தியம் அதிகமாக இருக்கலாம். அவர் உனக்கு உதவ முடியும் என்ற நம்பிக்கை,



அவர் அங்கே இருக்கிறார், எனவே பயப்படத் தேவையில்லை என்ற நம்பிக்கை - அதுதான் உன்னை உனக்குள்ளே ஆழ்ந்து போக வைக்கிறது.

எந்த அளவுக்கு உணர்வு நிலைக்குக் கொண்டு வருகிறாயோ அந்த அளவுக்கு விடுபடுகிறாய். சுமை இறக்கம்தான். ஆனால் வாரத்துக்கு ஒரு முறையோ இரண்டு முறையோ அல்லது மூன்று முறையோ சுமையை இறக்கி வைத்துவிட்டு, வாரம் முழுக்கச் சுமையைச் சேர்த்துக் கொண்டேயிருக்கிறாய். அந்த மூன்று மணி நேரக் காரியம் வியர்த்தமாகிப் போகிறது. நீ அப்படியே இருக்கிறாய்.

இது ஒரு விஷமத்தனமான வட்டமாகிப் போகிறது. சமுதாயத்திலும் குடும்பத்திலும் உன்னை அடக்கி வைத்து அதன் சுமையைச் சேர்த்துக் கொண்டு, மறுபடியும் வைத்தியரிடம் போய்ப் புதிய சுமையை இறக்கி வைக்கிறாய். கொஞ்சம் இறக்கி வைத்த பின் மறுபடியும் அதே சமுதாயத்துக்கும் மக்களுக்குமாக வந்து சேர்கிறாய். அதே பூசாரியின் வார்த்தைகள், அதே செய்தித்தாள்கள், அதே அரசியல் பேரணிகள்... ஒரு கம்யூனிஸ்டாக அல்லது ஒரு கத்தோலிக்கனாக... அதே மனைவி அல்லது கணவன், அதே குழந்தைகள்... மீண்டும் அடக்கி வைக்கும் உணர்வுகள்... என்ன ஒரு விஷமத்தனமான வட்டம் பார்த்தாயா?

இது மிகத் தற்காலிக நிவாரணம்.

இந்தப் பிரச்சினையைத் தீர்க்க வேறு வழி முறைகளும் காணப்பட்டுள்ளன. ஓவியம் வரைவது அவற்றுள் ஒன்று. மிக முக்கியமானதும் கூட. ஆழ்மனது வார்த்தைகளை விடப் படங்களின் மொழியைச் சுலபமாகப் புரிந்து கொள்கிறது. ஆழ்மனது படங்களின் மூலம் தன்னை வெளிப்படுத்திக் கொள்கிறது.



அதனால்தான் கனவுகளில் ஆழ்மனது தெளிவாகத் தன்னை வெளிப்படுத்துகிறது. அதனால்தான் மனோதத்துவ மருத்துவரும் கனவுகளைப் பற்றி விசேசமாகக் கேட்டுத் தெரிந்து கொள்கிறார். கனவுகள் படங்களில் பேசுகின்றன. அடிப்படையான மொழியைக் கைக்கொள்கின்றன. அதில் நாகரிக மழுப்பல்கள் இருப்பதில்லை. வெகுளித்தனம் இருக்கிறது. ஓவியம் வரையும்போது அதுதான் நடக்கிறது.

ஓவியம் வரைவதென்பது கனவுகளை வெளிச்சத்துக்குக் கொண்டு வருவதாகும். அதன் பயன்கள் மிகச் சிறப்பானவை. பிக்காஸோவை ஓவியம் வரையக் கூடாது என்று சொல்லியிருந்தால் அவருக்குப் பைத்தியம் பிடித்திருக்கும் என்றுதான் நினைக்கிறேன். அவருடைய ஓவியங்கள்தான் அவரைக் காப்பாற்றி வைத்திருந்தன. இது அவருக்கே தெரியாமல் இருந்திருக்கலாம். என்றாலும் அவருடைய ஓவியங்களில் பைத்தியக்காரத்தனம் நிறையவே இருக்கிறது.

பிக்காஸோவின் ஓவியங்களில் மனம் செலுத்திப் பார்த்தால் கிறக்கம் வரும். அசௌகரியமாக இருக்கும். மன இறுக்கம் தோன்றும். ஆசுவாசம் தோன்றவே தோன்றாது. சுவர் முழுக்கப் பிக்காஸோவின் ஓவியங்கள் நிறைந்திருக்கும் அறையில் இருந்தால் உனக்கு பயங்கரக் கனவுகள் தோன்றும். அல்லது உனக்குப் பைத்தியம் பிடிக்கும். அந்த ஓவியங்கள் பைத்தியத்தைத் தூண்டுகிறவை.

எனவே நிர்குண், நீ கலைக்கூடங்களைத் தவிர்த்து விடலாம். பிக்காஸோக்களை அலட்சியம் செய்து விடலாம். ஆனால் உன்னுடைய உயிருருவின் அழகியல் தளத்தைத் தவிர்க்க முடியாது. அழகியல் பரிமாணத்தைத் தவிர்த்துப் போக முடியாது.



அப்படித் தவிர்த்தால் அத்தனைக்கும் வறியவனாகிவிடுவாய். சரிவிகித வளர்ச்சி இல்லாதவனாகிப் போவாய். என்னுடைய சன்னியாசிகளிடம் ஏதாவது ஒன்று இல்லாமல் போய்விடக்கூடாது. அவர்கள் முடிந்த அளவுக்கு அறிவியல் பூர்வமானவர்களாக இருக்க வேண்டும்.

அதற்காக நீங்களெல்லாம் பௌதிக விஞ்ஞானிகளாகவோ ரசாயன விஞ்ஞானிகளாகவோ உயிரியல் நிபுணராகவோ உடலியல் நிபுணராகவோ இருக்க வேண்டும் என்று சொல்லவில்லை. அதுவல்ல நான் சொல்வது. அறிவியல் பூர்வமானவர்களாக, அறிவியல் மனப்பாங்குடையவர்களாக இருக்க வேண்டும் என்பதுதான்.

இந்த உலகைச் சரியான கண்ணோட்டத்தோடு பார்க்க, பொருட்சார்புடைய இந்த உலகைச் சரியாகப் புரிந்து கொள்ள, அறிவியல் நோக்கு தேவை. பைபிள் இந்த உலகம் தட்டையானது, உருண்டையானதல்ல என்று சொன்னால் நம்பாதே. அறிவியல் உணர்வோடிரு.

உலகம் உருண்டையானதுதான். தட்டையானது அல்ல. எந்த ஒரு பொருள் நிலை பற்றியும் எதுவும் சொல்வதற்கு பைபிளுக்கு எந்த உரிமையும் கிடையாது. பைபிள் ஒரு சமய நூல். அதற்கென ஒரு பரிமாணம் இருக்கிறது. இந்தப் பரிமாணங்களைப் பற்றிய மயக்கம் எதுவும் வேண்டாம்.

அந்த மயக்கங்களால்தான் சமயத்துக்கும் விஞ்ஞானத்துக்குமிடையே மோதல்கள் பல நடந்துவிட்டன. இதற்கு எந்த அவசியமுமில்லை. அறிவியலுக்கு என்று ஒரு களம் உண்டு. அதற்கென ஒரு பிரதேசம் உண்டு.

முதலில் பாதிரியார்கள் விஞ்ஞானத்துக்குள் மூக்கை நுழைத்தார்கள். இப்போதோ அந்தப் பக்கமிருந்து இந்தப்



பக்கத்துக்கு இடையூறு வந்துவிட்ட்து. விஞ்ஞானிகள் சமயத்துக்குள் தங்களுடைய மூக்கை நுழைக்கிறார்கள்.

கடவுள் இருக்கிறாரா இல்லையா என்று விஞ்ஞானி யிடம் போய்க் கேட்காதே. அவருக்கு அதில் எந்தச் சங்காத்தமும் இல்லை. அவருக்கு என்ன தெரியும் கடவுளைப் பற்றி? அது அவருடைய பிரதேசமல்ல. கடவுளைப் பற்றி அவர் சொல்வதெல்லாம் முட்டாள் தனமாகத்தான் இருக்கும். அவர் சொல்வதெல்லாம் தவறாக இருப்பதன்றி வேறு எதுவாகவும் இருக்க முடியாது.

ஒரு பெரிய மருத்துவரிடம் போய்க் கவிதையைப் பற்றிக் கேட்பதைப் போலத்தான் இதுவும். அவர் பெரிய மருத்துவர் என்பதாலேயே அவரிடம் போய்க் கவிதை பற்றிக் கேட்பது முட்டாள்தனம். ஒரு பெரிய கவிஞரிடம்போய் நோயைப் பற்றிக் கேட்பது முட்டாள் தனம் தானே? அப்படியேதானே ஒரு மருத்துவரிடம் போய்க் கவிதை பற்றிக் கேட்பது? பெரிய ஒரு கவிஞர் என்பதாலேயே நோயைக் கண்டுபிடிக்கச் சொல்லி அவரிடம் கேட்கப் போகிறாயா என்ன? பெரிய கவிஞர் இல்லையென்றாலும் அதற்கு ஒரு மருத்துவரிடம்தான் போயாக வேண்டும்.

விஞ்ஞானிக்கு மனிதனின் உள்ளிருப்பைப் பற்றி எதுவும் கூற எந்த உரிமையும் கிடையாது. அது அவருடைய பிரதேசமேயல்ல. ஆனால் இப்போது பல விஞ்ஞானிகள் அதைத்தானே செய்கிறார்கள்? பல நூற்றாண்டுகளாகப் பாதிரியார்கள் செய்து கொண்டிருந்து விட்ட தவறை, இவர்கள் செய்ய ஆரம்பித்துவிட்டார்கள்.



கலிலியோ தன்னுடைய முதுமைக் காலத்தில் போப் பாண்டவரிடம் போய் பூமி உலகைச் சுற்றவில்லை, சூரியன்தான் உலகைச் சுற்றுகிறது என்று சொல்லித் தான் முன்பு சொன்னதற்கு மன்னிப்புக் கோர வேண்டியிருந்தது. அவர் முன்பு சொன்னது பைபிளில் சொன்னதற்கு எதிரானதாக இருந்தது. அதனால் பாதிரியார்கள் மிகவும் கவலைப்பட்டார்கள். ''பைபிளில் சொல்லியிருப்பதை மறுப்பதற்கு நீ யார்?'' என்றார்கள். எழுபது வயதுக் கிழவனாகத் தள்ளாடி நடந்து போய் போப்புக்கு முன் முழந்தாளிட்டு மன்னிப்புக் கேட்டுக் கொள்ளக் கட்டாயப்படுத்தினார்கள்.

நல்ல நகைச்சுவை உணர்வுடையவராகத்தான் அவர் இருந்திருக்க வேண்டும். ''சரி ஐயா, மன்னிப்புக் கேட்டுக் கொள்கிறேன். பைபிள் சொன்னதுதான் சரியென்று அறிவிக்கிறேன். உலகம் சூரியனைச் சுற்றவில்லை. சூரியன்தான் உலகைச் சுற்றுகிறது. போதுமா ஐயா?'' என்றார்.

அவர்கள் எல்லோருக்கும் மகிழ்ச்சி. ''போதும் போதும், எங்களுக்கு இது போதும்,'' என்றார்கள்.

பிறகு கலிலியோ வாய்விட்டுச் சிரித்தார். ''நான் சொல்வதால் ஏதாவது மாறிப் போய்விடப் போகிறதா என்ன? என்னுடைய வார்த்தைகள் எதைச் சாதித்துவிட முடியும்? நான் சொல்வதால் பூமியும் சூரியனும் தம் போக்கை மாற்றிக் கொள்ளப் போகின்றனவா? ஆனாலும் மன்னிப்புக் கேட்டுக் கொள்கிறேன். நான் சொன்னது தவறு. பைபிள் சொல்வதே சரி. ஆனால் ஒன்றை நினைவில் வைத்துக் கொள்ளுங்கள். பூமிதான் சூரியனைச் சுற்றுகிறது. என்னுடைய விருப்பத்தை நிறைவேற்ற வேண்டும் என்ற தேவை பூமிக்குக் கிடையாது. நான் நீங்கள் சொன்னபடி,



பைபிள் சொல்கிறபடி நடந்து கொள்கிறேன். கையாலாகாதவன் நான்.''

பைபிளில் அறிவியலுக்குப் புறம்பான பலவும் சொல்லப்பட்டிருக்கின்றன. வேதங்களிலும் அப்படியே. பழங்காலத்திய சாத்திரங்கள் பலவும் அறிவியலுக்குப் புறம்பாக நிறையத்தான் பேசுகின்றன. ஏனென்கிறாயா? அப்போது அறிவியல் ஒரு தத்துவமாக வளர்ந்திருக்கவில்லை.

சமய சாத்திரங்கள்தான் அப்போதைய சாத்திரங்கள். எனவே அப்போது எதுவெல்லாம் தெரிய வந்ததோ அது அத்தனையையும், அந்தச் சாத்திரங்களில் சொல்ல வேண்டியிருந்தது. கலை, சரித்திரம், கணிதம், புவியியல், விஞ்ஞானம் என்று எல்லாமுமே அதில் இருந்தன. அப்போது எதுவெல்லாம் தெரிந்திருந்ததோ எல்லாமும்தான். தெரிந்திருந்ததும் கொஞ்சமாகவே இருந்து விட்டதால் ஒரே சாத்திரத்தில் அத்தனையும் சொல்லவும் முடிந்தது.

ஆனால் நூற்றாண்டுகள் பல கழிந்து போய்விட்டன. மனிதன் வளர்ந்துவிட்டான். பருவத்துக்கு வந்துவிட்டான். இப்போது அறிவியலுக்கு என்று சொந்தமாக ஓருலகம் இருக்கிறது. எனவே சாத்திரங்களில் இருக்கும் அறிவியல் விஷயங்களை விட்டுவிட வேண்டும். அதே சமயம் அறிவியலும் சமயம் சார்ந்த விஷயங்களில் கருத்துத் தெரிவிக்கக் கூடாது. ஆனால் இப்படிச் செய்து செய்தே முட்டாள்கள் சண்டையை வளர்த்துக் கொண்டிருந்து விட்டார்கள்.

இந்த உலகம் சார்ந்த விஷயங்களைப் பொறுத்த அளவில் விஞ்ஞானபூர்வமாகவே இருக்க விரும்புகிறேன். ஆனால் உனக்குள் இருக்கும் சத்தியத்தைப் பொறுத்த



அளவில் சமயச் சார்போடு இரு. இரண்டுக்கும் இடையே ஓர் உலகம் இருக்கிறது. அந்திக் கருக்கல் வானம் போல. ஒளியும் இருட்டும் சந்திக்கும் உலகம். புறவயப்பட்டதும் அகவயப்பட்டதும் கொஞ்சம் கொஞ்சம் இருக்குமிடம். அதுதான் அழகியல் உலகம். அதைப் பொறுத்த அளவில் ஒரு கலைஞனாக இரு. ஒரு கவிஞனாக இரு. ஓர் இசைக் கலைஞனாக இரு.

இந்த மூன்று பரிமாணங்களையும் உன்னிடம் கொண்டிருக்கும் போது நீ ஆத்ம சாதகனாகிறாய். இந்தப் பரிமாணங்களைச் சிறக்கச் செய்யும் அளவுக்கு நீ நான்காவது மனிதனாகிறாய். ஆத்மவயப்பட்டவனாகிறாய்.

என்னுடைய சன்னியாசிகள் இந்த நான்காவது மனிதர்களாக இருக்க வேண்டும். எதையும் தவிர்க்கக் கூடாது, நிர்குண். எல்லாவற்றையும் வாழ்ந்து அனுபவிக்க வேண்டும். நேசிக்க வேண்டும். உள்ளிழுத்துக் கொள்ள வேண்டும். அப்போதுதான் எந்த அளவுக்குச் சிறக்க முடியுமோ அந்த அளவுக்குச் சிறந்து விடுவாய்.

இரண்டாவது வினா

அன்புக்குரிய குருவே,

இறுக்கத்தைத் தளர்த்திக் கொள்வது பற்றி
மேலும் கொஞ்சம் சொல்கிறீர்களா?
என் உட்புரிக்குள்
ஒரு விதமான இறுக்கத்தை உணர்கிறேன்.
எனக்குச் சந்தேகம் என்னவென்றால்
நான் எப்போதுமே ஆசுவாசமாக இருப்பதாக
உணர்ந்ததே இல்லையோ என்பதுதான்.



அன்றொரு நாள்
ஆசுவாசப்படுத்திக் கொள்வதைப் பற்றி
நீங்கள் பேசினீர்கள்.
அப்போது இறுக்கத்திலிருந்து விடுபடுவது
சிக்கலான ஒரு காரியம் என்று சொன்னீர்கள்.
நம்பிக்கையின் இழைகள்
ஊடும் பாவுமாகப் பரவி இருக்கும்
சித்திரச் சமுக்காளம்தான் அது என்று
தெரிந்து கொண்டேன்.
அதில் அன்பும் ஏற்றுக் கொள்ளலும்
இணைதலும் பரவசமும் இருக்கக்
கண்டேன்...

**அனுராக்,** முழுக்கத் தளர்வாக இருப்பதுதான் முடிந்த முடிவு. அந்தக் கணத்தில்தான் ஒருவர் புத்தராகிறார். அப்போதுதான் ஞானோதயம் பிறக்கிறது. கிறிஸ்துவை உணர முடிகிறது. அனைத்தையும் புரிந்து கொள்ள முடிகிறது. இப்போது உன்னால் முழுக்க அந்த ஆசுவாசத்தைச் சாதித்துக் கொள்ள முடியாது. உன்னுடைய உட்புரியில் இறுக்கம் இருக்கத்தான் செய்யும்.

என்றாலும் தளர்வாக இருக்கும் முயற்சியைத் தொடங்கி விடு. வெளிவட்டத்திலிருந்து ஆரம்பி. நாமிருப்பது அங்குதான். நாமிருக்கும் இடத்திலிருந்துதான் ஆரம்பித்தாக வேண்டும். புறவட்டத்தில் இறுக்கத்தைத் தளர்த்திக் கொள். உடல் இறுக்கத்தைத் தளர்த்து. உன் நடவடிக்கையில் ஒரு சாவகாசம் இருக்கட்டும். நடக்கும்போது லகுவாக நட. சாப்பிடும்போது நிதானமாகச் சாப்பிடு. கேட்கும்போது பரபரப்பின்றிக் கேள். ஒவ்வொரு



செயலையும் நிதானப்படுத்து. அவசரப்படாதே. காலங்காலமும் உனக்கிருக்கிறது என்ற உணர்வோடு செயல்படு. பார்க்கப் போனால் அதுதான் உண்மை.

ஆரம்பமும் முடிவும் இருக்கிறதுதான் என்றால் நாம் இங்கு ஆரம்பம் முதல் இருக்கிறோம். முடிவு வரை இருக்கப் போகிறோம். உண்மையில் ஆரம்பம் என்பதும் இல்லை. முடிவு என்பதும் இல்லை. நாம் எப்போதுமே இங்கே இருந்து கொண்டேதான் இருந்திருக்கிறோம். எப்போதும் இருந்து கொண்டேதானிருக்கப் போகிறோம். வடிவங்கள் மாறுகின்றன. ஆத்மாவோ மாறுவதேயில்லை. வடிவங்களுக்குள்ளே இருப்பது மாறுவதில்லை. உடைகள் மாறி விடுகின்றன. ஆத்மா மாறுவதில்லை.

இறுக்கம் என்றாலே அவசரம், பயம், சந்தேகம் என்றுதான் பொருள். ஆபத்துக்குப் பயந்த முன்னேற்பாடு தான் இறுக்கம். பத்திரமாக இருக்க வேண்டும் என்ற சம்சயம். இறுக்கம் என்றாலே இப்போதே வரப்போகும் அடுத்த நாளுக்குத் தயாராகிக் கொள்வது. அடுத்த ஜன்மத்துக்குத் தயாராகிக் கொள்வது. அடுத்த நாளை எதிர்கொள்ளத் தைரியம் இல்லாததால்தான் இறுக்கம் வந்து சேர்கிறது. இறுக்கம் என்றாலே உன் கடந்த காலத்தை நீ சரிவர வாழவில்லை என்று பொருள். எப்படியோ கழித்து விட்டிருக்கிறாய். அவ்வளவுதான். அது உன்னைச் சுற்றிப் படர்ந்து நிற்கிறது. பயமுறுத்திக் கொண்டு நிற்கிறது.

வாழ்வைப் பற்றிய ஒரு அடிப்படையான உண்மையை மனதில் நிறுத்து. எந்த ஓர் அனுபவத்தையும் வாழ்ந்து கழித்திருந்தால், அதன் மிச்சம் மீதம் ஏதும் இருக்காது.

முடிவு வரை அனுபவிக்காதவைதான், ''என்னை வாழ்ந்து முடித்துவிடு,'' என்று வற்புறுத்திக் கொண்டி



ருக்கும். ஒவ்வொரு அனுபவமும் தான் முழுக்க வாழ்ந்து கழிக்கப்பட்டிருக்க வேண்டும் என்றுதான் எதிர்பார்க்கிறது. அது அவற்றின் அடிப்படைக் குணம்.

முழுக்க வாழ்ந்தாயிற்றா? அது கரைந்து போகிறது, முழுக்க வாழ்ந்தாகவில்லையா? அது இருந்து தொலைக்கிறது. உன்னை வறுத்தெடுக்கிறது. ஒரு பேய் போலப் பிடித்தாட்டுகிறது. உன்னுடைய கவனத்தை இழுத்துக் கொண்டே இருக்கிறது. ''என்னை வைத்துக் கொண்டு என்ன செய்யப் போகிறாய்? இன்னமும் நான் நிறைவடையவில்லையே,'' என்று கூவுகிறது.

உன் கடந்த காலம் முழுக்க உன்னைச் சுற்றிப் படர்ந்து நிற்கிறது. எதையும் நீ முழுக்க முடித்து வைக்கவில்லையே. எதையும் முழுக்க வாழ்ந்து கழிக்கவில்லையே. ஒவ்வொன்றையும் எப்படி எப்படியோ தவிர்த்துக் கொண்டிருந்திருக்கிறாய். அரைகுறையாயக வாழ்ந்து அனுபவிக்கிறாய். என்னவோ வாழ்ந்தாயிற்று என்கிறதைப் போல.

வாழ்வில் உணர்வுபூர்வமான ஈடுபாடு இருந்ததே இல்லை. தூக்கத்தில் நடப்பவனைப் போல வாழ்வுக்குள் நகர்ந்து போய்க் கொண்டிருந்திருக்கிறாய். எனவே அந்தக் கடந்த காலம் நிலைத்துப் போய்விடுகிறது. எதிர்காலம் பயமுறுத்துகிறது. கடந்த காலத்துக்கும் எதிர்காலத்துக்கு மிடையே எதார்த்தமான நிகழ்காலம் நசுங்கிப் போய்விடுகிறது. உன்னுடைய வெளிவட்டத்திலிருந்து இறுக்கத்தைத் தளர்த்திக் கொள்ள வேண்டும். இதில் முதலில் செய்ய வேண்டியது உடலைத் தளர்த்திக் கொள்வதுதான். அடிக்கடி உன் உடலைக் கவனித்துப் பார். கழுத்து, தலை அல்லது கால் என்று ஏதாவது ஓரிடத்தில்



இறுக்கம் இருக்கிறதா என்று பார். அப்படி இருந்தால் அதை முழு உணர்வோடு ஆசுவாசப்படுத்திக் கொள். அந்தப் பகுதிக்கு உன் கவனத்தைக் கொண்டு போய், ''தளர்வாக இரு,'' என்று அதனிடம் சொன்னால் போதும்.

உடலின் எந்தப் பகுதிக்கும் போய் அப்படிச் சொன்னாலும் அது உன் சொற்படி கேட்கும் என்பதைக் காண உனக்கே ஆச்சரியமாக இருக்கும். உன் வார்த்தைகளைக் கேட்டுக் கொள்கிறது. பணிந்து நடக்கிறது. அது உன் உடல் அல்லவா? கண்களை மூடிக் கொண்டு ஒவ்வொரு பகுதியாக உன் உடலைக் கவனி. எங்கே இறுக்கம் தெரிகிறதோ அந்தப் பகுதியிடம் ஒரு நண்பனிடம் பேசுவதைப் போலப் பேசு. உனக்கும் உன் உடலுக்குமிடையே ஒரு சம்பாஷணை நடக்கட்டும் இறுக்கத்தைத் தளர்த்திக் கொள்ளச் சொல். ''பயப் படுவதற்கு ஒன்றுமே இல்லை. பயப்படாதே. நான் இருக்கிறேன். உன்னைக் கவனித்துக் கொள்ள நான் இருக்கிறேன். நீ அசுவாசப்படுத்திக் கொள்,'' என்று சொல். மெதுவாக இந்த நுணுக்கம் தெரிந்துவிடும். பிறகு உடல் இறுக்கம் நீங்கிப் போகும்.

பிறகு அடுத்த அடி எடுத்து வைக்கலாம். இன்னும் கொஞ்சம் ஆழமாக...

மனதிடம் இளகி வரச் சொல். உடல் கேட்டுக் கொள்ளுமென்றால் மனதும் கேட்டுக் கொள்ளும்தான். ஆனால் நேராக மனத்தோடு ஆரம்பிக்கக் கூடாது. சரியான இடத்தில்தான் ஆரம்பிக்க வேண்டும். இடையிலிருந்து ஆரம்பிக்க முடியாது. பலரும் மனத்தோடு ஆரம்பித்துத் தோற்றுப் போகிறார்கள். தவறான இடத்தில் ஆரம்பித்தால்



தோல்விதானே. எதையும் முறையாக வரிசையில்தான் செய்ய வேண்டும்.

அனிச்சையாக இன்றி உடல் இறுக்கத்தை உன்னால் தளர்வித்துக் கொள்ள முடியுமென்றால், மனதும் தன் இறுக்கத்தைத் தளர்வித்துக் கொள்ள உன்னால் உதவ முடியும். மனம் உடலை விடக் கொஞ்சம் சிக்கலானது. உடல் உன் வார்த்தைகளைக் கேட்டு நடந்து கொள்கிறது என்பதைத் தெரிந்து கொண்டால், புதியதொரு தன்னம்பிக்கை தோன்றிவிடும். மனமும் நீ சொல்வதைக் கேட்டு நடக்கும் என்ற நம்பிக்கை. சிறிது கால அவகாசம் அதிகமாகும். அவ்வளவுதான்.

மன இறுக்கம் தளர்ந்தவுடன் நெஞ்சை ஆசுவாசப் படுத்திக் கொள்ள ஆரம்பி. மனதை விடவும் உணர்வுகள் பாற்பட்ட நெஞ்சம் சிக்கலானதுதான். நுண்மையானதும் கூட.

ஆனால் இதற்குள் உனக்கு நம்பிக்கை வந்துவிடும். அதிகமான தன்னம்பிக்கையோடு நெஞ்சின் இறுக்கத்தைக் குறைக்க முயல்வாய். சாத்தியம்தான் என்று தெரிந்து விடும்போது காரியம் சுலபமாகிவிடுகிறது. உடலோடு சாத்தியமானது. மனதோடு சாத்தியமானது - நெஞ்சோடும் சாத்தியம்தான் என்றாகி விடுகிறது.

இந்த மூன்று அடிகளை எடுத்து வைத்த பின்னரே நான்காவது அடி எடுத்து வைக்க முடியும். இப்போது உன்னுடைய உயிருருவின் உட்புரிக்குப் போக முடியும். உடல், மனம், நெஞ்சைத் தாண்டியது அது. உன் இருப்பின் நடுமம். அதையும் உன்னால் ஆசுவாசப்படுத்திக் கொள்ள முடியும்.

அப்படி இறுக்கத்தைத் தளர்த்திக் கொள்ளும்போது சாத்தியமான மிகப் பெரியதொரு மகிழ்ச்சியை



அடைகிறாய். அதுதான் பரவசத்தின் முடிந்த நிலை. ஏற்புடைமையின் உச்சம். கொண்டாடும் நீ பரவசத்தால் நிறைந்திருப்பாய். உன் வாழ்வே ஓர் ஆனந்த நடனமாகிவிடும்.

மனிதனைத் தவிர இருத்தல் முழுக்க நடனமாடிக் கொண்டிருக்கிறது. இருத்தல் முழுக்க சாவகாசமான இயக்கத்தில் இருக்கிறது. நிச்சயமாக இயக்கம் இருக்கிறதுதான். ஆனால் அந்த இயக்கத்தில் இறுக்கத்தின் பரபரப்பு இருப்பதில்லை. மரங்கள் வளர்ந்து கொண்டி ருக்கின்றன. பறவைகள் பாடிக் கொண்டிருக்கின்றன. நதிகள் ஓடிக் கொண்டிருக்கின்றன. நட்சத்திரங்கள் நகர்ந்து கொண்டிருக்கின்றன. ஆனால் அனைத்தும் ஒரு லயத்தோடு இயங்கிக் கொண்டிருக்கின்றன. அதில் பரபரப்பு இருப்பதில்லை. அவசரம் இல்லை. கவலை இல்லை. வீணாகப் போவது எதுவுமில்லை. மனிதனைத் தவிர... மனிதன் தன் மனதுக்கு இரையாகிப் போனவன்.

மனிதன் கடவுளரை விட உயர்ந்து போகலாம். மிருகங்களை விட நிறைதாழ்ந்து போகலாம். அவனுக்கு மிகப் பரந்த இயக்கச் சூழல் இருக்கிறது. மிகத் தாழ்ந்ததில் இருந்து மிக உயரமானதற்கு மனிதன் ஓர் ஏணி.

அனுராக், உடலில் ஆரம்பி. பிறகு மெதுவாக, மிக மெதுவாக ஆழ்ந்து போய்ப் பார். முதல் கட்டத்தின் சிரமத்தைக் கடந்து போகுமுன் வேறு எதையும் ஆரம்பித்துவிடாதே. உடல் விறைத்துப் போய் இறுக்கமாக இருந்தால் மனதில் ஆரம்பம் காண முயலாதே. பொறு. முதலில் உடலைச் சரிசெய்து கொள். சின்னச் சின்ன விஷயங்கள் கூட மிகப் பெரிய அளவில் உதவியாக இருக்கக் காண்பாய்.



ஒரு குறிப்பிட்ட வேகத்தில் நடக்கிறாய் அல்லவா? அது பழக்கமாகிப் போகிறது. தன்னிச்சையான செயலாகிப் போகிறது. மெதுவாக நடக்க முயன்று பார். புத்தர் தன்னுடைய சீடர்களிடம், ''மெதுவாக நடக்க வேண்டும். ஒவ்வோர் அடியையும் உணர்ந்து வைக்க வேண்டும்,'' என்று சொல்வார். ஒவ்வோர் அடியையும் உணர்ந்து எடுத்து வைக்கும் போது மெதுவாக நடக்க ஆரம்பித்து விடுவாய். ஓடிக் கொண்டிருந்தாலோ அவசரப்பட்டாலோ எதையும் நினைவில் வைத்துக் கொள்ள முடியாது. அதனால்தான் புத்தர் மெதுவாகவே நடந்தார்.

மெதுவாக நடந்து பார். நீயே ஆச்சரியப்பட்டுப் போவாய். உடலில் ஒருவித உணர்தல் ஆரம்பமாகிவிடும். மெதுவாகச் சாப்பிட்டுப் பார். ஆச்சரியப்பட்டுப் போவாய். இறுக்கமே இருக்காது. எதையும் மெதுவாகச் செய்து பார். பழைய பழக்கங்களை விட்டுவிடுவதற்குத்தான். பழையவற்றிலிருந்து விடுபடுவதற்குத்தான்.

முதலில் ஒரு குழந்தையினுடையதைப் போல, உன்னுடைய உடல் இறுக்கம் இல்லாததாக ஆகிப் போக வேண்டும். பிறகு மனதில் காரியத்தைக் கவனிக்கலாம். விஞ்ஞான பூர்வமாகப் போ. முதலில் சாதாரணமானதைக் கவனி. பிறகு கொஞ்ச சிக்கலானது. இப்படியாகத்தான் நீ உன்னுடைய உட்புரிக்குப் போய்ச் சேர முடியும்.

''இறுக்கத்தைத் தளர்த்திக் கொள்வது பற்றி மேலும் கொஞ்சம் சொல்கிறீர்களா? என் உட்புரிக்குள் ஒரு விதமான இறுக்கத்தை உணர்கிறேன். எனக்குச் சந்தேகம் என்னவென்றால் நான் எப்போதுமே ஆசுவாசமாக இருப்பதாக உணர்ந்ததே இல்லையோ என்பதுதான்,'' என்றுதானே சொன்னாய் அனுராக்?



அதுதான் ஒவ்வொருவருடைய நிலையும். நீ அதைத் தெரிந்து வைத்திருப்பது நல்லது. பலருக்கும் அது தெரிந்திருப்பதில்லை. தெரிந்து வைத்திருப்பதே ஒரு வரம்தான். தெரிந்து கொண்டால்தானே அதைப் பற்றி ஏதாவது செய்ய முடியும்? தெரியவே தெரியாதென்றால் எதுவுமே சாத்தியமில்லை. தெரிந்திருப்பதே நிலை மாற்றத்துக்கு ஆரம்பம்.

மேலும் என்ன சொன்னாய்?

''அன்றொரு நாள் ஆசுவாசப்படுத்திக் கொள்வதைப் பற்றி நீங்கள் பேசினீர்கள். அப்போது இறுக்கத்திலிருந்து விடுபடுவது சிக்கலான ஒரு காரியம் என்று சொன்னீர்கள். நம்பிக்கையின் இழைகள் ஊடும் பாவுமாகப் பரவி இருக்கும் சித்திரச் சமுக்காளம்தான் அது என்று தெரிந்து கொண்டேன். அதில் அன்பும் ஏற்றுக் கொள்ளலும் இணைதலும் பரவசமும் இருக்கக் கண்டேன்...''

சரிதான் அனுராக். இறுக்கமின்றி இருப்பது மிகச் சிக்கலான விஷயங்களில் ஒன்று. பன்முகப்பட்டது. அதனுடைய பகுதிகள்தான் விட்டுப் போக விடுவது, நம்பிக்கை வைப்பது, சரணடைவது, அன்பு, ஏற்றுக் கொள்வது, போக்கில் போவது, இருத்தலோடு இணைந்து விடுவது, தானின்றி இருப்பது, பரவசம் என்று எல்லாமும். இறுக்கமின்றி இருப்பது எப்படி என்று தெரிந்து கொள்ளும் போது இவை அனைத்தும் ஏற்படுகின்றன.

சமயங்கள் என்று கூறிக் கொள்பவை உன்னிடம் இறுக்கத்தைத்தான் வளர்த்துவிட்டன. என்னவோ குற்றம் செய்து விட்டவன் என்று உன்னையே எடுத்துக் கொள்ள வைத்துவிட்டன. எல்லாவிதமான குற்ற உணர்வு களிலிருந்தும் பயத்திலிருந்தும் உன்னை விடுவிப்பதுதான் என்னுடைய காரியம். எனவே நரகத்தைப் பற்றிய பயத்தை



விட்டுவிடு. சொர்க்கத்துக்குப் போக வேண்டும் என்று பேராசைப்படாதே. எல்லாமும் இந்தக் கணத்தில் இருக்கின்றன. நரகமும் சொர்க்கமும் இங்கே இப்போது சாத்தியம். வேறு எங்கேயும் நரகம் சொர்க்கம் என்று எதுவுமில்லை. இறுக்கமாக இருப்பது நரகத்தில் இருப்பது. நீங்கள் எல்லோரும் இறுக்கமின்றி இயல்பாக இருக்குமிடம் சொர்க்கம். முழுக்க இயல்பாக இருப்பதுதான் சொர்க்கம்.

மூன்றாவது வினா

அன்புக்குரிய குருவே,

ஒவ்வொரு முறையும் ஒரு குருவைப் பற்றி
நீங்கள் பேசும்போது,
அவர் மீது அதீதப் பிரேமை கொண்டவர்
போலப் பேசுகிறீர்கள்.
அவருடைய சூத்திரங்கள்
உங்களிடமிருந்து கொட்டுகின்றன.
ஆனால் இப்போதைய தொடர்
சொற்பொழிவில் புத்தரை விட்டு
நீங்கி நிற்பதைப் போலத் தெரிகிறது.
அவருடைய போதனைகளை நீங்கள்
மெய்யாலுமே விரும்பவில்லை போல்
தோன்றுகிறதே.
ஏதாவது மாற்றம் நிகழ்ந்து கொண்டிருக்கிறதா
அல்லது இது என் கற்பனைதானோ?

**நிஷாந்த்,** நீ கற்பனை ஏதும் செய்து கொள்ளவில்லை. என்னோடு இருக்கும் வரைக்கும் நீ நகர்ந்து கொண்டே இருக்க வேண்டியிருக்கிறது. எல்லாமும் மாறிக்



கொண்டேதானிருக்கின்றன. நீ வளர வளர முன்பு சொல்ல முடியாததையெல்லாம் சொல்கிறேன். புத்தர் மேல் வைத்த என்னுடைய அன்பு குறைய வில்லை. பார்க்கப்போனால் அது குறைவதும் இல்லை, அதிகமாவதும் இல்லை. என்னுடைய அன்பு ஓர் அன்பு - அவ்வளவுதான். அது ஒரு குணம். அதற்கு அளக்கத்தக்கதொரு பரிமாணம் இல்லை. அது சும்மா அப்படியே இருக்கிறது. அதிகமாவதென்பதோ குறைவதென்பதோ இல்லை.

புத்தரின் மேல் எனக்கு அன்பு. இயேசுவின் மீது அன்பு. ஸாரதூஸ்ட்ரா மீது அன்பு. லாவோசூ மீது அன்பு. பதஞ்சலி மீது அன்பு. ஏனென்கிறாயா? நான் அன்புடையவன் என்பதால்தான். உன்னை நேசிக்கிறேன். இந்த மரங்களை நேசிக்கிறேன். பறவைகளை நேசிக்கிறேன். என்னுடைய அன்பு குறைவதென்பதே இல்லை.

தள்ளி நிற்கிறேன் என்று நீ சொன்னது மிகச் சரியாகச் சொன்னதுதான். இனிமேல் இப்படி தள்ளி நின்று பேசுவதைத்தான் நீ அதிகம் கேட்கப் போகிறாய். உன்னை வேறொரு படிநிலைக்காகத் தயார்படுத்திக் கொண்டி ருக்கிறேன்.

மிகப் பெரிய தாவல்தான் இது. இதற்கென முன்னேற்பாடுகள் செய்ய வேண்டியிருக்கிறது. நமது காரியம் முழுக்க வேறுபட்டதொரு பண்பை அமைத்துக் கொள்ள வேண்டியிருக்கிறது. இப்போது என்னைச் சுற்றி இருப்பவர்களிடம் நிறைய நம்பிக்கை இருக்கிறது. அன்பு இருக்கிறது. கடமை உணர்வோடு இருக்கிறீர்கள். சரணடைந்தவர்களாக இருக்கிறீர்கள்.

முதலில் நான் ஒரு கூட்டத்தைப் பார்த்துப் பேசிக் கொண்டிருந்தேன். அது முழுக்க வேறுவகையான காரியம்.



நான் சீடர்களைத் தேடிக் கொண்டிருந்தேன். கூட்டத்தினரிடம் பேசும்போது அவர்களுடைய மொழியில் பேசிக் கொண்டிருந்தேன். அவர்களிடம் பேசுவது ஆரம்ப வகுப்புகளில் இருக்கும் குழந்தைகளிடம் பேசுவதைப் போல. வெகு ஆழமாகப் போய்ப் பேச முடியாது. மேம்போக்காகப் பேச வேண்டியிருந்தது. யாரிடம் பேசுகிறோம் என்பதைப் பார்த்துப் பேச வேண்டியிருந்தது.

மெதுவாக, மிக மெதுவாக, சிலர் மாணவர்களாக இருந்ததிலிருந்து சீடர்களாக மாறிப் போக ஆரம்பித்தீர்கள். என்னுடைய அணுகுமுறையும் மாறியது. உயர்ந்த எண்ணங்களைப் பற்றிப் பேச வேண்டிய தருணம் வந்து விட்டது. பிறகு சீடர்கள் சன்னியாசிகளாக மாறினார்கள். விசுவாசமிக்கவர்களானார்கள். என்னோடு ஈடுபாடு கொண்டவர்களானார்கள். என்னுடைய விதியோடு தம்மையும் பிணைத்துக் கொண்டார்கள். என்னுடைய வாழ்வு அவர்களுடையதாக மாறியது. என்னுடைய உயிருரு அவர்களுடையதாயிற்று. இப்போது தொடர்பு கொள்வதென்பது வேறு தளத்தில் நடக்கிறது.

இப்போது வேண்டிய அளவுக்குச் சன்னியாசிகள் இருக்கிறீர்கள். காரியம் ஆழப் போக வேண்டியிருக்கிறது.

புத்தரைப் பற்றி முன்னரும் பேசியிருக்கிறேன். அப்போது புத்தர் என்னிடமிருந்து பெருக்கெடுத்து வரவிட்டேன். ஆனால் இப்போது அப்படி இருக்கப் போவதில்லை. இந்தத் தொடர் சொற்பொழிவு ஒரு புதிய படிநிலையாக இருக்கப் போகிறது.

நிஷாந்த், நீ சரியாகத்தான் சந்தேகித்திருக்கிறாய். இப்போது புத்தரிடம் இருந்து நான் எப்படி எப்படி வேறுபடுகிறேன் என்பதைச் சொல்லியாக வேண்டியி



ருக்கிறது. இயேசுவிடமிருந்து எப்படி வித்தியாசப் படுகிறேன் என்பதை. கிருஷ்ணரிடமிருந்து எப்படி வித்தியாசப்படுகிறேன் என்பதை. எங்கெங்கெல்லாம் அவர்களிடமிருந்து வேறுபடுகிறேன் என்பதைச் சொல்ல வேண்டியிருக்கிறது.

புத்தர் இருந்தது இருபத்தைந்து நூற்றாண்டுகளுக்கு முன்பு. அதிலிருந்து நிறையத்தான் நடந்தேறிப் போய்விட்டது. கங்கையில் நிறைய நீர் ஓடியாகிவிட்டது. எல்லாமும்தான் மாறிப் போய்விட்டது. இப்போது புத்தர் மறுபடி வந்து பார்த்தால் எதையும் தெரிந்து புரிந்து கொள்ள முடியாத அளவுக்கு எல்லாமும் மாறிப் போய்விட்டன. தான் விட்டுப் போன அதே உலகம்தானா இது என்று சந்தேகப்படுவார்.

நான் இந்த நூற்றாண்டைச் சேர்ந்தவன். இந்த இருபத்தைந்து நூற்றாண்டுகளில் புதியன பலவும் சேர்ந்திருக்கின்றன. உதாரணமாக, புத்தருக்கு விஞ்ஞானம் பற்றி ஒன்றும் தெரிந்திருக்கவில்லை. தெரிந்திருந்திருக்க வேண்டும் என்று சொல்ல மாட்டேன். முடிந்திருக்காது. சாத்தியமே இல்லாதது அது.

அப்போது ஆல்பர்ட் ஐன்ஸ்டீன் தோன்றியிருக்க வில்லை. நானும் நீங்களும் தெரிந்து வைத்திருக்கும் பலவற்றைப் பற்றியும் புத்தருக்கு எதுவும் தெரிந் திருக்கவில்லை. அவற்றை எல்லாமும் சேர்த்துச் சொல்ல வேண்டியிருக்கிறது. சிக்மண்ட் ஃபிராய்டு, கார்ல் மார்க்ஸ், ஆல்பர்ட் ஐன்ஸ்டீன் என்று எல்லாவற்றையும் சேர்த்துச் சொல்ல வேண்டியிருக்கிறது. சமயம் காலம் போகப் போகச் செறிவானதாக ஆக வேண்டியிருக்கிறது.

எங்கெங்கெல்லாம் நான் வேறுபடுகிறேன் என்பதைத் தெளிவுபடுத்த வேண்டியிருக்கிறது. சமயப் பாரம்பரியத்தில்



எதை எதையெல்லாம் புதியதாக நான் சேர்க்கப் போகிறேன் என்பதைப் பற்றிச் சொல்ல வேண்டியிருக்கிறது. இனியும் நான் ஒரு பொதிமாடாக இருக்க மாட்டேன். அந்த நிலையைத் தாண்டி வந்துவிட்டோம். இதுவரைக்கும் அது தேவைப்பட்டது. அப்படி இருக்க வேண்டும் என்று நான் விரும்பினேன். புத்தரை மக்கள் நேசிக்க வேண்டும் என்று விரும்பினேன். மகாவீரரைப் பற்றித் தெரிந்து கொள்ள வேண்டும் என்று விரும்பினேன். இயேசுவை நேசித்தவர்களாக வேண்டும் என்று விரும்பினேன். இனி அப்படி புத்தரை நேசிப்பவர்களை, மகாவீரரைப் பற்றித் தெரிந்து வைத்திருப்பவர்களை, இயேசுவை விரும்பு கிறவர்களைப் பார்த்துப் பேச வேண்டியிருக்கிறது.

மனிதர்கள் எப்போதும் தமக்குள் வித்தியாசமாகவே இருந்திருக்கிறார்கள். இயேசுவோடு இருப்பவர்கள் சிலர். புத்தரோடு இருப்பவர்கள் சிலர். கிருஷ்ணரோடு இருப்பவர்கள் சிலர். இப்படியே பலரும் பல வகையினராக இருக்கிறார்கள். பல இனங்களிலிருந்தும், சமுதாயங் களிலிருந்தும், சமயங்களிலிருந்தும் நான் தேர்ந்தெடுக்க வேண்டி இருந்தது. புத்தர் எப்படிப் பேசினாரோ அப்படியே நானும் பேசினால், பௌத்தர்கள் என்னிடம் நம்பிக்கை கொண்டு வந்து சேர்வார்கள். அப்படிப் பேசவில்லை யென்றால் அவர்கள் என்னைப் புரிந்து கொள்வதற்கு வழியே இல்லாமல் போயிருக்கும்.

ஆனால் என்னிடம் வந்து சேர்ந்து என்னைப் புரிந்து கொண்டார்கள் என்னும் போது எல்லாமும் மாறிப் போகின்றன. அவர்களுடைய அன்பு என்னிடமிருந்து தொற்றிக் கொண்டது. எனவே நான் அவர்களிடம் இருந்து எப்படி எப்படியெல்லாம் மாறுபடுகிறேன் என்பதைச் சொல்லச் சரியான தருணம் பழுத்துவிட்டது. அப்படி நான்



சொல்வதைக் கேட்டு அவர்கள் குழப்பம் கொள்ள மாட்டார்கள். அதிர்ச்சியோ அசௌகரியமோ பட்டுக் கொள்ள மாட்டார்கள்.

ஆனால் ஒன்றை நினைவில் கொள்ளுங்கள். தள்ளி நிற்கிறேன் என்பதாலேயே என்னுடைய அன்பு குறைந்துவிட்டது என்று எடுத்துக் கொள்ளக் கூடாது. என்னுடைய அன்பு எப்போதும் ஒரே மாதிரித்தான் இருக்கும். அது மாறப் போவதில்லை. அது மாறுதலுக்கு உட்பட்டதே அல்ல. இன்னும் என்று விருத்தியடையத்தான் செய்யுமே ஒழிய மாறிப்போகப் போவதில்லை. நான் மட்டும் தள்ளி நின்று, தனியாக நின்று அதைப் பார்க்கப் போகிறேன். அவ்வளவுதான்.

இப்போது நீங்கள் என்னுடையவர்களாகிவிட்டீர்கள். எனவே நான் வேறுபடுவது எங்கே என்பதை எடுத்துச் சொல்லி, நான் புதிதாகத் தருவதற்கு என்ன இருக்கிறது என்பதை உணர்த்த வேண்டியிருக்கிறது. இன்னும் கொஞ்சம் என்று எப்படி நான் பாரம்பரியத்தை வளப்படுத்தப் போகிறேன் என்பதைச் சொல்ல வேண்டியிருக்கிறது. சமயத்துக்கு நான் விமரிசனம் செய்ய வேண்டியும் இருக்கிறது. என்றாலும் என் அன்பின் மிகுதியே என்னை விமரிசிக்க வைக்கிறது என்பதைப் புரிந்து கொள்ள வேண்டும்.

புத்தரை, மகாவீரரை, இயேசுவை நான் விமரிசிக்கத் தான் போகிறேன். விமரிசிப்பதாலேயே எனக்கு அவர்கள் மீது அன்பில்லை என்று பொருளில்லை. அன்பிருப்ப தாலேயே அவர்களைப் பற்றிப் பேசுகிறேன். இல்லையென்றால் பேச வேண்டிய அவசியமே இல்லையே. விமரிசிக்கும் சிரமத்தையும் சிரமேற் கொள்ளும் அளவுக்கு அவர்கள் மீது அன்பிருக்கிறது



என்றுதான் பொருள்.

புத்தர் மானுடத்துக்குத் தந்துவிட்டுப் போனது மிக அதிகம்தான். மானுடமோ நித்தம் மாறிக் கொண்டே இருக்கிறது. மானுடத்துக்கு என்னென்ன நடக்கிறதோ அத்தனையிலும் சாதக பாதகங்கள் இருக்கத்தான் செய்கின்றன.

இந்த உலகில் பரிசுத்தமானது என்று எதுவுமே இல்லை. மழை பெய்யும் போது நீர் பரிசுத்தமாகத்தான் இருக்கிறது. ஆனால் உலகத்தை வந்து சேரும்போதோ? ஏன், அதற்கு முன்பு காற்று மண்டலத்துக்குள் புகும்போதே மாசடைந்துவிடுகிறது. பிறகென்ன? மேலும் மேலும் என்று மாசு சேர்ந்து கொண்டேதான் போகிறது. நிலத்தில் விழுந்தபின் அது சேறாகிவிடுகிறது. அசிங்கமானதாகி விடுகிறது. என்றாலும் அது இன்னமும் நீர்தான். ஆனால் பரிசுத்தமான நீராக இருப்பதில்லை.

அதுதான் ஒவ்வொரு சத்தியத்துக்கும் ஏற்படுகிறது. புத்தர் சொன்னபோது அவர் சொன்னது பரிசுத்தமாக இருந்தது. பிறர் கேட்ட அந்தக் கணமே அது பரிசுத்தத்தை இழந்து விட்டது.

பிறகென்ன? அதைக் குறித்து வைத்தார்கள், எப்போதா? முன்னூறு ஆண்டுகள் கழித்துத்தான். முன்னூறு ஆண்டுகள் கழித்துக் குறித்து வைத்தது அப்படியே இருக்கும் என்பதை நினைத்துப் பார்க்கவும் முடிகிறதா? புத்தர் சொன்னதை அப்படியே முன்னூறு ஆண்டுகள் கழித்துக் குறித்து வைத்திருக்க முடியுமா என்ன? சாத்தியமே இல்லை. திரித்துச் சொல்லியிருப்பார்கள். கொஞ்சத்தையாவது அழித்துப் போட்டிருப்பார்கள். மக்கள் மக்கள்தானே?



புத்தர் இறந்த அன்றே. பௌத்தர்கள் முப்பத்தாறு பிரிவினராகப் பிரிந்து போனார்கள். உடனேதான். ஆமாம், முப்பத்தாறு பிரிவினராக. அவர் என்ன சொன்னார் என்பதைப் பற்றி அவர்களுக்குள் கருத்தொற்றுமை இல்லை. என்னதான் வார்த்தைகளைப் பற்றி ஒருமித்த கருத்து என்றாலும் அவற்றின் பொருள் பற்றி அவர்கள் ஒருமித்த கருத்து கொண்டார்களில்லை.

இது எனக்கு ஒரு நிகழ்ச்சியை நினைவுபடுத்துகிறது.

சிக்மண்ட் ஃபிராய்டு தனக்கு அந்திமக் காலம் வந்துவிட்டது என்று உணர்ந்தார். தன்னுடைய பிரதம மாணாக்கர்களை ஒரு விருந்துக்கு அழைத்திருந்தார். இறப்பின் காலடி ஓசையை அவர் காது கொடுத்துக் கேட்டிருக்க வேண்டும். எனவே தன் மாணவர்கள் கடைசியாகக் கூட வேண்டும் என்று நினைத்திருக்கலாம்.

விருந்துக்கு வந்திருந்த மாணவர்கள் ஃபிராய்டு இதைச் சொன்னார், அதைச் சொன்னார் என்று தமக்குள் வாதப் பிரதிவாதங்கள் செய்து கொண்டிருந்தார்கள். தாம் அவர் கொடுத்த விருந்துக்கு வந்திருப்பதையே மறந்து போய் அவர்கள் தமக்குள் தர்க்கம் செய்து கொண்டிருந்தார்கள். பொறுத்துப் பொறுத்துப் பார்த்த அவர் கடைசியில், ''நிறுத்துங்கள் இந்த முட்டாள்தனத்தை. நானென்ன செத்தா போனேன்? இருக்கிறேனே, இங்கே, இப்போது இருக்கிறேனே. நான் என்ன சொன்னேன் என்று என்னை ஏன் கேட்கவில்லை. நானிருக்கும் போதே இப்படிப் பேசித் திரிகிறவர்கள் நான் செத்துப் போனபின் என்ன செய்யப் போகிறீர்களோ? ஒரு மணி நேரமாகச் சண்டையிட்டுக் கொண்டு சச்சரவிட்டுக் கொண்டிருந்துவிட்டீர்கள். அதுவும்



உங்கள் ஆசிரியர் உங்களோடு இருக்கும் போதே...'' என்று கத்திவிட்டாராம்.

ஃப்ராய்டு ஞானம் சித்தியானவர் அல்ல. அவருக்கே இந்தக் கதி என்றால், ஞானத்தின் முகட்டில் நின்று பேசிவிட்டுப் போன புத்தருக்கு என்ன நடந்திருக்கும் என்று நினைத்துப் பாருங்கள். அவர் எந்த ஒன்றையும் சொல்லி முடித்த அந்தக் கணமே அது அவருடைய நெஞ்சில் என்னவாக இருந்ததோ அதிலிருந்து வித்தியாசமான தாகத்தான் ஆகிப் போகிறது. கேட்கப்பட்ட அதே கணம் சொல்லப்பட்டதிலிருந்து வேறானதாக ஆகிப் போகிறது. அதை வியாக்கியானம் செய்யும் போது அது முழுக்க வேறொன்றாகி விடுகிறது.

அடிக்கடி நான் விமரிசிக்கத்தான் போகிறேன். என்னவெல்லாம் நடந்து கழிந்துவிட்டதோ அதன் சாதக பாதகங்களைப் பற்றிப் பேசப் போகிறேன். புத்தர் பரிபூரணமான சமயாதீதிதான். எந்த அளவுக்குச் சமயத்தில் பரிபூரணம் காணமுடியுமோ அந்த அளவுக்குப் பரிபூரணமானவர். என்றாலும் அவர் ஒற்றைப் பரிமாணம் உள்ளவர் என்பதை எப்படி என்னால் சொல்லாமல் இருக்க முடியும்?

அதைச் சொல்லவில்லை யென்றால் பொய் சொன்னதாகி விடும். அப்படிச் சொல்லவில்லை என்றால் என் சத்திய ஈடுபாடு முழுமையாகாது. ஒரு பரிமாணத்தில் என்னதான் பரிபூரணமானவர் என்றாலும் பிற பரிமாணங்கள் இல்லாதவர் என்பதைச் சொல்லாமல் இருக்க முடியாது.

அழகுணர்ச்சியே அவருக்கு இல்லை. இசையைக் கேட்கக் காதுகள் இல்லை. காதலை அனுபவித்தாரில்லை. அழகியல் என்பது முழுக்க அவரிடம் இல்லாமல்



போய்விட்டது. அதை உதாசீனப்படுத்தி விட்டார்.

அறிவியல் நோக்கும் அவரிடம் இருக்கவில்லை. முடிந்திருக்காதுதான். அப்போது அறிவியல் வளர்ச்சியடைந்திருக்கவில்லையே. அவர் ஒற்றைப் பரிமாணப் பரிசுத்தம், ஒரு பரிமாணத்தில்தான்.

அவர் ஒற்றைப் பரிமாணம் கொண்டவராகிப் போனதால் இந்த நாடு முழுக்க ஒற்றைப் பரிமாணம் கொண்டதாக மாறிவிட்டது. புத்தர், மகாவீரர், பதஞ்சலி என்று இந்த நாட்டின் பெரும் மேதைகள் சமயப் பரிமாணத்தில் மட்டுமே வளர்ந்தவர்கள். சமயத்தின் மிகப் பரிசுத்தமான அனுபவங்களை உணர்ந்தவர்கள். இந்த நாட்டை அப்படியே மாற்றத் துடித்தவர்கள். அதன் பாதகம், இந்த நாடு ஏழை நாடாகிப் போனதுதான். அறிவியல் இல்லாமல் எந்த நாடும் பணக்கார நாடாக முடியாது. இந்த நாட்டில் எங்கே பார்த்தாலும் வெளியே அசிங்கம்தான். பஞ்சமும் பட்டினியும்தான். அறிவியல் இல்லாமல் எந்த நாடும் புறத்தே அழகானதாக, ஆரோக்கியமானதாக, செல்வச் செழிப்புடையதாக ஆக முடியாது.

அதைச் சொல்லாமல் இருக்க என்னால் முடியாது. பொய்யாகிப் போகும். அது சரியாகவும் இருக்காது. உன்னை ஏமாற்றுவதாகிப் போகும். மானுடத்துக்கு இழைத்த குற்றமாகிப் போகும். அதைச் சொல்லத் துணிச்சலுள்ளவர் ஒருவர் தேவை.

யாருமே அதைச் செய்வதாகக் காணோம். சரியான நேரம்தான். சத்தமாக ஒருவர், ''புத்தர், பதஞ்சலி, மகாவீரர், லாவோட்சூ, என்று எல்லோருமே மிகப் பிரமாதமானவர்கள். அவர்கள் மானுடத்துக்கு நிறையவே கொடுத்துப் போயிருக்கிறார்கள். அவர்கள் இல்லாமல் மானுடம்



இன்றைக்கு இருப்பதைப் போல இருக்காதுதான். அவர்கள் நமது ஆத்மாவாகிப் போனவர்கள். இதுவெல்லாம் சத்தியம். ஆனால் அவர்கள் அனைவரும் ஒற்றைப் பரிமாணக்காரர்களாக இருந்துவிட்டுப் போய்விட்டது பெரும் பாதகமாகத்தான் போய்விட்டது. பிற பரிமாணங்கள் உறைந்து போய்விட்டன. நொறுங்கிப் போய்விட்டன. இப்போது அந்தப் பிற பரிமாணங்களையும் உணர்வதற்கான நேரம் வந்து விட்டது,'' என்று சொல்லித்தானாக வேண்டும்.

இந்த நாடு செல்வம் பெற வேண்டும் என்று விரும்கிறேன். அறிவியல் சாதகங்களை அனுபவிக்க வேண்டும் என்று விரும்புகிறேன். தொழில் நுட்பத்தில் சிறக்க வேண்டும் என்று விரும்புகிறேன். ஆரோக்கிய மானதாக, நல்ல போஷாக்குள்ள மக்களைக் கொண்ட நாடாக மாற வேண்டும் என்று விரும்புகிறேன். இந்த நாடு மட்டுமல்ல - உலகம் முழுக்க அப்படியாக வேண்டும் என்றே விரும்புகிறேன். இதில் சமயத்துக்கு எதிரானதாக எதுவும் இருப்பதாக எனக்குத் தோன்றவில்லை.

பார்க்கப் போனால், செல்வச் செழிப்பு எந்த அளவுக்கு நம் நாட்டில் இருக்கிறதோ, அந்த அளவுக்கு மக்கள் சமயப் பற்றுடையவர்களாகவும் மாறிப்போவார்கள். செல்வச் செழிப்பு இருக்கும்போது வாய்ப்புகள் அதிகமாகின்றன. வசதிகள் அதிகமாகின்றன. உள்ளார்ந்த தேடலுக்கான நேரமும் களமும் சக்தியும் கிடைக்கின்றன.

அப்படியும் நீ உள்நோக்கித் திரும்பவில்லையென்றால் தவறு உன்னுடையதுதான். செல்வந்தராக இருப்பதில் எந்தத் தவறும் இல்லை. பணக்காரன் ஒருவன் சமயப் பற்றில்லாதவனாக இருந்தால் அவன் மடையனாகத்தான் இருக்க வேண்டும்.



செல்வந்தன் ஒருவன் சமயப் பற்றில்லாமல் இருந்தால் அவனை மடையன் என்பேன். ஏழை ஒருவன் சமயப் பற்றோடு இருந்தால் அவனைப் புத்திசாலி என்பேன். ஏழை சமயப் பற்றோடு இருக்க அரியதொரு புத்திசாலித்தனம் தேவைப்படுகிறது.

கபீர் சமயாதீதியானதில் புத்தர் சமயாதீதியானதை விட அதிகம் புத்திசாலித்தனம் இருக்கிறது. ஏழையாக இருக்கும்போது சமயப் பற்றுக் கொள்வதென்பது சிரமம்தான். செல்வம் என்பதே என்ன என்று தெரியாது எனும்போது அதைத் தாண்டிப் போவது எப்படி? அனுபவித்த ஒன்றைத்தானே ஒருவர் கடந்துபோக முடியும்? அனுபவம் மூலமே ஒருவர் ஒன்றைக் கடந்து போய்த் துறக்க முடியும். அனுபவிக்காமலே ஒருவர் ஒன்றைக் கடந்து போகமுடியும் என்றால், பிறருடைய அனுபவத்தை உணர்ந்து அதைக் கடந்து போவது என்று பொருள்படும். தானாக அத்தனையையும் அனுபவித்தே அதைக் கடக்க வேண்டும் என்பதில்லை. இதற்கு அதிகப் புத்திசாலித்தனம் வேண்டும்தான்.

கபீர் செல்வந்தர்களைப் பார்த்துச் செல்வச் செழிப்பின் வியர்த்தத்தை உணர்ந்து கொண்டிருக்க வேண்டும். அதனாலேயே செல்வந்தனாக வேண்டும் என்ற வேட்கையையும் ஏக்கத்தையும் விட்டுத் தொலைத்திருக்க வேண்டும். புத்தர் ஓர் அரசனுக்கு மகனாக இருந்தவர். செல்வத்தை அனுபவித்து அதன் வியர்த்தத்தைத் தெரிந்து கொண்டவர். எல்லாமும் வியர்த்தம்தான் என்பதை அனுபவித்தபின் உணர்ந்து கொண்டார். கபீர் பிறரைக் கவனித்து அந்த முடிவுக்கு வந்தார். எனவே கபீர் புத்தரை விடப் புத்திசாலியாக இருந்திருக்க வேண்டும் என்றாகிறது இல்லையா? ஏழைகள் சமயப் பற்றுடையவர்களாக



முடியும். ஆனால் ஓர் ஏழைச் சமுதாயம் சமயச் சார்புடையதாக முடியாது. பணக்காரர்கள் சமயத்தைத் தவிர்க்கலாம். ஆனால் பணக்காரச் சமுதாயம் சமயத்தைத் தவிர்க்க முடியாது.

இந்தப் புதிய பரிமாணத்தை இப்போது சேர்த்தாக வேண்டியிருக்கிறது. சமயம் வறுமையை வணங்க வேண்டும் என்பதில்லை. சமயம் பொய்களைச் சொல்லி மக்களை ஏமாற்ற வேண்டியதில்லை. பழைய பிறப்பு, புதிய பிறப்பு பற்றிக் கோட்பாடுகளை வகுத்து மக்களைத் தேற்ற வேண்டியதில்லை. இப்போது இந்த உலகம் முழுக்கச் செல்வச் செழிப்போடு இருக்க முடியாது. அறிவியல் அதற்கான வழிமுறைகளை வகுத்துத் தந்திருக்கிறது. அவற்றை இன்னமும் நாம்தான் சரியாகப் பயன்படுத்திக் கொள்ளவில்லை.

அதனால்தான் நான் மேற்றிசைக் கண்ணோட்டத்துக்கு வக்காலத்து வாங்க மாட்டேன் என்பது. மேற்கே வெறும் உடல்தான் இருக்கிறது. ஆத்மாவைக் கண்டவரில்லை. இதில் ஆபத்து என்னவென்றால், கீழ்த்திசையில் இருக்கும் முட்டாள் அரசியல் தலைவர்கள் மேற்கத்தியவற்றை இங்கே இறக்குமதி செய்கிறார்கள்.

இந்தியா முற்கொண்டு அத்தனை நாடுகளும் அணுசக்தி நாடாக வேண்டும் என்கின்றன. ஏழை நாடுகளான இந்தியாவும் பாகிஸ்தானும் அணுகுண்டு செய்கிறேன் என்கின்றன. என்? மக்கள் பஞ்சத்திலும் பட்டினியிலும் கிடக்கிறார்களே, அதைக் கவனிக்க வேண்டாமா?

சில நாட்களுக்கு முன் இந்தியா பாஸ்கரா என்ற செயற்கைக் கோளை ஏவியது. இங்கே இருக்கும் தொழிற்சாலைகளுக்கு வேண்டிய மின்சாரம் இல்லை.



வாரத்துக்கு ஐந்து நாட்கள் மூடிக் கிடக்கின்றன. இங்கே வேண்டிய மின்சாரம் இல்லையென்ற போதும் வான்வெளியில் பிறரோடு போட்டிபோட வேண்டும் என்கிறார்கள். என்ன முட்டாள்தனம்.

வான்வெளியில் மனிதர்கள் அனுப்பிய ஐந்நூற்றுக்கு மேற்பட்ட செயற்கைக் கோள்கள் வலம் வந்து கொண்டிருக்கின்றன. அவற்றில் ஒன்று - அமெரிக்கா அனுப்பிய வான் ஆராய்ச்சிக் கோள் - உடையப் போகிறது. கட்டுப்பாடு இழந்துவிட்டது. பெரிய அபாயம்தான். புனே மேல் விழலாம். புனேயிலிருந்து கர்நாடகா வரை எங்கே வேண்டுமானாலும் விழலாம். ஒரே பொருளாக அது விழப் போவதில்லை. ஐந்நூறுக்கு மேலான துண்டுகளாக விழப் போகிறது. அது ஓர் அணுசக்தி மையத்தின் மேல் விழுந்தால் என்னாவது, உலகத்தை மொத்தமாக அழித்துவிடும்தானே?

அந்த ஐந்நூறு செயற்கைக் கோள்களும் ஒரு நாள் இல்லையென்றால் ஒரு நாள் கட்டுப்படுத்த முடியாமல் போய்விடத்தான் போகின்றன. அமெரிக்கக் கோள் அப்படி என்றால் இந்தியக் கோளும் அப்படித்தானே? இரண்டு வருடங்களுக்கு முன் இந்தியா தன் முதல் செயற்கைக் கோளை ஏவியது. பிற இந்தியச் சாதனங்களைப் போலவேதான் அதனுடைய செயல்பாடும் இருக்கிறது. ஆரியபட்டா என்று பெயர் வைத்திருக்கிறார்கள். தவறான தகவல்களையே தத்து கொண்டிருக்கிறதாம். ஒரு தொல்லையாகிப் போய்விட்டது.

நம்பவே முடியாது. முதலில் அதிலிருந்து வந்த தகவல்களை நம்பினார்கள். பிறகுதான் அது அனுப்பும் தகவல்கள் தவறானவை என்று தெரிந்து கொண்டார்கள். இந்திய மனப்போக்கைத்தானே அது பிரதிபலிக்கிறது? இப்போது அதைச் செயலிழக்கச் செய்ய முயற்சி



செய்கிறார்கள். அது இவர்கள் கட்டுப்பாட்டுக்குச் செவி சாய்ப்பதாயில்லை. இன்னும் தகவல்களை அனுப்பிக் கொண்டே இருக்கிறது. அதைச் செயலிழக்கச் செய்ய வழி தெரியவில்லை.

ஏழை நாடுகள் மேற்கத்திய நாடுகளைப் பார்த்துப் தம்மை அவர்களுடைய நகல்களாக்கிக் கொள்ள முயல்வது அறிவீனம். ஏழை நாடுகளுக்கு அறிவியல் அறிவு அவசியம்தான். ஆனால் அவர்களுக்கு இப்படிப்பட்ட சாதனங்கள் தேவையில்லை. அதுவல்ல அவர்களின் தேவைகளைப் பூர்த்தி செய்யப்போவது.

உலகம் முழுக்க ஒரு சொர்க்கம் ஆக்க முடியும் என்ற அளவுக்கு அறிவியலைக் கொண்டு இப்போது சக்தியைத் தயாரிக்க முடியும்.

புத்தர் நல்லது பல செய்திருக்கிறார். என்றாலும் அவருடைய செயல்களின் பக்க விளைவாக இந்தியாவின் ஏழ்மை அமைந்துவிட்டது. இந்த உண்மையை நான் உதாசீனம் செய்ய முடியாது. அதைச் சொல்லித்தான் ஆகவேண்டும். இதுவரை சொல்லவில்லை. இப்போது என்னுடையவர்களாக நீங்கள் இருக்கும்போது சொல்லித் தான் ஆக வேண்டும். உங்களால்தான் இதைப் புரிந்து கொள்ள முடியும்.

மகாவீரரும் நிறையத்தான் செய்திருக்கிறார். ஆனால் அவர் செய்ததன் பக்க விளைவாக ஆயிரமாண்டு அடிமைத் தனம் தோன்றியது. அவருடைய போதனைகளால்தான் உலகத்திலேயே மிகக் கோழை நாடாக இந்தியா மாறிப் போய்விட்டது.

எல்லாவற்றையும் கடவுளிடம் ஒப்படைத்துவிடு என்று கிருஷ்ணர் சொன்னது சரிதான். சமயக் களத்தில் அதுதான்



மிகச் சரியானது. கடவுளை நம்பி ஒப்புக் கொடுத்து விடுவது.

ஆனால் அறிவியல் களத்தில் அது சரிப்படாது. இங்கே வேறொரு வகையான சாதனங்களோடு நாம் இயங்க வேண்டியிருக்கிறது. சந்தேகப்படு, கேள்வி கேள் - எதையும் நம்பி ஏற்றுக் கொள்ளாதே. நம்பிக்கை சமயத்தின் அடித்தளம். சந்தேகம் அறிவியலின் அடித்தளம்.

''கடவுளை நம்பு. சரணாகதி அடைந்துவிடு. அவர் செய்வது என்னவானாலும் சரிதான் என்று நம்பு,'' என்று கிருஷ்ணர் அர்ச்சுனனிடம் சொன்னார். அதன் பக்க விளைவு என்னவானது? ''ஏழையா? கடவுளை நம்பு. உடல் நலிவா? கடவுளை நம்பு. அவர் செய்வதெல்லாம் சரியானதே?'' இப்படியாக மாறிப் போய்விட்டது. இதுதான் பக்க விளைவு.

சமயக் களத்தில் இது மிகச் சரிதான். ஆனால் அறிவியல் களத்துக்கு வரும்போது இது மிகப் பெரும் தவறு.

இதைச் சொல்லித்தானாக வேண்டியிருக்கிறது. கிருஷ்ணரையோ மகாவீரரையோ புத்தரையோ விமரிசித்தால் எனக்குத் தொல்லைதான். என்றாலும் சொல்லத்தான் வேண்டியிருக்கிறது.

நிஷாந்த், இன்னும் கொஞ்சம் பொறு. நிறையச் சொல்ல வேண்டியிருக்கிறது. என்னதான் பின் விளைவாக இருக்கப் போகிறதென்றாலும் முழுக்க எது உண்மையோ அதைச் சொல்லத்தான் வேண்டியிருக்கிறது. எதை யெல்லாம் பாராட்டி ஏற்றுக் கொள்ள முடியுமோ அதையெல்லாம் பாராட்டி ஏற்றுக் கொண்டு, எதை



யெல்லாம் நிந்திக்க வேண்டியிருக்கிறதோ அதையெல்லாம் நிந்திக்க வேண்டியிருக்கிறது.

இந்தியாவின் ஏழ்மை, அடிமைத்தனம், நீண்ட துயரம் ஆகியவற்றை இனியும் பொறுத்துக் கொண்டிருக்க முடியாது. அதற்குக் காரணமாகிப் போன கிருஷ்ணர், மகாவீரர், புத்தர் ஆகியோரை மன்னிக்கவும் முடியாதுதான். அவர்கள் சமயத்தின் வழியில் என்னென்ன சாதித்திருக்கிறார்களோ அதற்காக அவர்களைப் பாராட்டும் அதே நேரம், இந்தியாவின் வீழ்ச்சிக்குக் காரணமானவர்கள் என்ற வகையில் நிந்திக்கவும் வேண்டியிருக்கிறது.

சரியான நேரம்தான் இது. தவறாகிப் போனவற்றைச் சரிசெய்யச் சரியான நேரம்தானிது. இது இந்தியாவைப் பற்றிய சமாச்சாரம் மட்டுமல்ல. உலகம் முழுக்க இதே கதைதான். இந்திய முட்டாள்கள் மேற்கத்தியரைப் பார்த்து அப்படி இருக்க முயற்சி செய்வதைப் போலவே, மேற்கத்திய முட்டாள்கள் இந்தியரைப் போல இருக்க முயற்சி செய்கிறார்கள். இந்தியா கடந்த காலத்தில் செய்துவிட்ட தவறுகளை அவர்கள் இப்போது செய்து கொண்டிருக்கப் போகிறார்கள். எனவே எல்லாவற்றையும் தெளிவாகச் சொல்ல வேண்டியிருக்கிறது. உணர்ச்சி வேகம் இன்றிச் சொல்ல வேண்டியிருக்கிறது. அதனால்தான் நிஷாந்த், என்னுடைய தொனியில் மாற்றத்தைக் காண்கிறாய். அது உன் கற்பனை அல்ல. எதார்த்தம்தான். என்னுடைய காரியம் புதியதொரு வழியில் தொடர்கிறது. புதிய படிநிலைக்குள் நுழைந்துவிட்டேன். புதியதொரு கம்யூன் தோன்றுவதற்கு முன்பு அதற்கான முன்னேற்பாடு தான் இது.

நான்காவது வினா



அன்புக்குரிய குருவே,

ஏன் காமம் எனக்கு அலுத்துப் போய்விட்டது?

**சந்தன்,** காமத்தில் சலிப்பு இருக்கத்தான் செய்கிறது. அதனால்தான் அதைத் தவிர்க்க வேண்டாம் என்று சொல்கிறேன். அதன் முட்டாள்தனம் தெரியாத வரைக்கும் அதை விட்டுவிடுவது சிரமம். அதனுடைய வியர்த்தத்தைத் தெரிந்து கொள்ளாத வரை அதைத் தாண்டிப் போவது முடிவதில்லை.

காமத்தில் உனக்குச் சலிப்பு வந்துவிட்டது என்பதே நல்லதற்குத்தான். இது இயல்பானதும் கூட. காமம் என்றாலே உன் சக்தியைக் கீழ் நோக்கிச் செலுத்தி விரயமாக்குதல் என்றுதான் பொருள். சக்தியை மேல் நோக்கிச் செலுத்தும்போதுதான் அது ஊட்டமாகிறது. அப்போது உனக்குள் இருக்கிற வற்றாத பொக்கிஷத்தைத் திறந்துவிடுகிறது. ஏஸ் தம்மோ ஸனந்தனோ. அதை விட்டுவிட்டு மீண்டும் மீண்டும் பைத்தியக்காரத்தனமாக காமத்தில் கிடக்கும்போது, நீ களைத்துத் தேய்ந்து போகிறாய்.

ஒரு புதுமணத் தம்பதியினர் நயாகரா நீர்வீழ்ச்சிக்குத் தேன்நிலவுக்காகப் போகிறார்கள். போய்ச் சேர்ந்தவுடன் ஓர் ஓட்டலில் அறை எடுக்கிறார்கள். உள்ளே போனவர்கள் மூன்று நாளைக்கு இருக்கிறார்களா என்பதே தெரிய வில்லை. ரூம் சர்வீஸுக்குக் கூட யாரையும் கூப்பிட வில்லை. மேனேஜருக்குக் கவலையாகிவிட்டது. எனவே கதவைத் தட்டிப் பார்க்கலாம் என்று முடிவெடுக்கிறார்.



கதவைத் தட்டுகிறார். உள்ளே சலசலப்புக் கேட்கிறது. ஒருவர் நடந்து வருவது தெரிகிறது. இளைத்துக் களைத்துப் போன இளைஞன் கதவைத் திறக்கிறான். கால்சராய் மட்டுமே போட்டுக் கொண்டிருக்கிறான். ''எங்களுக்குக் கவலையாக இருந்தது,'' என்று சொன்னார் மேனேஜர்.

''சரிதான். இப்போதுதானே எங்களுக்குக் கல்யாணம் ஆகியிருக்கிறது,'' என்றான் அவன்.

''புரிகிறது. என்றாலும் உலகத்தின் மிகப் பெரிய அதிசயங்களில் ஒன்று பக்கத்திலே இருக்கிறதே,'' என்றார் அவர்.

உள்ளிருந்து உடனே ஒரு குரல் பலவீனமாகக் கேட்டது. ''அதை இன்னுமொரு முறை எனக்குக் காட்டினால் இந்த ஜன்னல் வழியாக எட்டிக் குதித்து விடுவேன்.''

புரிந்ததா? மூன்று நாட்கள் தொடர்ச்சியாக... அந்தப் பெண் எட்டிக் குதித்து விடுவாள்தான்.

மனிதன் ஓரளவுக்குத்தான் முட்டாள்தனமாக வாழலாம். சில எல்லைகளைத் தாண்டியதும் தனக்குத் தானே என்ன செய்து கொள்கிறோம் என்பதைத் தெரிந்து கொண்டாக வேண்டும்.

அந்தநேரம் வந்து விட்டது சந்தன். காமத்தை விட முக்கியமான விஷயங்கள் நிறைய இருக்கின்றன. காமம் மட்டுமே எல்லாமுமில்லை. அது முக்கியமானதுதான். ஆனால் அதுவே எல்லாமுமல்ல. அதில் மாட்டிக் கொண்டிருந்துவிட்டாய் என்றால் வேறு மிக முக்கியமான பலவற்றை இழந்து விடுவாய்.



நான் காமத்துக்கு ,எதிரானவன் அல்ல. அதனால்தான் என் போதனைகள் முரண்பட்டதாயத் தோன்றுகின்றன. முரண்பாட்டு வாசகங்கள் தவிர்க்க முடியாதவை. ஏனெனில் உண்மை எப்போதுமே முரண்பாடுகளைத் தன்னிடம் கொண்டிருக்கிறது.

நான் காமத்துக்கு எதிரானவன் அல்ல. காமத்துக்கு எதிராகப் பேசுகிறவர்கள் காம வயப்பட்டவர்களாகத்தான் இருப்பார்கள். நான் காமத்தை வேண்டாம் என்று சொல்லவில்லை. ஏனென்றால் எந்த அளவுக்கு அதற்குள் ஆழ்கிறாயோ, அந்த அளவுக்கு விரைவில் அதிலிருந்து வெளியேறிவிடுவாய். காமத்திலிருந்து முற்றிலுமாக ஒருவன் வெளிவரும் நாள் ஒரு மிகப் பெரிய வரம்பெறும் நாள்.

உனக்கு அலுப்பு வந்துவிட்டது என்பது மிக நல்லது. என்னவோ நோய் என்று நினைத்துக் கொண்டு டாக்டரிடம் போய் மருந்து கேட்டுத் தொலைக்காதே. அதனால் எந்தப் பயனும் இல்லை. உன்னுடைய சலிப்பை அது அதிகப் படுத்தத்தான் செய்யும். சலிப்பு வந்துவிட்டதென்றால் அதிலிருந்து விடுபட நேரம் வந்துவிட்டது என்றுதான் பொருள்.

சலிப்பு வந்துவிட்டதென்றால் அதிலேயே அமிழ்ந்து கிடப்பதில் என்ன பயன்? அதிலிருந்து வெளியே வந்து விடு. அதை அடக்கி வை என்று நான் சொல்லமாட்டேன். அதில் நல்ல ஈடுபாடு இருக்கிறது எனும்போது, அதைவிட்டு விலக நினைப்பதுதான் அதை அடக்கி வைப்பது. ஆனால் அதில் சலிப்பு வந்தபின், அது உன்னைக் களைப்படையச் செய்தபின், அதை விட்டு வெளியேறுவது அடக்கி வைப்பதாகாது. அப்படிப்பட்ட



நிலையில் அதைவிட்டு வெளியேறுவது அடக்கி வைப்பதாகாது.

காமத்திலிருந்து விடுதலை என்பது மிகச் சிறந்த ஓர் அனுபவம். காமத்திலிருந்து விடுபட்டு விடும்போது தியானத்துக்காக, சமாதி நிலைக்குப் போக உன்னுடைய சக்திகள் தயாராகி விடுகின்றன.

இன்றைக்கு இது போதுமே...







# உள்ளம் என்னும் குகையில் அமர்ந்து கொண்டு...

# 9





அம்பைச் செய்கிறவன் சீவிச் சீவி
அப்புகளை நேராக்குவதைப் போல
சித்தர் அலைபாயும் எண்ணங்களை
நேராகச் செலுத்துகிறார்.

நீரிலிருந்து மணலில் எடுத்தெறிந்த
மீன்களைப் போல
எண்ணங்கள் துடிதுடித்து நடுங்குகின்றன.
ஆசைகளை விட்டெறிய முடியவில்லையே
அதனால்தான்.

நடுங்குகின்றன, தடுமாறுகின்றன,
தம்போக்கில் அலைகின்றன.
அவற்றைக் கட்டுப்படுத்துதல் நல்லதே.
அவற்றை அடக்கி வைத்தால் இன்பம்தான்.

ஆனால் எவ்வளவு நுண்ணியவை அவை!
எப்படி நழுவி நழுவிப் போகின்றன!
அவற்றை அமைதிப்படுத்துவதே காரியம்.
அவற்றை அடக்கி வைத்து இன்பம்
காண்பதே.



திட சித்தத்தோடு சித்தர்
எண்ணங்களை அடக்கி
வைக்கிறார்.
அவற்றின் அலைச்சலை நிறுத்துகிறார்.
உள்ளம் என்னும் குகையில் அமர்ந்திருந்து
விடுதலையைக் காண்கிறார்.

**விடுதலைதான்** வாழ்க்கையின் குறிக்கோள். விடுதலை இல்லாமல் வாழ்க்கையில் எந்தப் பொருளும் இருப்பதில்லை. அரசியல், பொருளாதார, சமூக விடுதலை எல்லாம் உண்மையில் விடுதலையே அல்ல. காலத்திலிருந்து விடுதலை. மனத்திலிருந்து விடுதலை. ஆசையிலிருந்து விடுதலை. மனம் இல்லாமல் போய்விடும்போது பிரபஞ்சத்தோடு ஒன்றிப் போகிறாய். பிரபஞ்சத்தைப் போலப் பரந்து விரிந்து விடுகிறாய்.

உனக்கும் எதார்த்தத்துக்கு மிடையே தடையாக இருப்பது மனம்தான். அந்தத் தடையால் இருண்ட கொட்டடியில் சிறைப்பட்டுக் கிடக்கிறாய். வெளிச்சம் அதற்குள் நுழைவதில்லை. மகிழ்ச்சி அதற்குள் நுழைய முடிவதில்லை. உன் துயரத்துக்குக் காரணமே நீ அந்தச் சின்னஞ்சிறிய கொட்டடிக்குள் அமிழ்ந்து கிடக்கப் பிறந்தவனல்ல என்பதுதான். இருத்தலின் முடிந்த முடிவை நோக்கிப் பரவிப் பாயவே உன்னுடைய உயிருரு ஏங்குகிறது. உன் உயிருரு கடலைப் போல விரிந்திருக்க விழைய, நீயோ ஒரு பனித் துளியாக இருக்கிறாய். பிறகு எப்படி நீ பரவசமடைவது? மனிதன் சிறைப்பட்டிருப்பதாலேயே துயரத்தில் உழல்கிறான்.

கௌதம புத்தர் 'தன்ஹ' - ஆசை, நமது துயரத்துக் கெல்லாம் காரணம் என்கிறார். ஆசை மனதைப்



படைக்கிறது. ஆசை எதிர்காலத்தைப் படைக்கிறது. உன்னை எதிர்காலத்துக்குள் செலுத்தி வைத்துத்தான். நாளை என்பதை இன்றைக்குள் கொண்டு வந்துதான். நாளை என்பதை இன்றைய நாளுக்குள் கொண்டு வந்தால் நேற்றைய சுமைகளை எல்லாம் சுமக்கத்தான் வேண்டியிருக்கிறது. எப்படி என்கிறாயா? நமது நேற்றைய நாட்கள்தான் நமது நாளைய நாட்களுக்கு ஊட்டமாக இருப்பதால்தான்.

ஒவ்வொரு ஆசையும் கடந்த காலத்தில் பிறந்து எதிர்காலத்துக்குள் செலுத்தப்பட்டதுதான். கடந்த காலமும் எதிர்காலமுமே உன் மனதை முழுக்க ஆக்கி வைக்கின்றன. மனதை ஆராய்ந்து பார். அதைக் கூறுபோட்டுப் பார். அங்கே இருண்டு விஷயங்களைத்தான் பார்ப்பாய். கடந்த காலமும் எதிர் காலமும். நிகழ்காலத்தின் ஓர் அணுவைக் கூடப் பார்க்க முடிவதில்லை. ஆனால் நிகழ்காலம்தான் ஒரே உண்மை. அதுவே இருத்தல். அதுவே நடந்து கொண்டிருக்கும் ஒரே நடனம்.

மனம் முழுக்க இல்லாமல் போகும்போதுதான் நிகழ்காலத்தைக் காண முடியும். கடந்தகாலம் உன்னைத் தன் கட்டுக்குள் வைத்துக் கொள்ளாமல் இருக்கும் போதும், எதிர்காலம் உன்னைப் பிடித்து ஆட்டாமல் இருக்கும் போதும்தான் நீ நிகழ் காலத்தை உணர முடியும். நினைவுகளையும் கற்பனைகளையும் துண்டித்து விடும் போதுதான் அது சாத்தியம். நீ யார்? எங்கே இருக்கிறாய்? அது தெரிந்து விடுகிறது. அந்தக் கணம் நீ யாருமாக இருப்பதில்லை. நீ யாருமே அல்ல என்றாகிப் போகும்போது, யார்தான் உன்னைக் காயப்படுத்த முடியும்? உன் உண்மையான இருப்பு எந்தக் காயத்தையும் ஏற்றுக் கொள்ளச் சித்தமாக இருக்கிறதே. அந்த இருப்பில் காயப்பட்டுக் கொள்ள வேண்டும் என்று விரும்பித் தேடி



ஓடுகிறாய். அந்த இருப்பு காயத்திலேயே இருக்கிறது. அதன் இருப்பே துயரத்தையும் வலியையும் சார்ந்ததாகி விடுகிறது.

உனக்கென ஓர் அடையாளம் இல்லாமல் போய்விடும்போது, துயரம் சாத்தியமே இல்லாமல் போய்விடுகிறது. கவலை என்பது நம்பவே முடியாத விஷயமாகி விடுகிறது. யாருமே இல்லாமல் ஆகத் தயாராகும்போது ஓர் அமைதியும் நிம்மதியும் வந்து சேர்கிறது. உள்ளே இரைச்சல்கள் இருப்பதில்லை.

கடந்த காலமும் எதிர் காலமும் இல்லாமல் போய்விடும்போது இரைச்சலைக் கிளப்ப அங்கே என்ன இருக்கப் போகிறது? நீ கேட்கும் அந்த அமைதி சொர்க்கத்து அமைதி. புனிதமான நிசப்தம். மனம் இல்லாமல் போய்விட்ட அந்தக் கணம், உன் வாழ்வில் முதல் முறையாக, உனக்குள் முடிவே இல்லாத கொண்டாட்டம் நிகழ்ந்து கொண்டேயிருக்கக் காண்கிறாய். அந்த அனுபவத்தின் கூறே அதுதான்.

மனிதனைத் தவிர இந்தப் பிரபஞ்சத்தில் எல்லாமுமே பரவசத்தில் இருக்கின்றன. மனிதன் மட்டுமே அதிலிருந்து வீழ்ந்துவிட்டான். வழி தவறிப் போனான். மனிதனுக்கு மட்டுமே இது சாத்தியம். அவனுக்கு மட்டுமே உணர்வு இருப்பதால்தான்.

உணர்வால் இரண்டு சாத்தியமாகின்றன. உனக்குள் அது ஒரு பிரகாசமான ஒளியாகிப் போகலாம். சூரியன் கூடத் தோற்றுப் போகும் அளவுக்குப் பிரகாசமான ஒளியாகிப் போகலாம். திடீரென ஓராயிரம் சூரியன்கள் தோன்றுவதைப் போல என்கிறார் புத்தர். மனம் இல்லாமல் போயிருக்க, நீ உனக்குள்ளேயே ஆழ்ந்து பார்க்கும் போது ஒரே ஒளிவெள்ளம்தான். முடிவற்ற ஒளிவெள்ளம்.



அதில் ஆனந்தம் மட்டுமே இருக்கிறது. பரிசுத்தம் இருக்கிறது. மாசு ஏதும் இருப்பதில்லை. பட்டை தீட்டிய செயற்கை ஒளியல்ல அது. மிகச் சாதாரணமான பரவசம். குற்றமொன்றில்லாத பரவசம். அது ஓர் அதிசயம். அதன் கம்பீரம் விவரிக்கத் தக்கதல்ல. அதனுடைய அழகை வெளிப்படுத்த வார்த்தைகளோ வடிவமோ இல்லை. அதனுடைய கருணைக்கு முடிவேயிருப்பதில்லை. ஏஸ் தம்மோ ஸனந்தனோ... அதுதான் முடிவான நெறி.

மனத்தைக் கொஞ்சம் ஒதுக்கி வைத்தால் போதும், பிரபஞ்ச நாடகத்தைக் காண்பாய். அதன் பின் நீ வெறும் சக்திதான். அந்தச் சக்தி இங்கே இப்போது விட்டு நீங்காமல் இருக்கிறது. இது ஒரு சாத்தியம். இதற்கு நீ பரிசுத்தமான உணர்வாக ஆகிவிட வேண்டும்.

இன்னொரு சாத்தியம் என்ன என்கிறாயா? தான் என்ற உணர்வோடு இருப்பது. அப்படி இருக்கும்போது வீழ்ச்சிதான். அப்படி இருக்கும்போது உலகத்திலிருந்து தள்ளி நிற்பவனாகிப் போகிறாய். ஒரு தீவாகிப் போய் இப்படித்தான் என்று வரையறுக்கப் பட்டவனாகிப் போகிறாய். அது ஒரு பிணைப்பு. எல்லா வரையறைகளும் உன்னையும் வரையறைக்குள் வைத்து விடுகின்றன. நீயிருப்பது ஒரு சிறையில் என்றாகிப் போகிறது. சிறையில் அறைகள் இருட்டாகத்தான் இருக்கும். அடர்ந்த இருட்டுத்தான். ஒளியிருப்பதில்லை. ஒளி வரும் சாத்தியமும் இருப்பதில்லை. சிறைக் கொட்டடி உன்னை முடமாக்கி விடுகிறது. முடக்கிப் போட்டுவிடுகிறது.

தான் என்ற உணர்வோடு இருப்பது ஒரு தளையாகிப் போகிறது. ஆத்மா அதற்குள் சிறைப்பட்டுப் போகிறது. பிரக்ஞையோ விடுதலைக்கு இட்டுச் செல்கிறது.



தான் என்பதை விட்டுவிட்டுப் பிரக்ஞையோடு இரு. இதுதான் செய்தி. எக்காலத்துப் புத்தர்களும் தந்துவிட்டுப் போயிருக்கும் செய்தி. அதுதான். கடந்த காலத்திய புத்தர்கள், நிகழ்காலத்துப் புத்தர்கள், இனி வரும் புத்தர்கள் என்று எல்லோரும் சொல்வது அதுதான். இந்தச் செய்தியின் உட்கருத்து மிக எளிமையானது. அகங்காரத்தை விட்டுவிடு. தான் என்பதை விட்டுவிடு. மனம் என்பதை விட்டுவிடு. அப்படியே இரு, போதும்.

அமைதி பரவும் இந்தக் கணம் நீ யார்? நீ எவரொருவரும் இல்லை. இல்லாத ஒருவன். உனக்குப் பெயர் ஒன்றுமில்லை. உனக்கு வடிவம் என்று எதுவும் இல்லை. நீ ஆணுமில்லை, பெண்ணுமில்லை. இந்துவில்லை, முகம்மதியனுமில்லை. எந்த நாட்டுக்காரனும் இல்லை. எந்த இனத்துக்காரனும் இல்லை. நீ இந்த உடல் அல்ல. இந்த மனம் அல்ல.

பின் நீ யாரென்கிறாய்? இந்த நிசப்தத்தில் எதைச் சுவைக்கிறாய்? இருத்தலின் சுவை எப்படியிருக்கிறது? வெறுமனே நிசப்தம்தான். வெறும் அமைதிதான். இந்த அமைதியிலும் நிசப்தத்திலும் ஒரு மிகப் பெரிய மகிழ்ச்சி தோன்றி வெளிப்படுகிறது. பிரவாகித்துப் பெருகுகிறது. இதற்குக் குறிப்பிட்ட காரண காரியம் ஏதுமில்லை. அதுதான் உன்னுடைய ஊற்றாகப் பெருகும் இயல்பு.

சமயத்தின் முழு ரகசியமும் மனதைக் கொஞ்சம் தள்ளி வைத்திருப்பதுதான். ஏனென்றால் அப்படிக் கொஞ்சம் மனதை ஒதுக்கி வைக்கும்போது, உன்னுடைய உயிருரு ஆயிரத்தொரு நிறங்களில் வெடித்துக் கிளம்பு கிறது. நீ ஒரு வானவில்லாகிறாய். ஒரு தாமரையாகிறாய். ஆயிரம் இதழ்கள் கொண்ட தாமரையாகிறாய்.



திடீரென ஒரு திறப்பு நிகழ்கிறது. அந்தமில்லாத இருத்தலின் அழகு உன்னுடையதாகி விடுகிறது. அப்போது ஆகாயத்தில் இருக்கும் அத்தனை நட்சத்திரங்களும் உன்னுடையதாகி விடுகின்றன. வானம் கூட உனக்கு எல்லையாகி விடுவதில்லை. எந்த எல்லையும் அற்றவனாக விரிந்து பரந்து போகிறாய்.

உருகிப் போக, கலந்து போக, மறைந்து போக, அவியாகிப் போக அந்த அமைதி உனக்கொரு சந்தர்ப்பம் தருகிறது. நீ நீயாக இல்லாது போய்விடும் அந்தக் கணம் முதல் முறையாக நீ நீயாகிப் போகிறாய். நீ நீயாக இல்லாமல் போய்விடும்போது கடவுள் இருக்க வருகிறார். நிர்வாணம் சித்திக்கிறது. ஞானம் பிறக்கிறது. நீ நீயாக இல்லாமல் போகும்போது எல்லாவற்றையும் கண்டு கொள்கிறாய். நீ நீயாகவே இருக்கும் போது எல்லாமும் தொலைந்து போகிறது.

மனிதன் தன்னுணர்வுடையவனாகி விட்டான். அது பாதை மாறிப் போய்விடுவதாகும். அதுதான் அவனுடைய முதன்மையான வீழ்ச்சி. எல்லா மதங்களும் அநாதி காலத்தில் மனிதன் இழைத்த ஆதிப் பாவத்தைப் பற்றி ஒவ்வொரு விதமாகப் பேசுகின்றன. ஆனால் அதில் சிறந்த கதை கிறிஸ்துவத்தில்தான் இருக்கிறது. அறிவுப் பழத்தைப் புசித்துவிட்டதுதான் ஆதிப்பாவம். அறிவுப் பழத்தைப் புசித்ததால் தன்னுணர்வு வந்து சேர்ந்துவிட்டது.

எந்த அளவுக்கு அறிவாளியாக இருக்கிறாயோ அந்த அளவுக்கு ஆணவம் கொண்டும் இருக்கிறாய். அறிஞர்கள், பண்டிதர்கள், மௌல்விகள் இவர்களைப் பாருங்கள், தெரிந்து கொள்வீர்கள்.



ஆணவம் அறிவு என்னும் அலங்காரத்தைப் போட்டுக் கொள்கிறது. சாத்திரங்கள், முறைகள், கோட்பாடுகள் என்ற அரிதாரங்களைப் போட்டுக் கொள்கிறது. ஆனால் அவை உன்னைக் களங்கமற்றவனாக்குவதில்லை. குழந்தைமையின் வெகுளித்தனம், நம்பிக்கை, அன்பு, விளையாட்டுத்தனம் ஆகியவற்றைக் கொண்டுவந்து சேர்ப்பதில்லை. அறிவுடையவனாகும் போது நம்பிக்கை, அன்பு, விளையாட்டுத்தனம், ஆச்சரியம் என்று எல்லாமும் மறைந்து போகின்றன.

ஆனால் நமக்கு அறிவைத் தேடிக் கொள்ளத்தான் போதிக்கிறார்கள். வெகுளித்தனத்தைச் சொல்லித் தருவதில்லை. இருத்தலின் ஆச்சரியத்தை அனுபவிக்க யாரும் சொல்லித் தருவதில்லை. பூக்களின் பெயர்களைச் சொல்லித் தருகிறார்கள். ஆனால் பூக்களைச் சுற்றி நடனமாட யாரும் சொல்லித் தருவதில்லை. மலைகளின் பெயர்களை எல்லாம் சொல்லித் தருகிறார்கள். ஆனால் மலைகளோடு பேசுவது எப்படி என்று யாரும் சொல்லித் தருவதில்லை. நட்சத்திரங்களோடு தொடர்பு கொள்வது எப்படி என்று யாரும் சொல்லித் தருவதில்லை. மரங்களோடு உரையாடுவது எப்படி என்று யாரும் சொல்லித் தருவதில்லை. இருத்தலோடு எப்படி இயைந்த சுருதியோடு இருப்பது என்று யாரும் சொல்லித் தருவதில்லை.

சுருதி பிறழ்ந்து போனபின் மகிழ்ச்சி ஏது? சுருதி கலைந்துவிட்டதென்றால் அங்கே துயரம்தான் இருக்கும். வலிதான் இருக்கும். துன்பம்தான் இருக்கும். முழுமையின் நடனத்தோடு இணைந்து நடனமாடினால்தான் நீ மகிழ்ச்சியாக இருக்க முடியும். அந்த நடனத்தின் ஒரு பகுதியாக இருக்கும்போது, அந்த இசைக் கச்சேரியின் ஓர் அங்கமாக ஆகிவிடும்போது, உன்னுடைய பாட்டை உன்



பாட்டுக்கு நீ தனியாகப் பாடிக் கொண்டு இருக்காத போது, அதில் கரைந்து போவதில்தான் மனிதனின் விடுதலை இருக்கிறது.

அதுதான் விடுதலை என்பது. அரசியல் விடுதலை அல்ல. பொருளாதார விடுதலை அல்ல. சமுதாய விடுதலை அல்ல. விடுதலை என்பது ஆத்மாவினுடையது. ஆத்மா விடுதலைக்கு வழியாகும் எனும்போதுதான் அரசியல், பொருளாதார, சமூக விடுதலை விடுதலை ஆகிறது. அப்படி ஆத்ம விடுதலைக்கு உதவியாக இல்லையெனும்போது அவை போலியாகிப் போகின்றன.

விடுதலை என்ற பெயரில் மனிதன் மேலும் மேலும் அடிமைப்படுத்தப் படுகிறான். அழகிய பெயர்கள் அசிங்கங்களுக்குத் திரை போடுகின்றன. ஆத்ம விடுதலை இல்லையென்றால் உனக்கு விடுதலையே இல்லை என்று தான் பொருள். உன் விடுதலைகள் எல்லாமும் போலித்தனமானவை. உன்னை ஏமாற்றுகிறவை. அவை நீ விளையாடக் கொடுத்த பொம்மைகள் தான்.

புத்தர் எதார்த்தத்தைப் பற்றிப் பேசுகிறார். உண்மையான விடுதலை பற்றிப் பேசுகிறார். அதற்கு அவர் வைத்த பெயர் 'நிர்வாணம்.' நிர்வாணம் என்ற வார்த்தைக்கே ஓர் அழகு இருக்கிறது. தன்னுணர்வைக் கழித்துவிடுவது. முழுக்கத் தன்னுணர்வு இல்லாமல் இருப்பது, ஆணவத்தை அவிழ்த்துப் போட்டுவிட்ட நிர்வாணம். அது தருவது மிகப் பிரமாதமான பரவசம். மிகச் செழிப்பான அறுவடை. வற்றாத புதையல்.

அதனால்தான் புத்தர் தம்மபதத்தில் இரண்டு செய்திகளைத் திரும்பத் திரும்பச் சொல்கிறார். ஒன்று 'ஏஸ் தம்மோ ஸனந்தனோ' என்பது. இதுதான் வாழ்வின் முடிவான நெறி. நீ மறைந்து போகும்போது நீ உன்னைக்



கண்டுபிடித்துக் கொள்கிறாய். முரண்பாடான வாக்கியம்தான். இந்தத் தன்னுணர்வைக் கழித்துவிடும்போது முடிவான அடையாளத்தைப் பெற்றுக் கொள்கிறாய். ஒரு பனித்துளியாக இருப்பதிலிருந்து மறைந்து போகும்போது கடலாகிப் போகிறாய்.

அவர் அடிக்கடி சொல்லும் இரண்டாவது வசனம், 'ஏஸ் தம்மோ விசுத்யா' என்பதாகும். இப்படிப்பட்டதே பரிசுத்தத்தின் விதி. வெகுளித்தனமாகவும் பரிசுத்தமாகவும் ஆகிவிடுவது. மிக எளிமையானது இது. மனத்தைச் சார்ந்த அடையாளத்தைக் கழித்துவிடு. நீ ஒரு மனம் என்றே நினைக்காதே.

புத்தர் மனதுக்கு எதிரானவர் என்று பொருளில்லை. மனம் உன்னைத் தன் சௌகரியத்துக்குப் பயன்படுத்திக் கொள்ள விடக்கூடாது என்பதுதான் பொருள். நீ மனதைப் பயன்படுத்திக் கொள். மனம் உன்னைப் பயன்படுத்திக் கொள்ள விட்டுவிடாதே. வழக்கமாக இரண்டாவதுதான் நடக்கிறது. எசமானன் அடிமையாகிப் போகிறான். அடிமை எசமானன் ஆகிவிடுகிறான். எல்லாம் தலைகீழ்தான். எல்லாமும் தலைகீழாக மாறிக் கிடக்கிறது.

நீ தலைகீழாக நிற்கிறாய். பின் எப்படி நடப்பது? எப்படி நகர்வது? எப்படி நடனமிடுவது? தலைகீழாக இருந்து யாராவது நடனமாடுவதைப் பார்த்திருக்கிறாயா? தலைகீழாக நின்றிருக்கும் வரை உன் வாழ்வில் இயக்கம் ஏதும் இருக்காது. தேங்கித்தான் போய்விடும். தேங்கிப் போய்விட்ட சாக்கடையாகிவிடும். அமிழ்ந்துவிடுவாய். தலைகீழாக நிற்கும் வரைக்கும் முடவனாகிப் போய் செயலிழந்து கிடப்பாய்.



ஒரு சிறு மாற்றத்தைத்தான் நான் கேட்கிறேன். மறுபடி காலால் நில். சிறு மாற்றம்தான். ஆனால் அது கொண்டு வருவதோ புரட்சிகரமான ஒரு மாற்றம். உடனே நீ நகர்வதற்குத் தயாராகி விடுவாய். நகர்வதென்பது வாழ்வதாகும். நகராமல் நின்று போவது இறப்புத்தான்.

இறப்பை எப்படி வரையறுப்பது? ஒருவன் எந்த வகையிலும் நகர முடியாது போவதுதான் இறப்பு. மூச்சுவிட முடியாது. அது ஒரு வகை இயக்கம். பார்க்க முடியாது. பேச முடியாது. நடக்க முடியாது. இவை எல்லாமுமே இயக்கத்தின் வெவ்வேறு வடிவங்கள்தானே. எல்லா இயக்கமும் நின்று போய்விட்டால் இறப்பு என்கிறாய்.

எந்த அளவுக்கு இயக்கம் இருக்கிறதோ அந்த அளவுக்கு வாழ்வில் செறிவு இருக்கிறது. அந்த அளவுக்கு உயிர்ப்புடையவனாக இருக்கிறாய். பலதரப்பட்ட இயக்கம் கொண்டவனாகி விடு. ஆனால் தலைகீழாக நிற்பதை நிறுத்திக் கொண்டாலே அது சாத்தியம். நீ நேராகிவிட வேண்டும்.

நீ என்னிடம் வந்த அன்று தலைகீழாக இருந்தாய். தீட்சை பெற்றுக் கொள்வதென்பது தலைகீழாக இனியும் நிற்க வேண்டாம் என்று நான் கேட்டுக் கொள்வது. அவ்வளவுதான். வாழ்க்கை முழுக்க சிரசாசனம் செய்து கழித்துவிடாதே என்று சொல்வது.

இயல்பாக இரு. இயற்கையின் ஒரு பகுதியாக இரு. அலட்டிக் கொள்ளாதே. உன்னுடைய ஆணவத்தை ஊதி வைத்துக் கொள்ளாதே. நான் ஒரு பிரம்மாண்டத்தின் மிகச் சிறிய துளிகள். பிரம்மாண்டத்தோடு இணைந்து இயங்கினால் அதீத அழகில் ஜொலிப்போம். அதற்கு



எதிராக நடந்து கொண்டாலோ அசிங்கத்திலும் அசிங்கமானவராகிப் போவோம். ஆனால் உன்னுடைய சமுதாயங்கள் சண்டையிடு, எதிர்த்துப் போராடு என்று சொல்லிக் கொண்டேயிருக் கின்றன. வாழ்க்கை ஒரு போராட்டம் என்கின்றன. போராடாவிட்டால் உயிர்த்திருக்க முடியாது என்கின்றன.

வெல்ல வேண்டுமானால் புகழ் பெற வேண்டுமாம். பெரிய பெரிய லட்சியங்களைக் கற்பித்து விட்டார்கள். அந்த லட்சியங்கள் சங்கிலிகளாக உங்களைப் பிணைத்து நிற்கின்றன. உன்னுடைய மனம் என்பதற்கு அந்த லட்சியங்களே ஆணி வேர்களாகின்றன. அவை மனதைப் படைக்கின்றன.

'தன்ஹ' எனும்போது புத்தர் ஆசை, லட்சியம், சாதனை என்று அனைத்தையும்தான் குறிக்கிறார். இவை தானே மனதுக்கு ஊட்டமாகின்றன. மனதுக்கு ஊட்டம் தந்து கொண்டேயிருக்கும் வரை விஷத்தைத் தின்று கொண்டேயிருக்கிறாய். மனம் பெரியதாகப் பெரியதாக நீ சிறுத்துக் கொண்டே வருகிறாய். மனம் ஒரு புற்று நோய்க் கோளமாக வளர்ந்து விடுகிறது.

சன்யாசம் என்பது ஓர் அறுவைச் சிகிச்சை. புத்தர் தீட்சை கொடுத்து ஆயிரக்கணக்கானோரைச் சன்னியாசி களாக்கினார். அவர் மிகப் பெரிய அறுவை மருத்துவர்.

நீயேதான் உன்னுடைய துயரங்கள் அனைத்துக்கும் காரணம் என்று தெரிந்து கொள்ளும் அதே கணம், எல்லாமும் மாறிப் போக ஆரம்பிக்கின்றன. உன்னுடைய துயரம் வளர்வதற்கு நீயே உதவியாகிப் போவதில்லை.

நீ மனமல்ல என்பதையும் மனதுக்கு நீ ஒரு சாட்சி என்பதையும் தெரிந்து கொண்ட அந்தக் கணம், மனதுக்கு மேலே எழுகிறாய். உன்னை எதுவும் பிணைப்பதில்லை.



இறக்கைகள் முளைத்துவிட உயர உயரப் போகிறாய். மனம் எப்போதுமே வாழ்வின் பள்ளத்தாக்குகளின் இடுக்குகளில் சிக்கித் தடுமாறிக் கொண்டிருக்கிறது. என்றாலும் நீ ஒரு பருந்தாக மாறிப் போய்ச் சிறகு விரித்து உயர எழுந்துவிடலாம். நீ எசமானனாகி உன் மனதைக் கட்டுப்படுத்தலாம். மனதைத் தீர்மானமான வழிகளில் செலுத்தலாம்.

இந்தச் சூத்திரங்கள் எப்படி மனதுக்கு அடிமையாக்குவது என்பதைப் பற்றியவை. எசமானனாகும் விஞ்ஞானத்தைப் போதிக்கின்றன.

**'அம்பைச் செய்கிறவன் சீவிச் சீவி**
**அம்புகளை நேராக்குவதைப் போல,**
**சித்தர் அலைபாயும் எண்ணங்களை**
**நேராகச் செலுத்துகிறார்.'**

தியானம் செய். உன்னுடைய எண்ணங்கள் உன்னைச் செலுத்துகின்றனவா? அல்லது நீ உன் எண்ணங்களைச் செலுத்திக் கொண்டிருக்கிறாயா? பலவும் இந்தக் கேள்விக்கான பதிலால் முடிவு செய்யப்படுகிறது என்பதால் இதைக் கவனித்துப் பார். நீ எண்ணங்களின் ஆளுமைக்குள் இருக்கிறாயா? அல்லது உன் எண்ணங்கள் உன்னை இங்குமங்குமாக அலைக்கழிக்கின்றனவா? அவை உனக்குக் குறிப்புகள் தருகின்றனவா? அவை உன்னை மயக்குகின்றனவா? அவை உன்னை ஆட்படுத்தி வைத்திருக்கின்றனவா? உன்னுடைய கயிறுகளை இழுக்க நீ அந்த இழுப்புக்கு ஆடும் பொம்மையாகி விட்டாயா?

அல்லது நீ உன் எண்ணங்களை ஆட்படுத்தி வைத்திருக்கிறாயா? நில் என்று சொன்னால் நின்று



போவதற்கு இயங்கச் சொல்லவும், இயங்கா திருக்கச் சொல்லவும்...

இதைப் பற்றி யாரும் நினைத்துப் பார்ப்பதில்லை. அப்படி நினைத்துப் பார்த்தால் ஒரு தலைகுனிவு ஏற்படும் என்று பயந்திருக்கிறார்கள். அவர்களுடைய கையாலாகாத்தனம்தான் இதில் தெரிகிறது. அவர்களுடைய சொந்த எண்ணங்களை அவர்களால் நிறுத்தி வைக்க முடிவதில்லையே.

திபெத்தியக் கதை ஒன்று உண்டு.

ஒருவன் ஒரு குருவுக்குப் பல வருடங்களாகச் சேவை செய்து வந்தான். அவனுக்கு ஒரு காரியம் ஆக வேண்டியிருந்தது. அவருடைய ரகசியங்களைத் தெரிந்து கொள்ள விரும்பினான். அற்புதங்களைச் சாதிக்கும் ரகசியம் அவருக்குத் தெரிந்திருக்கிறது என்று நம்பினான்.

அதைத் தெரிந்து கொள்ள வேண்டும் என்று ஆசையாலேயே அவன் அவருக்குச் சேவை செய்து கொண்டிருந்தான். ஆனால் அதைப் பற்றிப் பேச அவனுக்குத் தைரியம் இல்லை. அவரோ அவனைக் கவனித்துக் கொண்டே இருந்திருக்கிறார்.

ஒரு நாள் அவனிடம், ''மனசுக்குள்ளே என்ன இருக்குதுங்கறதைச் சொல்லிவிடப்பா. எனக்கு வேலை செய்துக்கிட்டிருக்கும் போதெல்லாம் மனசுக்குள்ளே எதையோ வெச்சுக்கிட்டு இருக்கறேங்கறது எனக்கு நல்லாத் தெரியுது. உன்னுடைய போக்கிலே எந்த அன்பையும் நான் பார்க்கல்லே. அதிலே எந்தப் பணிவும் இல்லே. லஞ்சம் கொடுக்கறாப்படித்தான் நீ வேலை செய்யறே. என்னதான் உனக்கு வேணும்கறதைச் சொல்லிவிடப்பா,'' என்றார். அவனும் அந்தச் சந்தர்ப்பத்துக்காகத்தானே காத்திருந்தான்?



உடனே, ''அற்புதங்கள் செய்யற ரகசியம் எனக்குச் சொல்லித் தரணும்,'' என்றான்.

அவர், ''இதுக்காகவா இத்தனை நாளும் வீணடிச்சே? நீ வந்த அன்னைக்கே சொல்லியிருக்கலாமே. உனக்கும் சித்திரவதை. எனக்கும் சித்திரவதை. ஏதோ ஒரு நோக்கத்தை மனசுலே வெச்சுக்கிட்டு இருக்கறவங்க எனக்குப் பக்கத்திலே இருக்கறதே எனக்குப் பெரிய சித்திரவதைதான். அவர்கள் அசிங்கமானவர்கள். அடிப்படையில் பேராசை பிடித்தவர்கள். பேராசை அவர்களை அசிங்கமானவர்காளக்குகிறது. அந்த ரகசியம் ரொம்பச் சாதாரணம். முதல் நாளன்னைக்கே நீ கேட்டிருக்கலாம். இதுதான் அந்த ரகசியம்...'' என்றார்.

ஒரு சிறிய மந்திரத்தை ஒரு காகிதத்துண்டில் எழுதி அவனிம் கொடுத்தார். ''புத்தம் சரணம் கச்சாமி, சங்கம் சரணம் கச்சாமி, தம்மம் சரணம் கச்சாமி,'' இதுதான் அந்த மந்திரம். புத்தரின் அடியை நோக்கிப் போகிறேன். புத்தரின் சமூகத்தை நோக்கிப் போகிறேன். புத்தரின் நெறியை நோக்கிப் போகிறேன்.

அவர் அவனிடம், ''இந்தச் சிறிய மந்திரத்தை உன்னோடு எடுத்துப் போ. ஐந்து தடவை திருப்பிச் சொல். ஐந்து தடவை போதும். வெகு சுலபம் தான். ஆனால் ஒரே ஒரு நிபந்தனை. குளித்துவிட்டுச் சொல்ல வேண்டும். கதவை மூடிவிட்டுச் சொல்ல வேண்டும். அதைத் திரும்பித் திருப்பிச் சொல்லும்போது குரங்கை மட்டும் நினைத்துக் கொள்ளக் கூடாது,'' என்றார்.

அவன், ''இது என்ன முட்டாள்தனம்? குரங்கைப் பற்றிய நினைவு எனக்கு எதற்கு வரவேண்டும்? என் வாழ்வில் குரங்கைப் பற்றி நான் நினைத்துப் பார்த்ததேயில்லையே,'' என்றான்.



''அதைப் பத்தி நான் எதுவும் சொல்றதுக்கில்லே. நிபந்தனையை நான் உனக்குச் சொல்ல வேண்டியிருக்குது. அவ்வளவுதான். எனக்கு மந்திரத்தைச் சொல்லிக் கொடுத்தப்போ அப்படித்தான் சொல்லிக் கொடுத்தாங்க. குரங்கைப் பத்தி நீ நினைச்சே பார்த்ததில்லேன்னா அதுவும் நல்லதுக்குத்தான். சரி, நீ போகலாம். மறுபடி வந்துடாதே. ரகசியம் உன் கையிலே இருக்குது. நிபந்தனையெ நிறைவேத்தி வெச்சா, உனக்கு அற்புதமான சக்தியெல்லாம் வந்துடும். எதை வேணும்னாலும் செய்யலாம். பறக்கணுமா? பறக்கலாம். மத்தவங்க என்ன நினைக்கிறாங்கன்னு தெரிஞ்சுக்கணுமா? தெரிஞ்சுக்கலாம். வெறுங்கையிலே இருந்து எதை வேணும்னாலும் வரவழைக்கலாம்.''

அவன் வீட்டுக்கு விரைந்தான். அவருக்கு நன்றி சொல்லக் கூட மறந்து போனான். அதுதான் பேராசை என்பது. அதற்கு நன்றியுணர்ச்சி இருப்பதில்லை. பேராசைக்கு நன்றி உணர்ச்சி கொஞ்சமும் கிடையாது. பேராசை ஒரு திருடன். திருடர்கள் நன்றி சொல்ல மாட்டார்கள்.

விரைந்தான். என்றாலும் மனதில் குழப்பம். போகிற வழியிலே கூட மனதில் குரங்குகள் ஆட ஆரம்பித்தன. சிறியது பெரியது என்று பலவிதமான குரங்குகளையும் மனதில் பார்த்துக் கொண்டே போனான். சிவப்பு வாய்க் குரங்கு, கறுப்பு வாய்க் குரங்கு என்று பலவும். அவனுக்கோ பெரும் குழப்பம். என்னதான் நடக்கிறது? குரங்குகளைத் தவிர அவனால் வேறு எதையும் நினைத்துப் பார்க்கக் கூட முடியவில்லை. அவை பெரியதாகிக் கொண்டே வந்தன. அவனைச் சுற்றிக் குதித்து ஆடின.



வீடு போய்ச் சேர்ந்தான். குளித்துத் தயாரானான். ஆனால் குரங்குகள் அவனை விட்டுப் போவதாயில்லை. மந்திரத்தைச் சொல்ல உட்காரும்போதும் தன்னை விட்டுப் போகாதோ என்ற சந்தேகம் வந்துவிட்டது.

மந்திரத்தை இன்னமும் சொல்லவே ஆரம்பிக்க வில்லை. தயாராகிக் கொண்டிருந்தான். கதவை மூடி உட்கார்ந்த போது அறை முழுக்கக் குரங்குகள்தான். அவனுக்கே இடமில்லை என்ற அளவுக்கு அவை அறையை ஆக்கிரமித்துக் கொண்டன. கண்ணை மூடினாலும் திறந்தாலும் குரங்குகளே தெரிந்தன. நடப்பது என்ன என்பது அவனுக்குப் புரியவேயில்லை. இரவு முழுக்க முயன்று பார்த்தான். மறுபடி மறுபடி குளித்து உட்கார்ந்து பார்த்தான். ஒவ்வொரு தடவையும் தோல்விதான்.

காலையில் தனது குருவிடம் போனான். மந்திரத்தைத் திருப்பிக் கொடுத்தான். ''இதை நீங்களே வைத்துக் கொள்ளுங்கள். என்னைப் பைத்தியமாக அடித்துவிடும் போல இருக்கிறது. எந்த அற்புதமும் எனக்கு வேண்டாம். இந்தக் குரங்குகளிடமிருந்து தப்பிக்க வழி சொன்னால் போதும்,'' என்று கேட்டுக் கொண்டான்.

ஒரு குறிப்பிட்ட எண்ணத்திலிருந்து விடுபடுவதே சாத்தியமாவதில்லை. அதைக் கழித்துக் கட்டிவிட வேண்டும் என்று முயற்சிக்கும்போது, அது இன்னமும் கடினமாக காரியமாகிவிடுகிறது. ஏனென்றால் அதை விட்டுவிடுவது என்று முடிவெடுக்கும்போது, ஒரு பெரிய கேள்விக்கு விடை காண வேண்டியிருக்கிறது. யாரிடம் கட்டுப்பாடு இருக்கிறது. நீ மனதின் கட்டுப்பாட்டிலா? அல்லது மனது உன் கட்டுப்பாட்டிலா? மனம் இந்தக்



கட்டத்தில் தான்தான் உன்னை அடிமைப்படுத்தி வைத்திருப்பது என்பதை நிரூபிக்க எல்லாக் காரியமும் செய்கிறது.

பல கோடி ஜன்மங்களாக எசமானன் அடிமையாகவும் அடிமை எசமானனாகவும் இருந்தாயிற்று. அவ்வளவு சுலபமாக அடிமை தன்னுடைய சலுகைகளையும் முன்னுரிமைகளையும் விட்டுக் கொடுக்க மாட்டான். மிகக் கடுமையாகத்தான் எதிர்ப்புக் காட்டப் போகிறான்.

முயன்று பார். குளித்து முடித்துக் கதவை மூடி உட்கார்ந்து புத்தம் சரணம் கச்சாமி, சங்கம் சரணம் கச்சாமி, தம்மம் சரணம் கச்சாமி என்ற எளிய மந்திரத்தைச் சொல்லிப் பார். குரங்குகள் உன்னை வந்து சேராமல் பார்த்துக் கொள், என்ன?

இவனைப் பார்த்துச் சிரிக்கத் தோன்றுகிறதா? சிரித்துவிடாதே. நீதான் அவன்.

சிக்மண்ட் ஃபிராய்டு ஒரு கதையை வழக்கமாகச் சொல்வதுண்டு.

ஒரு பெரிய ஓட்டல். அங்கே தங்குவதற்கு ஒருவன் வந்தான். ஓட்டலில் ஓர் அறை காலியாக இருந்தும் மேனேஜர் அவனுக்கு அந்த அறையைத் தர வெகுவாகத் தான் தயங்கினார். இவன் ஏன் அவ்வளவு தயக்கம் என்று கேட்டுவிட்டான்.

''அந்த அறைக்கு நேர் கீழே மிகப் பிரபலமான ஓர் அரசியல் தலைவர் தங்கியிருக்கிறார். ரொம்பப் பெரிய ஆள்தான். ஏகப்பட்ட செல்வாக்கு. சின்னச் சின்ன விஷயத்துக்கெல்லாம் கோபப்படறாரு. மேல் அறையில் யாராவது தங்கியிருந்து ஏதாவது சத்தம் செய்தால் என்ன நடக்குமோ என்று பயந்துதான் அதைப் போன மூன்று



நாட்களாகக் காலியாக வைத்திருக்கிறேன். சின்னச் சத்தம் வந்தாலும் அவர் ஏக ரகளை பண்ணிவிடுகிறார்,'' என்று மேனேஜர் சொன்னார்.

வந்தவன், ''ஒண்ணும் பயந்துக்காதீங்க. நான் இருக்கப் போவது ஒரே ராத்திரிக்குத்தான். பகல் முழுக்க ஏகப்பட்ட வேலை. படுத்தா தூங்கிப் போவேன். அதுவும் நடுராத்திரிக்கு வந்துவிட்டு காலை ஐந்து மணிக்கே போய்விடுவேன். பன்னிரண்டு மணிக்கும் ஐந்து மணிக்கும் நடுவில் என்ன நடக்கப் போகிறது. அதுவும் நான் நன்றாகத் தூங்கிவிடுவேன் என்கிறபோது? கனவுதான் காணப் போகிறேன். என் கனவுகள் அவரைத் தொந்திரவு செய்யப் போகின்றனவா?'' என்று சொன்னான்.

மேனேஜருக்கு சமாதானம் ஆகிவிட்டது. ''ஐந்து மணி நேரத்துக்குத்தான் தங்கப் போகிறான் என்றால் பிரச்சினை இருக்காதுதான்,'' என்று நினைத்துக் கொண்டார்.

இரவு பன்னிரண்டு மணிக்கு அவன் களைத்துப் போய் வந்தான். ஆயிரக்கணக்கான பிரச்சினைகள் அவன் மண்டையைக் குடைந்து கொண்டிருந்தன. அந்த அரசியல் வாதியை மறந்தே போனான். தன் அறைக்குச் போய்ச் சேர்ந்தவுடன் படுக்கையில் உட்கார்ந்து ஒரு ஷூவைக் கழற்றி ஒரு மூலையில் வீசினான். அது தொம்மென்று விழுந்தது. அந்தச் சத்தம் அவனுக்கு அரசியல்வாதியை நினைவுக்குக் கொண்டு வந்தது. எனவே அடுத்த ஷூவை மெதுவாகக் கீழே வைத்தான்.

ஒரு மணி நேரம் கழித்து அந்த அரசியல்வாதி இவன் அறைக் கதவைத் தட்டினான். தூக்கம் கலைந்து கதவைத் திறந்தான். ''என்னங்க? ஏதாவது செய்து விட்டேனா? ஒரு மணி நேரமாக நன்றாகத் தூங்கிக் கொண்டுதானே இருந்தேன்?'' என்றான்.



அரசியல்வாதிக்குக் கோபத்தில் முகம் சிவந்து விட்டது. ''ஆமாம். எங்கே அந்த இன்னொரு ஷூ? என்னால் தூங்கவே முடியவில்லை. என்ன ஆச்சு என்ற கேள்வி எனக்கெதிரில் தொங்கிக் கொண்டே நிற்கிறது. ஒரு ஷூவைப் போட்டுக் கொண்டே தூங்குகிறானா? ஒன்றை நீ எறிந்தது எனக்குத் தெரியும். மற்றது? என்ன ஆயிற்று? அதைப் பற்றிய நினைப்பை என்னால் ஒதுக்கவே முடியவில்லை. என்னதான் அதைப் பற்றி மறக்க முயற்சி செய்தாலும் அது என்னை விடுவதாயில்லை. தூங்க வேண்டுமானால் அதற்கு ஒரே வழிதான் இருக்கிறது. உன்னையே வந்து என்ன செய்தாய் என்று கேட்டுவிடுவது. தெரியவில்லை என்றால் என்னால் தூங்கவே முடியாது,'' என்றார்.

ஒரு முட்டாள்தனமான எண்ணத்தை விட்டொழிப்பதே அவ்வளவு சிரமம். எந்த வகையிலும் உனக்குச் சம்பந்த மில்லாத எண்ணமே உன்னை அப்படி அலைக்கழிக்கிறது. உன்னைத் தொடர்ந்து பிடித்துக் கொண்டு சித்திரவதை செய்கிறது. உன்னைப் பைத்தியமாகக் கூட அடித்து விடுகிறது.

யாரும் தனக்குள் என்ன நடக்கிறது என்பதைப் பார்ப்பதில்லை. தனக்குள்ளே என்ன நடக்கிறது என்பதைப் பார்த்தால் வெட்கப்படத்தான் வேண்டியிருக்கும் என்பதாலேயே யாரும் அதைச் செய்வதில்லை. தான் ஓர் அடிமை என்பதைத் தெரிந்து கொள்வது ஓர் அவமானம் தானே. மனம் சிம்மாசனத்தில் பல காலம் இருந்து விட்டதால் எசமானனாக இருக்கப் பழகிப்போய்விட்டது. ஆனால் அதுவல்ல எசமானன்.

நீ உணர்வாகப் பிறந்திருக்கிறாய். மனதாக அல்ல. உன்னுடைய உட்புரி உணர்வால் ஆனது. மனதால் அல்ல.



மனம் என்பது சேர்த்து வைத்துக் கொண்டிருக்கும் எண்ணங்கள். அவ்வளவுதான். கடந்த காலத்தின் குப்பை,கூளம். நீ அதனிடமிருந்து முழுக்க வித்தியாசமானவன்.

அதைச் சரியாகக் கவனித்துப் பார்த்திருந்தால் மெதுமெதுவே அந்தத் தூரத்தை உணர்வாய். ஓர் எண்ணம் தோன்றினால் அதைக் கவனி. எந்த அபிப்பிராயமும் கொள்ளாமல் அதைச் சார்ந்தோ எதிர்த்தோ இருக்காமல் வெறுமனே அதைக் கவனி. அதற்குள் புகுந்து பார். ஒரு கண்ணாடியைப் போல அதைப் பிரதிபலித்துப் பார்.

ஒன்று மிகத் தெளிவாகத் தெரியவரும். உன்னிட மிருந்து அது வேறுபட்டது என்பது நிச்சயமாகத் தெரிய வரும். அது வந்து போவது. நீயோ நிலைத்திருப்பவன். கண்ணாடியில் தெரியும் பிம்பம் கண்ணாடியாவதில்லை. பல பிம்பங்கள் வந்து போனாலும் கண்ணாடி அப்படியே இருக்கிறது. கண்ணாடிக்கு பிரதிபலிக்கும் திறன் மட்டுமே இருக்கிறது. கோபம், பேராசை, பொறாமை என்று எண்ணங்கள் வந்து போகின்றன. ஏதோ ஒரு வகை எண்ணம் இருந்து கொண்டே இருக்கிறது. ஆனால் அதுவே நீயல்ல.

நம்மை ஆக்கி வைத்திருக்கும் முறையே தவறாகிப் போய்விட்டது. நமது மொழிகள் யாவும் தவறான வற்றையே நமக்குத் தருவதால் அவையே தவறாகிப் போனவை. வயிறு பசித்தால், ''எனக்குப் பசிக்கிறது,'' என்கிறாய். என்ன முட்டாள்தனம்! உனக்கு எப்போதும் பசிப்பதில்லை. உனக்குப் பசியே இருக்க முடியாது. ஏன் என்கிறாயா? பிரக்ஞைக்கு ஏது பசி? அதற்கேது உணவும் திருப்தியும்? என்ன நடக்கிறது என்றால் உன் உடல் பசிக்கிறது. அதை நீ தெரிந்து கொள்கிறாய். உடல் நிலைமையை நீ பிரதிபலிக்கிறாய். அவ்வளவுதான்.



சரியாகச் சொல்ல வேண்டுமானால், ''என் உடலுக்குப் பசி என்பது எனக்குத் தெரிந்திருக்கிறது,'' என்று சொல்ல வேண்டும். ''என்னுடைய உடலுக்கு உணவு தேவைப்படுகிறது,'' என்று சொல்ல வேண்டும்.

ஆனால் எல்லா மொழிகளும் ''எனக்குப் பசிக்கிறது,'' என்று சொல்லித்தான் நம்மைப் பழக்கப்படுத்தி வைத்துள்ளன. எனக்குத் தாகமாக இருக்கிறது என்று சொல்வது, என் உடலுக்குத் தாகமாக இருக்கிறது என்பது, எனக்குத் தெரிந்திருக்கிறது என்று சொல்வதை விட எளிமையானது என்பது எனக்குத் தெரியும்.

ஒருமுறை ஒரு பெரிய இந்திய ஞானி அமெரிக்காவுக்குப் போயிருந்தார். அவருடைய பெயர் சுவாமி ராம். தன்னைப் பற்றி அவர் எப்போதுமே மூன்றாவது மனிதனைப் பற்றிப் பேசுவதைப் போலவே பேசினார். நான் என்று எப்போதுமே சொல்லிக் கொண்டதில்லை. தன்னை அவர் ராம் என்று தான் சொல்லிக் கொள்வார். ''ராமுக்குப் பசி'' என்பார். ''ராமுக்குத் தாகமாக இருக்கிறது,'' ''ராமுக்குத் தூக்கம் வருகிறது.'' நமக்குப் பழக்கமில்லையென்பதால் அதைக் கேட்க விநோதமாக இருக்கிறது.

அவர் அமெரிக்கா போனபோது அவரை யாரும் சரியாகப் புரிந்து கொள்ளவில்லை. தவறாகக் கூடப் புரிந்து கொண்டதுண்டு. ''ராமுக்குப் பசி,'' என்றால் அவர்கள் சுற்றுமுற்றும் பார்த்துக் கொள்வார்கள். ராம் எங்கே என்றுதான். அவர், ''இந்த உடல்தான் ராம். இந்த உடலுக்குப் பசிக்கிறது,'' என்பார்.



அவர்களோ, ''எனக்குப் பசிக்கிறது என்று சொல்லலாமே. ஏன் இப்படி சுற்றி வளைத்துப் பேச வேண்டும்? நாங்கள் ராம் எங்கே என்று கேட்க வேண்டியிருக்கிறது. நீங்களும் இந்த உடல்தான் ராம் என்று சொல்ல வேண்டியிருக்கிறது,'' என்பார்கள்.

''இல்லாத ஒன்றைச் சுட்டிக்காட்டிப் பேச மாட்டேன். எனக்குப் பசிக்கிறது என்று சொல்ல மாட்டேன். நான்தான் இல்லாதவனாயிற்றே,'' என்பார்.

ஒரு முறை அவர் ஒரு பூங்காவில் இருந்தார். பொது இடம். சிலர் அவரைச் சுற்றி நின்று சந்தேகங்களைக் கேட்டுக் கொண்டிருந்தார்கள். ஒருவர், ''கிருஷ்ணரைப் பற்றிக் கேள்விப்பட்டிருக்கிறோம். அவர் குழல் ஊதினால் எல்லோரும் போட்டது போட்டபடியே கிடக்க, அவருக்குப் பின்னால் போய்விடுவார்களாமே? அது என்ன அப்படி ஓர் அற்புதம்?'' என்று கேட்டார்.

ராம் ஒரு துணியை மட்டுமே தன்னைச் சுற்றிப் போர்த்துக் கொண்டிருந்தார். அதை வீசியெறிந்தார். பதில் சொல்வதற்குப் பதில், செயலில் பதில் கொடுக்க நினைத்தார். அப்படித்தான் ஞானிகள் செய்வார்கள். போர்த்திக் கொண்டிருந்த ஒரே போர்வையையும் எறிந்து விட்டாரா? நிர்வாணமாக அவர் ஓட ஆரம்பித்தார். எல்லோரும் அவரோடு ஓட ஆரம்பித்தார்கள்.அவரைச் சுற்றி நின்று கொண்டிருந்தவர்கள் மட்டுமில்லாமல் நடக்க வந்திருந்தவர்கள், அக்கம் பக்கம் இருந்தவர்கள் என்று எல்லோருமே அவரோடு ஓட ஆரம்பித்தார்கள். பத்திரிகை படித்துக் கொண்டிருந்தவர்கள் கூட அதை வீசி எறிந்துவிட்டு ஓடினார்கள். ஒரு பெரிய கூட்டமே பின்னால் ஓடி வர, அவர் சிரித்துக் கொண்டே ஓடிக் கொண்டிருந்தார்.



பிறகு ஒரு மரத்தடியில் நின்றார். ''ஏன் என்னைத் தொடர்ந்து ஓடி வருகிறீர்கள்? எதற்காக? நான் குழல் ஊதக்கூட இல்லையே! ஏன் கிருஷ்ணருடைய குழலுக்குப் பிறர் பைத்தியமாகிப் போனார்கள் என்றுதானே கேட்டீர்கள்?'' என்றார்.

வழக்கத்துக்கு மாறாக எது நடந்தாலும் எல்லோரும் மயங்கிப் போகிறார்கள். ''நீங்கள் என் மந்திரத்துக்கு மயங்கிப் போனீர்கள். ராம் எதையும் விசேஷமாகச் செய்யவில்லை. நிர்வாணமாக ஆகி காலை நேரத்து வெய்யிலில் ஒரு குழந்தை போல அங்குமிங்கும் ஓடினான். அவ்வளவுதான்,'' என்றார்.

அவருடைய பேச்சு வழக்கம் தெரியாத ஒருவர், ''யாரது ராம்?'' என்றார். அவர், ''இந்த உடல் ராம். இந்த மனம் ராம். நீங்கள் என்னை வேடிக்கை பார்ப்பதைப் போல வேடிக்கை பார்க்கிறேன். இந்த உடல் இந்தக் காலை வெய்யிலில் நிர்வாணமாக ஓடியதைப் பார்த்தீர்கள். நானும்தான் பார்த்திருந்தேன். நீங்கள் வெளியே இருந்து வேடிக்கை பார்த்தீர்கள். நான் உள்ளே இருந்து பார்த்தேன். எல்லோருமே வேடிக்கை பார்க்கிறவர்கள்தான்,'' என்றார்.

அதுதான் மனதிலிருந்து கழட்டிக் கொள்வது என்பது. வேடிக்கை பார்ப்பவனாக இருத்தல்.

> **'அம்பைச் செய்கிறவன் சீவிச் சீவி**
> **அம்புகளை நேராக்குவதைப் போல,**
> **சித்தா் அலைபாயும் எண்ணங்களை**
> **நேராகச் செலுத்துகிறார்.'**

- என்று தானே புத்தர் சொல்கிறார்? அப்போதுதான் அது சாத்தியப்படும். நீ பார்ப்பவனாக ஆகிப்போகும்போது.



உன் எண்ணங்களை நீ பார்க்கும் பொருட்களின் நிலைமைக்குக் கொண்டு வந்துவிட்டால், மனதில் இருப்பது உன்னை ஆட்படுத்த முடியாது. அதனுடைய சக்திக் கோட்டுக்கு அப்பால் நகர்ந்து போய்ப் பிரிந்து நிற்கிறாய். வேடிக்கை பார்க்கிறவனாகிப் போகிறாய். சாட்சியாகிப் போகிறாய். இனி உன் எண்ணங்களை நீ செலுத்த முடியும். எண்ணங்கள் அப்போது அழகானவை ஆகிவிடும். எண்ணங்களைப் பயன்படுத்திக் கொள்ள முடியும்.

இருப்பில் மனம்தான் மிக நுண்ணிய இயந்திரம். அதிலும் மனித மனம் இன்னும் நுண்ணியது. பரிணாமத்தால் நுண்ணிய அதை மிகச் சிறப்பாகப் பயன்படுத்திக் கொள்ளலாம். ஆனால் நீ எசமானனாகிவிட வேண்டும். இல்லையேல் அது காரிய சாத்தியமில்லை.

ஆனால் நிலைமை என்னவென்றால் கார், டிரைவரைச் செலுத்திக் கொண்டிருப்பதுதான்.

டிரைவர் தன்னைப் பற்றி ஒன்றுமே தெரியாதவராக இருக்கிறார். குடித்திருக்கிறானோ என்னவோ? கார் எங்கெல்லாம் அவனை இட்டுச் செல்கிறதோ அங்கெல்லாம் போய்க் கொண்டிருக்கிறான். ஒரு சாக்கடைக்குள் போகிறான். ஓர் விபத்தில் மாட்டிக் கொள்கிறான். அப்படித்தானே நடக்கும்?

ஓர் இயந்திரத்தைத் தொடர்ந்து போய்க் கொண்டிருக்கிறாய். உன் மனது ஒரு பயோகம்ப்யூட்டர். நீ எசமானனாக இருந்து பயன்படுத்தினால் அழகானது. அது உன்னைப் பயன்படுத்தினால் ஆபத்து. அது அடிமைத் தனமாகிவிடும். அதிலிருந்து விடுபட்டு இருப்பது உண்மையான விடுதலையைக் கொஞ்சம் ருசிப்பதாகி விடும்.



முதல் முயற்சியானது அம்பை நேராயிருக்கச் சீவிக் கொண்டிருப்பதுபோல இருக்க வேண்டும்.

உங்கள் மனங்களில் ஒரு லயம் இல்லை. அலங்கோலமாகக் கிடக்கின்றன. எதுவுமே அங்கே நேராக இல்லை. ஒவ்வொன்றும் சிக்கலான சந்தாக இருக்கிறது. ஒரு புதிராக இருக்கிறது. எது என்னவாக இருக்கிறதென்று உனக்குத் தெரிவதில்லை. எதை ஏன் செய்கிறோம் என்பது தெரிவதில்லை.

ஒரு கணம் இந்த எண்ணம், மறுகணம் அந்த எண்ணம் என்று பலவிதமான எண்ணங்கள் உன்னைப் பிடித்து ஆட்டுகின்றன. இரண்டும் தமக்குள் முரண்பட்டிருப்பது சிக்கலை மேலும் சிக்கலாக்குகிறது.

ஒரு பக்கம் ஒன்றைச் செய்கிறாய். மறுபக்கம் அதைக் கெடுக்கிறாய். வாழ்வே பெரும் தோல்வியாகிவிடுகிறது. சக்தி, காலம், சந்தர்ப்பம் என்று எல்லாமே விரயம்.

உன் எண்ணங்கள் எப்படி முரண்பட்டுக் கிடக்கின்றன என்பதைக் கவனி. ஒரு பகுதி ஆமாம் என்கிறது. அடுத்த பகுதி இல்லை என்று வாய்ப்பை விடாமல் சொல்கிறது. ஆமாம் இல்லை என்று ஒரு சேரச் சொல்வது சக்தியை விரயம் செய்து கொள்வதுதான். ஒன்றா ஆமாம் என்று முழுக்கச் சொல்ல வேண்டும். அல்லது இல்லை என்று முழுக்கச் சொல்ல வேண்டும். அப்படிச் செய்தால் உன்னுடைய எண்ணம் நேரானதாக இருக்கும்.

ஒரே சமயத்தில் ஆமாம் இல்லை என்று சொல்வதால் எங்கே போகப் போகிறாய்? ஒரு பக்கம் பார்த்து ஓர் அடி. இன்னொரு பக்கம் பார்த்து மற்றுமோர் அடி. ஒரே இடத்தில் சிக்கித் தவித்துக் கொண்டுதான் இருக்கப் போகிறாய். அல்லது ஒரு வட்டத்தில் நகர்ந்து



கொண்டிருக்கப் போகிறாய். உன்னுடைய வாழ்வில் வளர்ச்சி இருக்காது. நீயும் வளரமாட்டாய். வயதாகத்தான் செய்யும். ஆனால் வளர்ச்சி மட்டும் இருக்காது. முதிர்ச்சி இருக்காது.

எண்ணங்களை நேராக்கிக் கொள். மனதில் காடாய் மண்டிக் கிடக்கின்றன. ஒரு பாதையும் தெரியவில்லை. என்ன நடக்கிறது என்பது தெரியவில்லை. நின்று போகலாம் என்றால் அதுவும் முடிவதில்லை. பயந்து போய்க் கிடக்கிறாய். நகர்ந்தே ஆக வேண்டும்.

பிறர் ஒவ்வொருவரும் இதைச் செய்கிறார்கள், அதைச் செய்கிறார்கள். இதைச் சாதிக்கிறார்கள், அதைச் சாதிக்கிறார்கள். நீ மட்டும் எப்படி நின்றுவிடுவது? போய்க் கொண்டேயிருக்கத்தான் வேண்டியிருக்கிறது. இன்னும் அதிக தூரம், இன்னும் அதிக வேகத்தில், இன்னும் அதிக கம்பீரத்தோடு, இன்னும் அதிக எழுச்சியோடு என்று போய்க் கொண்டே இருக்க வேண்டியிருக்கிறது.

ஆனால் எங்கே போய்க் கொண்டிருக்கிறாய் என்பது மட்டும் தெரிவதில்லை. எது சேருமிடம் என்பது மட்டும் தெரிவதில்லை. எதை உண்மையாகச் சாதிக்க வேண்டும் என்று நினைத்திருக்கிறாய்? பணமா? அப்படித்தான் நிறையப் பணம் வந்தாலும் அதை வைத்துக் கொண்டு என்ன செய்யலாம் என்றிருக்கிறாய்?

இன்னமும் அதிகத் துயரத்தை விலை கொடுத்து வாங்கிக் கொள்ளலாம். அதைத்தானே செய்யப் போகிறாய்? இப்போது எதையெதை யெல்லாம் வாங்கிக் கொண்டி ருக்கிறாயோ, அதையேதான் வாங்கிக் கொண்டிருக்கப் போகிறாய். அளவில் கொஞ்சம் அதிகமாக வாங்குவாய், அவ்வளவுதானே?



பெரிய வீட்டை வாங்கி வாழலாம். நீதானே வாழப்போவது? வீடல்லவே? சிறிய வீட்டில் நிம்மதி இல்லையென்றால் பெரிய வீட்டில் அதிக நிம்மதியை இழக்கப் போகிறாய்.

உன்னைப் பற்றி உனக்கு ஒன்றுமே தெரியாது என்றால், பணத்தை வைத்துக் கொண்டு என்ன செய்யப் போகிறாய்? புகழை வைத்துக் கொண்டு என்ன செய்யப் போகிறாய்? உலகம் முழுக்கத் தெரிந்தவனாகிப் போகலாம். ஆனால் அதனால் மாறப்போவது என்ன? உன்னுடைய உள்ளிருட்டு அப்படியேதான் இருக்கப் போகிறது. இன்னமும் அதிகமாக இருட்டுச் சேரலாம்தான்.

புத்தர் முதலில் சொல்வதே, 'சித்தர் அலைபாயும் எண்ணங்களை நேராகச் செலுத்துகிறார்,' என்பதுதான். அவர் தன் எண்ணங்களை முரண்பட விடுவதில்லை. ஓர் எண்ணம் இன்னொன்றை அழிக்க விடுவதில்லை. எண்ணங்கள் தம்மைச் செலுத்த அனுமதிப்பதில்லை. தாம் தம் எண்ணங்களைச் செலுத்துகிறார். அவற்றை ஆட்கொள்கிறார். அவற்றை அழகிய கருவிகளாகப் பயன்படுத்துகிறார். நிச்சயமாக அவர் நிறைவேற்றம் காணப் போகிறார். எங்கே போகிறோம் என்பதும் எதற்குப் போகிறோம் என்பதும் தெரிந்திருக்கிறதல்லவா?

தன்னுடைய யாத்திரையின் ஒவ்வோர் அடியிலும் தான் எங்கிருக்கிறோம் என்பது அவருக்குத் தெரிந்தி ருக்கிறது. அவருக்குச் சரியான திசை நோக்கும் திறன் இருக்கிறது. ஒரே சமயத்தில் எல்லாத் திசைகளிலும் அவர் ஓடுவதில்லை. அவருக்கென்று ஒரு திசை இருக்கிறது.

எனவே ஒருங்கிணைந்தவராகிப் போகிறார். ஒரு பெரும் சக்தியாகி விடுகிறார். அரசியல் அதிகாரம் எதுவுமில்லாமல் அதிகாரம் பெற வருகிறார். அவருடைய



இருப்பிலிருந்தே அந்த அதிகாரம் பொங்கி வழிகிறது. யாரும் அதை எடுத்துப் போய்விட முடியாது. யாரையும் அவர் சார்ந்திருக்கவில்லை. இறப்புக் கூட அந்தச் சக்தியை அவரிடமிருந்து பறித்துக் கொள்ள முடியாது. இறப்புக் கூட அவருக்கு எதிரில் கைபிசைந்து நிற்கும்.

ஆனால் மக்கள் பைத்தியக்காரத் தனத்திலேயே வாழ்ந்திருக்கிறார்கள். மனித இனம் முழுவதும் பைத்தியம் பிடித்து அலைகிறது என்று நான் சொன்னால், எல்லோருக்கும் கோபம் வருகிறது. நானென்ன செய்யட்டும்? உண்மையைச் சொல்லித்தானே ஆகவேண்டி யிருக்கிறது? என்னதான் வலிக்குமென்றாலும் இருப்பதை இருக்கிறபடியே சொல்லத்தானே வேண்டியிருக்கிறது?

எனக்கும் அதனால் வலிதான். மானுடத்தைப் பற்றிய வருத்தத்தின் வலி. என்றாலும் சொல்லத்தான் வேண்டியி ருக்கிறது. மானுடம் முழுக்கப் பைத்தியம் பிடித்துத் திரிகிறது. சாதாரணமாக இருப்பவர்கள் என்று யாரைக் குறிக்கிறாயோ, அவர்கள் பைத்தியக்காரர்களாகத்தான் இருக்கிறார்கள். அவர்கள் சாதாரணமாகவே பைத்தியம் பிடித்தவர்கள், அவ்வளவுதான். ஆனால் அவர்களை அளவுகோலாக வைத்துக் கொள்ளக் கூடாது. அவர்கள் ஆரோக்கியத்துக்கு அளவுகோல்களல்ல. இந்த உலகம் முழுக்கப் பைத்தியக்கார விடுதியாக ஆகிப்போனது.

கலீல் ஜிப்ரான் ஓர் அழகிய கதை சொல்லுவார்.

ஒருவனுக்குப் பைத்தியம் பிடித்துவிட்டது. அவனை விடுதியில் வைத்திருந்தார்கள். நண்பர் ஒருவர் அவனைப் பார்க்க வந்தார். அவர் ஒரு பேராசிரியர். தத்துவம் படித்தவர். நிறையப் புத்தகங்கள் எழுதியிருக்கிறார்.



எல்லோருக்கும் தெரிந்த அறிஞர். மனோதத்துவம் கூடப் படித்தவர். தோட்டத்தில் ஒரு மரத்தின் கீழ் ஒரு பெஞ்சில் அவன் உட்கார்ந்திருந்தான். அவனைச் சுற்றிப் பெரிய மதில். பேராசிரியர் அவனிடம் போகிறார். பக்கத்தில் உட்கார்ந்து கொண்டு, ''இங்கே இருப்பது எப்படி இருக்கிறது?'' என்கிறார்.

அவன் சிரிக்கிறான். ''பிரமாதம். வேறெப்போதையும் விடப் பிரமாதம்,'' என்கிறான்.

பேராசிரியருக்கு ஒரே வியப்பு. ''எப்படி ஒரு பைத்தியக்கார விடுதியில் இருப்பது பிரமாதமாக இருக்க முடியும்?'' என்கிறார்.

அவனோ, ''பைத்தியக்கார விடுதியா? இதையா சொல்கிறாய்? நான் பைத்தியக்கார விடுதியை வெளியே விட்டுவிட்டு இங்கே வந்து சேர்ந்திருக்கிறேன். இதுதான் சரியான புத்தி சுவாதீனமுள்ள இடம். பைத்தியக்கார விடுதி வெளியே இருக்கிறது. இந்தச் சுவர்தான் எங்களை அதிலிருந்து காப்பாற்றி வைத்திருக்கிறது. வெளியே இருக்கிற பைத்தியக்காரர்கள் உனக்கு அலுத்துப் போனால் எப்போது வேண்டுமானாலும் நீ இங்கே வந்து சேர்ந்து கொள்ளலாம். உள்ளே வந்து பார். நிம்மதியாக இருக்கிறது. யாரும் யாருடைய வழியிலும் குறுக்கிடுவதில்லை. அமைதியாக இருக்கிறது. சிலர் மட்டுமே இருக்கிறார்கள். இந்த அளவுக்குத் தெளிவானவர்களை நான் பார்த்ததே இல்லை. எல்லோரும் என்னைப் போலவே இருக்கிறார்கள்,'' என்றான்.

அதுதான் தெளிவுக்கு அவன் விளக்கம். அவன் தெளிந்திருக்கிறான். அவனோடு இருக்கும் மற்றவர்களும்



அப்படியே. வெளியே இருப்பவர்கள்தான் பைத்தியம் பிடித்தவர்கள்.

அதே வாதத்தைத்தான் நீயும் கைக்கொள்கிறாய். உன்னைச் சுற்றியிருப்பவர்கள் என்னைப் போலவே இருக்கிறார்கள் என்கிறாய். யாருக்குத் தெரியும்? உன்னைச் சுற்றியிருப்பவர்கள் எல்லோருக்குமே புத்தி பேதலித்திருக்கிறதோ என்னவோ?

மானுடத்தின் சரித்திரம் சொல்வது, மாந்தர் அனைவரும் பைத்தியம் பிடித்து அலைகிறார்கள் என்பதைத்தான். எங்கோ அடிப்படையிலேயே தவறு இருக்கிறது. மூவாயிரம் வருடங்களில் அவன் ஐயாயிரம் போர்கள் செய்திருக்கிறான். இவர்களா புத்தி பேதலிக்காதவர்கள்? பேராசையும் பொறாமையும் இவர்களைப் புத்தி பேதலிக்காதவர் களாக்குகிறதா என்ன? ஒவ்வொருவனும் இன்னொருவன் குரல்வளையைக் கடித்து ரத்தம் குடித்துக் கொண்டிருக்கிறான். இதையா தெளிவு என்கிறாய்? சாதாரணம்தான். ஆனால் எந்தப் பொருளில்? எல்லோரும் ஒரே மாதிரி இருக்கிறார்கள் என்ற பொருளில்தான்.

ஒருமுறை 'வெளிச்சத்தில் கண்ணுக்குத் தெரியாத அளவுக்குக் கறுப்பான தன் பூனை காணாமல் போய் விட்டது' என்று மார்க் ட்வெயின் வேடிக்கைக்காக ஒரு விளம்பரம் கொடுத்தார். அதைக் கண்டுபிடிக்க வேண்டுமென்று கேட்டுக் கொண்டிருந்தார். ஆயிரம்பேர் தாம் அதைப் பார்த்ததாகப் பதில் எழுதினார்களாம்.

உன்னைச் சுற்றி என்ன நடக்கிறது என்று பார். எல்லோரையும் கவனித்துப் பார். எதைச் சாதாரண நிலை



என்று நினைத்துக் கொண்டிருக்கிறாயோ, அதில் எத்தனை பைத்தியக்காரத்தனம் நிறைந்திருக்கிறது என்பதை நீயே தெரிந்து கொள்வாய். எது சாதாரணம் என்கிறாய்? யாரைச் சாதாரண மனிதன் என்பது?

அவன் அன்பால் நிறைந்தவன். பரவசத்தால் நிறைந்தவன். பயமில்லாதவன். ஆனந்தமும் பரவசமும் கொண்டவன். பாட முடியும் அவனால். சிரிக்கவும் நடனமாடவும் முடியும். சின்னச் சின்ன விஷயங்களை யெல்லாம் அனுபவிக்கிறவன். எதைச் செய்தாலும் ஒன்றிப் போய்ச் செய்கிறவன். அவனுடைய எண்ணங்கள் நேரானதாக இருக்கும்.

இல்லை என்றால் இல்லை என்றுதான் பொருள் தருவான். ஆமாம் என்றால் ஆமாம்தான். தந்திரமோ அரசியல் சாதுரியமோ அவனிடம் இருக்காது. சொல்வதொன்று பொருள் வேறொன்று என்பது அப்படி வருவதுதானே? செய்வதோ சொன்னதாக இருக்காது. பொருள்பட்டதாகவும் இருக்காது. அரசியல்வாதி என்னதான் செய்யப் போகிறான் என்பது யாருக்குமே புரியாது. வெளியே ஒரு முகம். உள்ளே இன்னொரு முகம். இரட்டை முகத்துக்காரன். புன்னகைத்து வணக்கம் சொல்வான். என்றாலும் உள்ளூற உன்னை வெறுப்பான். சபிப்பான். எதிரிதான் என்றாலும் நண்பனாக நடிப்பான்.

இதைத்தான் பைத்தியக்காரத்தனம் என்கிறேன். இந்த இரட்டைத் தன்மையைத்தான் சொல்கிறேன். முரண்பட வைக்கும் இந்த மூளைக் கோளாறு நிறைந்த சூழல் பைத்தியக்காரத்தனமானது. நாம் ஆரோக்கியமான மனிதர் களைப் படைக்கத் தவறிவிட்டோம்.



இதுவரை தவறிப்போன நாம் இனியாவது விழித்துக்கொண்டு ஏதாவது செய்துதான் ஆக வேண்டும். இல்லையென்றால் மானுடம் இல்லாமல் போய்விடும். இந்தப் பைத்தியக்காரர்கள் கையில் இருக்கும் அதிகாரத்தை வைத்துக் கொண்டு இன்னும் ஒரே ஒரு போரில் இந்த உலகத்தையே இல்லாமல் செய்துவிடுவார்கள்.

எனவே மிகப் பெரிய மாற்றம் ஒன்று தேவை. ராட்சசத் தாவல் தேவை. இதற்குத் தேவை புத்தருடைய வார்த்தைகளைக் கேட்கக் கூடியவர்களே.

**'சித்தர் அலை பாயும் எண்ணங்களை**
**நேராகச் செலுத்துகிறார்.**

**நீரிலிருந்து மணலில் எடுத்தெறிந்த**
**மீன்களைப் போல**
**எண்ணங்கள் துடிதுடித்து நடுங்குகின்றன.**
**ஆசைகளை விட்டெறிய முடியவில்லையே,**
**அதனால்தான்.'**

ஆசைகள் இல்லாமல் எண்ணங்கள் வாழ முடியாது. நீரின்றி மீன்கள் வாழ முடியாததைப் போல. ஆசைகளின் கடல் இல்லாமல் எண்ணங்கள் வாழ முடியாது. எண்ணங்கள் அடிப்படையில் ஆசைப்படுவதன் கருவிகள். நாமோ தொடர்ந்து ஆசைப்பட்டுக் கொண்டே இருக்கிறோம், இதற்கு அதற்கு என்று. ஆசைப்பட்டுக் கொண்டே இருக்கும் வரைக்கும் நினைப்பதை நிறுத்த முடியாது. முதலில் ஆசையை, எண்ணங்களின் வேர்களை, நீக்கிவிட வேண்டும். வாழ்க்கையில் ஆசைப்பட என்ன இருக்கிறதென்கிறாய்? தெரிந்தவர்கள், உணர்ந்தவர்கள்

எதுவும் இல்லை என்றுதான் சொல்கிறார்கள். வாழ்க்கை வாழ்வதற்கே. முழுக்க வாழ்ந்து கழிப்பதற்கே. ஒவ்வொரு கணத்தையும் மொத்தமாக வாழ்வதற்கே. அதை நன்கு பிழிந்துவிடு. ஆசைப்படுவதற்கு ஒன்றுமே இல்லை. ஆசை உன்னைத் தவறான வழியில் இட்டுப் போய்விடுகிறது. காரணமா? அது உன்னை எதிர்காலத்துக்கு இட்டுப் போய்விடுவதால் தான். இந்தக் கணத்தை முழுக்கக் குடித்து அனுபவித்துவிடு. இந்தக் கணம்தான் கடவுளுக்குப் போகும் பாதைக்கு வாசற்படி. கடவுளுக்கு நிகழ்காலம் மட்டுமே உண்டு. அவருக்குக் கடந்தகாலம் தெரியாது. எதிர்காலம் தெரியாது. அதுதான் புத்திசுவாதீனத்தோடு இருக்கவும் ஆரோக்கியமாக இருக்கவுமான ஒரே வழி. சமயவாதிதான் புத்தி சுவாதீனம் கொண்டவன். ஆரோக்கியமானவன். கடவுளின் ஒரு பகுதியாக இருக்க வேண்டுமானால் இந்தக் கணத்தில் ஆசுவாசமாக இருக்கக் கற்றுக் கொள்ள வேண்டும்.

கடந்த காலத்துக்கும் எதிர்காலத்துக்கும் உன்னை இறந்தவனாக்கிக் கொள். நிகழ் காலத்தில் வாழ். நிகழ் காலத்திலிருந்து நகர்ந்து போக உன்னை விட்டுவிடாதே. ஓர் அங்குலம் கூட இந்தப் பக்கமோ அந்தப் பக்கமோ நகரக் கூடாது. இல்லையென்றால் எப்போது எல்லாவற்றையும் தவற விட்டுவிடுவாய்.

மனம் ஒன்றிலிருந்து இன்னொன்றுக்கு என்று தாவிக் கொண்டே இருக்கிறது. ஒருவரிடமிருந்து இன்னொரு வருக்குத் தாவிக் கொண்டே இருக்கிறது. மனைவி யிருக்கிறாள். என்றாலும் இன்னொருவன் மனைவியை நோக்கித் தாவுகிறது. மக்கள் இருக்கிறார்கள். என்றாலும் மற்றவர் மக்களைப் போல அழகாக அவர்கள் உனக்குத்



தெரிவதில்லை. அக்கரை எப்போதும் பச்சைதான். உன்னைத் தவிர மற்றவர்கள் எல்லோரும் மகிழ்ச்சியாக இருப்பதாகத்தான் தெரிகிறது.

பிறகென்ன? நீயே முடிவுக்கு வந்துவிட வேண்டியது தானே? ''அவர்களுக்குப் பெரிய பெரிய வீடுகள் இருக்கின்றன. அழகழகான குழந்தைகள் இருக்கிறார்கள். அழகான மனைவி இருக்கிறாள். என்னை விட அதிகம் பணமிருக்கிறது. அதிக அதிகாரம் இருக்கிறது. கௌரவம் இருக்கிறது. எனக்கும் அவைதான் வேண்டும். அவை இல்லாமல் நான் எப்படி மகிழ்ச்சியாக இருப்பது?''

உன்னுடைய மகிழ்ச்சி சில கட்டுப்பாடுகளுக்கு உட்பட்டதாகிப் போகிறது. அப்படிக் கட்டுப்பாடு களுக்குட்பட்டது மகிழ்ச்சி என்கிறபோது ஒருவன் தொலைந்தான். வாழ்க்கை முழுக்க மகிழ்ச்சி இன்றியே இருப்பான்.

ஆனந்தம் நிபந்தனைகளுக்குட்பட்டதல்ல. மகிழ்ச்சி யாக இருக்க எதுவும் தேவையில்லை. உயிரோடு இருக்கத்தான் சில தேவைப்படுகின்றன. ஏற்கெனவேதான் உயிரோடு இருக்கிறாயே, பிறகென்ன?''

வேண்டியதெல்லாம் பிரக்ஞைதான். நீ ஏற்கெனவே அதுவாக இருக்கிறாயே, பிறகென்ன? ஞானியரும் புத்தரும் சொல்வது ஆனந்தம் நமது இயல்பு என்பதுதான். ஆனால் மனது ஓடிக் கொண்டேயிருக்கிறது. உன்னையும் இழுத்துக் கொண்டே ஓடிக் கொண்டிருக்கிறது.

சுல்தான், அலியைக் கூப்பிட்டார். ''நான் இப்போது சரியான மூடில் இருக்கிறேன். மனைவி எண் 256 ஐக் கூட்டிக் கொண்டு வா,'' என்றார்.



அவன் அந்தப்புரத்துக்கு ஓடினான். பூங்காவைத் தாண்டி, பழத்தோட்டத்தைத் தாண்டி, தாவிப் படியேறி, 256ஐ அழைத்துக் கொண்டு திரும்பினான். சிறிது கழித்து, ''87ஐ கூட்டி வா,'' என்றார் சுல்தான். அவனும் ஓடினான். வந்தான். பிறகு 68. பிறகு 92.

92ஐ அழைத்து வந்தபோது அவனுக்கு மூச்சிறைத்தது. மயங்கி விழுந்து செத்துப் போனான்.

நீதி என்னவா? காதல் அல்ல. ஓடிப்போய் வருவதுதான் உன்னைக் கொல்வது.

மனம் எப்போதும் இங்கும் அங்கும் ஓடிக் கொண்டே இருக்கிறது. உட்காருவதே இல்லை. உட்கார முடியாது. உட்காருவது செத்துப் போவதைப் போல இருக்கிறது. ஒரு வகையில் அப்படித்தான்.

அதனால்தான் ஜென் துறவியர் சும்மா உட்கார்ந் திருக்கும் போது கூட மந்திரங்களைச் சொல்ல வேண்டும் என்கிறார்கள். மந்திரங்களைச் சொல்வது கூட மனதை ஓடவிடுவதுதான். அது மந்திரமாக இருந்தாலென்ன, பாப் பாடலாக இருந்தாலென்ன, வித்தியாசம் ஏதுமில்லை. மனதுக்கு ஏதோ ஒரு வேலை செய்தாக வேண்டும். இயக்கம் இருக்க வேண்டும். ஓடிக் கொண்டிருக்க வேண்டும். அதன் வாழ்வே ஓடிக் கொண்டிருப்பதில்தான் இருக்கிறது.

ஜென் துறவியர் சும்மா உட்கார்ந்திருக்க வேண்டும் என்கிறார்கள். சும்மா உட்கார்ந்திருப்பது மிகக் கடினமான காரியம். அதைப் பழகிக் கொண்டால் போதும். சில மாதங்களுக்கு ஒன்றும் செய்யாமல், ஒவ்வொரு நாளும் சில மணி நேரம் ஒன்றுமே செய்யாமல் இருக்கப் பழகிக் கொண்டால் மெதுவாக பலவும் நடக்கக் காண்பாய்.



தூக்கம் வரும். கனவுகள் தோன்றும். பல எண்ணங்கள் உன் மனதுக்குள் கூட்டம் போடும். மனம் உன்னிடம், ''ஏன் நேரத்தை வீணாக்கிக் கொண்டிருக்கிறாய்? சம்பாதித்திருக்கலாம். ஒரு சினிமா வுக்காவது போயிருக்கலாமே. அல்லது வம்பு பேசிக் கொண்டிருந்திருக்கலாம். டிவி பார்த்துக் கொண்டிருந் திருக்கலாம். ரேடியோ கேட்டுக் கொண்டிருந்திருக்கலாம். கடைசிக்கு பத்திரிகையாவது படித்திருக்கலாம். வீணாக உட்கார்ந்திருக்கிறாயே,'' என்று உன்னை நச்சரிக்கும்.

மனம் ஆயிரத்தையும் பேசும். ஆனால் அதைக் காது கொடுத்துக் கேட்டுக் கொண்டு, அதே சமயம், அது சொல்வதைக் கேட்டு நடக்காமல் நீயிருந்தால்... மனம் எல்லாவிதமான சாதுரியங்களையும் பயன்படுத்தும். மனம் உருவெளித் தோற்றங்களைப் படைத்து மயக்கும். கனவு காணும். தூக்கக் கலக்கத்தில் சொருகும். சும்மா உட்கார்ந்திருப்பதிலிருந்து உன்னை அப்புறப்படுத்த அத்தனையும் செய்யும். அதற்கு மேலும் செய்யும். ஆனால் நீ விட்டுக் கொடுக்காமல் தொடர்ந்து உன் நிலையைப் பராமரித்தால், ஒரு நாள் சூரியன் உதிக்கத்தான் செய்யும்.

ஒருநாள் அது நடக்கும். அப்போது நீ தூக்கக் கலக்கத்தை உணரமாட்டாய். மனம் சலிப்படைந்து போகும். நீ பொறியில் அகப்படுவாய் என்ற எண்ணத்தை விட்டுவிடும். உன்னை விட்டு விலகி விடும்.

தூக்கக் கலக்கமிருக்காது. உருவெளி மயக்கங்கள் இருக்காது. கனவுகள் இருக்காது. சிந்தனைகள் இருக்காது. ஒன்றும் செய்யாமல் நீ உட்கார்ந்திருக்கப் போகிறாய். எங்கெங்கும் நிம்மதியும் அமைதியும் ஆனந்தமும்தான். கடவுளுக்குள் நுழைந்து விடுகிறாய். சத்தியத்துக்குள் நுழைந்து விடுகிறாய்.



'நடுங்குகின்றன, தடுமாறுகின்றன,
தம்போக்கில் அலைகின்றன.
அவற்றைக் கட்டுப்படுத்துதல்
நல்லதே.
அவற்றை அடக்கி வைத்தல் இன்பம்தான்.'

கவனி. நடுங்கும் மனதைப் பார்ப்பாய். ஒன்றை ஒன்று துரத்திக் கொண்டு ஓடிக் கொண்டிருக்கிற துடிக்கும் எண்ணங்களைப் பார்ப்பாய். அர்த்தமுள்ளது அர்த்தமில்லாதது. ஸ்திரமானது ஸ்திரமில்லாதது என்று எல்லாமும் திசைக்கொன்றாய் அலைவதைப் பார்ப்பாய்.

ஒரு நாள் உன் அறைக்குள் உட்கார்ந்து கொள். கதவை மூடி வைத்துவிடு. மனதில் தோன்றும் எண்ணங்களை அப்படியே எழுதி வைத்துப் பார். அப்படிச் செய்தால் தெரிந்து கொள்ள ஒரு வழி பிறக்கும்.

என்ன நடக்கிறதோ அதை அப்படியே எழுதி வை. திருத்தங்களைக் கொண்டு வராதே. முரணில்லாமல் இருக்க வேண்டும் என்று பார்க்காதே. அழகுக்காக அலங்கரிக்காதே. யாருக்கும் காட்டப் போவதில்லையே. உனக்காக மட்டும்தானே அது.

பதினைந்து நிமிடங்களுக்குப் எழுதிப் பார். பிறகு படித்துப் பார். குழப்பம்தான் மிஞ்சும். உனக்கென்ன பைத்தியம் பிடித்துவிட்டதோ என்று நினைப்பாய். எல்லாவிதமான சமச்சாரங்களும் உன் மனதிலும் பாய்ந்து கொண்டிருக்கக் காண்பாய். ஒன்றுக்கொன்று எந்தத் தொடர்வும் இல்லாத எண்ணங்கள். எதுவும் எதற்கும் இட்டுச் செல்லும் என்று தெரிந்து கொள்வாய்.



பக்கத்து வீட்டில் நாய் குரைக்கிறது. மனம் தன் வேலையை ஆரம்பித்து விடுகிறது. சிறு வயதில் நீ வைத்திருந்த நாயைப் பற்றி நினைத்துப் பார்க்கிறாய். திடீரென நாயிலிருந்து சிறுவயது நண்பனுக்கு நினைவு தாவுகிறது. அவனிடமிருந்து பள்ளிக்குப் போகிறது. ஆசிரியருக்குப் போகிறது.

இப்படியாக இந்த மனது ஒன்றிலிருந்து இன்னொன்றுக்குத் தாவிக் குதித்து ஓடிக் கொண்டே இருக்கிறது. உனக்கே தெரியாத இடத்துக்கு உன்னைக் கொண்டு போகிறது. அத்தனையும் உன்னைப் பற்றி ஒன்றுமே தெரியாத நாய் குரைத்ததோடு ஆரம்பித்தது. உன்னைப் பற்றி அந்த நாய்க்கு எந்த அக்கறையும் இல்லை. ஒவ்வொரு முறை இப்படி நடக்கும் போதும், நீ ஒவ்வொரு புதிய இடத்துக்குப் போய்ச் சேருகிறாய்.

மனம் ஒன்றிலிருந்து இன்னொன்றுக்குத் தாவிக் கொண்டே இருக்கிறது. அதற்குள் இருக்கும் தகவல்களைக் கொண்டு புதியபுதிய உலகங்களை முடிவில்லாமல் படைக்க முடியும்தான்.

அதைக் கவனிப்பதன் மூலம் புத்தர் சொன்னதன் உண்மையைப் புரிந்து கொள்வாய். நடுங்குகின்றன, தடுமாறுகின்றன. தம் போக்கில் அலைகின்றன. உன் வார்த்தைகளைக் கேட்பதில்லை. அவை தன்னிச்சையாகச் செயல்படுகின்றன. ஒவ்வோர் எண்ணத்துக்குமென ஓர் இச்சை இருக்கிறது. அதன் போக்கிலேதான் அது போகிறது. எந்த விதத்திலும் அதை மாற்றி அமைக்க விரும்புவ தில்லை. நீ தலையிடுவதை விரும்புவதில்லை. தலை யிட்டால் எதிர்க்கிறது. போராடுகிறது. ஒவ்வொரு எண்ணமும் தன் தனித்தன்மையை விட்டுக் கொடுப்ப தில்லை.



இப்படியாக லட்சக்கணக்கான எண்ணங்கள் தம் தனித்தன்மையை நிலைநாட்டி, உன் தனித்தன்மையை இல்லாததாக்கி விடுகின்றன. நீ ஏதாவது சொன்னாலும், ''நீ யார் இதைச் சொல்வதற்கு?'' என்றே கேட்கின்றன. ஒவ்வொரு முறையும் உன்னை அடக்கி வைத்து நீ ஒன்றுல்லை என்ற அளவுக்குக் கொண்டு போய்விடுகின்றன. அவற்றைக் கட்டுப்படுத்தா விட்டால் ஆனந்தத்துக்கு வழியே இல்லை என்கிறார் புத்தர். அலங்கோலத்திலும் குழப்பத்திலும்தான் கிடப்பாய்.

ஒரு மனநோய் விடுதியில்.

நோயாளி, ''உன்னை அப்படியே என் கைகளுக்குள் நொறுக்கி விட வேண்டும் என்று பைத்தியக்காரத்தனமான வெறி.''

பெண் வைத்தியர், ''இப்போதுதான் புத்தியோடு பேசுகிறாய் நீ.''

எது புத்தியோடு பேசுவது எது அபத்தம் என்பது, எதை நீ அர்த்தமுள்ளது எதை அர்த்தமில்லாதது என்று கருதுவதைப் பொறுத்தது. எல்லாமும் பொருளற்றது என்று சொல்லும் தத்துவ அறிஞர்கள் இருக்கிறார்கள். ஒவ்வொன்றுக்கும் ஒரு பொருள் இருக்கிறது என்று சொல்பவர்களும் இருக்கிறார்கள். இது அறிவார்ந்த உலகம் என்கிறார்கள். ஒவ்வொன்றும் காரண காரியம் பாற்பட்டுத்தான் இருக்கின்றன என்கிறார்கள். இதுவெல்லாம் எதை நீ பொருளுள்ளது எது பொருளற்றது என்று கருதுகிறாய் என்பதைப் பொறுத்தது. உன்னுடைய பயிற்சியைப் பொறுத்தது. நீ வளர்ந்த விதத்தைப்



பொறுத்தது. உன்னை எப்படி மயக்கி வைத்திருக்கிறார்கள் என்பதைப் பொறுத்தது.

அசைவ உணவு சாப்பிடுவது அர்த்தமுள்ள விஷயம் என்பாய். நீ அசைவ உணவு சாப்பிடும் குடும்பத்தில் பிறந்திருக்க வேண்டும். சைவ உணவு சாப்பிடும் குடும்பத்தில் பிறந்திருந்தால், அசைவ உணவு சாப்பிடுபவர்களை மிருகங்கள் என்ற சொன்னாலும் சொல்வாய்.

சைவ உணவு சாப்பிடுவதாலேயே சமய உணர்வு இருப்பவனாகிப் போகிறாய் என்று சொல்வதன் முட்டாள்தனத்தை என்னவென்பது. உனக்கு அசைவம் சாப்பிடுபவர்கள் நாத்திகர்கள். அவர்களை மனிதர்களே அல்ல என்று சொன்னாலும் சொல்வாய்.

எது சரி எது தப்பு என்பது உனக்காகத் தெரிந்திருப்ப தில்லை. மற்றவர்கள் உன்னிடம் என்ன சொல்லி யிருக்கிறார்கள் என்பதைப் பொறுத்துத்தான் எல்லாமும். இப்படிப் போனால் தீர்க்கமான புத்தி உடையவனாக ஆக முடியாது. இன்னும் விழிப்புணர்வுடையவனாக வேண்டும். எச்சரிக்கையாகக் கவனிப்பவனாக வேண்டும். தீர்க்கமாகச் சிந்திக்க வேண்டும். தீர்க்கமாகச் சிந்திக்கும் போதுதான் நீ மனிதனாகிறாய். நுணுகிப் பார்த்துச் சரியான கண்ணோட்டத்தைக் கொள்ள வரும்போதுதான் நீ விடுதலையைச் சுவைக்கிறாய். விடுதலை ஆனந்தத்தைக் கொண்டு வருகிறது. விடுதலை என்றால் உன் மனதைக் கட்டுப்பாட்டுக்குள் கொண்டு வருவது என்று பொருள். உன் மனம் என்று சொல்வதே தவறு. உனக்குப் பிறர் கொடுத்துவிட்ட மனது. அதுதான் சரியாக இருக்கும். துண்டுத் துண்டாக உனக்குப் பிறர் கொடுத்திருக்கிற மனம்.



அதன் ஒரு பகுதி உன் தாயுடையது. இன்னொரு பகுதி தந்தையுடையது. பிறகொன்று உன் மாமனுடையது. இப்படியாகப் பலரும் கொடுத்துவிட்டுப் போயிருப்பதுதான் அது. பாதிரியார்கள், ஆசிரியர்கள், பக்கத்து வீட்டுப் பையன்... இதற்கு முடிவே இல்லை. உலகம் முழுக்க இருந்தும், நீ படித்த புத்தகங்களில் இருந்தும், பார்த்த சினிமாக்களில் இருந்தும் துண்டுத் துண்டாகச் சேர்த்து வைத்துக் கொண்டதால் ஆனதுதான் உன் மனம்.

உனக்குள்ளேயே பார்த்துக் கொண்டால் உனக்கு வியப்புதான் மிஞ்சும். உனக்கென்று எந்த மனமும் இருப்பதில்லை. எல்லாமும் இரவல் வாங்கிக் கொண்டது. இதை வைத்துக் கொண்டு நீ எப்படி அசலானவனாக இருக்க முடியும்? ஒன்றாகக் கரைந்து புதிதாக ஒன்றாக மடியாத பல துண்டுகள்தான் உனக்குள் இருக்கின்றன. நீ முழுமையாவது பிறகு எப்படி என்கிறாய்?

ஆனால் ஒன்று மட்டும் இரவல் வாங்கிக் கொள்ளாததாக உனக்குள் இருக்கிறது. அதுதான் உன் பிரக்ஞை. உன் தெளிவு. அதை நீ உன்னோடு கொண்டு வந்திருக்கிறாய். அது உன்னுடைய உட்புரியின் ஒரு பகுதி. அதை நம்பு. மனதை நம்பாதே. மனதைச் சார்ந்திருப்பதை விட்டுவிட்டு, பிரக்ஞையை முழுக்கச் சார்ந்திரு. வாழ்வை நோக்கி ஒரு மிகப் பெரிய அடியை எடுத்து வைத்தாயிற்று.

**ஆனால் எவ்வளவு நுண்ணியவை அவை!**
**எப்படி நழுவி நழுவிப் போகின்றன!**
**அவற்றை அமைதிப்படுத்துவதே காரியம்.**
**அவற்றை அடக்கி வைத்து இன்பம்**
**காண்பதே.**



அது சுலபமான காரியமாக இருக்கப் போவதில்லை. கடினமானது. மனம் தந்திரமானது என்பதால் அது கடினமான காரியமாகிவிடுகிறது. எண்ணங்கள் நுண்ணியதாக இருப்பதால் அது கடினமான காரியமாகிவிடுகிறது.

ஒரு போர்வீரன் இன்னொருவனுக்கு பிற உடல் எடுப்பது பற்றிச் சொல்லிக் கொண்டிருக்கிறான். தான் கொல்லப்பட்டால் தன் உடல் அழுகிப்போய் மண்ணுக்குள் மறைந்து போகும் என்கிறான். வசந்த காலம் வரும்போது ஓர் அழகிய மலராக வெளிவரும் என்கிறான்.

''அதுதான் நான், இல்லையா?'' என்கிறான் மற்றவன்.

''பொறு. ஒரு மாடு வந்து அதைத் தின்று விடுகிறது. ஒரு கூடைச் சாணத்தை விட்டுப் போகிறது. நான் என்னுடைய காதலியோடு அங்கே வருகிறேன். சாணத்தைப் பார்க்கிறேன். கைத்தாடியால் அதைத் தட்டிவிட்டு, 'ஹலோ பில், நீ மாறவே மாட்டாயப்பா,' என்கிறேன்.'' என்றான்.

மனம் தந்திரமானது. மாறாதிருக்க வழிகளைக் கண்டுபிடித்துக் கொண்டே இருக்கும். பழையதாகவே இருக்கப் புதிய வழிகளைக் கண்டுபிடித்துக் கொள்ளும். புதிய துணிகளைப் போட்டுக் கொண்டு அவற்றுக்குப் பின்னால் மறைந்து கொள்ளும். பிரமாதமான அறிவுசால் விளக்கங்களைக் கண்டுபிடித்து விடும்.

ஜாக்கிரதை. மனம் சாதாரணமானதல்ல. மிகச் சிக்கலானது. நுண்ணியது. நழுவிப் போய்விடக் கூடியது. அதைப் பிடிக்க முயன்றால் உனக்குத்தான் சிரமம். முன் கதவு வழியாக வெளியே தள்ளிவிட்டால் பின்கதவு வழியாக உள்ளே வந்து விடும்.

அடக்கி வைக்க முயன்றால் உனக்குள்ளே மறைந்திருந்து தன் வேலையைக் காட்டிவிடும். அது மிகவும் ஆபத்துத்தான். உனக்கே தெரியாமல் நீ மனதின் ஆளுமைக்குள் இருப்பாய். எதிரி கண்ணுக்குத் தெரியவில்லை. என்றாலும் எதிரி இருக்கத்தான் செய்கிறான். அப்படிப்பட்ட எதிரியின் பலமும் அதிகம்தான்.

ஆனால் எவ்வளவு நுண்ணியவை அவை! எப்படி நழுவி நழுவிப் போகின்றன! அவற்றை அமைதிப் படுத்துவதே காரியம். நன்கு கவனித்துக் கொள். காரியம் அவற்றை அடக்கி வைப்பதல்ல. அவற்றைப் பிடித்து வைத்துக் கொள்வதல்ல. அவற்றை அமைதிப்படுத்துவதே காரியம். அவற்றை அடக்கி வைத்து இன்பம் காண்பதே.

அவற்றை இயக்கமின்றிச் செய்துதான் வெல்ல முடியும். அப்படியே வென்ற பின்னும் அவற்றை சலனமின்றி இருக்க வைக்க வேண்டி யிருக்கிறது. வெல்வதும் இதுவும் ஒன்றுதானே என்று தோன்றலாம். ஆனால் அவை ஒன்றல்ல. வித்தியாசமானவை. வெகு வித்தியாசமானவை. முதலில் அவற்றை அமைதிப்படுத்த வேண்டும்.

அப்படி அமைதிப் படுத்தும் வழி அவற்றைக் கவனித்திருப்பதுதான். நல்லது கெட்டது என்று ஒன்றும் சொல்லாமல் கவனித்திருந்தால் போதும். நல்லது கெட்டது என்று சொன்ன அதே கணம் நீ மனதுக்குள் குதித்து விடுகிறாய். மனம் உன்னைப் பிடித்துக் கொள்கிறது. நீ பொறியில் மாட்டிக் கொள்கிறாய்.

வெறுமனே கவனித்திரு. அறிவியல் ஆசிரியர்கள் அப்படி கவனித்திருக்க உன்னை விடுவதில்லை. சும்மா உட்கார்ந்து பார்த்துக் கொண்டிரு. ஒருவரைக் கொல்ல



வேண்டும் என்று தோன்றுகிறது. அவரைக் கொல்வதை உன் மனதின் ஒரு பகுதி மகிழ்ச்சியோடு அனுபவிக்கிறது. இன்னொரு பகுதியோ இது மிக மோசம். பாவம். இப்படிப்பட்ட எண்ணமே கூடாது. பாவத்தைப் பற்றி நினைத்துக் கூடப் பார்க்கக் கூடாது என்கிறது. இது அதே மனதின் வேறு ஒரு பகுதிதான்.

இதனோடு உன்னை அடையாளப்படுத்திக் கொள்கிறாய். இதுதான் என்னுடைய மனச்சாட்சி என்கிறாய். அப்படி எதுவும் இல்லை. அது உனக்குள் வைக்கப் பட்டிருப்பது. சமுதாயம் உன்னை உனக்குள்ளேயிருந்து கட்டுப்படுத்துகிறது. எது சரி எது தவறு என்பது உனக்குத் தெரியாது.

வெகுளியாக இரு. கவனி. சும்மா கவனி. உன் மனதின் ஒரு பகுதி, ''அவனைக் கொன்றுவிடு. உன்னை அவமானப்படுத்திவிட்டான்,'' என்கிறது. இன்னொரு பகுதியோ, ''வேண்டாம், வேண்டாம். அது சரியல்ல. அப்படிச் செய்தால் நீ நரகத்துக்குப் போய்விடுவாய். அடுத்த ஜென்மத்தில் அதற்காகத தண்டிக்கப்படுவாய்,'' என்கிறது. நன்றாகத் தெரிந்து கொள். இரண்டாவதும் மனம்தான். மனதின் இரண்டு துண்டுகளுக்கிடையே எதையும் தேர்ந்தெடுத்துவிடாதே. இரண்டுக்குமிடையே இருக்கும் முரண்பாட்டைக் கவனி. எதனோடும் உன்னை அடையாளப்படுத்திக் கொள்ளாதே.

நினைவில் கொள், நல்லதாக, ஒழுக்கமானதாகத் தெரிவதோடு அடையாளப்படுத்திக் கொள்ள ஆணவம் விரும்புகிறது. அது அழகானதாகத் தெரிகிறது. ''பார். நான் கொலைக்கு எதிரானவன்.'' அப்படிச் சொல்லும்போது



மனதின் ஒரு பகுதிக்கு அடிமையாகிப் போகிறாய். பாவிகளும் மகான்களும் அடிமைகளே.

உண்மையாகவே சுதந்திரமானவன் நல்லது கெட்டது இரண்டையும் கடந்தவன். அவனுக்கு நல்லதும் இல்லை, கெட்டதும் இல்லை. அவன் வெறுமனே கவனித்திருக்கிறான்.

உன்னை எதனோடும் அடையாளப் படுத்திக் கொள்ளாமல் சும்மா கவனித்திருக்க முடியுமானால் மனம் அடங்கிப் போகிறது. அப்படி அடங்கிப் போவதில்தான் உன்னுடைய சக்தி இருக்கிறது. மனம் முழுக்க நீங்கிவிடும் அந்த நாள், நிச்சலனமாகிப் போன அந்த நாள் நீ ஒரு பேரரசனாகி விடுகிறாய்.

**'திட சித்தத்தோடு சித்தர்**
**எண்ணங்களை அடக்கி வைக்கிறார்.**
**அவற்றின் அலைச்சலை நிறுத்துகிறார்.**
**உள்ளம் எனும் குகையில் அமர்ந்திருந்து**
**விடுதலையைக் காண்கிறார்.'**

மனம் இல்லாமல் போய்விடும்போது நீ எங்கே போகிறாய் தெரியுமா? திடீரென மனம் இல்லாமல் போய்விடும்போது உள்ளத்துக்குப் போய்விடுகிறாய். மனதிலிருந்து நழுவி விடுகிறாய். பிறகென்ன? உள்ளம், உள்ளத்தின் குகை உன்னுடைய மாளிகையாகிவிடுகிறது.

மனம் என்பதே சமுதாயத்தின் துணைப் பொருள்தான். உள்ளம் கடவுளின் நீட்டிப்பு.

திட சித்தத்தோடு செயல்படும் போதே இது சாத்தியமாகிறது. மனத்தை நிச்சலனப்படுத்த முடிகிறது. எந்தத் தீர்ப்பும் சொல்லாமல், எந்த அடையாளமும் இல்லாமல் கவனித்திருக்கும் போதே இது சாத்தியமாகிறது.



எண்ணங்களை அடக்கி வைக்கிறார். அவற்றின் அலைச்சலை நிறுத்துகிறார். உள்ளம் என்னும் குகையில் அமர்ந்திருந்து விடுதலையைக் காண்கிறார்.

எண்ண வயப்பட்டிருப்பது அடிமைத் தனம். எண்ணம் துயரம். உள்ளமே முடிவான ஆனந்தம்.

ஏஸ் தம்மோ ஸனந்தனோ.

இன்றைக்கு இது போதுமே.





முதல் வினா

அன்புக்குரிய குருவே,

உங்களுக்கும்
பிற சாமியார்களுக்கும்
என்ன வித்தியாசம்?

**சுனில் சேத்தி,** நான் சாமியார் அல்ல. நான் சாமி. உன்னைப் போல, மரங்களைப் போல, பறவைகளைப் போல, பாறைகளைப் போல...

நான் எந்த வகையிலும் சேராதவன். பத்திரிகையாளர்களுடைய கண்டுபிடிப்புத்தான் சாமியாரென்பது. நான் எந்த வகையையும் சேராதவன்.

நீயும் எந்த வகைப்பாட்டுக்குள்ளும் வராதவன்தான். எல்லா வகை மாதிரிகளும் போலியானவை. உனக்குள்ளே போகப் போக நீ இருப்பதை உணர்கிறாய். இதுவாகவோ அதுவாகவோ அல்ல. வெறுமனே இருப்பது. உபநிஷத்து மகான்கள் 'நெடி நெடி' என்பார்கள். ''இதுவல்ல அதுவுமல்ல'' எந்த வகைமுறைக்கும் பொருந்தி வராது.



புத்தரைப் பற்றிப் பிரமாதமான ஒரு கதை இருக்கிறது.

ஒரு மரத்தடியில் உட்கார்ந்திருந்தார். ஒரு ஜோசியர் அவரிடம் வந்தார். வந்தவருக்கு ஒரே குழப்பம். மணலில் புத்தரின் கால் தடத்தைப் பார்த்திருந்தார். அவர் கண்களை அவராலேயே நம்ப முடியவில்லை.

அவர் படித்த சாத்திரங்கள் எல்லாம் ஒரு பேரரசரின் கால் தடத்துக்கென இலக்கணம் வகுத்திருந்தன. அவை சொல்வது கொண்டு பார்த்தபோது அவர் கண்ட காலடித்தடம் ஒரு பேரரசருடையதாகத்தான் இருக்க வேண்டும்.

சாத்திரங்கள் சொல்வது பொய்யோ? ஜோசியத்தில் தமது நாட்களை வீணாக்கி விட்டிருக்க வேண்டும். அந்தச் சின்னஞ்சிறு கிராமத்தில் அந்தக் கோடைகாலத்தில் எந்தப் பேரரசர் அங்கு வந்திருக்க முடியும்? வெறுங்காலில் ஒரு பேரரசர் நடப்பாரா என்ன?

அந்தக் காலடி யாருடையது என்று தெரிந்து கொள்ளக் காலடிகளைத் தொடர்ந்து வந்திருந்தார். புத்தர் ஒரு மரத்தடியில் உட்கார்ந்திருக்கக் கண்டார். குழப்பம் அதிகமாகத்தானாகியது. முகத்தில் பேரரசரின் பிரகாசம் இருந்தது. அந்தக் கம்பீரம், அழகு, அதிகாரம், பிரகாசம்... ஆனால் அந்த மனிதரோ ஓடேந்திய பிச்சைக்காரராக இருந்தார்.

புத்தருடைய கால்களைத் தொட்டு வணங்கி அவர் யாரோவெனக் கேட்டார். "நீங்கள் என்னைக் குழப்பத்தில் ஆழ்த்தி விட்டீர்கள். நீங்கள் ஒரு பேரரசராக இருக்க வேண்டும். இந்த மரத்தடியில் உட்கார்ந்து என்ன செய்து கொண்டிருக்கிறீர்கள்? என்னுடைய சாத்திரங்கள்



பொய்யாயிருக்க வேண்டும். அல்லது நீங்கள் ஒரு மாயத் தோற்றமாகத்தான் இருக்க வேண்டும்.''

புத்தர், ''உங்களுடைய சாத்திரங்கள் சொல்வது சரிதான். என்றாலும் சில எந்த வகைப்பாட்டுக்கும் உட்பட்டதாயிருப்பதில்லை. பேரரசன் என்ற வகைக்கும் கூடத்தான். நான் இருக்கிறேன். இன்னாரெனக் குறிப்பாக யாராகவும் இல்லாமல் நான் இருக்கிறேன்,'' என்றார்.

''மேலும் குழப்புகிறீர்கள். யாராகவும் இல்லாமல் நீங்களாக இருப்பது எப்படி? நீங்கள் உலகத்துக்கு வந்திருக்கும் கடவுளாகத்தான் இருக்க வேண்டும். உங்கள் கண்களைப் பார்த்தாலேயே தெரிகிறது.''

''நான் கடவுளல்ல.''

''அப்படியானால் ஒரு கந்தர்வராகத்தான் இருக்க வேண்டும்.''

''நான் கந்தர்வனுமல்ல.''

''அப்படியானால் மாறுவேடத்தில் இருக்கும் ஓர் அரசரோ? யார் நீங்கள்? மிருகமாக இருக்க முடியாது. மரமாக இருக்க முடியாது. பாறையாக இருக்க முடியாது. நீங்கள் யார்?''

புத்தர் தந்த பதில் மிக மிக முக்கியமானது. அதைச் சரியாகப் புரிந்து கொள்ள வேண்டும். ''நான் புத்தர். அப்பளவே. பிரக்ஞை நான். வேறு எதுவுமல்ல. எந்த வகைக்கும் உட்பட்டவனல்ல. ஒவ்வொரு வகைக்கும் ஓர் அடையாளம் இருக்கிறது. எனக்கோ எந்த அடையாளமும் இல்லை.''

சுனில் சேத்தி, அப்படியேதான் என்னுடைய பதிலும். எந்த வகையையும் சேர்ந்தவனல்ல நான். சாமியார்கள்



என்பது ஒருவகை.நான்பிரக்ஞை. நான் கவனித்திருப்பது. இதில் ஒன்றும் தனிச்சிறப் பில்லை. உன்னுடைய உட்புரியும் அதுதான். ஒரு புத்தரைப் போல, கிருஷ்ணரைப் போல, கிறிஸ்துவைப் போல நீயும் தெய்விகமானவன்தான். வேறு எவரையும் போலத் தெய்விகமானவன். மிக உயர்ந்ததும் மிகத் தாழ்ந்ததும் தெய்விகம். கடவுள் மட்டுமே இருக்கிறாரென்பதால்தான்.

முதலில் நினைவில் கொள்ள வேண்டியது நான் எந்த வகையையும் சேர்ந்தவனில்லை என்பதுதான். நீயும் எந்தவகைக்கும் உட்பட்டவனல்ல. இந்துவா, முகம்மதியனா, கிறிஸ்துவனா? கறுப்பனா வெள்ளையனா? இவையெல்லாம் புறத்தில்தான். நீ இவை எதுவுமல்ல.

பிரக்ஞை கறுப்பாகவோ வெள்ளையாகவோ இருப்பதில்லை. அதற்கு நிறமே இல்லை. பணக்காரனா ஏழையா?

பிரக்ஞை பணக்காரனுமில்லை ஏழையுமில்லை. ஆணா பெண்ணா? ஆணுமில்லை பெண்ணுமில்லை.

பிரக்ஞை பிரக்ஞைதான். இதைப் புரிந்து கொண்டால் 'அஹம் பிரம்மஸ்மி,' நான் கடவுள் என்பாய். இது புதியதொரு வகையல்ல. ஒருவர் நான் கடவுள் எனும்போது புதிதாக ஒன்றையும் சொல்லவில்லையே. எல்லா வகைகளுக்கும் அப்பாற்பட்டுப் போய்விடுகிறார். அவ்வளவுதான். கடவுள் என்ற வார்த்தைக்குப் பொருளும் அதுதான்.

மன்சூர் அநாஹல் ஹக் - நானே சத்தியம் - என்று சொல்லும் போது அதையே தான் சொல்கிறார். ''நான் பிரக்ஞை'' என்கிறார்.



நான் சாமியார் என்று உரிமை கொண்டாட மாட்டேன். நான் சாமியார் அல்ல.

இரண்டாவதாக எனக்கும் சாமியார்களுக்கும் இடையே நிறைய வித்தியாசம் இருக்கிறது. அடிப்படை வித்தியாசம் நான் உடன்பாட்டுவாதியாகவும் அவர்கள் எதிர்மறைவாதிகளாகவும் இருப்பது.

நான் வாழ்வு இருக்கிறதென்கிறேன். அவர்கள் இல்லையென்கிறார்கள்.

நான் வாழ்வை நேசிக்கிறேன். அவர்கள் வெறுக்கிறார்கள்.

நான் வாழ்க்கையில் ஆழப் போய்ப் பார்க்க வேண்டு மென்கிறேன். அவர்கள் அதிலிருந்து விலகிப் போக வேண்டும் என்கிறார்கள்.

அவர்கள் துறந்துவிட வேண்டும் என்கிறார்கள். நான் கொண்டாட வேண்டும் என்கிறேன்.

என்னைப் பொறுத்த வரை கொண்டாடு என்பதே இறைச் செய்தி. அவர்களுக்கோ அது துறந்துவிடு என்பது. துறந்துவிடுவது என்பது மெல்ல மெல்லச் செய்து கொள்ளும் தற்கொலைதான். கொண்டாடு. பிரமாதமாகக் கொண்டாடு. அப்போதுதான் கடவுள் என்றால் என்ன என்பதைத் தெரிந்து கொள்வாய்.

உன்னுடைய இருப்பின் சிறந்த ஆற்றல் வெளிப்படும் போது, ஈடுபாடு முழுமையாக இருக்கும்போது, எதையும் உள்ளே இழுத்து வைத்துக் கொள்ளாதிருக்கும்போது, விட்டேற்றியாக நடனமாடும்போது, பாடகன் மறைந்து போகுமளவுக்கு ஈடுபாட்டோடு பாடும்போது, காதலன் மறைந்து போகுமளவுக்குக் காதலிக்கும் போது, நீ அன்பு



என்னும் சக்தியாகி விடுகிறாய். அப்போது வாழ்வை ஏற்றுக் கொள்கிறாய். வாழ்வுதான் கடவுள்.

நான் வாழ்வை ஏற்றுக் கொள்கிறவன். நீ சொல்லும் சாமியார்கள் வாழ்வை மறுப்பவர்கள்.

வாழ்வை எப்படி மறுக்க முடியும்? நீயே வாழ்க்கை எனும்போது எப்படி மறுப்பது? அப்படி மறுப்பது பாசாங்காகி விடும். அப்படித்தான் நடக்கும்.

இந்தச் சாமியார்கள் காலங்காலமாக இந்தப் பாசாங்கைத்தான் போதித்து வந்திருக்கிறார்கள். அசலாக இருக்க உன்னை அவர்கள் விடுவதேயில்லை. இயல்பாக இருக்கவே விடாதவர்கள் தானே? அப்படித்தான் செய்வார்கள். அவர்கள் உனக்குள்ளேயே ஒரு பிளவை உண்டு பண்ணுகிறார்கள்.

அவர்கள்தான் முரண்பாட்டு மூளைக் கோளாற்றுக்கு ஆணி வேர்கள். மனித இனம் முழுக்க முரண்பாடுகளில் சிக்கித் தவிக்கிறது. ஒருவன் வியாதிக்கும் மற்றவன் வியாதிக்கும் அளவில்தான் வேறுபாடு. அடிப்படையில் ஒன்றேதான்.

நீ பிளவுபட்டவன். யார் இந்தக் குற்றத்தைச் செய்தது? இந்தச் சாமியார்கள் என்கிறவர்கள்தான். ஞானிகள் என்று சொல்லிக் கொள்கிறவர்கள். மகாத்மாக்கள் என்று தம்மைச் சொல்லிக் கொள்கிறவர்கள்.

இயல்பை மறந்துவிடு.

இயல்போடு போராடு.

போகிற போக்கில் போகாதே. எதிர்த்துப் போராடு.



இப்படிச் சொல்லிச் சொல்லியே உன் துயரத்துக்கு அடிப்படைக் காரணமாகி விட்டார்கள்.

நீ இயற்கையின் ஒரு பகுதி. ஆற்றின் ஓர் அலை. பிறகெப்படி இயல்பை, இயற்கையை எதிர்த்துப் போராடுவது? போராடினால் தோல்விதான் மிஞ்சும்.

உண்மையானவன் என்றால் உனக்குப் பைத்தியம்தான் பிடித்துப் போகும். இன்னும் பிடிக்கவில்லையென்றால் நீ உண்மையாக இருக்கவில்லை என்று தான் பொருள். சொல்வது ஒன்று, செய்வது ஒன்று.

பாசாங்கு என்பது போலிச் சாமியார்த்தனத்தின் தவிர்க்க முடியாத துணைப் பொருள். அவர்கள் போலிகள் தான். சாமியை ஒருவன் உணர்ந்துவிட்டால் அவர் சாமியாராக இருக்க மாட்டார். சாமியேயாகி விடுகிறார். அது என்ன சாமியார் என்பது? நானே சாமி என்னும்போது அவர் தன்னை யாரோடும் ஒப்பிட்டுக் கொள்வதில்லை. ''உன்னைவிட நான் புனிதமானவன் என்பதில்லை. நீயும் நானும் ஒன்றுதான். நான் தெரிந்து கொண்டேன். நீ இன்னும் தெரிந்து கொள்ளவில்லை,'' என்கிறார்.

வித்தியாசம் நமது குணத்தளவில் இல்லை. நமது இருப்பில் இல்லை. நமது பிரக்ஞையில் இல்லை. என்னிடமிருக்கும் பொக்கிஷம் உன்னிடமும் இருக்கிறது. நான் கண்டு கொண்டேன். நீ இன்னும் தடவித் தேடிக் கொண்டிருக்கிறாய். இப்போதோ எப்போதோ நீயும் கண்டு கொள்ளத்தான் போகிறாய். அதுதான் இருக்கிறதே. எத்தனை நாளைக்குத்தான் தெரிந்து கொள்ளாமல் இருக்கப் போகிறாய்? கரிய இருட்டில் தேடினாலும் கண்டு கொள்ளத்தான் போகிறாய்.



நானே கடவுள் எனும்போது மானுடம் முழுக்கத் தெய்விகம் என்ற சொல்வதாகிறது. எல்லா மனிதரும் தெய்விகம் என்கிறேன். இருப்பதெல்லாம் தெய்விகம் என்கிறேன்.

இந்தச் சாமியார்களோ தம்மைப் புனிதர்கள் என்று சொல்லி உன்னைப் பாவியென்கிறார்கள். புதியதொரு உயர்வினைக் கற்பித்துக் கொள்கிறார்கள். அவருடைய தொழில் ரகசியமே உன்னைப் பாவியென்று நம்ப வைப்பதில் இருக்கிறது. எந்த அளவுக்குக் குற்றக் குறுகுறுப்பு உன்னிடம் இருக்கிறதோ அந்த அளவுக்கு அவர்கள் பிடிக்குள் சிக்கிக் கொள்கிறாய்.

எப்படி இந்தக் குற்றக் குறுகுறுப்பைக் கற்பிப்பது? எதுவெல்லாம் இயல்பானதோ அதையெல்லாம் குறை சொல்ல வேண்டியதுதான். தானாகவே குற்ற உணர்ச்சி வந்துவிடும்.

காமத்தைக் குறை என்று சொல். காம உணர்ச்சி வந்தாலே குற்றம் செய்யும் உணர்வு வந்துவிடும். சாப்பிடுவதைக் குறை சொல். இயல்பானதையும் இயற்கையானதையும் குறை சொல். அது போதும்.

மனைவியரை மாற்றி அனுபவிக்கும் விருந்துகளைத் தடுக்க விரும்புகிறார் ஒரு பாதிரியார். அப்படி விருந்தொன்று நடக்கும் வீட்டுக் கதவைத் தட்டுகிறார்.

கதவைத் திறந்தவன் முகத்தில் எந்தக் குற்ற உணர்ச்சியும் இல்லை.

''என்னவோ பார்ட்டி நடக்கிறது என்று சொன்னார்களே?''



''ஆமாம். இப்போது யூகிக்கும் விளையாட்டு. பெண்கள் கண்களைக் கட்டிவிட வேண்டியது. ஆண்களின் பிறப்புறுப்பைத் தொட்டுப் பார்த்துப் பெயரை யூகிக்க வேண்டியது. சரியான நேரத்துக்குத்தான் வந்திருக்கிறீர்கள், ரெவரெண்ட். இதற்குள்ளாகவே எட்டுப் பேர் உங்கள் பெயரைச் சொல்லியாகிவிட்டது.''

பாதிரியார்கள் சரித்திரம் காட்டுவது இதுதான். பாதிரியாராக ஒருவர் இருக்கவே முடியாது. இயல்போடு போராடி வெல்ல முடியாது. அதைத் தாண்டிப் போகலாம். ஆனால் அதை எதிர்த்துப் போக முடியாது, அதன் வழியாகப் போகலாம்தான்.

அதுதான் முதல் வித்தியாசம். அடிப்படையான வித்தியாசமும் கூட. வாழ்வை நாம் உடன்பாட்டு உணர்வோடு பார்க்கிறோம். அப்படியானால் வாழ்வைத் தாண்டி உயர முடியாது என்பது பொருளல்ல. ஆனால் எந்த உயர்வும் வாழ்வின் மேல் வைத்த ஆறாக்காதலின் அடிப்படையில் பிறக்க வேண்டும். வாழ்வை அனுப வித்துத்தான் கடக்க முடியும்.

காமத்தைக் கடந்து போக வேண்டும் என்கிறேன். ஆனால் காமத்தை நிந்திக்க மாட்டேன். காமம் இயல்பான இச்சை. அதனளவுக்கு அது நல்லதும் கூடத்தான்.

ஆனால் அதனோடு நின்றுவிடக்கூடாது. அது ஓர் ஆரம்பம். கடந்திருப்பதன் தூரத்துக் காட்சி. ஆழ்ந்த சம்போகத் திருப்தியில் நீயெனத் தெரிந்து வைத்திருப்பதைக் கடந்த ஒன்றை, முதல் முறையாகத் தெரிந்து கொள்ள வருகிறாய். அது மனதின் பாற்பட்ட தல்ல. காலப் பரிமாணத்துக்குட்பட்டதல்ல.



ஆழ்ந்த சம்போக நிறைவில் மனம் காலம் என்ற எல்லாமும் மறந்து போகின்றன. இந்த உலகத்தின் இயக்கம் ஒரு கணத்துக்கு நின்று போய்விடுகிறது. அந்த ஒரு கணத்துக்குப் பொருள் வயப்பட்ட இந்த உலகத்தின் ஒரு பகுதியாக நீ இருப்பதில்லை. பரிசுத்த வெளியாகிப் போகிறாய்.

ஆனால் அது ஒரு தோன்றி மறையும் காட்சிதான். அதற்கெனப் பிரயத்தனப்பட வேண்டியிருக்கிறது. இன்னும் வெகுதூரம் போக வேண்டியிருக்கிறது. அந்த ஒரு கணத்துக் காட்சியை நிலைத்த நிலையாக மாற்ற வழிவகைகளைக் காண வேண்டும்.

அதைத்தான் ஞானோதயம், தெளிவு என்கிறேன். ஞானோதயம் பெற்றவர் இருபத்துநான்கு மணி நேரமும் சம்போக உச்சத்தின் இன்பத்திலேயே இருக்கிறார். காமவயப்பட்டவர் பிரயத்தனப்பட்டு எப்போதோ ஒரு கணத்துக்கு அனுபவிக்கும் சுகத்தை, ஞானி எந்தப் பிரயத்தனமும் இல்லாமல், வீணாவது ஒன்றுமில்லாமல் தொடர்ந்து அனுபவிக்கிறார்.

ஞானி அந்த நிலையில் சுவாதீனமாக வாழ்கிறார். அந்த உயர்நிலையே அவர் வாழும் களமாகிறது. நீயோ அந்தச் சிகரங்களைப் பல்லாயிரக்கணக்கான மைல் தூரத்திலிருந்து மட்டுமே பார்க்கிறாய்.

நான் காமத்துக்கு எதிரானவன் அல்ல. காமம் தான் ஆன்ம வாழ்வைக் காண முதலில் திறக்கும் சாளரம். நன்றாகச் சாப்பிடுவதற்கு நான் எதிரானவன் அல்ல. எதையும் அனுபவிக்கும் போது பலவிதமான அனுபவங்களைப் பெறுகிறாய். இவற்றை அனுபவிக்க அனுபவிக்கத்தான் மெது மெதுவாக கண்ணுக்குத் தெரியாததை அனுபவிக்க முடிகிறது.



அதனால்தான் உபநிடதங்கள் 'அன்னம் பிரம்மன்' என்கின்றன. உணவு கடவுள். மிக முக்கியமான வார்த்தை. உணவும் கடவுளும் ஒன்றா? என்ன சொல்கிறார்கள்?

அவர்கள் தெரிந்துதான் சொல்லிவிட்டுப் போயிருக்கிறார்கள். உணவின் ருசி கடவுளின் ருசிதான். எந்த இன்பத்தின் ருசியும் கடவுளின் ருசிதான். அவர் எவ்வளவுதான் தூரத்தில் இருந்தாலும்... இது எவ்வளவு குறைவாகவே கடவுளைப் பிரதிபலித்தாலும்...

குளத்தில் தெரியும் நிலவின் பிம்பம் நிலவின் பிம்பம் தானே? நிலவு அங்கே இல்லையென்றாலும் கூட... குளத்துக்குள் குதித்துவிட்டால் நீரைக் கலக்கி, அலையெழுப்பிப் பிம்பத்தைக் கலைத்துவிடுவாய். நிலவைப் பிரிக்க முடியாது.

நிலவின் பிம்பம் நிலவல்ல. பிம்பம் அசலைப் பிரதிபலிக்கிறது. கொஞ்சம் புத்திசாலியாக இருந்தால் குளத்துக்குள் குதிக்க மாட்டாய். தலையை உயர்த்தி அசலான நிலவையே பார்ப்பாய்.

உணவை ருசித்து அனுபவிக்கும் போது அது கடவுளின் பிரதிபலிப்பாகிறது. சம்போகத்தின் சுகம் கடவுளின் பிரதிபலிப்பு. வாழ்வின் ஆயிரத்தொரு குளங்களில் கடவுளின் பிம்பங்கள். பிம்பத்திலிருந்து குறிப்பை எடுத்துக் கொள். அசலை நோக்கி நகர ஆரம்பித்து விடு.

அதுதான் என்னுடைய அடிப்படை வித்தியாசம். வாழ்வுக்கோ வாழ்வு குறிக்கும் எதற்குமோ நான் எதிரானவன் அல்ல. காமம், உணவு, இந்த உடல், உடலின் சுகங்கள். சௌகரியத்தில் அசௌகரியம் காண்பவன் அல்ல நான். சுகிப்பதற்கு எதிரானவன் அல்ல.



புதிதாக இங்கே வந்திருக்கும் ஓர் இந்தியன் கேட்டான், ''ஆடம்பரமாக வாழும் நீங்கள் பாசாங்குதானே செய்கிறீர்கள்?''

பாசாங்குக்குப் பொருள் தெரியவில்லை அவனுக்கு. நான் ஒருவன் மட்டுமே எந்தப் பாசாங்கும் இல்லாதவன்.

கபட வேடதாரி சொல்வது ஒன்று, செய்வது இன்னொன்று. அவனுடைய அகமும் புறமும் முரண்பட்டுக் கிடக்கின்றன. சுகமானதற்கு நான் எதிரானவன் அல்ல. பிறகு ஏன் சுகமாக வாழக் கூடாது? சௌகரியத்துக்கு எதிரானவன் அல்ல நான். பிறகு ஏன் சௌகரியமாக வாழக் கூடாது? என்னையும் பிறரையும் வருத்திக் கொள்பவனல்ல நான்.

உலகம் முழுக்கச் சுகத்தில் திளைக்க வேண்டும் என்பேன். நிச்சயமாக இப்போது நிலைமை அப்படி யில்லை. வாழ்வின் அடிப்படைத் தேவைகள் கூட உலகம் முழுக்கப் பூர்த்தியாகவில்லை. அதனாலேயே என்னையும் வருத்திக் கொள்ளவும் நான் தயாரில்லை. அப்படி வருத்திக் கொள்வதால் என்ன பயன்? ஆயிரம் பேர் துன்பப்பட்டுக் கொண்டிருக்கிறார்கள். ஆயிரத்து ஒன்றாவதாக நானிருப்பேன். அவ்வளவுதானே?

துயரத்தில் எனக்குப் பிடிப்பில்லை. எனக்கு இரட்டை வாழ்க்கை இல்லை. என் வாழ்க்கை மிக எளியது. அதில் ஓர் ஒருங்கிணைவு இருக்கிறது.

சொல்வதைச் செய்கிறேன். சுகத்தில் எனக்கு நம்பிக்கையுண்டு. சமயம் என்பதே பெரிய சுகம்தானே? எல்லோரையும் சுகித்திருக்க வைக்க முடியவில்லை யென்றாலும் நானாவது சுகித்திருக்கலாமே. இல்லை யென்றால், ''வைத்தியரே, முதலில் உங்கள் வியாதியைக் கவனியுங்கள்,'' என்று சொல்லிவிடுவார்கள். இந்தச்



சாமியார்கள் இருக்கிறார்களே அவர்கள் சுகமாக வாழ்ந்து கொண்டு சுகத்தை நிந்திக்கிறார்கள். அவர்கள்தான் வேடதாரிகள். ஏழ்மையை, சமய வாழ்வின் ஏழ்மையைப் பற்றிப் பேசுகிறார்கள். ஆனால் அவர்கள் சுகமாக வாழ்கிறார்கள். அவர்கள்தான் வேடதாரிகள்.

ஏழ்மையை வெறுக்கிறேன். ஏழ்மையைச் சிலாகித்துப் பேசமாட்டேன். ஏழ்மையைப் பாராட்ட மாட்டேன். முட்டாள் தனத்தால்தான் மக்கள் ஏழைகளாக இருக்கிறார்கள். மூட நம்பிக்கைகளால்தான் ஏழைகளாக இருக்கிறார்கள்.

ஏழைகளாக இருக்க வேண்டிய அவசியமே இல்லை. ஆயிரக்கணக்கான வருடங்களாக ஏழ்மையில் ஏதோ ஆன்மிகம் இருப்பதாகச் சொல்லிக் கொண்டே இருந்து விட்டார்கள். அதனால்தான் மக்கள் ஏழைகளாக இருக்கிறார்கள்.

கீய்சர்லிங் என்ற ஒரு ஜெர்மானியப் பிரவு இந்தியாவுக்கு வந்திருந்தார். இந்தியாவில் பல இடத்துக்குப் போன போது நாட்குறிப்பு ஒன்றை எழுதிக் கொண்டிருந்தார். அதில் முக்கியமான பல குறிப்புகள் இருக்கின்றன. ஒரு குறிப்பில், ''இந்தியாவில் நான் முக்கியமாக இரண்டைக் கவனித்தேன். ஒன்று ஏழையாக இருப்பதில் ஆன்மிகம் இருப்பதென்பது. இரண்டாவது நோய்வாய்ப்பட்டு, பசியோடு அசிங்கமாக இருப்பது புனிதமானது என்பது.''

நான் இவற்றைப் போதிக்கவில்லை. என்னுடைய கம்யூனில் எல்லாச் சௌகரியங்களும் இருக்கின்றன. இந்தக் கம்யூன், இந்த உலகம் எப்படியிருக்க வேண்டும் என்பதற்கு ஒரு முன்மாதிரியாக இருக்க வேண்டும்.



இங்கே சன்னியாசிகள் மகிழ்ச்சியாக இருக்க வேண்டும். உடலளவில், மனத்தளவில், ஆன்மிகத்தில் ஆனந்தம் இருக்க வேண்டும். உடல், மனம், ஆத்மா ஆகியவற்றின் சுகங்கள் ஒன்றாகிப் போய், அந்த லயத்தில் நான்காவது மனிதன் ஜனிக்க வேண்டும்.

அதனால்தான் அறிவியல் பூர்வமாக இரு என்கிறேன். அழகியல் பூர்வமாக இரு என்கிறேன். சமயப்பூர்வமாக இரு என்கிறேன். இந்த முப்பரிமாணங்களின் நிறைவில், மூன்று நதிகளின் சங்கமத்தில் நான்காவது படைக்கப்படும். அந்த நான்காவதே என் நெறி.

இயல்புக்கு மாறாக எப்படி வாழ்வை அணுகினாலும் சிக்கல்தான். பிணிதான். அது மக்களைப் புத்தி சுவாதீனத் தோடு இருக்க விடாது. அவர்களைப் பைத்தியமாக்கி விடும்.

ஒரு மனநோய் விடுதியில் நோயாளி மருத்துவரிடம், ''டாக்டர், என்னைக் கொஞ்சம் கவனித்துக் கொள்ள வேண்டும். எப்போதும் சாப்பிடுவதைப் பற்றியே கனவு கண்டு கொண்டிருக்கிறேன்,'' என்றான்.

டாக்டர், ''பெண்களைப் பற்றி கனவு வருவ தில்லையா?'' என்று கேட்டார்.

''வருகிறது டாக்டர். ஆனால் அப்போதும் அவர்கள் மீது கெட்ச்சப் ஊற்றிக் கொண்டிருப்பதாகத் தெரிகிறது.''

சாப்பிடுவதைப் பற்றிக் குற்றவுணர்ச்சி கற்பித்து விட்டால் சாப்பாட்டைப் பற்றிய கனவுகள்தான் வரும். இந்தச் சமயவாதிகள் அதைத்தானே செய்கிறார்கள்? சாப்பிடுவதென்பது ஆரோக்கியமானது. ஊட்டம் தருவது. நல்லது. அதைப் பற்றிக் கனவு காண்பதோ அசிங்கம். அது



ஒரு நோய்க்குறி. உணவைப் பற்றிக் கனவு காண்பதென்பது உடலுக்குத் தேவையான ஒன்றை நீ மறுத்துவிடுவதன் வெளிப்பாடுதான்.

உணவைப் பற்றிய கனவு யாருக்கு வரும்? உணவுக்கான தன் ஆசையை அடக்கி வைப்பவருக்குத்தான். சோதித்துப் பார்க்க வேண்டுமா? ஒரு நாள் உபவாசம் இருந்து பார், தெரியும்.

நாள் முழுக்க உணவைப் பற்றியே நினைத்துக் கொண்டிருப்பாய். எங்கே போனாலும் உன் எண்ணங்கள் திரும்பத் திரும்பச் சாப்பாட்டுக்கே வந்து சேரும். இரவில் சாப்பாட்டைப் பற்றிய கனவு வந்துதான் தீரும்.

காமத்தை அடக்கிப் பார். காமாந்தரமான கனவுகளே வரும். எதை அடக்கி வைத்தாலும் நோய்க்குறிகள் தோன்றும். உண்மையான ஆரோக்கியம் உடையவனுக்குக் கனவுகளே வராது. கனவு காண்பதற்கு எதுவும் இருப்பதில்லை.

ஒவ்வொரு கணத்தையும் பூரணமாக வாழ்கிறான். எதையும் அடக்கி வைப்பதில்லை. எனவே அவன் ஆழ்மனம் இயல்பாகவும் சுத்தமாகவும் இருக்கிறது.

அடக்கி வைத்துப் பார். ஆழ்மனதில் குப்பை சேர்ந்து விடுகிறது. கனவில் ஆழ்மனதைச் சந்திக்க வேண்டி யிருக்கிறது. ஆழ்ந்த தூக்கத்தில் அதைக் கடக்க வேண்டியிருக்கிறது. அது உன் வாழ்வில் பெரும் கொந்தளிப்பைக் கொண்டு வந்துவிடுகிறது.

நான் வாழ்வை ஏற்றுக் கொள்கிறவன். வாழ்வை மிக ஆழமாக நேசிப்பவன். அதுதான் என்னுடைய முழுப் போதனையும். இந்தச் சாமியார்கள் என்கிறவர்கள் வாழ்வுக்கு எதிரானவர்கள். அவர்கள் நோய்வாய்ப்பட்ட மனிதர்களைத்தான் உருவாக்குகிறார்கள்.



இரண்டாவதாக, அவர்கள் எல்லோருமே அடுத்த உலகத்தைப் பற்றிப் பேசுகிறார்கள். நானோ இந்த உலகம் பற்றிப் பேசுகிறேன். இதை நம்புவதைப் பற்றி எந்தச் சந்தேகமும் இல்லை. இதுதான் இருக்கிறதே.

ஆனால் அதைப் பற்றி எந்தக் கவலையும் பட்டுக் கொள்ள வேண்டியதில்லை. கவலைப்படுவதால் எந்தப் பயனும் இல்லை. அடுத்த உலகம் இந்த உலகத்திலிருந்தே தோன்றப் போகிறது. இந்த உலகை அழகானதாக்கு. இந்த வாழ்வை எவ்வளவு உணர்வோடு வாழ முடியுமோ அவ்வளவு உணர்வோடு வாழ்ந்து பார். அடுத்த உலகம் தானாகச் சரியாக இருக்கப் போகிறது. இதை அழகானதாக்கினால் அது இதைவிடப் பல மடங்கு அழகாக வரப் போகிறது.

புத்தர் முதல் சூத்திரங்களில் இந்த உலகம் அழகானதென்றும் அடுத்த உலகம் இதைவிட அழகாக இருக்கப் போகிறதென்றும் சொல்லிப் போயிருக்கிறார். ஆனால் அடுத்த உலகை மட்டுமே நினைத்துக் கொண்டிருந்தால், கனவு கண்டு கொண்டிருந்தால் இதை அசிங்கப்படுத்துவாய். அசௌகரியமானதாக்குவாய். இதைவிட அது அசிங்கமானதாகிப் போகும்.

நாளை என்பதைப் பற்றி நீ நினைக்க வேண்டியதே இல்லை. இன்று இருப்பது போதும். இன்றைய நாளை ஆனந்தத்தோடும் பரவசத்தோடும் வாழ்ந்துவிடு. நாளை என்பது எதிலிருந்து வரப் போகிறதென்கிறாய்? இன்றைய பரவசத்தில் இருந்துதான். இதைவிடப் பரவசமாக இருக்கப் போகிறது. அப்போது வாழ்வின் எல்லாக் கதவுகளையும் திறக்கும் சாவி உன் கைக்கு வந்துவிடும்.



இந்தக் கணத்தை வாழ்ந்துவிடு. இந்தக் கணத்தின் மீது நம்பிக்கை வை. இந்தச் சாமியார்கள் எல்லாம் அடுத்த வாழ்வைப் பற்றிப் பேசுகிறார்கள். இறப்புக்கு அடுத்த வாழ்க்கை பற்றிப் பேசுகிறார்கள். சொர்க்கம் நரகம் என்பதைப் பற்றிப் பேசுகிறார்கள். இதுவெல்லாம் அவசியமே இல்லை. எல்லோரும் ஏற்கெனவே குழம்பிப் போய்க் கிடக்கிறர்கள். அவர்களை மேலும் குழப்ப வேண்டியதில்லை.

என்னுடைய போதனை மிக எளிமையானது. குறிப்பானது. இந்தக் கணத்தை வாழ்ந்துவிடு. கடந்த காலத்தை இறந்த காலமாக்கிவிடு. எதிர்காலத்தை முன் நிறுத்தாதே. மௌனத்தை அனுபவி. இந்தக் கணத்தின் மகிழ்வையும் அழகையும் அனுபவி.

இதிலிருந்து அது பிறக்கும். தானாகவே தோன்றி வரும். புத்தர் சொல்வதைப் போல, ''நிழல் உன்னைத் தொடர்ந்து வருவதைப் போல எதிர்காலமும் உன்னைத் தொடரும்.''

நிகழ்காலம் அசிங்கமானதாக இருந்தால் எதிர்காலம் நரகமாகிப் போகும். நிகழ்காலம் அழகாக இருந்தால் எதிர்காலம் சொர்க்கமாகும்.

மூன்றாவதாக, இது வரைக்கும் இந்தச் சாமியார்கள் மக்களை இந்துக்கள், கிறிஸ்துவர்கள், முகம்மதியர்கள், சமணர்கள், பௌத்தர்கள், பார்ஸிகள் என்று பிரித்துப் பிரித்தே வைத்திருக்கிறார்கள். குறைந்தது முன்னூறு மதங்கள் இருக்கின்றன. அவற்றுள் குறைந்தது மூவாயிரம் உட்பிரிவுகள் இருக்கின்றன.

இந்தச் சாமியார்கள் மக்களுக்கிடையே வெறுப்பை வளர்த்து வைத்திருக்கிறார்கள். அன்பைப் பற்றிப்



பேசுகிறார்கள். ஆனால் போர் நடக்கும் சூழலைத்தான் உருவாக்கி வைத்திருக்கிறார்கள்.

மதங்கள் ஒன்றுக்கொன்று சண்டையிட்டுக் கொண்டுதான் இருக்கின்றன. ஒன்றையொன்று அழிக்கின்றன. ஒருவரை ஒருவர் கொல்ல வைக்கின்றன. மதத்தின் பெயரால் சிந்திய ரத்தம் வேறு எதன் பெயராலும் சிந்திய ரத்தத்தை விட அதிகம்தான். மதங்களை விட அரசியலில் குற்றங்கள் குறைவுதான்.

இந்தச் சாமியார்கள் இந்துக்களாகவோ, கிறிஸ்துவர் களாகவோ, முகம்மதியர்களாகவோ இருக்கிறார்கள். நான் இந்துவோ கிறிஸ்துவனோ முகம்மதியனோ அல்ல. நான் எவருமே இல்லை. பிறரும் யாருமில்லாது போகவே நான் உதவி செய்கிறேன். இந்த முட்டாள்தனமான சுமைகளை இறக்கி வைத்துவிட உதவுகிறேன்.

இருப்பதே போதும். முகம்மதியனாகவோ கிறிஸ்து வனாகவோ இந்துவாகவோ இருக்க வேண்டியதில்லை. கோயிலுக்குப் போக வேண்டியதில்லை. மசூதிக்குப் போக வேண்டியதில்லை. சர்ச்சுக்குப் போக வேண்டியதில்லை.

அவர்களுடைய இருப்பே ஒரு கோயில். மரங்கள் தொடர்ந்து தொழுது கொண்டிருக்கின்றன. மேகங்கள் வணங்கிக் கொண்டிருக்கின்றன. மலைகள் தியானத்தில் இருக்கின்றன. சுற்றுமுற்றும் பார்த்தாலே போதும். ஆனால் சரியாகப் பார்க்க வேண்டியிருக்கிறது. எந்த நம்பிக்கையும் கைக் கொள்ளாமல் எந்த விருப்பு வெறுப்புமில்லாமல் பார்த்தால் கடவுள் காணாமல் இருக்க முடியாது. அவரை எந்த விதத்திலும் தவறவிட முடியாது. அவர்தான் எங்கும் இருக்கிறாரே.

ஓர் இலக்கு என்றால், அம்பு அதைச் சென்று சேராமல் போய்விடலாம். எப்படிவிட்டாலும் போய்த் தைத்துவிடும்



என்றால், இலக்குத் தவறிவிடும் என்ற பேச்சே இல்லையே. வேண்டியதெல்லாம் களங்கமில்லாத உள்ளம், அவ்வளவுதான்.

ஓர் இந்து களங்கமின்றி இருக்க முடியாது. முகம்மதியன் களங்கமின்றி இருக்க முடியாது. குப்பை கூளம் நிறைந்தவன். கொள்கை, கோட்பாடு, இரவல் வாங்கிக் கொண்ட அறிவு. இதைத்தான் நான் குப்பை கூளம் என்பது.

முகம்மது சொன்னது சரியல்ல என்று நான் சொல்லவில்லை. புத்தர் சொன்னது சரியல்ல என்று நான் சொல்லவில்லை. அப்படியானால் முகம்மது, கிறிஸ்து, புத்தர் பற்றி நான் ஏன் பேசிக் கொண்டிருக்க வேண்டும்? அவர்கள் சத்தியவந்தர்கள்தான். ஆனால் அவர்களுடைய சத்தியம் உன்னுடைய சத்தியமாகாது. உன்னுடையதை நீயே தேடிப் பெற வேண்டும். சத்தியத்தை இரவல் வாங்கிக் கொள்ள முடியாது. சத்தியத்தை மாற்றிக் கொடுக்க முடியாது. அது உன்னுடைய பரம்பரைச் சொத்தாக முடியாது. நீயாக அதைத் தேடிப் பெற வேண்டும். அது எப்போதும் தனிப்பட்டவனுடையதாக இருக்க வேண்டும்.

என்னுடைய சத்தியம் என்னுடையது. என்னுடைய அனுபவமானது. அதைப் பற்றிப் பேசலாம். பாட்டுப் பாடலாம். அதற்கு இசைய நடனமாடலாம். என்னுடைய பரவசத்தை உனக்குக் காட்டலாம். என்றாலும் எதை அனுபவித்திருந்தேனோ அது வெளியிடப்படாமலேயே போய்விடுகிறது. எந்தச் சாத்திரமும் அதை வெளிப்படுத்த வில்லை. எல்லாச் சாத்திரங்களும் அப்படி வெளிப்படுத்தச் செய்த முயற்சிகளே. அந்த முயற்சிகள் வெற்றியடையத்தான் இல்லை. சத்தியத்தை வெளிப்படுத்த முடியாது.



சத்தியத்தைக் கண்டு கொண்டவர்களின் கருணையைச் சாத்திரங்கள் காட்டுகின்றன. ஆனால் அந்தக் கருணை அந்தச் சத்தியத்தை வெளிப்படுத்துவதில் வெற்றி பெற்றுவிட்டது என்று சொல்வதற்கில்லை.

ரவீந்திரநாத் சாகும் தறுவாயில் இருந்தபோது ஒருவர் அவரிடம், ''நீங்கள் மகிழ்ச்சியாகத்தான் இருக்க வேண்டும். கடவுளுக்கு நன்றியுடையவராகத்தான் இருக்க வேண்டும். உலகம் அறிந்த கவிஞர்களிலேயே நீங்கள்தான் சிறந்தவர். ஆறாயிரம் கவிதைகள் எழுதியிருக்கிறீர்கள். யாருமே அவ்வளவு கவிதைகள் எழுதியதில்லை. ஷெல்லியைத்தான் மிகப் பெரிய கவிஞர் என்பார்கள். அவர் கூட இரண்டாயிரம் கவிதைகள் தான் எழுதியிருக்கிறார். நீங்களோ அவரைப் போல மூன்று மடங்கு பெரியவர்,'' என்றார். ரவீந்திரநாத் கண்களிலோ கண்ணீர் திரண்டது. வந்தவருக்கு ஒரே குழப்பம். ரவீந்திரநாத் ஏன் அழ வேண்டும் என்று புரியவில்லை. ''ஏன் அழுகிறீர்கள்? கடவுளுக்கு நன்றி சொல்லுங்கள். உங்களுடைய வாழ்வை நிறைவு செய்துவிட்டார். எதுவெல்லாம் சாதிக்க வேண்டுமோ அத்தனையும் சாதித்துவிட்டீர்கள்,'' என்றார்.

ரவீந்திரநாத், ''நான் எதையும் சாதித்துவிடவில்லை. அந்த ஆறாயிரம் கவிதைகள் என் தோல்வியைத்தான் பறைசாற்றுகின்றன,'' என்றார். நன்றாகக் கேட்டுக் கொள். தம்முடைய ஆறாயிரம் கவிதைகள் தன்னுடைய தோல்வியைத்தான் காட்டுகின்றன என்றார். ''அந்த ஆறாயிரம் கவிதைகள் என்னுடைய தோல்விக்குச் சாட்சிகள். நான் எதையோ சொல்ல வேண்டும் என்றிருந்தேன். ஆனால் அதைச் சொல்லியபாடில்லை. ஒவ்வொரு முறையும் முயன்று தோற்றுத்தான் போய்



விட்டேன். மறுபடி மறுபடி என்று ஆறாயிரம் தடவை முயன்றும் தோற்றுத்தான் போய்விட்டேன். நான் பாட வந்த பாடல் இன்னும் பாடப்படாமலேயே இருக்கிறது. நான் அதை என்னோடு எடுத்துப் போகிறேன்,'' என்றார்.

அப்படியேதான் புத்தரும் முகம்மதுவும் ஸாரதுஸ்ட்ராவும். உனக்குத் தெரிந்தவர்கள் எல்லோருடைய கதையும் அதுதான். ஒரு நம்பிக்கையைக் கைக் கொண்டிருப்பது அதே சமயம் ஆன்மிகவாதியாகவும் இருப்பதென்பது முடியாத காரியம். உண்மையாகவே ஆன்மிகவாதியாக இருக்க வேண்டுமா? எல்லா மத நம்பிக்கைகளையும் விட்டுவிட வேண்டும். அது என்னுடைய மூன்றாவது வித்தியாசம்.

நான் உனக்கு ஆன்மிகவாதியாக இருப்பது எப்படி என்று சொல்லித் தருகிறேன். ஒரு மதத்தை நம்பச் சொல்லித் தரவில்லை. நீங்கள் தேடுபவர்களாக இருக்க வேண்டும். எதையும் பிறர் சொல்வதற்காக ஏற்றுக் கொள்ளக் கூடாது. பலரும் சொல்கிறார்களே அதனால் அது உண்மையாக இருக்க வேண்டும் என்று எடுத்துக் கொள்ளக் கூடாது.

சத்தியம் உன்னுடைய சொந்த அனுபவமாக இருக்க வேண்டும். அதற்கு நீ ஒரு சாட்சியாக வேண்டும். அப்படி ஒரு சாட்சியாக இருக்கும் அந்தக் கணம் நான் ஒரு முகம்மதியன் அல்லது இந்து அல்லது கிறிஸ்துவன் என்று சொல்ல முடியாது போகும். இவை எல்லாம் தத்துவ வாதங்கள். யூகங்கள். இறைக் கொள்கைகள். வாதப் பிரதிவாதங்கள். கணக்குப் போடுகிறவை. சாமர்த்தியம். அனுபவமோ அவற்றில் இருப்பதில்லை.



என்னுடைய அணுகு முறையே இருத்தலியல் பாற்பட்டது. அனுபவக் கூறுகள் பாற்பட்டது. நான் எந்தச் சாத்திரத்தையும் உனக்குக் கொடுக்கப் போவதில்லை. மாறாக எல்லாச் சாத்திரங்களையும் உன்னிடமிருந்து விலக்கி வைக்கப் போகிறேன். எல்லாச் சாத்திரங்கள், கொள்கைகள், கோட்பாடுகள் ஆகியவற்றைக் கழித்துப் போட்டுவிட்டு வெறுமையாகிப் போனவனாக உன்னை மாற்றப் போகிறேன்.

அந்த ஒன்றுமற்ற நீயே இறைவன். நான் எப்படியோ அப்படித்தான். புத்தர் எந்த அளவுக்கோ அந்த அளவுக்கு.

அந்த ஒன்றுமற்றுப் போவதென்பது உன்னுடைய தெய்விகத்துக்கு உன்னைக் கொண்டு போகும் கதவு.

நான் ஒரு சாமியாரல்ல. நான் உன்னைப் போலச் சாதாரணமானவன். எல்லோரையும் போலச் சாதாரண மானவன். பிறரைப் போலச் சாதாரணமானவன் அல்லது அசாதாரணமானவன். இதில் எதுவும் வித்தியம் இல்லை. நான் யாரை விடவும் உயர்ந்தவனில்லை. தாழ்ந்தவ னில்லை. யாரும் உயர்ந்தவரில்லை. தாழ்ந்தவரில்லை. நாம் ஒரே எதார்த்தத்தைச் சேர்ந்தவர்கள். அப்படி இருக்கும் போது உயர்வென்ன, தாழ்வென்ன?

இரண்டாவது வினா

**அன்புக்குரிய குருவே,**

**பதிலே கிடைக்காத கேள்வி ஒன்று.**
**முட்டாள்தனமான கேள்விதான்.**
**என்றாலும் விடை வேண்டும் என்று**
**தவிக்கிறேன்.**



**படைப்பின் நோக்கம் என்ன,**
**சொல்வீர்களா?**
**வாழ்வு ஏன் இருக்க வந்திருக்கிறது?**
**இது ஒரு சந்தர்ப்பவசமாக**
**வந்து இருக்கிறது என்ற வாதத்தை**
**ஒப்புக் கொள்ள மாட்டேன்.**

**பிரேம் பேட்ரிக்,** அந்தக் கேள்வி நிச்சயமாக முட்டாள்தனமானதுதான். நீ சொல்வது மிகச்சரி. அந்தக் கேள்விக்குப் பதில் சொல்ல முடியாது. அதற்குப் பதில் சொல்கிறவர்கள் மேலும் கேள்விகளை எழுப்பத்தான் வழி வகுப்பார்கள்.

உனக்குப் பதில் கிடைக்கவில்லை என்பதற்குக் காரணம் பதில் இல்லை என்பதுதான். வாழ்க்கை ஒரு ரகசியம். அதனால் இந்தக் கேள்விக்குப் பதில் இல்லை தான். ஏன் என்று கேட்கக் கூடாது. ஏன் என்ற கேள்விக்குப் பதில் இருக்குமேயானால் வாழ்க்கை ரகசியமானதாக இருக்காது.

அதைத்தானே விஞ்ஞானம் செய்து கொண்டிருக்கிறது? வாழ்வின் ரகசியத்தை அழித்துப் போடும் முயற்சி. ஒவ்வொரு தடவை ஏன் என்று கேட்கும் போதெல்லாம் அதற்குப் பதில் கண்டுபிடிக்க வழி காண்பது. விஞ்ஞானம் மிக ஆணவத்தோடும் அறியாமையோடும் ஒரு நாள் எல்லா ஏன் என்ற கேள்விகளுக்கும் பதில் சொல்ல முடியும் என்று நினைக்கிறது. அது நடக்கவே நடக்காது.

எல்லா ஏன்களுக்கும் பதில் கண்டு கொண்டாலும் முடிவான ஏன் என்பதற்குப் பதில் காண முடியாது. ஏன் வாழ்க்கை இருக்க வந்திருக்கிறது? இருத்தலின் பொருள் என்ன? இவை எல்லாவற்றின் பயனும் என்ன? இந்தக் கேள்விதான் முடிவான கேள்வி. இதற்குப் பதில் இல்லை.



யாராவது ஏதாவது பதிலைக் கொடுத்தார்கள் என்றால் அந்தப் பதில் இன்னொரு கேள்விக்கு இட்டுப் போகும். உதாரணமாக கடவுள் மானுடத்துக்கு உதவ வேண்டும் என்று படைத்தார் என்ற பதில் வருகிறது என்று வைத்துக் கொள். வழக்கமாக அந்தப் பதிலைத்தான் பலரும் தருகிறார்கள். என்ன மாதிரியான பதில் இது? மனிதனுக்கு உதவப் படைத்தாராம். படைக்க வேண்டிய தேவை என்ன? வேறு சிலர், கடவுள் தனிமையைப் போக்கிக் கொள்ளப் படைத்தார் என்கிறார்கள். கடவுள் கூடத் தனிமையாக இருப்பதாக உணர்ந்தால் யாரும் புத்தராக முடியாது.

திடீரெனக் கடவுள் தன் தனிமையை உணர்ந்தாரா என்ன? உலகைப் படைப்பதற்கு முன் என்ன செய்து கொண்டிருந்தாராம்? யுகயுகமாகத் தனியாக இருந்திருக்கிறார். திடீரென ஒரு நாள், ஒரு காலைப் பொழுதில், அவருக்குப் பைத்தியம் பிடித்தவிட்டதா என்ன? காலை உணவுக்குப் பின் திடீரென்று தனியாக இருப்பதாக அவருக்குப் பட்டதா என்ன? இந்த உகைப் படைக்க வேண்டிய தேவை என்ன வந்தது? ஒரு பெண்ணைப் படைத்திருந்தால் போதுமே.

சரி, இப்போது எப்படி உணர்ந்திருப்பார் என்கிறாய்? உலகில் மனிதர்கள் கூட்டம் அதிகமாகிப் போய்விட்டது என்கிறாரா? கடைவீதியில் சகிக்க முடியாத இரைச்சல் என்கிறாரா? இந்த உலகத்தை அழித்துவிடத் திட்டம் எதுவும் வைத்திருக்கிறாரோ? என்ன மாதிரியான கடவுளைப் பற்றிப் பேசுகிறாய் நீ? உன்னுடைய கடவுள் தனிமையை உணரக் கூடியவரா?

இவை எல்லாம் முட்டாள்தனமாக கேள்விகளுக்கான முட்டாள்தனமான பதில்கள்.



இன்னுமொரு சிலர் இதுவெல்லாம் கடவுளின் விளையாட்டு என்கிறார்கள். அவருடைய லீலா விநோதம் என்பார்கள். அவருக்குச் சும்மா உட்கார்ந்திருக்க முடியாதா? எப்படிப்பட்ட விளையாட்டு இது? ஹிட்லர், முசோலினி, ஸ்டாலின், மாசேதுங், செங்கிஸ்கான், டாமர்லேன், நாதிர்ஷா - இவர்களெல்லாம் கடவுளின் லிலைகளா?

கோடிக்கணக்கில் மக்களைக் கொன்று குவிக்கிறார்கள். இதுவா கடவுளின் லீலை? ஹிட்லர் அறுபது லட்சம் யூதர்களைக் கொன்றான். கடவுள் இந்த விளை யாட்டைத்தான் விளையாடுகிறாரா? கோல்ஃப் ஆடலாமே. செஸ் விளையாடலாமே. எதற்காக மக்களைச் சித்திரவதை செய்ய வேண்டும்? இந்த உலகத்தில் எத்தனை துயரங்கள்? இவர்களோ இதுவெல்லாம் கடவுளின் விளையாட்டு என்கிறார்கள். கைகால் விளங்காமல், கண் பார்வை இல்லாமல், காது கேட்காமல், பேச முடியாமல் எத்தனை குழந்தைகள் பிறக்கிறார்கள். இது கடவுளின் விளையாட்டா? என்ன மாதிரியான ஆள் இந்தக் கடவுள்? அவனுக்குப் பைத்தியம் பிடித்திருக்க வேண்டும். அல்லது அவன் கடவுளாகவே இருக்க முடியாது. கடவுள் மோசமான ஆளாகத்தான் இருக்க வேண்டும். இந்தப் பதில்களால் எந்தப் பயனும் இல்லை. அவை மேலும் கேள்விகளைத்தான் கிளப்புகின்றன. பேட்ரிக், இதற்கு மேல் எதுவும் சொல்வதற்கில்லை. வாழ்வுக்கு எந்த நோக்கமும் இல்லை. எந்த நோக்கமும் இருக்க முடியாது.

எல்லா நோக்கங்களும் வாழ்வுக்குள்ளேயே இருக்கின்றன. காருக்கு ஒரு நோக்கம் இருக்கிறது. ஓரிடத்திலிருந்து வேறொரு இடத்துக்கு உன்னைக் கொண்டு போவதற்கு. சாப்பாட்டுக்கு ஒரு நோக்கம் இருக்கிறது. ஊட்டம் தருவது. உயிரோடு வைத்திருப்பது.



வீட்டுக்கு ஒரு நோக்கம் இருக்கிறது. மழை வெய்யிலில் இருந்து உன்னைப் பாதுகாப்பது. உடைகளுக்கு ஒரு நோக்கம் இருக்கிறது. எல்லா நோக்கங்களும் வாழ்வினுள் இருக்கின்றன. ஆனால் வாழ்வுக்கு நோக்கம் என்று எதுவும் இல்லை. எப்படியா, வாழ்க்கை இன்னொரு நோக்கத்தை நிறைவேற்றுவதற்கான வழியல்ல. கார் ஒரு கருவி. வீடு ஒரு கருவி. வாழ்க்கை அல்ல.

வாழ்க்கைக்கு எந்தக் குறிக்கோளும் இல்லை. அது எதை நோக்கியும் போவதல்ல. வாழ்க்கை இங்கே இருப்பது. அதை யாரும் படைக்கவில்லை. படைப்பு என்ற எண்ணத்தையே மறந்துவிடு. அது எப்போதும் இங்கே இருந்து கொண்டே இருந்திருக்கிறது. இருந்து கொண்டே இருக்கப் போகிறது. வெவ்வேறு வடிவங்களில், வெவ்வேறு வழிகளில் நடனம் தொடரும். நித்தியமானது அது. ஏஸ் தம்மோ ஸனந்தனோ... எந்தக் குறிக்கோளும் இல்லை. அதுதான் வாழ்வின் அழகே. குறிக்கோள் என்று ஏதாவது இருந்தால் வாழ்க்கை இவ்வளவு அழகானதாக இருக்காது. குறிக்கோள் என்று ஒன்று இருந்தால் அது ஒரு வியாபாரமாகிப் போகும். ரோஜாப்பூக்களைப் பார். தாமரை, லில்லி மலர்களைப் பார். என்ன நோக்கம் இருக்கிறதென்கிறாய்? தாமரை காலையில் விரிகிறது. குயில் பாடுகிறது. என்ன நோக்கம் இருக்கிறது அதில்? அவை தம்மளவில் அழகானவை அல்லவா? ஒவ்வொன்றுக்கும் அவற்றுக்குப் புறத்தேயான ஒரு குறிக்கோள் இருந்தேயாக வேண்டுமா?

வாழ்க்கைக்கென ஓர் உட்பொலிவு இருக்கிறது. புறம்பான ஒரு குறிக்கோள் ஏதுமில்லை. அது குறிக்கோள் பாற்பட்டதல்ல. இரவின் அந்தகாரத்தில் ஒரு பறவையின் பாடலைப் போன்றது அது. நீரின் சலசப்புப் போன்றது.



ஊசி இலை மரங்களின் வழியாக வீசும் காற்றைப் போன்றது அது.

மனித மனம் நோக்கத்தைப் பற்றிக் கொண்டிருப்பதால் மனிதன் நோக்கத்தைப் பற்றிக் கொண்டிருக்கிறான். அதனால்தான் ''வாழ்வின் நோக்கம் என்ன?'' என்பதைப் போன்ற கேள்விகள் வருகின்றன. ஏதாவது ஒரு நோக்கம் இருந்தாக வேண்டும் என்கிற எண்ணம். யாராவது வாழ்வின் நோக்கம் இதுதான் என்றால் நோக்கத்தின் நோக்கம் என்ன என்ற கேள்வி எழுகிறது. அதை நாம் ஏன் சாதிக்க வேண்டும்? அப்படிச் சாதிப்பதன் பயன் என்ன? அவரே இதுதான் குறிக்கோளின் நோக்கம் என்றால், மறுபடியும் அதே கேள்வி எழுகிறது. பின்னடைவுதான். முடிவில்லாத பின்னடைவுதான்.

இந்தப் படைப்பின் குறிக்கோள் என்ன என்று கேட்கிறாய்.

இந்த உலகம் படைக்கப்படவே இல்லை. படைப்பு என்ற வார்த்தையே தவறானது. இது எப்போதும் இருந்து கொண்டே இருந்திருக்கிறது. நித்தியமானது. படைத்தவர் என்று யாரும் இல்லை. கடவுள் படைப்பவரல்ல. இருத்தலில் படைப்புச் சக்திதான் கடவுள். படைப்புத்திறன் - படைப்பவர் அல்ல. கவிதை - கவிஞரல்ல. நடனம் - நாட்டியமாடுபவர் அல்ல. பூவல்ல - பூவின் மணம்.

எதற்காக வாழ்க்கை இருக்கிறது என்று கேட்கிறாய். இதைப் போன்ற கேள்விகள் தத்துவார்த்தக் கேள்விகளாகத் தோன்றுகின்றன. அவை உன்னை வெகுவாகத்தான் சித்திரவதை செய்யப் போகின்றன. என்றாலும் முட்டாள் தனமானவைதான்.

பச்சை நிறத்தின் ருசி என்ன என்று கேட்பதைப் போலத்தான் இதுவும். சம்பந்தமில்லாத கேள்வி. நிறத்துக்கு



ருசியில்லை. நிறத்துக்கும் ருசிக்கும் சம்பந்தமே யில்லை. வாழ்க்கை ஏன் இருக்கிறது என்ற கேள்வியை நன்றாகப் படித்துப் பார். வாழ்க்கை என்பதும் இருப்பது என்பதும் ஒன்றேதான். கூறியது கூறுவதுதான். இதைவிட வாழ்க்கை ஏன் வாழ்க்கையாக இருக்கிறது என்று கேட்டிருக்கலாம். அப்படிக் கேட்டுப் பார்த்தால் நீ கேட்டதன் முட்டாள்தனம் புரியும். மொழி உன்னை ஏய்க்கிறது. அவ்வளவுதான்.

வாழ்க்கை ஏன் வாழ்க்கையாக இருக்கிறது என்று கேட்பது, ரோஜா ஏன் ரோஜாவாக இருக்கிறது என்று கேட்பதைப் போலத்தான். ரோஜா சம்பங்கியாக இருந்தால் உனக்குத் திருப்தியாக இருக்குமோ? பிறகும் சம்பங்கி ஏன் சம்பங்கியாக இருக்கிறது என்று கேட்பாய். எப்படித்தான் நீ திருப்தியடையப் போகிறாய். வாழ்க்கை இல்லாமல் போனால் உனக்குத் திருப்தியாக இருக்குமோ? அப்படியும் உடலில்லாமல் மனம் என்ற ஒன்றில்லாமல் வெறும் ஆவியாக இருந்து வாழ்க்கை ஏன் இல்லாமல் போய் விட்டது? என்ன ஆயிற்று வாழ்க்கைக்கு? ஏன் மறைந்து போனது? இப்படிக் கேள்விகளைக் கேட்டுக்கொண்டேதான் இருப்பாய்.

வாழ்க்கை ஒரு புதிர். ஏன் என்பதில்லை. குறிக்கோள் என்பது இல்லை. காரணம் என்பது இல்லை. அது அப்படியே இருக்கிறது. எடுத்துக் கொள் அல்லது விட்டுவிடு. அது அங்கே இருக்கத்தான் செய்யும். இருக்கிறதல்லவா? ஏன் எடுத்துக் கொள்ளக் கூடாது?

எதற்குத் தத்துவ விசாரத்தில் உன் நேரத்தை வீணடித்துக் கொள்ள வேண்டுமென்கிறாய்? நடன மாடலாமே. பாடலாமே. அன்பு காட்டலாமே. தியானிக்க லாமே. வாழ்க்கை என்கிற அதற்குள் இன்னும் ஆழ ஆழமாகப் போய்க் கொண்டிருக்கலாமே.



முடிவான உட்புரியில் உனக்குப் பதில் கிடைக்கலாம். ஆனால் அந்தப் பதில் வரும் விதம் எப்படி இருக்கப் போகிறதென்கிறாய். பதிலை வார்த்தைகளால் சொல்லிவிட முடியாது என்கிறபடிதான் இருக்கப் போகிறது. அது ஊமை ஒருவன் சர்க்கரையை ருசித்ததைப் போலத்தான். இனிப்பை அவன் அனுபவித்திருக்கிறான். ஆனால் இனிப்பை அவனால் விளக்க முடியாது.

புத்தர்களுக்குத் தெரியும். ஆனால் சொல்ல முடியாது. முட்டாள்களுக்கோ தெரியாது. ஆனால் உன்னுடைய கேள்விகளுக்குப் பதில்களை மட்டும் சொல்லிக் கொண்டே போவார்கள். முட்டாள்கள் அந்த விதத்தில் சாமர்த்திய சாலிகள். எதை எதையோ கண்டுபிடித்துச் சொல்வதில். இட்டுக் கட்டிச் சொல்வதில். பதில்களை உற்பத்தி செய்வதில். எந்தக் கேள்வியைக் கேட்டாலும் பதில் சொல்லி விடுவார்கள்.

கௌதம புத்தர் தமது நாட்டுக்குள் யாத்திரை போகும்போது அவருக்கு முன்பே ஒரு செய்தி போகும். அவரை எந்தக் கேள்வி வேண்டுமானாலும் கேட்கலாம். ஆனால் குறிப்பிட்ட பதினொரு கேள்விகள் மட்டும் கேட்கக் கூடாது. அந்தக் கேள்விகளில் ஒன்று தான், 'வாழ்க்கை எதற்காக இருக்கிறது' என்பது. இன்னொன்று, 'யார் இந்த உலகத்தைப் படைத்தது' என்பது. அந்தப் பதினொரு கேள்விகளில் தத்துவம் முழுக்க அடங்கிப் போய்விடுகிறது. அந்தப் பதினொரு கேள்விகளை விட்டுவிட்டால் கேட்பதற்கு ஒன்றுமே இருப்பதில்லை. இவற்றைப் பயனில்லாத கேள்விகள் என்பார் புத்தர். அவற்றுக்குப் பதில் சொல்ல முடியாது. யாருக்கும் பதில் தெரியாது. இயல்பாகவே அந்தக் கேள்விகள் பதிலில்லாத கேள்விகள்.



மௌலிங்கபுத்த என்ற ஒரு பெரிய தத்துவஞானி புத்தரிடம் வந்தார். கேள்விக்கு மேல் கேள்வியாகக் கேட்க ஆரம்பித்தார். பேட்ரிக்கின் மறு அவதாரமாக இருக்க வேண்டும்.

புத்தர் அரைமணி நேரம் மௌனமாகக் கேட்டுக் கொண்டிருந்தார். பதிலே வரவில்லை என்பதைக் கண்டபோது மௌலிங்கருக்கு தர்மசங்கடமாகப் போய்விட்டது. சும்மா உட்கார்ந்து கொண்டு புன்முறுவல் செய்து கொண்டிருந்தார் புத்தர். எதுவுமே நடக்காததைப் போல இருந்தது அவருடைய பாவனை. எவ்வளவு முக்கியமான கேள்விகளைக் கேட்டும் பதிலே வரவில்லையே.

கடைசியில் புத்தர், ''உன் கேள்விகளுக்கெல்லாம் பதில் கண்டிப்பாக வேண்டுமென்கிறாயா?'' என்றார்.

''அப்படியில்லை யென்றால் நான் ஏன் இத்தனை கேள்விகளைக் கேட்டிருக்க வேண்டும்? ஆயிரம் மைல் தூரம் பயணம் செய்து வந்ததே இந்தக் கேள்விகளைக் கேட்டுப் பதில் பெற்றுக் கொள்ளத்தானே?''

அந்த நாட்களில் ஆயரம் மைல் பிரயாணம் என்பது சிரமம்தான். விமானத்தில் ஏறிப் போய் இறங்குவதைப் போல அல்ல. சில மணி நேர அல்லது சில நிமிடப் பயணம் அல்ல. ஆயிரம் மைல்கள் ஆயிரம் மைல்கள் தான். பதில்கள் வேண்டுமென்ற வேட்கையில் பதில் கிடைக்கும் என்ற நம்பிக்கையில் அவ்வளவு தூரம் பயணம் செய்திருக்கிறார். களைத்துப் போயிருந்தார். புத்தரோ எப்போதும் பிரயாணம் செய்து கொண்டிருப்பவர். இவர் ஓரிடத்துக்குப் போய்ச் சேர்ந்தபோது அவர் அங்கிருந்து கிளம்பியிருப்பார். மறுபடி இவர் அவரைத் தேடிப் பயணத்தைத் தொடர வேண்டியிருந்திருக்கும்.



இப்படியாக பல மாதங்களுக்குப் பின்னரே அவர் புத்தரைச் சந்தித்திருக்க முடியும். அப்படிச் சந்தித்தபோது தன் களைப்பை எல்லாம் மறந்துவிட்டுக் கேள்விகளைக் கேட்க ஆரம்பித்திருப்பார். புத்தரோ புன்முறுவலோடு, ''உன் கேள்விகளுக்கெல்லாம் பதில் கண்டிப்பாக வேண்டுமென்கிறாயா?'' என்று கேட்டால் எப்படியிருந்திருக்கும்?

''அதற்காகத்தானே இத்தனை தூரத்தைக் கடந்து வந்திருக்கிறேன்? எவ்வளவு சிரமங்கள். ஓ! வாழ்க்கை முழுக்கப் பிரயாணம்தான் என்பதைப் போல இருந்தது. நீங்களோ பதில்கள் கண்டிப்பாக வேண்டுமா என்று கேட்கிறீர்கள்.''

''மறுபடி நான் கேட்கிறேன். உன் கேள்விகளுக் கெல்லாம் பதில் கண்டிப்பாக வேண்டுமென்கிறாயா? ஆமாம் அல்லது இல்லை என்று சொல்லிவிடு. அந்தப் பதிலைப் பொறுத்துத்தான் பலவும் இருக்கின்றன.''

''ஆமாம்.''

''சரி. எனக்கருகில் இரண்டு வருடங்கள் மௌனமாக உட்கார்ந்திரு. எந்தக் கேள்வியும் கேட்கக் கூடாது. எதுவும் பேசக் கூடாது. என் பக்கத்தில் இரண்டு வருடங்கள் சும்மா உட்கார்ந்திரு. இரண்டு வருடம் கழித்து நீ என்னென்ன கேட்க வேண்டுமோ அத்தனையும் கேட்கலாம். பதில் சொல்கிறேன் என்று வாக்களிக்கிறேன்.''

அப்போது மஞ்சுஸ்ரீ என்ற புத்தரின் சீடர் பக்கத்தி லிருந்த மரத்தடியில் உட்கார்ந்திருந்தார். ஏறக்குறைய விழுந்து புரண்டு சிரிக்க ஆரம்பித்தார்.

''என்ன ஆயிற்று இவருக்கு? இப்படித் திடீரெனச் சிரிக்கிறாரே! நீங்களோ என்னிடம் பேசிக் கொண்டி ருக்கிறீர்கள். அவரிடம் ஒரு வார்த்தை கூடப் பேசவில்லை.



யாரும் எதுவும் அவரிடம் சொல்லவில்லை. அவரென்ன தனக்குத் தானே வேடிக்கைப் பேச்சுப் பேசிக் கொண்டிருக்கிறாரா?''

புத்தர், ''அவரையே போய்க் கேளேன்,'' என்றார்.

அப்படியே கேட்டபோது மஞ்சுஸ்ரீ சொன்னார் : ''ஐயா ஏதாவது கேட்க வேண்டுமானால் இப்போதே கேட்டுக் கொள்ளுங்கள். இப்படித்தான் அவர் ஏமாற்றுவார். என்னை அப்படித்தான் ஏமாற்றினார். உங்களைப் போலவே நானும் முட்டாள்தனமாகத் தத்துவம் பேசித் திரிந்து கொண்டிருந்தேன். நான் இவரிடம் வந்தபோது இப்படியேதான் சொன்னார். ஆயரம்மைமல் தாண்டி வந்திருக்கிறீர்கள். நானோ இரண்டாயிரம் மைல் தாண்டி வந்திருந்தேன்.''

மஞ்சுஸ்ரீ பெரிய தத்துவ அறிஞர்தான். நாடு முழுக்கத் தெரிந்த அறிஞர். ஆயிரக்கணக்கான சீடர்கள். புத்தரிடம் வந்தபோது ஆயிரம் சீடர்களோடுதான் வந்தார்.

''மௌனமாக இரண்டு வருடங்கள் உட்கார்ந்திரு என்று சொன்னார். நானும் உட்கார்ந்திருந்தேன். ஆனால் அதற்குப்பின் ஒரு கேள்வி கூடக் கேட்க முடியவில்லை. மௌனமான அந்த நாட்களில் எல்லாக் கேள்விகளும் மெதுவாக என்னை விட்டு விலகிப் போய்விட்டன. என்றாலும் உங்களுக்குச் சொல்லத்தான் வேண்டும். அவரது வாக்குறுதியை அவர் காப்பாற்றுவார். சரியாக இரண்டு வருடங்கள் கழிந்த பின் - எனக்குத்தான் கணக்குத் தெரியவில்லை - நேரம் கழிந்து கொண்டிருப்பதை நான் உணர்ந்தேனில்லை.... மௌனத்தை அனுபவித்துக் கொண்டிருந்தேன். அவரிடமிருந்து ஞானப்பால் குடித்துக் கொண்டிருந்தேன். என்னால் நம்பவே முடியவில்லை. என்னுடைய அடி ஆழத்தில் அந்த இரண்டு வருடங்கள் முடியவே கூடாது என்றுதான் விரும்பியிருந்திருக்கிறேன்.



ஏனென்கிறீர்களா? அப்படி முடிந்துவிட்டால், 'இரண்டு வருடம் முடிந்துவிட்டது. இடத்தை இன்னொருவருக்காகக் விட்டு விடு' என்று சொல்லிவிட்டால் என்ன செய்வது என்ற பயம்தான். 'இப்போது நீயாகவே உன்னைக் கவனித்துக் கொள்ள முடியும். இனியும் என்னருகில் இருக்க வேண்டியதில்லை' என்று சொல்லிவிட்டால் என்ன செய்வது என்ற பயம்தான். பால் மறந்து குழந்தையைத் தாய் கொஞ்சம் தள்ளி இருக்க வைப்பதைப் போல...

''அவர் மறந்துதான் போவார் என்றிருந்தேன். அவரோ நன்றாக நினைவில் வைத்துக் கொண்டிருந்திருக்கிறார். சரியாக இரண்டு வருடம் கழிந்தவுடனே, 'உன்னுடைய கேள்விகளைக் கேட்கலாம் மஞ்சுஸ்ரீ' என்றார். எனக்குள் நான் பார்த்துக் கொண்டேன். அங்கே எந்தக் கேள்வியும் இல்லை. கேள்வி கேட்கவும் யாருமில்லை. ஆழ்ந்த அமைதிதான். சிரித்துக் கொண்டேன். அவரும் சிரித்துக் கொண்டார். என்னுடைய முதுகைத் தட்டிக் கொடுத்து, 'சரி, இப்போது நகர்ந்து கொள்' என்று சொல்லிவிட்டார்.

''அதனால்தான் மௌலிங்கபுத்த, நான் சிரித்தேன். அதே விளையாட்டை உன்னோடும் விளையாட ஆரம்பித்து விட்டார். பாவம் மௌலிங்க புத்த, இரண்டு வருடம் மௌனமாக உட்கார்ந்திருக்கப் போகிறார். கடைசியில் எந்தக் கேள்வியும் டேக் முடியாதவராகிப் போகப் போகிறார். ஒரு கேள்வி கூடக் கேட்க முடியாது. அதனால்தான் மௌலிங்கபுத்த, ஏதாவது கேட்க வேண்டுமானால் இப்போதே கேட்டுக் கொள் என்கிறேன்.''

புத்தரோ, ''என்னுடைய நிபந்தனைகள் பூர்த்தி செய்தாக வேண்டும்,'' என்று சொல்லிவிட்டார்.



பேட்ரிக், அதுதான் உனக்கு என்னுடைய பதிலும். என் நிபந்தனைகளைப் பூர்த்தி செய். தியானம் செய். இங்கே சும்மா இருந்து பார். எல்லாக் கேள்விகளும் இல்லாமல் போய்விடும். உன்னுடைய கேள்விகளுக்குப் பதில் சொல்ல எனக்கு விருப்பமில்லை. உன்னுடைய கேள்விகளைக் கரைத்துவிடத்தான் நினைக்கிறேன். எல்லாக் கேள்விகளும் இல்லாமல் போய்விடும்போது, கேள்வி கேட்பவனும் இல்லாமல் போய்விடுகிறான். கேள்விகள் இல்லாமல் கேள்வி கேட்பவன் இருக்க முடியாதல்லவா? கேள்வியும் கேள்வி கேட்பவனும் இல்லாமல் போய்விடுவது என்ன ஆனந்தம் என்கிறாய்? என்ன பரவசம் என்கிறாய்? கற்பனை கிடையாது. கனவுகள் கிடையாது. இதை இப்போது உன்னால் புரிந்து கொள்ள முடியாது. அப்போது வாழ்க்கை முழுக்க ஒரு திறந்த புத்தகமாகி விடுகிறது. ரகசியங்களின் இடைவிடாத ஊர்வலம்தான். முடிவேயில்லாமல்.

மூன்றாவது வினா

அன்புக்குரிய குருவே,

எத்தனையோ ஆன்மிக வாதிகளின்
பேச்சைக் கேட்டுவிட்டேன்.
ஏன் எல்லோருமே
புரிந்து கொள்ளச் சிரமமான
மொழியிலேயே பேசுகிறார்கள்?

**சும்லா காந்த்,** அவர்கள் அப்படித்தான் பேசியாக வேண்டியிருக்கிறது. அவர்களுக்கு ஒன்றுமே தெரியாது. நான் இப்போது பேசுவதைப் போல எளிமையாகப் பேசினால் அவர்களுடைய அறியாமையை மறைத்து வைக்க முடியாது. பெரிய பெரிய வார்த்தைகளின்



திரைக்குப் பின்னால் அவர்கள் தங்களுடைய அறியாமையை மறைத்து வைத்திருக்கிறார்கள். அது ஒரு தொழில் ரகசியம். என்னதான் சொல்கிறார்கள் என்று தெரிந்து கொள்ளாத முட்டாள் மக்கள், அவர்கள் சொல்வது என்னவோ மிகப் பெரிய சமாச்சாரமாக இருக்க வேண்டும் என்று நினைத்துக் கொள்கிறார்கள்.

புரியாதது மிகப் பெரியது என்று நினைத்துக் கொள்கி றார்கள். புரிவது மேம்போக்கானது என்று நினைத்துக் விடுகிறார்கள். அதனாலதான் பல காலமாகவே இந்த ஆன்மிகவாதிகள் சிரமமான சிக்கலான மொழியிலேயே பேசிக் கொண்டிருந்துவிட்டார்கள். பெரிய வார்த்தைகள், வழக்கத்தில் இல்லாத மொழிகள். யாருக்கும் புரியக் கூடாதல்லவா? இலத்தீன், சமஸ்கிருதம், அரேபிய மொழிகள், அதைத்தானே இந்த மகான்கள் பேசிக் கொண்டிருக்கிறார்கள்.

அவர்கள் பேசுவதைக் கேட்கும்போது ஒன்றும் புரிவதில்லை. ஆனால் புரியவில்லை என்று சொல்லவும் முடிவதில்லை. தலைகுனிவாகிப் போகுமல்லவா? எனவே தலையாட்ட ஆரம்பித்து விடுகிறாய். ''ஆமாம், உண்மை தான்'' என்கிறாய். அவர்கள் அவர்களுடைய அறியாமை யையும் நீ உன்னுடைய அறியாமையையும் மறைத்துக் கொள்ள அது ஒரு பரஸ்பரச் சதியாகி விடுகிறது. இது உனக்கு நன்றாகத் தெரியும்.

மருத்துவர் மருந்துச் சீட்டு தருகிறார். ஏதாவது புரிகிறதா? மறுபடி அந்தச் சீட்டை அவரிடம் காட்டி அதில் என்ன எழுதியிருக்கிறது என்று கேட்டால் அவருக்கே தெரியாது.



முல்லா நஸ்ருதீன் அப்படி ஒரு மருந்துச் சீட்டை வைத்துக் கொண்டு சினிமா டிக்கெட்டாக வும், மந்திரியை பார்க்க அனுமதிச் சீட்டாகவும் என்று இப்படிப் பலவிதங்களில் பயன்படுத்தினாராம். யாருக்கும் தெரியவில்லை, அதில் என்ன எழுதியிருக்கிற தென்று. அதை வைத்துக் கொண்டு அவர் பல காரியங்கள் செய்து கொண்டாராம். யாருக்கும் என்ன என்று தெரியவில்லை. ஆனால் தெரியவில்லை என்று சொல்லவு மில்லை. அவர் பாட்டுக்கு எங்கே வேண்டுமானாலும்போக முடிந்தது.

இதுதான் எல்லோருக்கும் தெரிந்த ரகசியம். போலி ஆன்மிக வாதிகள் சிரமமான மொழியில்தான் பேசுவார்கள். இல்லையென்றால் அவர்களுக்கு உன்னைப் போலவே ஒன்று தெரியாது என்பது தெரிந்து விடும். சமயத்தில் உனக்குத் தெரிந்தது கூட அவருக்குத் தெரியாது என்பது தெரிந்து போகும்.

பெரிய மறைப்பை அவர்கள் உண்டாக்கி வைத்துக் கொள்கிறார்கள். பெரிய வார்த்தைகளையும் செத்துப் போன மொழிகளை வைத்துக் கொண்டும் சாத்திரங்களை மேற்கோள் காட்டுகிறார்கள். புரியாத வகையில் பேசுகிறார்கள். என்ன செய்வது என்பது உனக்கும் புரியவில்லை. உனக்குப் புரியவில்லை என்பதை ஒப்புக் கொண்டு விளக்கம் கேட்க வேண்டும். அல்லது அவர்கள் சொல்வது மிகப் பிரமாதம் என்று சொல்ல வேண்டும். வழக்கமாக இரண்டாவது காரியத்தைத்தான் பலர் செய்கிறார்கள். பாவி. அறிவில்லாதவன். விஷயம் தெரியாதவன், சமயம் தெரியாதவன். வேறென்ன செய்ய முடியும்?



என்னதான் சிக்கலான மொழியில் பேசினாலும் தெரிந்தவரை ஏமாற்ற முடியாது. தெரியாதவரை வேண்டுமானால் ஏமாற்றலாம். ஹெகெல் எழுதிய புத்தகங்களைப் படித்தால் பக்கம் பக்கமா ஒரே வாக்கியம் நீள்வதைக் காண்பாய். வாக்கியத்தின் பின்பகுதிக்கு வரும்போது முன்பகுதியில் என்ன இருக்கிறது என்பது மறந்து போகும். அதனால் அவர் உயிரோடு இருந்த வரை அவர்தான் மிகப் பெரிய தத்துவ ஞானி என்று கொண்டாடினார்கள். ஆனால் அவருடைய புத்தகங்களை நுணுகிப் படித்தபோது, ஆராய்ச்சியாளர்கள் ஆழ்ந்து படித்தபோது அவர் எதுவும் சிறப்பாகச் சொல்லிப் போயிருக்கவில்லை என்பது தெளிவானது. பெரிய பெரிய வார்த்தைகளில் நிறையத்தான் முட்டாள்தனமாகச் சொல்லிப் போயிருந்தார்.

பெரிய வார்த்தைகள் வசீகரிக்கின்றன. பெரிய வார்த்தைகள் மயக்குகின்றன.

ஏன் புரிந்து கொள்ளச் சிரமமாக இருக்குமாறு பேசுகிறார்கள் என்று கேட்டாய் அப்படிப் பேசவில்லை யென்றால் யார் காது கொடுத்துக் கேட்கப் போகிறார்கள்?

ஒரு விவசாயி இரண்டு மகன்கள். மலக்குழியைச் சுத்தம் செய்யுமாறு மகன்களிடம் சொன்னார். அவர்களோ புதிதாக ஒன்றைத் தோண்டி வைத்து விட்டார்கள். தெரியாமல் போன அந்த விவசாயி அந்தக் குழிக்குள் விழுந்துவிட்டார். தீ தீ என்று கத்தவே அந்த வழியாகப் போய்க் கொண்டிருந்தவர்கள் அவரைக் காப்பாற்றினார்கள். ஏன் தீ தீ என்று கத்தியது என்று கேட்டதற்கு, குழி குழி என்று கத்தினால் யார் வந்து காப்பாற்றப் போகிறீர்கள் என்றார்.



சிரமமான மொழியைப் பயன்படுத்துவது ஏன் என்பதைச் சுலபமாகப் புரிந்து கொள்ளலாம். இல்லையென்றால் அவர்கள் பேச்சைக் கேட்க யார் வரப் போகிறார்கள்? என்னைப் போல அவர்கள் பேச முடியாது. நான் சாதாரணமாகப் பேசுகிறேன். நான் நேராக உன்னிடம் பேசுகிறேன். இது ஒரு பிரசங்கமல்ல. நண்பர் களுக்கிடையே ஒரு உரையாடல். கடவுளின் வார்த்தை யல்ல. அரட்டை. அவ்வளவுதான்.

ஏதாவது சொல்ல வேண்டுமானால் சாதாரணமாகத் தான்பேச வேண்டும். சொல்வதற்கு ஒன்றுமில்லை யென்றால்தான் பெரிய பெரிய வார்த்தைகளை அவசியம் கருதிப் பயன்படுத்த வேண்டியிருக்கிறது.

கடைசி வினா

**அன்புக்குரிய குருவே,**

**பூசாரிகள் எல்லோருமே**
**மனித குலத்துக்கு**
**எதிரிகள் அல்லவா?**

**தீபேஷ்,** எல்லாப் பூசாரிகளும் அல்ல. சிலர்தான். போப்பாண்டவர், சங்கராசாரியார்கள் என்று சிலர்தான். இவர்கள்தான் கடவுளின் எதிரிகள். ஏழைப் பூசாரிகளுக்கோ வெறும் வயிற்றுப்பாடு. அவ்வளவுதான்.

அவர்களுக்கும் கடவுளுக்கும் எந்தச் சங்காத்தமும் கிடையாது. கடவுளோடு அவர்களுக்கு நட்பு இல்லை. விரோதமும் இல்லை. கடவுளைப் பற்றிய எண்ணத்தில் நேரத்தைக் கடத்த அவர்களுக்குச் சாவகாசமும் இல்லை.

அது ஒரு தொழில். அவ்வளவுதான். பிரமாதமான தொழில் கூட அல்ல. கடைசிக் குமாஸ்தா அவளவுக்குக்



கூட அவர்களுடைய சம்பாதனை இருப்பதில்லை. அதற்காக அவர்கள் கோயில் கோயிலாகப் போக வேண்டியிருக்கிறது. வீடு வீடாக ஏறி இறங்க வேண்டியிருக்கிறது. ஏறக்குறையப் பிச்சை எடுப்பது போலத்தான்.

இல்லை. அவர்கள் கடவுளுக்கு எதிரிகள் அல்லர். குறிப்பாக இந்தியாவில் வயிற்றுப்பாட்டுக்கு வேறு எதுவும் செய்யத் தெரியாதவன் பூசாரியாகி விடுகிறான்.

இந்தியாவில் பிராம்மணர்கள்தான் பூசாரிகள். பிராம்மணர்கள் செல்வந்தர்கள் அல்ல. அவர்களுக்கு வேறு எந்தத் தொழிலும் தெரியாது. வேறு எதையும் செய்யவும் முடியாது. செருப்புத் தைக்க முடியுமா? ஆசாரி வேலை செய்ய முடியுமா? தெருக் கூட்ட முடியுமா?

கடவுளுக்குப் பிரார்த்தனை செய்வது என்ற ஒரே தொழிலைச் செய்துதான் பிராம்மணர்கள் பல காலம் வாழ்ந்து வந்திருக்கிறார்கள். சும்மா பிரார்த்தனை மட்டுமே செய்து கொண்டிருந்தால் பட்டினியால் சாக வேண்டியதுதான். வானத்திலிருந்து பணம் கொட்டப் போவதில்லை. அப்படி நடந்ததேயில்லை. எனவே பிரார்த்திக்க இருக்கும் திறமையைப் பயன்படுத்திக் கொள்ள வேண்டியிருக்கிறது. சாத்திர அறிவைச் சாதகமாகப் பயன்படுத்திக் கொள்ள வேண்டியிருக்கிறது. ஏழைப் பூசாரி கடவுளின் எதிரியல்ல. கடவுளைப் பற்றி அந்த அப்பாவிக்கு எதுவும் தெரியாது. கடவுளைப் பற்றி எந்த அக்கறையும் கிடையாது.

நான் சிறுவனாக இருந்தபோது எங்கள் வீட்டுக்குப் பக்கத்தில் ஒரு பூசாரி இருந்தார். நான் அவரைக் கேள்வி மேல் கேள்வி கேட்டு நச்சரித்து விடுவேன். கடவுள் இருக்கிறாரா? ஆத்மாவுக்கு இறப்பே இல்லையா? கர்மா



பற்றிய தத்துவம் என்ன? இப்படியாகப் பலகேள்விகள். ஒரு நாள் அவர் என்னைப் பார்த்து, ''சும்மா தொந்திரவு செய்யாதே. உண்மையைச் சொல்லிவிடுகிறேன். எனக்கு ஒன்றும் தெரியாது. நீ பெரிய உபத்திரவமாகப் போனாய். யாரும் என்னை இப்படியெல்லாம் கேள்வி கேட்பதில்லை. நான் சாதாரணப் பூசாரி. பூசை செய்யச் சொல்கிறார்கள். செய்தால் ஒரு நாளைக்கு இரண்டு அல்லது மூன்று ரூபாய் கொடுக்கிறார்கள். எப்படியோ என் பிழைப்பு போகிறது. எனக்கு மூன்று குழந்தைகள். வயதான தாய் தந்தையர். மனைவி. அதிலும் நான் வசதியாகத்தான் இருக்கிறேன் என்று காட்டிக் கொள்ளவும் வேண்டியிருக்கிறது. ஒரு பிராம்மணன் தன் வறுமையை வெளியே தெரிய விடக் கூடாது. உயர்ந்த சாதிக்காரனல்லவா?''

''நாள் முழுக்க வேலை செய்து களைத்து வந்தால் நீ இங்கே வந்து உட்கார்ந்து விடுகிறாய். மூன்று ரூபாய்தான் இன்றைய சம்பாதனை. ஏறக்குறைய நாங்கள் பட்டினி கிடக்கிறோம். கடவுள் இருக்கிறாரா இல்லையா என்பதைப் பற்றி யாருக்குக் கவலை? எனக்குத் தெரியவும் தெரியாது. எப்படி பூசை செய்வது என்று மட்டும்தான் எனக்குத் தெரியும். எந்தக் கடவுளுக்கு வேண்டுமானாலும் பூசை செய்வேன். காசு கொடுத்தால் போதும்,'' என்றார்.

எனவே தீபேஷ், எல்லாப் பூசாரிகளையும் கடவுளுக்கு விரோதிகள் என்று சொல்லாதே. ஒரு சில தந்திரக்காரர்கள் தான் அப்படி. அவர்கள் பேயைக் கும்பிடுகிறவர்கள். அதனால்தான் வெகு சிலரே புத்தராக முடிகிறது.

ஆனால் தொண்ணூற்று ஒன்பது சதவிகிதம் பேர் வேறு எதையும் செய்யத் தெரியாமல் இந்தத் தொழிலுக்கு வந்து விட்டவர்கள். இதை விட்டால் திருவோடு எடுத்துக்



கொண்டு போகத் தெரியும். ஆனால் அவர்கள் உயர்ந்த சாதியினராயிற்றே. எனவே பிச்சையெடுப்பதையும் ஒரு வகையான தொழிலாக்கிக் கொண்டார்கள். சடங்குகள் பாற்பட்ட பூசைகள் செய்வது தொழிலாகிவிட்டது.

ஒருவன் சாலையில் ஒரு பலகையைக் கண்டான். அதில் பாட்டியின் பூசை வீட்டுக்கு ஒரு மைல் என்று எழுதியிருந்தது. அட இவ்வளவு ஒளிவு மறைவில்லாமல் இதற்கெல்லாம் விளம்பரம் செய்வார்களோ என்று வியந்து கொண்டே ஒருவன் அங்கே போய்ச் சேர்ந்தான்.

வயதான ஒருத்தி அவனை உள்ளே நுழைய அனுமதித்து இரண்டு டாலர்களைக் கேட்டுப் பெற்றுக் கொண்டாள். ''இந்தக் கதவு வழியாக நேராக அந்த ஹாலின் கடைசிக்குப் போ,'' என்று சொன்னாள்.

இவனும் காசு கொடுத்து விட்டுக் கதவைத் திறந்து கொண்டு நேராகப் போனான். வீட்டின் புழக்கடைக்கு வந்து சேர்ந்தான். வரிசையாக மரக் கூண்டுகள். எல்லாவற்றிலும் பூனைகள். தலைக்குமேலே ஒரு பலகையில் என்னவோ எழுதியிருந்தது. படித்துப் பார்த்தான்.

''கிழவி உன்னை ஏமாற்றித்தான் வீட்டாள். தயவு செய்து யாரிடமும் ரகசியத்தைச் சொல்லிவிடாதே. வயதான காலத்தில் எப்படியோ வயறு வளர்க்க வேண்டி யிருக்கிறதே!''

இன்றைக்கு இது போதுமே...



# ஓஷோ குறித்து...

இன்றைய சமுதாயம் எதிர்கொண்டுள்ள அரசியல் பிரச்சனைகளுக்கும், வெகு அவசரமான சமூகப் பிரச்சனைகளுக்கும் விடை தேடும் தனி நபர்களின் தேடல் தாகத்தைத் தணிப்பவர், ஓஷோ. மதம், தேசம், இனம், மொழி போன்ற எந்த ரகமான பிரிவையும், கும்பலையும் எதிர்ப்பவர், ஓஷோ. இன்றைய விரைவு யுக வாழ்க்கையை நெறிப்படுத்துவதற்கான, அகமாற்று அறிவியலையும் தியான அணுகுமுறையையும் தந்த ஒரு புரட்சியின் மறுவடிவம்தான், ஓஷோ.

உடலிலும் உள்ளத்திலும் அடுக்கடுக்காய்க் குவியும் அழுத்தத்தை வெளியேற்றுவதற்கு ஏற்ற வகையில் தனித்துவத்துடன் உருவாக்கப்பட்டுள்ளன, ஓஷோவின் ஆக்டிவ் தியான முறை. (Osho Active Meditations ™) இந்த முறை, தியானத்திற்கு உகந்த, சலனமில்லாத, சிந்தனையற்ற ஒரு மனநிலையைச் சுலபமாக எட்ட வைக்கிறது.

பூமியில் வலுவாய்ப் பதியும் பாதங்களும், வானத்து நட்சத்திரங்களை எட்டும் கரங்களும் கொண்ட 'ஸோர்பா புத்தர்' என்ற ஒரு புதுமையான மானுடம் பிறப்பதற்கான சூழலை உருவாக்குவதற்காக, ஒரு தெள்ளத் தெளிவான குறிக்கோள் கொண்டவர், ஓஷோ.

ஓஷோவின் சிந்தனை ஓட்டங்கள் முழுவதிலும் ஊடும் பாவுமாகக் கலந்துள்ளது, அவரது தொலைநோக்குப் பார்வை. கீழை நாட்டின் காலங்களைக் கடந்த ஞானக் கருவூலமும், மேலை நாட்டின் மேன்மையான அறிவியல் தொழில் நுட்பத்தையும் உள்ளடக்கியது, அந்தத் தீர்க்க தரிசனம். நாம், அதைப் புரிந்து கொண்டு, நமது வாழ்க்கையில் நடைமுறைப்படுத்தினால், மனித இனத்தின் தராதரத்தில் ஒரு புரட்சி மலரும்.

ஓஷோ நூல்கள், எழுத்து வடிவம் அல்ல. முப்பத்தைந்து ஆண்டுகளுக்கு மேலாக, முன்தயாரிப்பு ஏதும் இல்லாமல், அவர் அருவியாய்ப் பொழிந்த பேச்சு ஒலிநாடாக்களிலும், வீடியோவிலும் பதிவாகி உள்ளது. அவற்றின் தொகுப்புகள் தான் இப்போது புத்தகங்களாக வெளியிடப்படுகின்றன. 'இருபதாம் நூற்றாண்டை உருவாக்கிய ஆயிரம் சிற்பிகளில் ஒருவர் ஓஷோ' என்று புகழாரம் சூட்டியுள்ளது இலண்டனிலிருந்து வெளிவரும் 'சண்டே டைம்ஸ்' இதழ்.

இந்திய தேசத்தின் தலைவிதியை மாற்றிய மாமனிதர்கள் (காந்தி, நேரு, புத்தரையும் சேர்த்து) பத்துப் பேரில் இவரும் ஒருவர் என்று 'சண்டே மிட்-டே' என்ற இந்திய இதழ் மகுடம் சூட்டி யுள்ளது.

# Books by Osho

## In English Language

**EARLY DISCOURSES AND WRITINGS**

A Cup of Tea
Dimensions Beyond The Known
From Sex to Superconsciousness
The Great Challenge
Hidden Mysteries
I am The Gate
The Inner Journey
Psychology of the Esoteric
Seeds of Wisdom

**MEDITATION**

The Voice of Silence
And Now and Here (Vol 1 & 2)
In Search of the Miraculous (Vol. 1 & 2)
Meditation: The Art of Ecstasy
Meditation : The First and Last Freedom
The Path of Meditation
The Perfect Way
Yaa - Hool The Mystic Rose

**BUDDHA AND BUDDHIST MASTERS**

The Book of Wisdom
The Dhammapada : The Way of the Buddha (Vol 1 - 12)
The Diamond Sutra
The Discipline of Transcendence (Vol 1-4)
The Heart Sutra

**INDIAN MYSTICS**

Enlightenment: The Only Revolution (Ashtavakra)
Showering Without Clouds (Sahajo)
The Last Morning Star (Daya)
The Song of Ecstasy (Adi Shankara)

**BAUL MYSTICS**

The Beloved (Vol 1 & 2)

**KABIR**

The Divine Melody
Ecstasy: The Forgotten Language
The Fish in the Sea is Not Thirsty
The Great Secret
The Guest
The Path of Love
The Revolution

**JESUS AND CHRISTIAN MYSTICS**

Come Follow to You (Vol 1-4)
I Say Unto You (Vol 1 & 2)
The Mustard Seed
Theologia Mystica

**JEWISH MYSTICS**

The Art of Dying
The True Sage

**WESTERN MYSTICS**

Guida Sprituale (Desiderata)
The Hidden Harmany (Heraclitus)

The Messiah (Vol 1 & 2)
(Commentaries on Khalil Gibran's The Prophet)
The New Alchemy: To Turn You on
(Commentaries on Mabel Collin's Light on the Path)
Philosophia Perennis (Vol 1 & 2)
(The Golden Verses of Phythogoras)
Zarathustra : A God That can Dance
Zarathustra : The Laughing Prophet
(Commentaries on Nietzsche's Thus Spake Zarathustra)

**SUFISM**

Just Like That
Journey to the Heart
The Perfect Master (Vol 1 & 2)
The Secret
Sufis : The People of the Path
(Vol 1 & 2)
Unio Mystica (Vol 1 & 2)
The Wisdom of the Sands (Vol 1 & 2)

**TANTRA**

Tantra : The Supreme Understanding
The Tantra Experience
The Royal Song of Saraha (same as Tantra Vision, Vol 1)
The Tantric Transformation
The Royal Song of Saraha (same as Tantra Vision, Vol.2)
The Book of Secrets : Vigyan
Bhairav Tantra

**THE UPANISHADS**

Behind a Thousand Names (Nirvana Upanishad)
Heartbeat of the Absolute
(Ishavasya Upanishad)
I Am That (Isa Upanishad)
The Message Beyond Words
(Kathopanished)
Philosophia Ultima (Mandukya Upanishad)
The Supreme Doctrine
(Kenopanishad)
Finger Pointing to the Moon
(Adhyatma Upanishad)
That Art Thou (Sarvasar Upanishad, Kaivalya Upanishad, Adhyatma Upanishad)
The Ultimate Alchemy (Vol 1 & 2)
Vedana: Seven Steps to Samadhi
(Akshaya Upanishad)
Flight of the Alone to the Alone
(Kaivalya Upanishad)

**TAO**

The Empty Boat
The Secret of Secrets
Tao: The Golden Gate (Vol 1 & 2)
Tao: The Pathless Path (Vol 1 & 2)
Tao: The Three Treasures (Vol 1 - 4)
When the Shoe Fits

**YOGA**

The Path of Yoga (previously Yoga: The Alpha and the Omega Vol 1)
Yoga : The Alpha and the Omega
(Vol 2 - 10)

**ZEN AND ZEN MASTERS**

Ah, This!
Ancient Music in the Pines
And the Flowers Showered
A Bird on the Wing
Bodhidharma : The Greatest Zen Master

Communism and Zen Fire, Zen Wind
Dang Dang Doko Dang
The First Principle
God is Dead: Now Zen is the Only living Truth
The Grass Grows By itself
The Great Zen Master Ta Hui
Hsin Hsin Ming : The Book of Nothing
I Celebrate Myself: God is No Where,
Life is Now Here
Kyozan: A True Man of Zen
Nirvana: The Last Nightmare
No Mind: The Flowers of Eternity
No Water, No Moon
One Seed Makes the Whole
Earth Green
Returning to the Source
The Search: Talks on the 10 Bulls of Zen
A Sudden Clash of Thunder
The Sun Rises in the Evening
Take it Easy (Vol 1 & 2)
This Very Body the Buddha "Walking in
Zen, Sitting in Zen
The White Lotus
Yakusan : Straight to the Point of Enlightenment
Zen Manifesto: Freedom From Oneself
Zen: The Mystery and the Poetry of the Beyond
Zen: The Path of Paradox
(Vol 1, 2, & 3)
Zen: The Special Transmission
Zen Boxed Sets
The World of Zen (5 Vol.)
Live Zen
This. This. A Thousand Times This
Zen: The Diamond Thunderbolt
Zen : The Quantum Leap from Mind to No - Mind
Zen: The Solitary Bird, Cuckoo of the Forest
Zen : All the Colors of The Rainbow (5 vol)
The Buddha : The Emptiness of the Heart
The Language of Existence
The Miracle
The Original Man
Turning in

**OSHO, ON THE ANCIENT MASTERS OF ZEN (7 VOLUMES)***

Dogen: The Zen Master
Hyakuja : The Everest of Zen With Basho's haikus
Isan: No Footprints in the Blue Sky
Joshu: The Lion's Roar
Ma Tzu: The Empty Mirror
Nansen : The Point of Departure
Rinzoi : Master of the Irrational
** Each volume is also available individually*

**RESPONSES TO QUESTIONS**

Be Still and Know Come, Come, Yet Again Come
The Goose is Out
The Great Pilgrimage, From Here to Here
The Invitation
My Way: The Way of the White Clouds
Nowhere to Go But in
The Razar's Edge
Walk Without Feet, Fly Without Wings and Think Without Mind

The Wild Geese and the Water
Zen: Zest, Zip, Zap and Zing

**TALKS IN AMERICA**

From Bondage To Freedom
From Darkness to Light
From Death To Deathlessness
From the False to the Truth
From Unconsciousness to Consciousness
The Rajneesh Bible (Vol 2- 4)

**THE WORLD TOUR**

Beyond Enlightenment (Talks in Bombay)
Beyond Psychology (Talks in Uruguay)
Light on the Path (Talks in the Himalayas)
The Path of the Mystic (Talks in Uruguay)
Sermons in Stones (Talks in Bombay)
Socrates Poisoned Again After 25 Centuries (Talks in Greece)
The Sword and the Lotus (Talks in the Himalayas)
The Transmission of the Lamp (Talks in Uruguay)

**OSHO'S VISION FOR THE WORLD**

The Golden Future
The Hidden Splendor
The New Dawn
The Rebel
The Rebellious Spirit

**THE MANTRA SERIES**

Hari Om Tat Sat
Om Mani Padme Hum
Om Shanthi Shanthi Shanthi
Sat - Chit - Anand
Satyam - Sivam - Sundaram

**PERSONAL GLIMPSES**

Books I Have Loved
Glimpses of a Golden Childhood
Notes of a Madman

**INTERVIEWS WITH THE WORLD PRESS**

The Last Testament (Vol 1)

**INTIMATE TALKS BETWEEN MASTER AND DISCIPLE - DARSHAN DIARIES**

A Rose is a Rose is a Rose
Be Realistic: Plan for a Miracle
Believing the Impossible Before Breakfast
Beloved of My Heart
Blessed are the Ignorant
Dance Your Way to God
Don't Just Do Something, Sit There
Far Beyond the Stars
For Madmen Only
The Further Shore
Get Out of Your Own Way
God's Got A Thing about Your
God is Not for Sale
The Great Nothing
Hallelujah!
Let Go!
The 99 Names of Nothingness
No Book, No Buddha, No Teaching, No Disciple
Nothing to Lose but Your Head
Only Losers Can Win in This Game

Open Door
Open Secret
The Shadow of the Whip
The Sound of One Hand Clapping
The Sound Behind the Sun
The Tongue - Tip Taste of Tao
This is it
Turn on, Tune in and Drop the Lat
What Is, Is, What Ain't Ain't
Won't You Join the Dance?

## COMPILATIONS

After Middle Age : A Limitless Sky
At the Feet of the Master
Bhagwan Shree Rajneesh: On Basic Human Rights
Jesus Crucified Again, This Time in Ronald Reagan's America
Priests and Politicians: The Mafia of the Soul
Take it Really Seriously

## GIFT BOOKS OF OSHO QUOTATIONS

A Must For Contemplation Before Sleep
A Must for Morning Contemplation
India My Love

## PHOTO BOOKS

Shree Rajneesh: A Man of Many Climates, Seasons and Rainbows Through the eye of the camera
Impressions... Osho Commune International Photobook

## BOOKS ABOUT OSHO

Bhagwan, The Buddha for the Future by Juliet Farman Bhagwan Shree Rajneesh: The Most Dangerous Man Since Jesus Christ by Sue Appleton
Bhagwan: The Most Godless Yet the Most Godly Man by Dr. George Meredith
Bhagwan: One Man Against the Whole
Ugly Past of Humanity by Juliet Forman
Bhagwan: Twelve Days That Shook the
World by Juliet Forman
Was Bhagwan Shree Rajneesh Poisoned
by Ronald Reagan's America by Sue Appleton
Diamond Days With Osho by Ma Prem Shunyo

# ஓஷோ

முதலில் உன்னை நேசி,
பின் நேசத்தை அதிர்வலையாக
உன்னிடமிருந்து பரப்பு.
இந்த பிரபஞ்சம் முழுமையும்
சென்றடையும் வண்ணம் அதை பரப்பு.



புத்தரின் இந்த சூத்திரங்கள் விலைமதிப்பற்றவை. தியானித்துப் படியுங்கள். 'தியானைத்து இவற்றைப் படியுங்கள்' என்று நான் சொல்வதன் அர்த்தம். விவாதிக்கும் நிலையில் அல்ல - அது ஊன்றிப் படிக்கும் முறையாகாது. உள்வாங்கிப் படிக்கும் சாத்வீக முறையைப் பின்பற்றுக.







ISBN 978-81-8402-094-6

கண்ணதாசன் பதிப்பகம்